# श्रीमद्वाल्मीकिरामायणम् ॥

## सुन्दरकाण्डम् ॥

# ஸ்ரீமத் வால்மீகிராமாயணம்.

## ஸுந்தரகாண்டம்.

ॐ

श्रीरामजयम् ।

# श्रीमद्वाल्मीकिरामायणम् ॥

## सुन्दरकाण्डम् ॥

# ஸ்ரீமத் வால்மீகிராமாயணம்.

## ஸுந்தரகாண்டம்.

( தேவநாகரியிலும் தமிழிலும் மூலத்துடன் )


வைதிகதர்ம ஸம்ரக்ஷக, ப்ரவசன துரீண, வேதயாகபரிபாலக
ராமாயண தத்வோபதேசக
சேங்காலிபுரம்
**பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்**
அவர்களால் எழுதப்பட்ட


விசேஷ தமிழ் அர்த்தத்துடனும், ஸ்ரீ ஸீதாராம பட்டாபிஷேக
ஸர்கத்துடனும் கூடியது.




சேலம் லிட்டரரி பிரஸில் அச்சிடப்பட்டது.

1952

# அர்ப்பணம்.

---

ஸ்ரீ முத்தண்ணுவாள் என்ற ப்ரஹ்மஸ்ரீ வைத்யனாத தீக்ஷிதர்வாள் லோகபூஜ்யர்களாய் விளங்கினார்கள். இவர்கள் எங்கள் பிதாமஹர்கள். பருத்தியூர் ஸ்ரீராமாயணம் ஸ்ரீ கிருஷ்ணசாஸ்திரிகள், செய்யானம் ஸ்ரீ ராமஸ்வாமிசாஸ்திரிகள் முதலிய ஆயிரக்கணக்கான சிஷ்யர்களுக்கு வேத வேதாந்தம் முதலிய சாஸ்திரங்களை உபதேசித்தவர்கள். இவர்கள் மன்னார்குடி பெரியவாளின் ஸ்ரீபிதா அவர்கள் செய்த யாகத்தில் ஆத்வரத்தையும், இவர்களுடைய தம்பியாகிய ஸ்ரீஸுப்ப ராமதீக்ஷிதரவர்கள் ஹௌத்ரத்தையும் செய்தார்கள். இவர்கள் தனது பதினாறுவது வயதில் ஸோமயாகம் செய்து 63-வது வயதுவரை நித்யாக்னிஹோத்ரம் செய்ததுடன் பரான்னப்ரதிக்ரஹங்களையும் விட்டுவிட்டு சென்ற நந்தன வருஷம் தைமாதம் 2-ம் தேதி ஏகாதசியன்று ஸன்யாஸம் செய்துகொண்டு மறுநாள் த்வாதசியன்று ஸித்தியடைந்து சேங்காலிபுரத்தில் தனது ஸ்ரீபிதா அவர்களின் பக்கத்திலேயே ஸமாதியடைந்திருக்கிறார்கள். அந்த மஹான்களுக்கு இதை அர்ப்பணம் செய்கிறேன்.

**अश्वत्थमूले महसा समाधौ प्रकाशते यो यतिराजवर्यः ।**
**श्रीवैद्यनाथाख्यमखी समस्तान् भक्तान् सदा रक्षतु भक्तिवश्यः ॥**

இப்படிக்கு,

சேங்காலிபுரம்

**S. அனந்தராம தீக்ஷிதர்.**

25, வடக்கு மாவனேரி,
சேலம்.

## இப்புஸ்தகம் கிடைக்கும் இடங்கள்

1. Dr. M. D. நாகரத்தினம், L. I. M.,
   25, வடக்கு மரவனேரி எக்ஸ்டென்ஷன், சேலம்.
2. S. சந்திரமௌளீச்வர அய்யர்,
   ஸ்டாம்பு வெண்டர், இரண்டாவது அக்ரஹாரம், சேலம்.
3. கடலங்குடி பிரம்ஹஸ்ரீ நடேச சாஸ்திரிகள்,
   17, நடேசய்யர் தெரு, T. நகர் P. O., மாம்பலம்.
4. K. கணேச சாஸ்திரிகள்,
   72, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை.
5. G. மலையப்ப சாஸ்திரிகள்,
   2778, கிழ 2-ம் தெரு, புதுக்கோட்டை. (திருச்சி)
6. R. S. வாத்தியார், புக் ஸெல்லர், கல்பாத்தி. (பாலக்காடு)
7. K. R. சங்கரன், செக்ரடரி, பஜன ஸமாஜம்,
   6/55, குருத்வார் ரோட், கரோல் பக், நியூ டெல்ஹி.

ஸ்ரீராமஜயம்.

# முகவுரை

ஸ்ரீ பகவான் லோக க்ஷேமார்த்தமாய் ப்ரஹ்மதேவனுக்கு அனுக்ரஹம்செய்த உபதேசமே வேதங்களெனப்படும். அவைகள் அளவற்றவை. அவ்வேதங்களில் ஸகல ஜீவராசிகளும் இவ்வுலகிலும், பரலோகத்திலும், க்ஷேமத்தை அடைந்து மோக்ஷத்தை அடைவதற்கும் மார்க்கங்கள் கூறப்பட்டுள்ளன. அதை மஹான்கள் நம்பி ஸர்வ க்ஷேமலாபங்களையும் அடைந்து வருகிறார்கள். அந்த உபதேசங்களை அறியாமலோ, அறிந்து அனுஷ்டிக்காமலோ ஜீவராசிகள் ஸுகமில்லாமல் ச்ரமப்படும் காலத்தில், ஸ்ரீ பகவான் அவதரிப்பது வழக்கம். அம்மாதிரியான கஷ்டமேற்பட்ட ஸமயத்தில் லக்ஷ்மீபதியான ஸ்ரீ நாராயணனே த்ரேதாயுகத்தில் ஸ்ரீராமனாக அயோத்தியில் அவதரித்து, ஸர்வதர்மங்களையும் தானே நடத்திக் காண்பித்தார். அந்த ஸ்ரீராமருடைய சரித்ரங்களை, ஸத்குருவான ஸ்ரீ நாரத மஹரிஷியின் முகமாய் உபதேசம்பெற்று மஹரிஷி ஸ்ரீ வால்மீகி ஸ்ரீமத் ராமாயணமென்னும் மஹாகாவ்யமாக இயற்றினார்.

पूजयंश्चपठंश्चेमं इतिहासं पुरातनं ।
सर्वपापैः प्रमुच्येत दीर्घमायुरवाप्नुयात् ॥
प्रणम्य शिरसा नित्यं श्रोतव्यं क्षत्रियैर्द्विजात् ।
ऐश्वर्यं पुत्रलाभश्च भविष्यति न संशयः ॥

இவ்விதம் ஸ்ரீ வால்மீகி, இப்புராதன க்ரந்தத்தை பூஜை செய்து படிப்பவர்கள், ஸர்வபாபங்களினின்றும் விடுபட்டு தீர்காயுளையும் அடைவார்கள், நித்யம் நமஸ்காரம்செய்து, வேதவித்துக்கள் வாயிலாகக்கேட்பதால் மஹத்தான ஐஸ்வர்யத்தையும், புத்ரலாபத்தையும் அடைவார்கள், ஸந்தேஹமில்லை என ஸத்யம் செய்வதுபோல் கூறியிருக்கிறார்.

உத்தரகாண்டத்தில்

हेमभारं कुरुक्षेत्रे ग्रस्ते भानौ प्रयच्छति ।
यश्च रामायणं लोके शृणोति सदृशावुभौ ॥

என்றதால் எவனொருவன் ஸ்ரீமத் ராமாயணத்தை ச்ரவணம் செய்கிறானோ அவன் ஸூர்யக்ரஹண புண்யகாலத்தில் குரு க்ஷேத்

ரத்தில் தன் நிறையுள்ள தங்கக்கட்டிகளை தானம்செய்த புண்யத்தை அடைகிறான், என்றும் இன்னும்

पिता पितामहस्तस्य तथैवप्रपितामहः ।
तत्पिता तत्पिताचैव विष्णुं यान्ति न संशयः ॥

என்றதால் ஸ்ரீராமாயணத்தை ஶ்ரவணம் செய்யும் மனிதனுடைய பிதா (தந்தை) பிதாவின் பிதா, அவனுடைய பிதா, அவனுடைய பிதா, அவனுடைய பித்ருக்கள் (பித்ரு பிதாமஹ ப்ரபிதாமஹர் களும் ப்ரபிதாமஹர்களுடைய பித்ரு, பிதாமஹர்களும்) ஸ்ரீவைகுண்டத்தை அடைகிறார்கள் என்றும், இதில் ஸந்தேஹ மில்லை என்றும் கூறியிருக்கிறார். இதனால் கேட்போர் ஸத்கதி யடைவதோடுமட்டுமின்றி, அவர்களுடைய முன்னோர்களும் பரம க்ஷேமங்களை அடைகிறார்களென்பது நிஶ்சயமாகத் தெரிகிறது.

நிற்க,

இக்கலியிலும் பல பக்தர்கள் தங்களது ஜாதகரீதியாய், சனி, புதன், ராகு, கேது, முதலிய க்ரஹங்கள் தோஷமுள்ளவைகளாக இருந்து, அவைகளின் தசையோ புக்தியோ, நேரும் ஸமயத்தில் கையிலுள்ள ரேகை, அந்தந்த கிருகங்களின் தோஷத்தைக் காட்டும் போது, ஸ்ரீமத் ராமாயணத்தையோ, ஸ்ரீமத் பாகவதத்தையோ விதிவத்தாய், நவாஹம், ஸப்தாஹம், முதலிய முறைப்படி நடத்தி ஶ்ரவணம் செய்வதின்மூலம் அக்கெட்ட ரேகைகள் மறைந்து நல்ல பயன்களை அடைந்து வருவதையும் ப்ரத்யக்ஷமாகப் பார்த்து வருகிறோம். அவரவர்கள் தங்கள் சக்திக்கேற்றவாறு இதை முறைப் படி நடத்தவேண்டும். சிலர் சக்தி படைத்திருந்தும் லோப குணத் தினால், லகுவான முறையை கைப்பற்றி பூர்ண பலனை அடையாது ஸ்வல்ப பலனையே அடைகிறார்கள். அதிலும், ஸ்ரீ ஸுந்தர காண்டத்தை படிப்பதாலும், ஶ்ரவணம் செய்வதாலும், "**सर्वसिद्धिकरं नृणां**" என்றபடி மனிதர்கள் ஸர்வ கார்யஸித்தி யையும் அடைவார்கள் என்றும் புராணங்கள் கூறுகின்றன. இன்னும் சிவபுராணமாகிய ஸ்ரீ மஹாஸ்காந்தத்திலும், பிரஹ்ம தேவன்

यद्यत्संकल्पितं चित्ते सुकरं वाऽपि दुष्करं ।
शत्रुहस्ताद्विमुक्तिं च कारागाराद्विमोक्षणं ॥
लभते सुन्दराख्यस्य काण्डस्य पठनान्नरः ।

என்று ஸ்ரீ ஸுந்தரகாண்டத்தைப் படிப்பதால், ஸுலபமாக அடையக்கூடியதையும், அடையமுடியாததையும், மனதினால் நினைத்தமாத்ரத்தால் அடையலாமெனவும், சத்ருவினிடமிருந்தும், ஜெயிலிலிருந்தும்கூட விடுபடலாமென்றும், உபதேசித்திருக்கிறார்.

இந்த ஸ்ரீ ஸுந்தரகாண்டத்தை, பல ஆப்தபக்தர்கள் பல வருஷங்களாக என்னை விசேஷார்த்தங்களுடன் தமிழில் மொழி பெயர்க்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டதின்பேரில், சென்ற வருஷம் கங்காயாத்ரைபோன ஸமயம் கல்கத்தாவில் ஸ்ரீ தக்ஷிண காளியையும், ஸ்ரீராமகிருஷ்ணபரமஹம்ஸ ஸமாதியையும், ஸ்ரீ கங்காதேவியையும், தரிசித்து பல மாதங்கள் அங்கு தங்கி, இந்த தமிழுரை எழுத நேர்ந்தது. அங்கு தங்க பல வஸதிகளையும் செய்துகொடுத்து பல மாதங்கள் இதை எழுதி முடிக்கும்வரை மிகவும் உதவிபுரிந்த 'Blackwoods' கம்பெனி மானேஜிங் டைரக்டரும், கோடி ஸ்ரீராமநாமாவை எழுதி பூர்த்தி செய்தவரும், தாரக ஸ்ரீராமநாமாவை கங்காதீரமாகிய காசியில் மோக்ஷகாலத்தில் உபதேசம் செய்யும் ஸ்ரீ பரமேஸ்வரனுடைய ஆலய கைங்கரியமாகிய சிவதர்மத்தை செய்தவருமாகிய புண்யபுருஷர்களுடைய புத்திரருமான ஸ்ரீ ஜி. வி. ராமன் அவர்களுக்கும், நான் பல வ்யாக்யானங்களையும் பார்த்துச் சொல்லும் அர்த்தத்தை என்னுடன் கூடவே சில மாதங்கள் வஸித்து எழுதியும், ப்ரூப் பார்த்தும், உதவி புரிந்த, ஸ்ரீ S. ராமமூர்த்தி சர்மா (வ்யாகரண சிரோமணி & ஹிந்தி விசாரத, R. C. T. ஹைஸ்கூல், அண்ணாமலை நகர்) அவர்களுக்கும், ஸ்ரீ A. விஸ்வநாதய்யர் அவர்களுக்கும், பேப்பர் கிடைப்பது அரிதாக இருந்த காலத்தில் சரியான விலையில், பேப்பர் கிடைக்கச்செய்த ஸ்ரீ நடராஜய்யர் (செக்ரடரி, மேட்டூர் கெமிகல்ஸ், மேட்டூர்) அவர்களுக்கும், தமது பிரஸ்ஸில் மிகுந்த அன்புடன் க்ரமமான அச்சுக்கூலியில், உயரிய பதிப்பில், இதை அச்சிட்டுக் கொடுத்த ஸ்ரீ K. வாசுதேவன் நாயர் (Proprietor, Literary Press, Salem.) அவர்களுக்கும், ஸ்ரீ ஸீதாபதியான ஸ்ரீராமன் ஆயுள், ஆரோக்யம், ஸந்தானம், ஸம்பத்து முதலிய அபீஷ்டங்களைக் கொடுக்கும்படிக் கோருகிறேன்.

இப்புத்தகத்தின்மூலம் கிடைக்கும் ஸ்வல்ப திரவ்யத்தை எங்கள் பெரியவாளின் ஸ்ரீ ஸமாதி பூஜா கைங்கர்யம், பிரதி வர்ஷம் தைமாத கிருஷ்ணபக்ஷ த்வாதசியில் நடக்கும் ஆராதனம், அதற்கு முன்பு நடக்கும் உற்சவம் முதலியவைகளுக்கு உபயோகப்படும்படி ஏற்பாடு செய்திருக்கிறேன். தஞ்சை ஜில்லா, சேங்காலிபுரத்திலுள்ள ஷடி ஆலயத்தில் எனது ப்ரபிதாமஹர்கள் ஸமாதியாகி சுமார் நூறு வருஷங்களும், எனது பிதாமஹாள் ஸமாதியாகி இந்த நந்தன வருஷத்திற்கு அறுபது வருஷங்களும் ஆகின்றன. மேற்படி ஸமாதியில் பல பக்தர்கள் அர்ச்சனை, அபிஷேகம் செய்து ஸகல ஶ்ரேயஸ்ஸுகளையும் அடைந்து வருகிறார்கள். இந்த ஸமாதியின் அனுக்ரஹத்தாலேயே எங்கள் குடும்பத்தாரும், நாங்களும், க்ஷேமங்களை அடைந்துவருகிறோம்.

ஸகல ச்ரேயஸ்ஸுகளுக்கும் தெய்வ பலமே முக்ய ஸாதன மாகும். அதனுலேயே ஸ்ரீ ஸீதாதேவியும், லங்கையில், ஸ்ரீ ஹனு மாரிடம்

**कच्चिदाशास्ति देवानां प्रसादं पार्थिवात्मजः ।**

என சக்ரவர்த்தி குமாரனை ஸ்ரீராமன் தெய்வங்களின் பிரஸாதத்தை அடைவதற்கு தேவதாராதனம் செய்து வருகிருரா? என்று கேழ்க்கிருள். ஆகையால் பக்தர்கள் இதைப்படித்து ஸ்ரீராமசந்திர ப்ரஸாதத்தை பரிபூர்ணமாக அடையக்கோரு கிறேன்.

ஸ்ரீ ஸுந்தரகாண்ட பாராயணம் செய்யும் ஆஸ்திகர்கள், பாராயணம் முடியும் நாளில் ஸ்ரீராம பட்டாபிஷேக ஸர்கத்தைப் படிப்பது வழக்கமானதால், அந்த ஸர்கமும் இத்துடன் சேர்க்கப் பட்டிருக்கிறது. ஆகையால் எல்லோரும் அதையும் படித்து, ஒரு தம்பதிக்காவது போஜனம் செய்வித்து உபசரித்து, சக்திக் கேற்றவாறு வஸ்திரம், தக்ஷிணை முதலியவைகளால் பூஜிப்பது நலம்.

இப்படிக்கு,

25, வடக்கு மரவனேரி, சேலம். } சேங்காலிபுரம் **S. அனந்தராம தீக்ஷிதர்.**



श्रीरामचन्द्राय नमः ।

# ॥ विषयानुक्रमणिका ॥



| सर्गः । ஸர்கம் | विषयम् । — விஷயம் | | पृष्ठम् । பக்கம் |
|---|---|---|---|

| सर्गः। ஸர்கம் | विषयम्। — விஷயம் | पृष्ठम्। பக்கம் |
|---|---|---|

॥ श्रीः ॥

# श्रीमद्रामायणपूजाक्रमः ॥



शुक्लाम्बरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम्।
प्रसन्नवदनं ध्यायेत्सर्वविघ्नोपशान्तये ॥

(உபநயனமானவர்கள் ப்ராணாயாமம் செய்யவேண்டும்.)

ममोपात्तसमस्तदुरितक्षयद्वारा श्री परमेश्वरप्रीत्यर्थं श्रीसीतालक्ष्मण भरतशत्रुघ्नहनुमत्समेद श्रीरामचन्द्रप्रसाद सिध्यर्थं श्रीसीतालक्ष्मण भरतशत्रुघ्नहनुमत्समेत श्रीरामचन्द्रपूजां श्रीसुन्दरकाण्डपारायणं च करिष्ये। (ஜலத்தைத் தொடவும்.)

अस्मिन् पुस्तके श्रीसीतालक्ष्मण भरतशत्रुघ्न हनुमत्समेत श्रीरामचन्द्रं ध्यायामि। आवाहयामि। आसनं समर्पयामि। पादयोः पाद्यं समर्पयामि। अर्घ्यं समर्पयामि। आचमनीयं समर्पयामि। स्नानं समर्पयामि। स्नानानन्तरं आचमनीयं समर्पयामि। वस्त्रयज्ञोपवीतोत्तरीयाभरणार्थे इमे अक्षताः। गन्धान् धारयामि। गन्धस्योपरि अक्षतान्समर्पयामि। हरिद्राकुङ्कुमं समर्पयामि। पुष्पाणि समर्पयामि। केशवाय नमः। नारायणाय नमः। माधवाय नमः। गोविन्दाय नमः। मधुसूदनाय नमः। त्रिविक्रमाय नमः। वामनाय नमः। श्रीधराय नमः। हृषीकेशाय नमः। पद्मनाभाय नमः। दामोदराय नमः। श्रीसीतालक्ष्मण भरतशत्रुघ्न हनुमत्समेत श्रीरामचन्द्र स्वामिने नमः। नानाविधमन्त्रपुष्पाणि समर्पयामि। धूपार्थं दीपार्थं अक्षतान् समर्पयामि। (நிவேதனம் செய்யவும்). निवेदनानन्तरं आचमनीयं समर्पयामि। कर्पूरताम्बूलं समर्पयामि। (கற்பூரம் செய்யவும்).

नीराजनं सुमाङ्गल्यं कोटिसूर्यसमप्रभम्।
अहं भक्त्या प्रदास्यामि स्वीकुरुष्व दयानिधे ॥

समस्तापराधक्षमार्थं सर्वमङ्गलप्राप्त्यर्थं कर्पूरनीराजनं दर्शयामि। नीराजनानन्तरं आचमनीयं समर्पयामि। रक्षां धारयामि। मन्त्रपुष्पं समर्पयामि।

यानि कानि च पपानि जन्मान्तरकृतानि च।
तानि तानि विनश्यन्ति प्रदक्षिणपदेपदे ॥

ப்ரதக்ஷிணம் செய்யவும். **वैदेहीसहितं** என்ற ஶ்லோகத்தைச் சொல்லி நமஸ்காரம் செய்யவும். பிறகு பாராயணாரம்ப ஶ்லோகங்களைப் படித்து பாராயணம் செய்யவும்.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாயண பூஜா முறை.

ஶுக்லாம்பரதரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்ப்புஜம் ।
ப்ரஸன்னவதனம் த்யாயேத் ஸர்வவிக்னோபஶாந்தயே ॥

(உபநயனமானவர்கள் ப்ராணாயாமம் செய்யவேண்டும்).

*மமோபாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா ஸ்ரீ பரமேஶ்வர ப்ரீத்யர்த்தம் ஸ்ரீ ஸீதாலக்ஷ்மண பரதஶத்ருக்ன ஹனுமத்ஸமேத ஸ்ரீ ராமசந்த்ரபூஜாம் ஸ்ரீ ஸுந்தரகாண்ட பாராயணம் ச கரிஷ்யே.* (ஜலத்தைத் தொடவும்.)

*அஸ்மின் புஸ்தகே ஸ்ரீஸீதாலக்ஷ்மண பரதஶத்ருக்ன ஹனுமத்ஸமேத ஸ்ரீராமசந்த்ரம் த்யாயாமி. ஆவாஹயாமி. ஆஸனம் சமர்ப்பயாமி. பாதயோ: பாத்யம் ஸமர்ப்பயாமி. அர்க்யம் சமர்ப்பயாமி. ஆசமனீயம் ஸமர்ப்பயாமி. ஸ்நானம் ஸமர்ப்பயாமி. ஸ்நானானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி. வஸ்த்ர யக்ஞோபவீதோத்தரீயாபரணார்த்தே இமே அக்ஷதா:. கந்தான் தாரயாமி. கந்தஸ்யோபரி அக்ஷதான் ஸமர்ப்பயாமி. ஹரித்ரா குங்குமம் ஸமர்ப்பயாமி. புஷ்பாணி ஸமர்ப்பயாமி. கேஶவாய நம: நாராயணாய நம: மாதவாய நம: கோவிந்தாய நம: மதுஸூதனாய நம: த்ரிவிக்ரமாய நம: வாமனாய நம: ஸ்ரீதராய நம: ஹ்ருஷீகேஶாய நம: பத்மநாபாய நம: தாமோதராய நம: ஸ்ரீஸீதாலக்ஷ்மண பரதஶத்ருக்ன ஹனுமத்ஸமேத ஸ்ரீராமசந்த்ர ஸ்வாமினே நம: நானாவித மந்த்ரபுஷ்பாணி ஸமர்ப்பயாமி. தூபார்த்தம் தீபார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி.* (நிவேதனம் செய்யவும்). *நிவேதனானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி. கர்ப்பூர தாம்பூலம் ஸமர்ப்பயாமி.* (கர்ப்பூரம் செய்யவும்).

நீராஜனம் ஸுமாங்கல்யம் கோடிஸூர்ய ஸமப்ரபம் ।
அஹம் பக்த்யா ப்ரதாஸ்யாமி ஸ்வீகுருஷ்வ தயாநிதே ॥

*ஸமஸ்தாபராதக்ஷமார்த்தம் ஸர்வமங்கள ப்ராப்த்யர்த்தம் கர்ப்பூர நீராஜனம் தர்ஶயாமி. நீராஜனானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி. ரக்ஷாம் தாரயாமி. மந்த்ரபுஷ்பம் ஸமர்ப்பயாமி.*

யானிகானி ச பாபானி ஜன்மாந்தரக்ருதானி ச ।
தானிதானி வினஶ்யந்தி ப்ரதக்ஷிணபதேபதே ॥

*ப்ரதக்ஷிணம் செய்யவும்.* " வைதேஹீ ஸஹிதம் " *என்ற ஶ்லோகத்தைச் சொல்லி நமஸ்காரம் செய்யவும். பாராயணாரம்ப ஶ்லோகங்களைப் படித்து பாராயணம் செய்யவும்.*

---

॥ श्री: ॥

# श्रीरामाष्टोत्तर शतनामावलि: ॥



ओं श्रीरामाय नमः ।
ओं रामभद्राय नमः ।
ओं रामचन्द्राय नमः ।
ओं शाश्वताय नमः ।
ओं राजीवलोचनाय नमः ।
ओं श्रीमते नमः ।
ओं राजेन्द्राय नमः ।
ओं रघुपुङ्गवाय नमः ।
ओं जानकीवल्लभाय नमः ।
ओं जैत्राय नमः । १०
ओं जितामित्राय नमः ।
ओं जनार्दनाय नमः ।
ओं विश्वामित्रप्रियाय नमः ।
ओं दान्ताय नमः ।
ओं शरणत्राणतत्पराय नमः ।
ओं वालिप्रमथनाय नमः ।
ओं वाग्मिने नमः ।
ओं सत्यवाचे नमः ।
ओं सत्यविक्रमाय नमः ।
ओं सत्यव्रताय नमः । २०
ओं व्रतधराय नमः ।
ओं सदाहनुमदाश्रिताय नमः ।
ओं कौसलेयाय नमः ।
ओं खरध्वंसिने नमः ।
ओं विराधवधपण्डिताय नमः ।
ओं विभीषणपरित्रात्रे नमः ।
ओं हरकोदण्डखण्डनाय नमः ।
ओं सप्तसालप्रभेत्त्रे नमः ।
ओं दशग्रीवशिरोहराय नमः ।
ओं जामदग्न्यमहादर्पदलनाय नमः ।
ओं ताटकान्तकाय नमः । ३०
ओं वेदान्तसाराय नमः ।
ओं वेदात्मने नमः ।
ओं भवरोगस्यभेषजाय नमः ।
ओं दूषणत्रिशिरोहन्त्रे नमः ।
ओं त्रिमूर्तये नमः ।
ओं त्रिगुणात्मकाय नमः ।
ओं त्रिविक्रमाय नमः ।
ओं त्रिलोकात्मने नमः ।
ओं पुण्यचारित्रकीर्तनाय नमः । ४०
ओं त्रिलोकरक्षकाय नमः ।
ओं धन्विने नमः ।
ओं दण्डकारण्यपुण्यकृते नमः ।
ओं अहल्याशापशमनाय नमः ।
ओं पितृभक्ताय नमः ।
ओं वरप्रदाय नमः ।
ओं जितेन्द्रियाय नमः ।
ओं जितक्रोधाय नमः ।
ओं जितामित्राय नमः ।
ओं जगद्गुरवे नमः । ५०
ओं ऋक्षवानरसङ्घातिने नमः ।
ओं चित्रकूटसमाश्रयाय नमः ।

ओं जयन्तत्राणवरदाय नमः ।
ओं सुमित्रापुत्रसेविताय नमः ।
ओं सर्वदेवादिदेवाय नमः ।
ओं मृतवानरजीवनाय नमः ।
ओं मायामारीचहन्त्रे नमः ।
ओं महादेवाय नमः ।
ओं महाभुजाय नमः ।
ओं सर्वदेवस्तुताय नमः । ६०
ओं सौम्याय नमः ।
ओं ब्रह्मण्याय नमः ।
ओं मुनिसंस्तुताय नमः ।
ओं महायोगिने नमः ।
ओं महोदराय नमः ।
ओं सुग्रीवेप्सितराज्यदाय नमः ।
ओं सर्वपुण्याधिकफलाय नमः ।
ओं स्मृतसर्वाघनाशनाय नमः ।
ओं आदिपुरुषाय नमः ।
ओं परमपुरुषाय नमः । ७०
ओं महापुरुषाय नमः ।
ओं पुण्योदयाय नमः ।
ओं दयासाराय नमः ।
ओं पुराणपुरुषोत्तमाय नमः ।
ओं स्मितवक्त्राय नमः ।
ओं मितभाषिणे नमः ।
ओं पूर्वभाषिणे नमः ।
ओं राघवाय नमः ।
ओं अनन्तगुणगम्भीराय नमः ।
ओं धीरोदात्तगुणोत्तराय नमः । ८०

ओं मायामानुषचारित्राय नमः ।
ओं महादेवादिपूजिताय नमः ।
ओं सेतुकृते नमः ।
ओं जितवाराशये नमः ।
ओं सर्वतीर्थमयाय नमः ।
ओं हरये नमः ।
ओं श्यामाङ्गाय नमः ।
ओं सुन्दराय नमः ।
ओं शूराय नमः ।
ओं पीतवाससे नमः । ९०
ओं धनुर्धराय नमः ।
ओं सर्वयज्ञाधिपाय नमः ।
ओं यज्वने नमः ।
ओं जरामरणवर्जिताय नमः ।
ओं विभीषणप्रतिष्ठात्रे नमः ।
ओं सर्वापगुणवर्जिताय नमः ।
ओं परमात्मने नमः ।
ओ परब्रह्मणे नमः ।
ओं सच्चिदानन्दविग्रहाय नमः ।
ओं परं ज्योतिषे नमः । १००
ओं परं धाम्ने नमः ।
ओं पराकाशाय नमः ।
ओं परात्पराय नमः ।
ओं परेशाय नमः ।
ओं पारगाय नमः ।
ओं पाराय नमः ।
ओं सर्वदेवात्मकाय नमः ।
ओं परस्मै नमः । १०८

श्रीरामचन्द्रपरब्रह्मणे नमः नानाविध परिमल
पत्रपुष्पाणि समर्पयामि ।

---

ஸ்ரீ:

# ஸ்ரீராமாஷ்டோத்தரம்.

(இந்த அஷ்டோத்ரத்தால் ப்ரதிதினமுமே அர்ச்சிட விசேஷம். முடியாதவர்கள் ஸ்திரவாரத்திலாவது அர்ச்சட செய்வது நல்லது.)

ஓம் ஸ்ரீராமாய நம:
,, ராமபத்ராய ,,
,, ராமசந்த்ராய ,,
,, சாச்வதாய ,,
,, ராஜீவலோசனாய ,,
,, ஸ்ரீமதே ,,
,, ராஜேந்த்ராய ,,
,, ரகுபுங்கவாய ,,
,, ஜானகீவல்லபாய ,,
,, ஜைத்ராய ,, 10
,, ஜிதாமித்ராய ,,
,, ஜனார்தனாய ,,
,, விச்வாமித்ரப்ரியாய ,,
,, தாந்தாய ,,
,, சரணத்ராண தத்பராய ,,
,, வாலிப்ரமதனாய ,,
,, வாக்மினே ,,
, ஸத்யவாசே ,,
ஸத்யவிக்ரமாய ,,
ஸத்யவ்ரதாய ,, 20
வ்ரததராய ,,
ஸதாஹனுமதாச்ரிதாய ,,
கௌஸலேயாய ,,
ரத்வம்ஸினே ,,
ராதவதபண்டிதாய ,,
பீஷணபரித்ராத்ரே ,,
ரகோதண்ட கண்டனாய ,,

ஓம் ஸப்ததாலப்ரபேத்ரே நம:
,, தசக்ரீவசிரோ ஹராய ,,
,, ஜாமதக்ன்யமஹா தர்ப்பதலனாய ,, 30
,, தாடகாந்தகாய ,,
,, வேதாந்தஸாராய ,,
,, வேதாத்மனே ,,
,, பவரோகஸ்ய பேஷஜாய ,,
,, தூஷணத்ரிசிரோ ஹந்த்ரே ,,
,, த்ரிமூர்த்தயே ,,
,, த்ரிகுணாத்மகாய ,,
,, த்ரிவிக்ரமாய ,,
,, த்ரிலோகாத்மனே ,,
,, புண்யசாரித்ர கீர்த்தனாய ,, 40
,, த்ரிலோகரக்ஷகாய ,,
,, தன்வினே ,,
,, தண்டகாரண்ய புண்யக்ருதே ,,
,, அஹல்யாசாப சமனாய ,,
,, பித்ருபக்தாய ,,
,, வரப்ரதாய ,,
,, ஜிதேந்த்ரியாய ,,
,, ஜிதக்ரோதாய ,,
,, ஜிதாமித்ராய ,,
, ஜகத்குரவே ,,50

ஓம் ருக்ஷவானர ஸங்காதினே நம:
,, சித்ரகூட ஸமாஶ்ரயாய ,,
,, ஜயந்தத்ராணவரதாய ,,
,, ஸுமித்ராபுத்ர ஸேவிதாய ,,
,, ஸர்வதேவாதிதேவாய ,,
,, ம்ருதவானரஜீவனாய ,,
,, மாயா மாரீசஹந்த்ரே ,,
,, மஹாதேவாய ,,
,, மஹாபுஜாய ,,
,, ஸர்வதேவஸ்துதாய ,, 60
,, ஸௌம்யாய ,,
,, ப்ரம்ஹண்யாய ,,
,, முனிஸம்ஸ்துதாய ,,
,, மஹாயோகினே ,,
,, மஹோதராய ,,
,, ஸுக்ரீவேப்ஸித ராஜ்யதாய ,,
,, ஸர்வபுண்யாதிக பலாய ,,
,, ஸ்ம்ருதஸர்வாக நாஶனாய ,,
,, ஆதிபுருஷாய ,,
,, பரமபுருஷாய ,, 70
,, மஹாபுருஷாய ,,
,, புண்யோதயாய ,,
,, தயாஸாராய ,,
,, புராணபுருஷோத்தமாய ,,
,, ஸ்மிதவக்த்ராய ,,
,, மிதபாஷிணே ,,
,, பூர்வபாஷிணே ,,
,, ராகவாய ,,
,, அனந்தகுணகம்பீராய ,,

ஓம் தீரோதாத்த குணோத்தராய நம:
,, மாயாமானுஷ சாரித்ராய ,, 80
,, மஹாதேவாதி பூஜிதாய ,,
,, ஸேதுக்ருதே ,,
,, ஜிதவாராஶயே ,,
,, ஸர்வதீர்த்தமயாய ,,
,, ஹரயே ,,
,, ஶ்யாமாங்காய ,,
,, ஸுந்தராய ,,
,, ஶூராய ,,
,, பீதவாஸஸே ,, 90
,, தனுர்தராய ,,
,, ஸர்வயக்ஞாதிபாய ,,
,, யஜ்வனே ,,
,, ஜராமரணவர்ஜிதாய ,,
,, விபீஷணப்ரதிஷ்டாத்ரே ,,
,, ஸர்வாபகுண வர்ஜிதாய ,,
,, பரமாத்மனே ,,
,, பரப்ரம்ஹணே ,,
,, ஸச்சிதானந்த விக்ரஹாய ,,
,, பரம்ஜ்யோதிஷே நம: 100
,, பரம்தாம்னே ,,
,, பராகாஶாய ,,
,, பராத்பராய ,,
,, பரேஶாய ,,
,, பாரகாய ,,
,, பாராய ,,
,, ஸர்வதேவாத்மகாய ,,
,, பரஸ்மை நம: 108

ஸ்ரீராமசந்த்ர பரப்ரம்ஹணே நம:
நானாவித பரிமள பத்ரபுஷ்பாணி ஸமர்ப்பயாமி.

॥ श्रीरामजयम् ॥

## श्रीस्कान्दे महापुराणे श्रीमत्सुन्दरकाण्डमाहात्म्यम् ॥

## ஸ்ரீ ஸ்காந்தத்தில் ஸ்ரீ ஸுந்தரகாண்ட மாஹாத்ம்யம்.

---

**ब्रह्मोवाच । —**

यद्यत्संकल्पितं चित्ते सुकरं वाऽपि दुष्करं ।
शत्रुहस्ताद्विमुक्तिं च कारागाराद्विमोक्षणम् ॥
लभते सुन्दराख्यस्य काण्डस्य पठनान्नरः ॥ १

**ப்ரஹ்மா கூறுகிறார் :—**

*ஸுலபமாக அடையக்கூடியதும், அடையமுடியாததுமான மனதில் எண்ணும் ஸகல அபீஷ்டங்களையும், ஜயில், சத்ரு இவைகளிடமிருந்து விடுதலையையும் மனிதன் ஸ்ரீ ஸுந்தரகாண்டத்தைப் படிப்பதால் அடையக்கூடும்.* (1)

**सप्तसर्गपारायणफलं । —**

दिनेदिने सप्तसर्गांस्तस्यकाण्डस्य यो नरः ।
पठेद्भक्त्यातु काकुत्स्थं हृदि ध्यात्वा नमस्य च ॥ २
तस्य जन्मान्तरशतैः सञ्चितस्यापि पाप्मनः ।
नाशं कुर्यात्सुप्रसन्नो रामो विष्णुः सनातनः ॥ ३
किंपुनश्चिन्तितार्थाप्तिं चिन्तयामः पुनः पुनः ॥ ४

**ஸப்த ஸர்க பாராயணத்தின் பயன்.**

*ககுத்ஸ்த குலத்திலுதித்த ஸ்ரீராமனை மனதினால் தியானித்தும், வணங்கியும் எவனொருவன் பக்தியுடன் இக்காண்டத்தை தினம் ஏழு ஸர்கங்கள் வீதம் படிப்பனோ அவனுடைய நூற்றுக் கணக்கான ஜன்மங்களில் செய்து தேங்கிக்கிடக்கும் பாபத்தை ஸனாதனரும் மிகவும் ப்ரஸன்னருமான ஸ்ரீராமன் நாசம் செய்யவிருக்கையில் மனதினால் எண்ணும் அபீஷ்டங்களை நிறைவேற்றுவான் என்பதில் தடை என்ன இருக்கக்கூடுமென நாங்கள் யோசிக்கிறோம்.* (2—4)

**सप्तसर्गपारायणक्रमः । —**

श्रीमत्सुन्दरकाण्डस्य सप्तसर्गप्रपाठनम् ।
सर्वाभीष्टप्रदं प्रोक्तममराणामपीहितम् ॥ ५

**ஸப்த ஸர்க பாராயண க்ரமம்.**

*ஸ்ரீமத் ஸுந்தரகாண்டத்தில் தினம் ஏழு ஸர்கம் பாராயணம் செய்வது ஸகல விருப்பங்களையும் கொடுக்கக்கூடும் என்றும் தேவர்களுக்குங்கூட இது ப்ரியமானதென்றும் கூறப் பட்டுள்ளது.* (5)

शुभे दिवसनक्षत्रे सङ्कल्प्य विधिपूर्वकम् ।
यथाशक्ति सुवर्णेन रजतेनाथ ताम्रतः ॥ ६

रामस्य लक्ष्मणस्यापि वैदेह्याश्च हनूमतः ।
विधाय प्रतिमास्ताश्च प्रतिष्ठाप्य यथाविधि ॥
पूजयेद्दर्भपुञ्जे वा त्वरा चेद्रघुनन्दनम् ॥ ७

*ஒரு நல்ல நாளில் விதிவத்தாய் ஸங்கல்பித்து ஸ்ரீராமர், ஸ்ரீ ஸீதை, ஸ்ரீ லக்ஷ்மணன், ஸ்ரீ ஆஞ்சனேயர் இவர்களின் ப்ரதிமைகளை சக்திக்குத்தகுந்தபடி ஸ்வர்ணத்தாலோ, வெள்ளியாலோ, தாம்பரத்தாலோ செய்து முறைப்படி ப்ரதிஷ்டை செய்து பூஜிக்க வேண்டும். இவைகளைச்செய்ய அவகாசமில்லாவிடில் கூர்ச்சத்திலாவது பிரதிஷ்டை செய்து பூஜிக்க வேண்டும்.* (6—7)

सहस्रनामभिर्विष्णोरभ्यर्च्यैश्च दिनेदिने ।
पठेत्सुन्दरकाण्डस्य सप्तसर्गी विधानतः ॥ ८

*தினமும் விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தால் அர்ச்சித்து முறைப்படி ஸுந்தரகாண்டத்தின் ஸப்த ஸர்க பாராயணத்தைச் செய்ய வேண்டும்.* (8)

यदा तु सप्तमः सर्गः काण्डस्यान्तिमसर्गकः ।
भविष्यति तदन्तं तु सप्त सर्गान् पठेद्व्रती ॥ ९

*ஸுந்தரகாண்டத்தின் கடைசி ஸர்கம் ஸப்த ஸர்க பாராயணத்தின் கடைசி ஸர்கமாக வரும்வரை நியமத்துடன் பாராயணம் செய்ய வேண்டும்.* (9)

अथ श्रीरामचन्द्रस्य सर्गं राज्याभिषेचनम् ।
पठित्वा पूजयित्वा च पठनं तु समापयेत् ॥ १०

பிறகு ஸ்ரீராமசந்த்ரனின் பட்டாபிஷேக ஸர்கத்தைப் படித்து பூஜித்து பாராயணத்தை முடிக்க வேண்டும். (10)

समाप्तिदिवसे कुर्याद्बहुब्राह्मणभोजनम् ।
यद्यद्विचिन्तितं चित्ते तत्सर्वं तु समश्नुते ॥ ११

பாராயண முடிவு தினத்தில் பல வேதவித்துக்களுக்கு போஜனம் செய்விக்க வேண்டும். இவ்விதம் செய்தால் மனதில் கோரும் ஸகல அபீஷ்டங்களையும் அடைவர். (11)

---

## वायुपुराणान्तर्गतायामुमासंहितायां कामनावद्भिः पठनीय सर्गनिरूपणम् ॥

## வாயு புராணத்திலடங்கிய உமாஸம்ஹிதையில் காம்யமான பயனைக்கோருபவர்களால் படிக்கத்தக்க ஸர்கங்கள்.

---

भूतवेताल पीडाचेल्लङ्काविजयसर्गकम् ।
आदौ गुडान्नं नैवेद्यं कृत्वा सायं पठेद्यतः ॥ १२

பூத வேதாள பீடையிருக்குமானால் ஹனுமாரின் லங்கா விஜயத்தை வர்ணிக்கும் 3-வது ஸர்கத்தை ஸாயங்காலத்தில் முதலில் ஶர்க்கரான்னத்தை நிவேதனம்செய்து படிக்கவேண்டும். (12)

विमार्ग सर्वत्रेति पद्यस्यान्ते नीराजनार्पणम् ।
कृत्वाऽथ प्रणमेद्भूमावाञ्जनेयं हृदा स्मरन् ॥ १३

இந்த 3-வது ஸர்கத்திலிருக்கும் "விமார்க ஸர்வத்ர" என்ற ஶ்லோகத்தை படித்த உடனே கர்ப்பூரம்செய்து ஆஞ்ஜனேயரை மனதில் த்யானித்து ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்ய வேண்டும். (13)

उन्माददोषशान्त्यर्थं हनूमच्चिन्तनं पठेत् ।
अशोकवनिकायानसमये समुपस्थितम् ॥
निवेदयेद्यतः प्रातर्माषचूर्णान्नमादृतः ॥ १४

சித்தபிரமயாலுண்டான தோஷசாந்திக்காக ஹனுமார் அஶோகவனம் செல்லுகையில் உண்டான சிந்தையை விவரிக்கும் 13-வது ஸர்கத்தை காலையில் படித்து உளுந்துபொடி கலந்த அன்னத்தை நிவேதனம் செய்ய வேண்டும். (14)

दारिद्र्यध्वंसकामस्तु लङ्कायां तु हनूमता ।
मैथिलीदर्शनं प्राप्तं पठेत्पापविमोचनम् ॥ १५

தாரித்ரியத்தைப்போக்க விருப்புபவன் ஹனுமார் லங்கையில் ஸ்ரீ தேவியைக்கண்ட பாபத்தைபோக்கவல்ல உத்தமமான 15-வது ஸர்கத்தைப் படிக்க வேண்டும். (15)

विश्लिष्टबन्धुसंयोगकामना चेद्धनूमतः ।
रामाङ्गुलीयार्पणं तु सीतायै सन्ध्ययोः पठेत् ॥
आदावन्तेऽपि वा नित्यं पनसाम्रफलार्पणम् ॥ १६

விட்டுப்பிரிந்த பந்துக்களுடன் சேரவிரும்புகிறவன் ஸ்ரீ ஹனுமார், ஸ்ரீ தேவிக்கு ஸ்ரீ ராமனுடைய அங்குலீயத்தைக்கொடுத்த 36-வது ஸர்கத்தை காலையிலும் மாலையிலும் படிக்க வேண்டும். ஆரம்பத்திலோ, முடிவிலோ நித்யம் பலாப்பழம், மாம்பழம் இவற்றை நிவேதனம் செய்ய வேண்டும். (16)

दुस्स्वप्नदोषशान्त्यर्थं त्रिजटास्वप्नदर्शनम् ।
पठेत्त्र्यहं प्रातरेव शर्करां विनिवेदयेत् ॥ १७

கெட்டஸ்வப்னம்கண்ட தோஷசாந்திக்காக த்ரிஜடைகண்ட ஸ்வப்ன கட்டத்தை விவரிக்கும் 27-வது ஸர்கத்தை மூன்றுநாள் காலையில் படிப்பதுடன் சர்க்கரையை நிவேதனம் செய்ய வேண்டும். (17)

पारदारिकतादोषशान्तये हनुमत्कृतम् ।
निर्विकारमना भूत्वा शुद्धान्ते रावणस्य च ॥ १८

जानक्यन्वेषणकथासर्गपञ्चकमादरात् ।
सकृत्पठेत्प्रातरेव निवेद्यापूपविंशतिम् ॥ १९

பிறர்மனைவியையடைந்த தோஷசாந்திக்காக ராவணனுடைய அந்த:புரத்தில் மனோவிகாரமின்றி ஸ்ரீ ஹனுமார் ஸ்ரீ தேவியைத் தேடிய ஐந்து ஸர்கங்களையும் (7—11) இருபது வெல்ல அப்பங்களை நிவேதனம்செய்து ஒருமுறை படிக்க வேண்டும். (18—19)

बुद्ध्याऽबुद्ध्या रामविभोर्विहितागः प्रशान्तये ।
काकानुग्रहवृत्तान्तसर्गं नत्वा पठेत्प्रभुम् ॥ २०

தெரிந்தோ தெரியாமலோ ஸ்ரீ ராமனுக்குச்செய்த அபராதங்களைப்போக்க காகாஸுரனுக்கு அனுக்ரஹம் செய்த 38-வது ஸர்கத்தை ஸ்ரீ ப்ரபுவை நமஸ்கரித்துப் படிக்க வேண்டும். (20)

## अथ नवग्रहदशाभुक्तिदोषपरिहारपारायणक्रमः ।

## நவக்ரஹ தசாபுக்தி தோஷ பரிஹாரத்துக்கான பாராயண க்ரமம்.

---

चन्द्रदशादोष परिहारः । —

सोमस्य चेद्दशा दुष्टा तस्याः शान्त्यर्थमादरात् ।
ततः स मध्यंगतमित्यमुं सर्गं पठेन्निशि ॥
शुक्लपक्षे प्रदोषे च ततश्चन्द्रं प्रपूजयेत् ॥ २१

**சந்த்ரதசைக்கான தோஷ பரிஹாரம்.**

*சந்த்ரதசை கெட்டுப்போயிருந்தால் அந்த தோஷபரிகாரத் துக்காக "**ततः स मध्यंगतमंशुमन्तं**" என்று ஆரம்பமாகும் 5-வது ஸர்கத்தை படிப்பதுடன் இரவில் சுக்லபக்ஷ ப்ரதோஷத்தில் சந்திரனை பூஜிக்க வேண்டும்.* (21)

कुजदशादोषपरिहारः । —

गुरोश्चेद्दोषदाभुक्तिर्भौमस्य तु दशान्तरे ।
उपदेशं हनुमतो रावणाय तदा पठेत् ॥ २२

**குஜதசா தோஷ பரிஹாரம்.**

*அங்காரகதசையில் குருபுக்தி கெட்டிருந்தால் ஹனுமார் ராவணனுக்கு உபதேசம்செய்த 51-வது ஸர்கத்தைப் படிக்க வேண்டும்.* (22)

शुक्रभुक्तिर्दोषदा चेल्लोहिताङ्गदशान्तरे ।
सीतायाः प्रार्थनं वह्निमुद्दिश्य हनुमत्कृते ॥
यत्र तं सर्गमाध्यायन्नाञ्जनेयं पठेत्क्रमात् ॥ २३

*குஜதசையில் சுக்ரபுக்தி கெட்டிருந்தால் ஹனுமாருக்காக ஸ்ரீ தேவி அக்னியைப்ப்ரார்த்திக்கும் 53-வது ஸர்கத்தை ஸ்ரீ ஹனு மாரைத் த்யானித்துப் படிக்க வேண்டும்.* (23)

राहुदशादोषपरिहारः । —

कवेर्भुक्तिरनर्था चेद्राहोर्दत्ते दशान्तरे ।
हनूमता राघवाय चूडामण्यर्पणं पठेत् ॥ २४

**ராஹுதசா தோஷ பரிஹாரம்.**

*ராஹுதசையில் சுக்ரபுக்தி கெட்டிருந்தால் ஹனுமார் ஸ்ரீராமனுக்கு சூடாமணியைக் கொடுத்த 65-வது ஸர்கத்தைப் படிக்கவேண்டும்.* (24)

शनैश्चरस्य भुक्त्या चेद्दोषो राहुदशान्तरे ।
हनुमताऽक्षनाशाख्यसर्गपारायणं चरेत् ॥ २५

ராஹு தசையில் சனிபுக்தி கெட்டிருந்தால் ஹனுமார் அக்ஷன் எனும் ராக்ஷஸனை வதம்செய்த 47-வது ஸர்கத்தைப் பாராயணம் செய்ய வேண்டும். (25)

गुरुदशादोषपरिहारः । —

गुरोर्दशा चेदुग्रा स्यात्तदा सुन्दरकाण्डके ।
पठेत्समुद्रतरणसर्गमेकं हनूमतः ॥
अन्ते च सितया मिश्रान्लाजान् हनुमतेऽर्पयेत् ॥ २६

குருதசா தோஷ பரிஹாரம்.

குருதசை கடுமையாக இருந்தால் ஸுந்தரகாண்டத்தின் முதலாவதான ஸ்ரீ ஹனுமார் ஸமுத்ரத்தைத்தாண்டிய ஸர்கத்தைப் பாராயணம் செய்வதுடன் கடைசியில் சர்க்கரைகலந்த பொரியை ஹனுமாருக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும். (26)

केतुभुक्त्या भवेत्पीडा गुरोर्यदि दशान्तरे ।
पठेन्मधुवनध्वंससर्गद्वयमनुत्तमम् ॥ २७

குருதசையில் கேதுபுக்தி கெட்டிருந்தால் மதுவனத்தை அழித்த உத்தமமான (61—62) இரு ஸர்கங்களையும் படிக்க வேண்டும். (27)

शनिदशादोषपरिहारः । —

शनेर्दशायांभुक्तिश्चेच्छनेरेवाहिता भवेत् ।
ब्रह्मास्त्रबन्धमुक्त्याख्यं पठेत्सर्गं हनूमतः ॥ २८

சனிதசா தோஷ பரிஹாரம்.

சனிதசையில் சனிபுக்தியே கெட்டிருந்தால் ஹனுமார் ப்ரம்மாஸ்த்ரத்தினின்றும் விடுபட்ட 48-வது ஸர்கத்தை படிக்க வேண்டும். (28)

शनेर्दशायां सौम्यस्य भुक्तिश्चेत्क्लेशदायिनी ।
लङ्कादाहं हनुमता कृतं सर्गं सदा पठेत् ॥ २९

சனிதசையில் புதபுக்தி கெடுதலைச்செய்யுமாகில் ஹனுமார் லங்கையை எரித்த 54-வது ஸர்கத்தை எப்பொழுதும் படிக்க வேண்டும். (29)

शनेर्दशायां शुक्रस्य भुक्तिर्यदि विपत्प्रदा ।
चूडामणिप्रदानाख्यं पठेत्सर्गं हनूमते ॥ ३०

சனிதசையில் சுக்ரபுக்தி கெட்டிருந்தால் ஹனுமாருக்கு ஸ்ரீ தேவி சூடாமணியைத்தந்த 38-வது ஸர்கத்தைப் படிக்க வேண்டும். (30)

**बुधदशादोषपरिहारः । —**

दशा बुधस्य दुष्टा चेत्सीताग्रे हनुमत्कृतम् ।
श्रीरामवर्णनं सर्गं पठेत्संपूज्य राघवम् ॥
पठनान्ते राघवस्य मुद्गान्नं विनिवेदयेत् ॥ ३१

**புததசா தோஷ பரிஹாரம்.**

புததசை கெட்டிருந்தால் ஸ்ரீ தேவியின் முன்னால் ஹனுமார் செய்த ஸ்ரீராம வர்ணனாத்மகமான 35-வது ஸர்கத்தை ஸ்ரீராகவனைப் பூஜித்து படித்து கடைசியில் வெண்பொங்கல் நிவேதனம் செய்யவேண்டும். (31)

बुधस्यचेद्दशायांतु भौमभुक्तिस्तु पीडयेत् ।
सीताशुभनिमित्ताख्यसर्गं षड्वारमापठेत् ॥ ३२

புததசையில் அங்காரகபுக்தி பீடாகரமாயிருந்தால் ஸ்ரீ தேவிக்கு சுபசகுனங்கள் ஏற்பட்ட 27-வது ஸர்கத்தை ஆறு தடவை படிக்க வேண்டும். (32)

केतु भुक्तिर्दोषदाचेद्बुधस्याथदशान्तरे ।
हनूमताऽशोकवने सीतान्वेषणमापठेत् ॥ ३३

புததசையில் கேதுபுக்தி கெட்டிருந்தால் ஹனுமார் அசோக வனத்தில் ஸ்ரீ தேவியைத்தேடிய 14-வது ஸர்கத்தைப் படிக்க வேண்டும். (33)

**केतुदशादोषपरिहारः । —**

शुक्रभुक्त्यातु दोषश्चेत्केतोरेव दशान्तरे ।
हनूमदुक्तं रामाय सीतादर्शनमापठेत् ॥ ३४

**கேதுதசா தோஷ பரிஹாரம்.**

கேதுதசையில் சுக்ரபுக்தி கெட்டிருந்தால் ஹனுமார் ஸ்ரீராமருக்கு ஸ்ரீ தேவியைப்பார்த்த விபரத்தைச்சொல்லும் 65-வது ஸர்கத்தைப் படிக்க வேண்டும். (34)

**शुक्रदशादोषपरिहारः । —**

तत्रैव शुक्रभुक्तिश्चेत्प्राणिनां दोषकारिणी ।
अङ्गुलीयप्रदानस्य सर्गं सुन्दरकाण्डगम् ॥
पठेत्त्रिषवणं भक्त्या पूजयित्वा महीसुताम् ॥ ३५

**சுக்ரதசா தோஷ பரிஹாரம்.**

சுக்ரதசையில் சுக்ரபுக்தி கெட்டதானால் ஸுந்தரகாண்டத்திலுள்ள அங்குளீயப்ரதான 36-வது ஸர்கத்தை ஸ்ரீ தேவியைப் பூஜித்து மூன்று காலங்களிலும் பக்தியுடன் படிக்க வேண்டும். (35)

साचेद्भुक्तिर्दोषदा स्यात्स्त्रीणां तत्रैव काण्डके ।
सीताया आञ्जनेयेन संवादस्यतु सर्गकम् ॥
श्रृणुयुस्ता अर्थतश्च शब्दतश्च द्विजाननात् ॥ ३६

சுக்ரதசையில் சுக்ரபுக்தி ஸ்திரீகளுக்கு தோஷத்தைக் கொடுக்குமானால் அதேகாண்டத்திலுள்ள ஸீதைக்கும் ஆஞ்ஜனேயருக்கும் ஏற்பட்ட ஸம்வாதத்தை விவரிக்கும் 33-வது ஸர்கத்தை அர்த்தத்துடன் மூலத்தையும் ப்ராம்ஹணமுகமாகக் கேட்கவேண்டும். (36)

---

**अथ निवेदनक्रमः । —**

हनूमतः समुद्रस्य तरणे समुपस्थिते ।
दध्यन्नं व्यञ्जनयुतं नवनीतं च दापयेत् ॥ ३७

**நிவேதனமுறை.**

ஹனுமார் ஸமுத்ரதரணம்செய்த ஸுந்தரகாண்டத்தின் முதல் ஸர்கத்தைப் பாராயணம் செய்கையில் ஊறுகாய்களுடன் கூடிய தயிர் அன்னத்தையும், வெண்ணெயையும் நிவேதனம் செய்ய வேண்டும். (37)

हनूमतस्तु जानक्या दर्शने सोपदंशकम् ।
अन्नमम्लरसोपेतं तांबूलं च निवेदयेत् ॥ ३८

ஹனுமார் ஸ்ரீ தேவியைக்கண்ட 15-வது ஸர்கத்தைப் படிக்கையில் ஊறுகாய்களுடன்கூடிய புளி அன்னத்தையும், தாம்பூலத்தையும் நிவேதனம் செய்ய வேண்டும். (38)

रामाङ्गुलीयदाने तु गुडान्नं मुद्गसंयुतम् ।
निवेदयेद्घृतेनाक्तं भक्ष्याणि विविधानि च ॥ ३९

ஹனுமார் ஸ்ரீ தேவியிடம் கணையாழியைக் கொடுக்கும் 36-வது ஸர்கத்தில் சர்க்கரைப்பொங்கலையும், நெய்யினால்செய்த பலவித பக்ஷணங்களையும் நிவேதனம் செய்ய வேண்டும். (39)

चूडामणिप्रदाने तु राघवाय हनूमता ।
गोक्षीरं मुद्गखण्डाढ्यं पक्वन्तु विनिवेदयेत् ॥ ४०

ஹனுமார் ஸ்ரீராமனிடம் சூடாமணியைகொடுக்கும் 66-வது ஸர்கத்தில் பாசிப்பருப்புடன்கலந்து பக்குவம் செய்யப்பட்ட பாயஸத்தை நிவேதனம் செய்ய வேண்டும். (40)

तत्तद्द्रव्येषु चोक्तेषु तत्तद्द्रव्ये तु दुर्लभे ।
निवेदयेद्यथालाभं सर्वालाभे दिशेत्फलम् ॥ ४१

அந்தந்த கட்டங்களிலும் சொல்லப்பட்ட நிவேதனம் செய்ய முடியாவிடில் முடிந்ததை நிவேதனம் செய்யவும். ஒன்றுமே செய்ய முடியாவிடில் பழத்தையாவது நிவேதனம்செய்ய வேண்டும். (41)

एवंकृते रघुपतिः सर्वथैव प्रसीदति ।
ददाति काङ्क्षितानर्थानन्तेच परमां गातिम् ॥
इति निवेदनक्रमः समाप्तः ॥ ४२

இவ்விதம் செய்வோமாளுல் ஸ்ரீ ராகவன் ப்ரஸன்னராகி நமது ஜீவதசையில் ஸகல அபீஷ்டங்களேயும் கொடுப்பதுடன் முடிவில் உத்தம கதியையும் கொடுத்தருளுவார். (42)

---

ஸ்ரீ:

## குமாரஸம்ஹிதையில் சொல்லப்பட்ட ஸ்ரீமத் ராமாயண நவாஹ மஹிமை.

---

माण्डूकर्णिरुवाच । —

कुंभसम्भव धर्मज्ञ विष्णुभक्त नमोऽस्तु ते ।
रामायणस्य यत्प्रोक्तं नवाहपठनं त्वया ॥ १
विस्तराच्छ्रोतुमिच्छामि तदद्य मुनिपुङ्गव ।
पूजां पारायणं दानं जपहोमार्चनादिकं ॥
कथं कार्यं कदा वापि कुत्र वा वद विस्तरात् ॥ २

**மாண்டுகர்ணி என்ற முனிவர் அகஸ்த்யரைப்பார்த்து கேட்கிருர் :—**

ஸகல தர்மங்களேயும் அறிந்தவரும், விஷ்ணு பக்தருமான ஓ அகஸ்த்யமுனிவரே, தங்களுக்கு நமஸ்காரம். தாங்கள் கூறிய ஸ்ரீமத் ராமாயண நவாஹ பாராயணமுறையையும் பூஜை, பாராயணம், தானம், ஜபம், ஹோமம், அர்ச்சனம் முதலியவற்றையும் எப்படி, எங்கு, எவ்விதம் செய்யவேண்டுமென்பதை விஸ்தாரமாகச் சொல்ல வேண்டும். (1—2)

अगस्त्य उवाच । —

मुने वक्ष्यामि ते पृष्टं श्रूयतामवधानतः ।
तुष्टोऽस्म्यनेन प्रश्नेन राघवं स्मारितोऽस्म्यहं ॥ ३

அகஸ்த்யர் பதில் கூறுகிருர் :—

முனிவரே, தாங்கள் கேட்டதைக் கூறுகிறேன், கவனத்துடன் கேட்க வேண்டும். இந்த கேள்வியால் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். தங்களால் ஸ்ரீராமனை நினைக்கலானேன். (3)

धर्मकामनया वाऽपि अर्थकामनयाऽपिवा ।
मोक्षकामोऽथवा रामप्रीतिमात्राभिलाषतः ॥ ४

अपस्मारादिरोगैश्च दुश्चिकित्सैः प्रपीडितः ।
नवग्रहाणां दौःस्थ्येन पीडितो वाऽपि चैकदा ॥
विश्लिष्टबन्धुसंयोगकामुकोऽवा सुतार्थिकः ॥ ५

श्रीमद्रामायणाख्यस्य इतिहासोत्तमस्य च ।
नवाहपठनं कृत्वा सर्वं सौख्यमवाप्नुयात् ॥ ६

தர்மம், அர்த்தம், காமம் இவற்றில் விருப்பம்கொண்டோ அல்லது ஸ்ரீராமானுக்ரஹத்தைமட்டும் விரும்பியோ, அபஸ்மாரம் முதலிய சிகித்சை செய்யமுடியாத ரோகங்களால் பீடிக்கப் பட்டோ, நவக்ரஹங்களின் கெட்ட தசையால் பீடிக்கப்பட்டோ, விட்டுப்பிரிந்த பந்துக்களின் சேர்க்கையை விரும்பியோ, புத்ரலாபத்தை விரும்பியோ ஸ்ரீமத் ராமாயணம் எனும் இதிஹாஸத்தை நவாஹ முறைப்படி படிப்பவர் ஸகல க்ஷேமங்களையும் அடைவர். (4—6)

ஹோமம், பாராயணம் முதலிய இது ஸம்பந்தமான மற்ற விபரங்களை ஸ்ரீமத் ராமாயண மஹாத்மயம் என்னும் க்ரந்தத்தில் பார்த்துக்கொள்ளவும்.

---

॥ श्रीः ॥

## ॥ अथ श्रीरामायणपठनोपक्रमेऽनुसन्धेयाः श्लोकाः ॥

---

### ॥ श्रीविघ्नेश्वरध्यानम् ॥

शुक्लाम्बरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।
प्रसन्नवदनं ध्यायेत्सर्वविघ्नोपशान्तये ॥ १

वागीशाद्याः सुमनसः सर्वार्थानामुपक्रमे ।
यं नत्वा कृतकृत्याः स्युस्तं नमामि गजाननम् ॥ २

### ॥ सरस्वतीप्रार्थना ॥

दोर्भिर्युक्ता चतुर्भिः स्फटिकमणिमयीमक्षमालां दधाना
हस्तेनैकेन पद्मं सितमपि च शुकं पुस्तकं चापरेण ।
भासा कुन्देन्दुशङ्खस्फटिकमणिनिभा भासमानाऽसमाना
सा मे वाग्देवतेयं निवसतु वदने सर्वदा सुप्रसन्ना ॥ ३

### ॥ श्रीवाल्मीकिनमस्क्रिया ॥

कूजन्तं राम रामेति मधुरं मधुराक्षरम् ।
आरुह्य कविताशाखां वन्दे वाल्मीकिकोकिलम् ॥ ४

वाल्मीकेर्मुनिसिंहस्य कवितावनचारिणः ।
शृण्वन्रामकथानादं को न याति परां गतिम् ॥ ५

यः पिबन्सततं रामचरितामृतसागरम् ।
अतृप्तस्तं मुनिं वन्दे प्राचेतसमकल्मषम् ॥ ६

### ॥ हनुमन्नमस्क्रिया ॥

गोष्पदीकृतवारीशिं मशकीकृतराक्षसम् ।
रामायणमहामालारत्नं वन्देऽनिलात्मजम् ॥ ७

अञ्जनानन्दनं वीरं जानकीशोकनाशनम् ।
कपीशमक्षहन्तारं वन्दे लङ्काभयंकरम् ॥ ८

उल्लङ्घ्य सिन्धोः सलिलं सलीलं यः शोकवह्निं जनकात्मजायाः ।
आदाय तेनैव ददाह लङ्कां नमामि तं प्राञ्जलिराञ्जनेयम् ॥ ९

आञ्जनेयमतिपाटलाननं काञ्चनाद्रिकमनीयविग्रहम् ।
पारिजाततरुमूलवासिनं भावयामि पवमाननन्दनम् ॥ १०

यत्र यत्र रघुनाथकीर्तनं तत्र तत्र कृतमस्तकाञ्जलिम् ।
बाष्पवारिपरिपूर्णलोचनं मारुतिं नमत राक्षसान्तकम् ॥ ११

मनोजवं मारुततुल्यवेगं जितेन्द्रियं बुद्धिमतां वरिष्ठम् ।
वातात्मजं वानरयूथमुख्यं श्रीरामदूतं शिरसा नमामि ॥ १२

॥ श्रीरामायणप्रार्थना ॥

यः कर्णाञ्जलिसंपुटैरहरहः सम्यक्पिबत्यादराद्
वाल्मीकेर्वदनारविन्दगलितं रामायणाख्यं मधु ।
जन्मव्याधिजराविपत्तिमरणैरत्यन्तसोपद्रवं
संसारं स विहाय गच्छति पुमान्विष्णोः पदं शाश्वतम् ॥ १३

तदुपगतसमाससन्धियोगं सममधुरोपनतार्थवाक्यबद्धम् ।
रघुवरचरितं मुनिप्रणीतं दशशिरसश्च वधं निशामयध्वम् ॥ १४

वाल्मीकिगिरिसंभूता रामसागरगामिनी ।
पुनातु भुवनं पुण्या रामायणमहानदी ॥ १५

श्लोकसारसमाकीर्णं सर्गकल्लोलसंकुलम् ।
काण्डग्राहमहामीनं वन्दे रामायणार्णवम् ॥ १६

वेदवेद्ये परे पुंसि जाते दशरथात्मजे ।
वेदः प्राचेतसादासीत्साक्षाद्रामायणात्मना ॥ १७

॥ श्रीरामध्यानक्रमः ॥

वैदेहीसहितं सुरद्रुमतले हैमे महामण्डपे
मध्येपुष्पकमासने मणिमये वीरासने सुस्थितम् ।
अग्रे वाचयति प्रभञ्जनसुते तत्त्वं मुनिभ्यः परं
व्याख्यान्तं भरतादिभिः परिवृतं रामं भजे श्यामलम् ॥ १८

वामे भूमिसुता पुरश्च हनुमान्पश्चात्सुमित्रासुतः
शत्रुघ्नो भरतश्च पार्श्वदलयोर्वाय्वादिकोणेषु च ।
सुग्रीवश्च विभीषणश्च युवराट् तारासुतो जाम्बवान्
मध्ये नीलसरोजकोमलरुचिं रामं भजे श्यामलम् ॥ १९

नमोऽस्तु रामाय सलक्ष्मणाय देव्यै च तस्यै जनकात्मजायै ।
नमोऽस्तु रुद्रेन्द्रयमानिलेभ्यो नमोस्तु चन्द्रार्कमरुद्गणेभ्यः ॥ २०

॥ हनुमद्ध्यानम् ॥

सर्वारिष्टनिवारकं शुभकरं पिङ्गाक्षमक्षापहम्
सीतान्वेषणतत्परं कपिवरं कोटीन्दुसूर्यप्रभम् ।
लङ्काद्वीपभयङ्करं सकलदं सुग्रीवसम्मानितं
देवेन्द्रादिसमस्तदेवविनुतं काकुत्स्थदूतं भजे ॥

---

॥ पारायणसमापनसमये अनुसन्धेयश्लोकक्रमः ॥

स्वस्ति प्रजाभ्यः परिपालयन्तां न्याय्येन मार्गेण महीं महीशाः ।
गोब्राह्मणेभ्यः शुभमस्तु नित्यं लोका समस्ताः सुखिनो भवन्तु ॥ १

काले वर्षतु पर्जन्यः पृथिवी सस्यशालिनी ।
देशोऽयं क्षोभरहितो ब्राह्मणास्सन्तु निर्भयाः ॥ २

अपुत्राः पुत्रिणः सन्तु पुत्रिणः सन्तु पौत्रिणः ।
अधनाः सधनाः सन्तु जीवन्तु शरदां शतम् ॥ ३

चरितं रघुनाथस्य शतकोटिप्रविस्तरम् ।
एकैकमक्षरं प्रोक्तं महापातकनाशनम् ॥ ४

शृण्वन् रामायणं भक्त्या यः पादं पदमेव वा ।
स याति ब्रह्मणः स्थानं ब्रह्मणा पूज्यते सदा ॥ ५

रामाय रामभद्राय रामचन्द्राय वेधसे ।
रघुनाथाय नाथाय सीतायाः पतये नमः ॥ ६

यन्मङ्गलं सहस्राक्षे सर्वदेवनमस्कृते ।
वृत्रनाशे समभवत्तत्ते भवतु मङ्गलम् ॥ ७

यन्मङ्गलं सुपर्णस्य विनताऽकल्पयत्पुरा ।
अमृतं प्रार्थयानस्य तत्ते भवतु मङ्गलम् ॥ ८

अमृतोत्पादने दैत्यान् घ्नतो वज्रधरस्य यत् ।
अदितिर्मङ्गलं प्रादात्तत्ते भवतु मङ्गलम् ॥ ९

त्रीन्विक्रमान् प्रक्रमतो विष्णोरमिततेजसः ।
यदासीन्मङ्गलं राम तत्ते भवतु मङ्गलम् ॥ १०

ऋतवः सागरा द्वीपा वेदा लोका दिशश्च ते ।
मङ्गलानि महाबाहो दिशन्तु तव सर्वदा ॥ ११

श्रीरामचन्द्रः श्रितपारिजातः समस्तकल्याणगुणांबुराशिः ।
सीतामुखांभोरुहसञ्चरीकः निरन्तरं मङ्गलमातनोतु ॥ १२

कायेन वाचा मनसेन्द्रियैर्वा बुध्याऽऽत्मना वा प्रकृतेः स्वभावात् ।
करोमि यद्यत्सकलं परस्मै नारायणायेति समर्पयामि ॥ १३

---

ஶ்ரீ:

# பாராயணத்துக்குமுன் த்யானம் செய்யவேண்டிய சுலோகங்கள்.

---

## ஸ்ரீ விநாயக த்யானம்

ஶுக்லாம்பரதரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்புஜம் ।
ப்ரஸன்னவதனம் த்யாயேத் ஸர்வவிக்னோபஶாந்தயே ॥ 1

வாகீஶாத்யா: ஸுமனஸ: ஸர்வார்த்தானுமுபக்ரமே ।
யம் நத்வா க்ருதக்ருத்யா: ஸ்யுஸ்தம் நமாமி கஜானனம் ॥ 2

## ஸரஸ்வதீ ப்ரார்த்தனே.

தோர்பிர்யுக்தா சதுர்பி: ஸ்படிகமணிமயீமக்ஷமாலாம் ததானா
ஹஸ்தேனைகேன பத்மம் ஸிதமபி ச ஶுகம் புஸ்தகம்
சாபரேண ।
பாஸா குந்தேந்து ஶங்க ஸ்படிகமணிநிபா பாஸமானாऽஸமானா
ஸா மே வாக்தேவதேயம் நிவஸதுவதனே ஸர்வதா
ஸுப்ரஸன்னா ॥ 3

## ஸ்ரீவால்மீகி ஸ்துதி

கூஜந்தம் ராம ராமேதி மதுரம் மதுராக்ஷரம் ।
ஆருஹ்ய கவிதாஶாகாம் வந்தே வால்மீகிகோகிலம் ॥ 4

வால்மீகேர்முனிஸிம்ஹஸ்ய கவிதாவனசாரிண: ।
ஶ்ருண்வன் ராமகதாநாதம் கோ ந யாதி பராம் கதிம் ॥ 5

ய: பிபன் ஸததம் ராமசரிதாம்ருதஸாகரம் ।
அத்ருப்தஸ்தம் முனிம் வந்தே ப்ராசேதஸமகல்மஷம் ॥ 6

## ஸ்ரீ ஆஞ்ஜநேய ஸ்தோத்ரம்

கோஷ்பதீக்ருதவாராஶிம் மஶகீக்ருதராக்ஷஸம் ।
ராமாயணமஹாமாலாரத்னம் வந்தேऽநிலாத்மஜம் ॥ 7

அஞ்ஜனாநந்தனம் வீரம் ஜானகீஶோகநாஶனம் ।
கபீஶமக்ஷஹந்தாரம் வந்தே லங்காபயங்கரம் ॥ 8

உல்லங்க்ய ஸிந்தோ: ஸலிலம் ஸலீலம்
ய: ஶோகவன்ஹிம் ஜனகாத்மஜாயா: ।
ஆதாய தேனைவ ததாஹ லங்காம்
நமாமி தம் ப்ராஞ்ஜலிராஞ்ஜநேயம் ॥ 9

ஆஞ்ஜநேயமதிபாடலானனம்
காஞ்சனாத்ரிகமனீய விக்ரஹம் ।
பாரிஜாததருமூலவாஸினம்
பாவயாமி பவமானநந்தனம் ॥ 10

யத்ர யத்ர ரகுநாதகீர்த்தனம்
தத்ர தத்ர க்ருதமஸ்தகாஞ்ஜலிம் ।
பாஷ்பவாரிபரிபூர்ணலோசனம்
மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம் ॥ 11

மனோஜவம் மாருததுல்யவேகம்
ஜிதேந்த்ரியம் புத்திமதாம் வரிஷ்டம் ।
வாதாத்மஜம் வானரயூதமுக்யம்
ஸ்ரீராமதூதம் ஶிரஸா நமாமி ॥ 12

## ஸ்ரீராமாயண ப்ரார்த்தனை.

ய: கர்ணாஞ்ஜலி ஸம்புடைரஹரஹ: ஸம்யக்பிபத்யாதராத்
வால்மீகேர்வதனா ரவிந்தகலிதம் ராமாயணாக்யம் மது ।
ஜன்ம வ்யாதிஜராவிபத்திமரணைரத்யந்தஸோபத்ரவம்
ஸம்ஸாரம் ஸ விஹாய கச்சதி புமான் விஷ்ணோ:
பதம் ஶாஶ்வதம் ॥ 13

ததுபகதஸமாஸஸந்தியோகம்
ஸமமதுரோபநதார்த்தவாக்யபத்தம் ।
ரகுவரசரிதம் முனிப்ரணீதம்
தஶஶிரஸஶ்ச வதம் நிஶாமயத்வம் ॥ 14

வால்மீகிகிரிஸம்பூதா ராமஸாகரகாமினீ ।
புனாது புவனம் புண்யா ராமாயணமஹாநதீ ॥ 15

ஶ்லோகஸாரஸமாகீர்ணம் ஸர்ககல்லோலஸம்குலம் ।
காண்டக்ராஹமஹாமீனம் வந்தே ராமாயணார்ணவம் ॥ 16

வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தஶரதாத்மஜே ।
வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மனா ॥ 17

## ஸ்ரீராம த்யானம்.

வைதேஹீ ஸஹிதம் ஸுரத்ருமதலே
ஹைமே மஹாமண்டபே
மத்யேபுஷ்பகமாஸனே மணிமயே
வீராஸனே ஸுஸ்த்திதம் ।

அக்ரே வாசயதிப்ரபஞ்ஜனஸுதே
தத்வம் முனிப்ய: பரம்
வ்யாக்யாந்தம் பரதாதிபி: பரிவ்ருதம்
ராமம் பஜே ஶ்யாமளம் ‖ 18

வாமே பூமிஸுதா புரஶ்ச ஹனுமான்
பஶ்சாத் ஸுமித்ராஸுத:
ஶத்ருக்னோ பரதஶ்ச பார்ஶ்வதளயோர்
வாய்வாதிகோணேஷு ச ।
ஸுக்ரீவஶ்ச விபீஷணஶ்ச யுவராட்
தாராஸுதோ ஜாம்பவான்
மத்யே நீலஸரோஜகோமளருசிம்
ராமம் பஜே ஶ்யாமளம் ‖ 19

நமோऽஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய
தேவ்யை ச தஸ்யை ஜனகாத்மஜாயை ।
நமோऽஸ்து ருத்ரேந்த்ரயமானிலேப்யோ
நமோऽஸ்து சந்த்ரார்க்கமருத்கணேப்ய: ‖ 20

## ஹனுமத் த்யானம்.

ஸர்வாரிஷ்டநிவாரகம் சுபகரம் பிங்காக்ஷமக்ஷாபஹம்
ஸீதான்வேஷணதத்பரம் கபிவரம் கோடீந்துஸூர்யப்ரபம் ।
லங்காத்வீபபயங்கரம் ஸகலதம் ஸுக்ரீவஸம்மானிதம்
தேவேந்த்ராதிஸமஸ்ததேவவினுதம் காகுத்ஸ்ததூதம் பஜே ‖

## பாராயணமுடிவில் த்யானம் செய்யத்தக்க ஸ்லோகங்கள்.

ஸ்வஸ்தி ப்ரஜாப்ய: பரிபாலயந்தாம்
ந்யாய்யேன மார்கேண மஹீம் மஹீஶா: ।
கோப்ராம்ஹணேப்ய: ஶுபமஸ்து நித்யம்
லோகா: ஸமஸ்தா: ஸுகினோ பவந்து ‖ 1

காலே வர்ஷது பர்ஜன்ய: ப்ருதிவீ ஸஸ்யஶாலினீ ।
தேஶோऽயம் க்ஷோபரஹிதோ ப்ராம்ஹணா: ஸந்துநிர்பயா: ‖

அபுத்ரா: புத்ரிண: ஸந்து புத்ரிண: ஸந்து பௌத்ரிண: ।
அதனா: ஸதனா: ஸந்து ஜீவந்து ஶரதாம்ஶதம் ‖ 3

சரிதம் ரகுநாதஸ்ய ஶதகோடிப்ரவிஸ்தரம் ।
ஏகைகமக்ஷரம் ப்ரோக்தம் மஹாபாதகநாஶனம் ‖ 4

ஶ்ருண்வன் ராமாயணம் பக்த்யா ய: பாதம் பதமேவ வா ।
ஸ யாதி ப்ரம்ஹண: ஸ்தானம் ப்ரம்ஹணா பூஜ்யதே ஸதா ‖ 5

ராமாய ராமபத்ராய ராமசந்த்ராய வேதஸே ।
ரகுநாதாய நாதாய ஸீதாயா: பதயே நம: ‖ 6

யன்மங்களம் ஸஹஸ்ராக்ஷே ஸர்வதேவநமஸ்க்ருதே ।
வ்ருத்ரநாஶே ஸமபவத்தத்தே பவது மங்களம் ॥ 7

யன்மங்களம் ஸுபர்ணஸ்ய விநதாऽகல்பயத் புரா ।
அம்ருதம் ப்ரார்த்தயானஸ்ய தத்தே பவது மங்களம் ॥ 8

அம்ருதோத்பாதனே தைத்யான் க்னதோ வஜ்ரதரஸ்யயத் ।
அதிதிர்மங்களம் ப்ராதாத் தத்தே பவது மங்களம் ॥ 9

த்ரீன் விக்ரமான் ப்ரக்ரமதோ விஷ்ணோரமிததேஜஸ: ।
யதாஸீன் மங்களம் ராம தத்தே பவது மங்களம் ॥ 10

ருதவ: ஸாகரா த்வீபா வேதா லோகா திஶஶ்ச தே ।
மங்களானி மஹாபாஹோ திஶந்து தவ ஸர்வதா ॥ 11

ஸ்ரீராமசந்த்ர: ஶ்ரிதபாரிஜாத:
ஸமஸ்த கல்யாணகுணாம்புராஶி: ।
ஸீதாமுகாம்போருஹஸஞ்சரீக:
நிரந்தரம் மங்களமாததாது ॥ 12

காயேன வாசா மனஸேந்த்ரியைர்வா
புத்யாத்மனா வா ப்ரக்ருதே: ஸ்வபாவாத் ।
கரோமி யத்யத்ஸகலம் பரஸ்மை
நாராயணாயேதி ஸமர்ப்பயாமி ॥ 13

---

கீழே குறிப்பிடும் மந்த்ரத்தை நான்கு தடவைக்கு குறையாமல் பன்னிரண்டு தடவை வரைக்கும் ஜபிக்கவும்.

குலதைவதமஸ்மாகம் கோதண்டமண்டிதம் ।
இஷ்டதைவதமஸ்மாகம் இக்ஷ்வாகுகுலதைவதம் ॥

ஸ்ரீஸுந்தரகாண்டத்தை குருமுகமாய் உபதேசம் பெற்று படிப்பது நலம். அதற்கு ஸந்தர்பம் நேராவிடில் இப்பொழுது பீடத்திலிருக்கும் ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீசங்கராசார்யாளை மனதால் த்யானம் செய்துகொண்டு பாராயணம் செய்யவும்.

பொதுவாக ஸ்ரீமத் ராமாயணத்தையோ ஸுந்தரகாண்டத்தையோ பாராயணம் செய்கிறவர்கள் ஸ்ரீராமஷடக்ஷரீ எனும் மஹாமந்த்ரத்தை குருமுகமாய் உபதேசம் பெற்று பாராயணம் செய்வது உத்தமம். இதற்காக பாராயணத்தை ஆரம்பிக்க தாமதிக்கவேண்டியதில்லை. பாராயணத்தை தொடர்ந்து செய்துவந்தால் ஸத்குரு தானாகவே ஸ்ரீராம ப்ரஸாதத்தால் கிடைத்து விடுவார்.

---



श्रीरामपट्टाभिषेकम् ॥

अभ्यषिञ्चन्नरव्याघ्रं प्रसन्नेन सुगन्धिना ।
सलिलेन सहस्राक्षं वसवो वासवं यथा ॥

The Literary Press, Salem.

श्रीरामजयम् ।

श्रीरामचन्द्राय परस्मैब्रह्मणे नमः ।

# श्रीमत् वाल्मीकि रामायणम्
# सुन्दर काण्डम् ।

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்
# சுந்தர காண்டம்.

## प्रथमः सर्गः — முதல் ஸர்கம் ॥१॥

### "सागर लङ्घनम्" — ஸமுத்ரத்தைத் தாண்டுதல்.

ततो रावणनीतायाः सीतायाः शत्रुकर्शनः ।
इयेष पदमन्वेष्टुं चारणाचरिते पथि ॥ १

दुष्करं निष्प्रतिद्वन्द्वं चिकीर्षन्कर्म वानरः ।
समुदग्रशिरोग्रीवो गवां पतिरिवाऽऽबभौ ॥ २

ததோ ராவணநீதாயா: ஸீதாயா: ஶத்ருகர்ஶந: ।
இயேஷ பதமன்வேஷ்டும் சாரணசரிதே பதி ॥ 1

துஷ்கரம் நிஷ்ப்ரதித்வந்த்வம் சிகீர்ஷன்கர்ம வாநர: ।
ஸமுதக்ரஶிரோக்ரீவோ கவாம் பதிரிவாபபௌ ॥ 2

---

ஸ்ரீராம கார்ய ஸித்திக்காக ஜாம்பவான் உற்சாகப்படுத்திய பிறகு சத்ருக்களை நிக்ரஹம் செய்வதில் வல்லமையுள்ள ஸ்ரீ ஆஞ்சனேயர் ராவணனால் அபகரிக்கப்பட்ட ஸீதையைக் காண்பதற்காக சாரணர்கள் செல்லும் ஆகாசத்தில் செல்ல விரும்பினார். (1)

பிறரால் செய்ய முடியாததும் நிகரற்றதுமான காரியத்தைச் செய்ய விரும்பி ஸ்ரீ ஹனுமார் கழுத்து, தலை இவைகளை உயரத் தூக்கி பசுக்களின் கூட்டத்தில் நிமிர்ந்த தலையுடன் நிற்கும் காளை போல் விளங்கினார். (2)

अथ वैडूर्यवर्णेषु शाद्वलेषु महाबलः।
धीरस्सलिलकल्पेषु विचचार यथासुखम्॥ ३

द्विजान्वित्रासयन्धीमानुरसा पादपान्हरन्।
मृगांश्च सुबहून्निघ्नन्प्रवृद्ध इव केसरी॥ ४

नीललोहितमाञ्जिष्ठपद्मवर्णैस्सितासितैः।
स्वभावविहितैश्चित्रैर्धातुभिस्समलंकृतम्॥ ५

कामरूपिभिराविष्टमभीक्ष्णं सपरिच्छदैः।
यक्षकिन्नरगन्धर्वैर्देवकल्पैश्च पन्नगैः॥ ६

स तस्य गिरिवर्यस्य तले नागवरायुते।
तिष्ठन्कपिवरस्तत्र ह्रदे नाग इवाबभौ॥ ७

அத வைடூர்யவர்ணேஷு ஶாத்வலேஷு மஹாபல:।
தீரஸ்ஸலிலகல்பேஷு விசசார யதாஸுகம்॥ 3

த்விஜான்வித்ராஸயன்தீமானுரஸா பாதபான்ஹரன்।
ம்ருகாம்ஶ்ச ஸுபஹூன்னிக்னன்ப்ரவ்ருத்த இவ கேஸரீ॥ 4

நீலலோஹிதமாஞ்ஜிஷ்ட பத்மவர்ணைஸ்ஸிதாஸிதை:।
ஸ்வபாவவிஹிதைஶ்சித்ரைர்தாதுபிஸ்ஸமலங்க்ருதம்॥ 5

காமரூபிபிராவிஷ்டமபீக்ஷ்ணம் ஸபரிச்சதை:।
யக்ஷகின்னரகந்தர்வைர்தேவகல்பைஶ்ச பன்னகை:॥ 6

ஸ தஸ்ய கிரிவர்யஸ்ய தலே நாகவராயுதே।
திஷ்டன்கபிவரஸ்தத்ர ஹ்ரதே நாக இவாபபௌ॥ 7

---

பிறகு தைர்யமும், புத்தியும், அளவற்ற பலமும் படைத்தவரும் வைடூர்யத்தின் நிறம் போன்றதும் ஜலத்திற்கொப்பானதுமான புல் புதர்களில் பக்ஷிகளை பயமுறுத்துகிறவரும், மார்பினுல் மரங்களைதள்ளுகிறவரும், வெகு மிருகங்களை ஹிம்சிக்கிறவருமான ஸ்ரீ ஹனுமார் பாய்வதற்கு முயன்ற சிங்கம்போல தனது இஷ்டப்படி உலாவினர்.

[வீரனை ஸ்ரீ ஹனுமான் சமுத்ரத்தைத் தாண்டுவதற்காக முயற்சித்து அங்குமிங்கும் உலாவும்போது பக்ஷிகள் முதலியவற்றிற்கு ஹிம்சை ஏற்பட்டதென்பது கருத்து.] (3, 4)

நீலம், சிகப்பு, மஞ்சள், பத்மவர்ணம், வெளுப்பு, கறுப்பு முதலிய வர்ணங்களால் இயற்கையாகவே அமைந்துள்ளதும், பலவகைப்பட்டதுமான நற் செங்கற் பொடிகளால், நன்கு அலங்கரிக்கப்பட்டதும், இஷ்டம்போல் ரூபமெடுக்கவல்ல யக்ஷர், கின்னரர், கந்தர்வர் இவர்களாலும், தேவர்களுக்கொப்பான பரிவாரங்களோடு கூடிய பன்னகர்களாலும் இடைவிடாது நிறைந்

स सूर्याय महेन्द्राय पवनाय स्वयंभुवे ।
भूतेभ्यश्चाञ्जलिं कृत्वा चकार गमने मतिम् ॥ ८

अञ्जलिं प्राङ्मुखः कृत्वा पवनायात्मयोनये ।
ततो हि ववृधे गन्तुं दक्षिणो दक्षिणां दिशम् ॥ ९

प्लवङ्गप्रवरैर्दृष्टः प्लवने कृतनिश्चयः ।
ववृधे रामवृद्ध्यर्थं समुद्र इव पर्वसु ॥ १०

निष्प्रमाणशरीरस्सँल्लिलङ्घयिषुरर्णवम् ।
[प्रगृह्य बलवान्बाहू लङ्कामभिमुखः स्थितः]
बाहुभ्यां पीडयामास चरणाभ्यांच पर्वतम् ॥ ११

ஸ ஸூர்யாய மஹேந்த்ராய பவனாய ஸ்வயம்புவே ।
பூதேப்யஸ்சாஞ்ஜலிம் க்ருத்வா சகார கமனே மதிம் ॥ 8

அஞ்சலிம் ப்ராங்முக: க்ருத்வா பவனாயாத்மயோனயே ।
ததோ ஹி வவ்ருதே கந்தும் தக்ஷிணோ தக்ஷிணாம் திஸம் ॥ 9

ப்லவங்கப்ரவரைர்த்ருஷ்ட: ப்லவனே க்ருதநிஸ்சய: ।
வவ்ருதே ராமவ்ருத்யர்த்தம் ஸமுத்ர இவ பர்வஸு ॥ 10

நிஷ்ப்ரமாணஸரீரஸ்ஸன்லிலங்கயிஷுரர்ணவம் ॥
[ப்ரக்ருஹ்ய பலவான்பாஹூ லங்காமபிமுக: ஸ்தித:]
பாஹுப்யாம் பீடயாமாஸ சரணப்யாம்ச பர்வதம் ॥ 11

---

*துள்ளதும் பல மேலான யானைகளுள்ளதும் பெரியோர்களால் வணங்கப்படுவதுமான அம்மஹேந்திர மலையில் நிற்கும் ஸ்ரீ ஹனுமார் மடுவிலிருக்கும் யானைபோல் விளங்கினர்.* (5, 6, 7)

*அந்த ஸ்ரீ ஹனுமார் புறப்படுகையில் ஸூர்யன், இந்திரன், வாயு, பிரம்மா மற்றுமுள்ள தெய்வங்களையும் வணங்கிவிட்டுப் புறப்பட எண்ணினர்.* (8)

*மேலும் தன் தந்தையை கிழக்கு நோக்கி வணங்கிவிட்டு மஹாஸமர்த்தரான அந்த ஹனுமார் தென்திசையை நோக்கிப் புறப்படுவதற்குமுன் ஸந்தோஷத்தால் பருத்தார்.* (9)

*வானரர்கள் பார்த்துக்கொண்டிருக்க ஸமுத்ரத்தைத் தாண்டுவதில் உறுதிகொண்ட ஸ்ரீ ஹனுமார் ஸ்ரீராம கார்யத்துக்காக பருவ காலங்களில் ஸமுத்ரம் வளர்வதுபோல் வளர்ந்தார்.* (10)

*ஸமுத்ரத்தைத் தாண்டவேண்டி எல்லையற்ற பருமனை உடையவராய் கைகளாலும் கால்களாலும் அம்மலையை ஆட்டிவைக்கலானர்.* (11)

स चचालाचलश्चापि मुहूर्तं कपिपीडितः ।
तरूणां पुष्पिताग्राणां सर्वं पुष्पमशातयत् ॥ १२

तेन पादपमुक्तेन पुष्पौघेण सुगन्धिना ।
सर्वतः संवृतश्शैलः बभौ पुष्पमयो यथा ॥ १३

तेनचोत्तमवीर्येण पीड्यमानस्स पर्वतः ।
सलिलं संप्रसुस्राव मदं मत्त इव द्विपः ॥ १४

पीड्यमानस्तु बलिना महेन्द्रस्तेन पर्वतः ।
रीतीर्निर्वर्तयामास काञ्चनाञ्जनराजतीः ॥ १५

मुमोच च शिलाश्शैलो विशालास्समनश्शिलाः ।
मध्यमेनार्चिषा जुष्टो धूमराजीरिवानलः ॥ १६

ஸ சசாலாசலஶ்சாபி முஹூர்த்தம் கபிபீடித: ।
தரூணாம் புஷ்பிதாக்ராணாம் ஸர்வம் புஷ்பமஶாதயத் ॥ 12

தேந பாதபமுக்தேன புஷ்பௌகேண ஸுகந்திநா ।
ஸர்வத: ஸம்வ்ருதஶ்ஶைல: பபௌ புஷ்பமயோ யதா ॥ 13

தேனசோத்தமவீர்யேண பீட்யமானஸ்ஸ பர்வத: ।
ஸலிலம் ஸம்ப்ரஸுஸ்ராவ மதம் மத்த இவ த்விப: ॥ 14

பீட்யமானஸ்து பலிநா மஹேந்த்ரஸ்தேன பர்வத: ।
ரீதீர்நிர்வர்தயாமாஸ காஞ்சநாஞ்ஜனராஜதீ: ॥ 15

முமோச ச ஶிலாஶ்ஶைலோ விஶாலாஸ்ஸமனஶ்ஶிலா: ।
மத்யமேனார்சிஷா ஜுஷ்டோ தூமராஜீரிவானல: ॥ 16

---

அவரால் ஆட்டப்பட்டு அம்மலையும் சிறிது நேரம் அசையலாயிற்று. அதிகமசைந்ததால் அங்கு பூத்த மரங்கள் எல்லாம் பூக்களை உதிர்த்துவிட்டன. (12)

அப்படி மரங்களினின்றும் உதிர்ந்த நறுமணமுள்ள பூக்களால் மூடப்பட்ட அம்மலை பூக்குவியல்போல் தென்பட்டது. (13)

சிறந்த வீரரான ஹனுமாரால் பிடிக்கப்பட்ட அம்மலை மதம் பிடித்த யானை மதஜலத்தைப் பெருகவிடுவதுபோல் ஜலத்தை அதிகமாக பெருகவிட்டது. (14)

பலவானான அந்த ஹனுமாரால் பீடிக்கப்பட்ட அம்மலை பொன், மை, வெள்ளி, என்னுமிவைகளின் கோடுகளை வெளிப்படுத்தியது. (15)

அந்த பர்வதமானது நடுத்தரமான ஜ்வாலையுடன் கூடிய அக்னி புகைக்கூட்டத்தைக் கக்குவதைப்போல் நற்செங்கற்

गिरिणा पीड्यमानेन पीड्यमानानि सर्वतः ।
गुहाविष्टानि भूतानि विनेदुर्विकृतैस्स्वरैः ॥ १७

स महासत्वसन्नादः शैलपीडानिमित्तजः ।
पृथिवीं पूरयामास दिशश्चोपवनानि च ॥ १८

शिरोभिः पृथुभिस्सर्पा व्यक्तस्वस्तिकलक्षणैः ।
वमन्तः पावकं घोरं ददंशुर्दशनैश्शिलाः ॥ १९

तास्तदा सविषैर्दष्टाः कुपितैस्तैर्महाशिलाः ।
जज्वलुः पावकोद्दीप्ताः बिभिदुश्च सहस्रधा ॥ २०

கிரிணா பீட்யமானேன பீட்யமானானி ஸர்வத: ।
குஹாவிஷ்டானி பூதானி விநேதுர்விக்ருதைஸ்ஸ்வரை: ॥ 17

ஸ மஹாஸத்வஸன்னாத: ஶைலபீடாநிமித்தஜ: ।
ப்ருதிவீம் பூரயாமாஸ திஶஶ்சோபவனானி ச ॥ 18

ஶிரோபி: ப்ருதுபிஸ்ஸர்பா வ்யக்தஸ்வஸ்திகலக்ஷணை: ।
வமந்த: பாவகம் கோரம் ததம்ஶுர்தஶனைஶ்ஶிலா: ॥ 19

தாஸ்ததா ஸவிஷைர்தஷ்டா: குபிதைஸ்தைர்மஹாஶிலா: ।
ஜஜ்வலு: பாவகோத்தீப்தா: பிபிதுஶ்ச ஸஹஸ்ரதா ॥ 20

---

*பொடிகளுடன் கூடிய கற்களை வெளியிட்டது. அதாவது ஹனுமார் கிளம்பும்போது கற்கள் சரிந்தன என்பது கருத்து.* (16)

*ஹனுமாரால் பீடிக்கப்பட்ட மலையினால் சர்வப்ராணிகளும் பீடிக்கப்பட்டு மிகவும் தைன்யத்தைக்காட்டும் குரலில் சப்தித்தன.* (17)

*மலை பீடிக்கப்பட்டதாலுண்டான அந்த மஹத்தான ப்ராணிகளின் சப்தமானது பூமியிலும் திக்குகளிலும் பக்கத்திலுள்ள தோட்டங்களிலும் பரவியது.* (18)

*நன்கு ப்ரகாசிக்கும் படத்திலுள்ள நீலக்கோடுகளோடு கூடியவைகளும் பெருத்தவைகளுமான தலைகளால் சர்ப்பங்கள் கடும் விஷாக்னியைக் கக்குகின்றவைகளாய் கற்களைக் கடித்தன.* (19)

*விஷங்களோடு கூடியதுகளும் கோபங் கொண்டவைகளுமான அந்த ஸர்ப்பங்களால் கடிக்கப்பட்ட அப்பெருங் கற்கள் ஆயிரம் தூளாக வெடித்தன. மேலும் விஷாக்னியால் ஜ்வலிக்கப்பெற்று ப்ரகாசித்தன.* (20)

यानि चौषधजालानि तस्मिञ्जातानि पर्वते।
विषघ्नान्यपि नागानां न शेकुश्शमितुं विषम्॥ २१

भिद्यतेऽयं गिरिर्भूतैरिति मत्वा तपस्विनः।
त्रस्ता विद्याधरास्तस्मादुत्पेतुः स्त्रीगणैः सह॥ २२

पानभूमिगतं हित्वा हैममासवभाजनम्।
पात्राणिच महार्हाणि करकांश्च हिरण्मयान्॥ २३

लेह्यानुच्चावचान्भक्ष्यान्मांसानि विविधानि च।
आर्षभाणि च चर्माणि खड्गांश्च कनकत्सरून्॥ २४

कृतकण्ठगुणाः क्षीबा रक्तमाल्यानुलेपनाः।
रक्ताक्षाः पुष्कराक्षाश्च गगनं प्रतिपेदिरे॥ २५

யானி சௌஷதஜாலானி தஸ்மின்ஜாதானி பர்வதே।
விஷக்ஞன்யபி நாகானும் ந ஶேகுஶ்ஶமிதும் விஷம்॥ 21

பித்யதேऽயம் கிரிர்பூதைரிதி மத்வா தபஸ்வின:॥
த்ரஸ்தா வித்யாதராஸ்தஸ்மாதுத்பேது: ஸ்திரீகணை : ஸஹ॥ 22

பானபூமிகதம் ஹித்வா ஹைமமாஸவபாஜனம்।
பாத்ராணிச மஹார்ஹாணி கரகாம்ஶ்ச ஹிரண்மயான்॥ 23

லேஹ்யானுச்சாவசான்பக்ஷ்யான்மாம்ஸானி விவிதானி ச।
ஆர்ஷபாணி ச சர்மாணி கட்காம்ஶ்ச கனகத்ஸரூன்॥ 24

க்ருதகண்டகுண: க்ஷீபா ரக்தமால்யானுலேபன:।
ரக்தாக்ஷா: புஷ்கராக்ஷாஶ்ச ககனம் ப்ரதிபேதிரே॥ 25

---

*அம்மலையில் முளைத்த பலவிதப் பச்சிலைகள் விஷத்தைப் போக்கக்கூடியவைகளாயினும் அச்சமயத்திலுண்டான விஷத்தைப்போக்க சக்தியற்றவைகளாய் ஆயின.* (21)

*இம்மலை பூதங்களால் பிளக்கப்படுகிறதென நினைத்து மகரிஷிகளும் வித்யாதரர்களும் பயத்தை அடைந்து சாப்பிடுமிடத்திலுள்ள தங்கமயமான மது பாத்ரத்தையும், விலையுயர்ந்த மற்ற பாத்ரங்களையும், பொன் குடங்களையும், லேஹ்யங்களையும், உயர்ந்த பக்ஷ்யங்களையும், பலவகை மாம்ஸங்களையும், காளையின் தோல்களையும், தங்கப்பிடியுள்ள கத்திகளையும் விட்டுவிட்டு ஸ்த்ரீகணங்களுடன் உயரக்கிளம்பினர்.* (22, 23, 24)

*மேலும் அவர்கள் கழுத்து மாலைகளுடையவர்களும், தாமரை போன்ற கண்களை உடையவர்களும், மதத்துடன் கூடியவர்களும், சிவப்பு மாலையும் சந்தனப்பூச்சும் உள்ளவர்களும், சிவந்த கண்களை உடையவர்களுமாகி ஆகாயத்தை அடைந்தனர்.* (25)

हारनूपुरकेयूरपारिहार्यधराः स्त्रियः ।
विस्मिताः सस्मितास्तस्थुराकाशे रमणैः सह ॥ २६

दर्शयन्तो महाविद्यां विद्याधरमहर्षयः ।
सहितास्तस्थुराकाशे वीक्षांचक्रुश्च पर्वतम् ॥ २७

शुश्रुवुश्च तदा शब्दमृषीणां भावितात्मनाम् ।
चारणानां च सिद्धानां स्थितानां विमलेऽम्बरे ॥ २८

एष पर्वतसंकाशो हनूमान्मारुतात्मजः ।
तितीर्षति महावेगः समुद्रं मकरालयम् ॥ २९

रामार्थं वानरार्थं च चिकीर्षन्कर्म दुष्करं ।
समुद्रस्य परं पारं दुष्प्रापं प्राप्तुमिच्छति ॥ ३०

ஹாரநூபுரகேயூரபாரிஹார்யதரா: ஸ்த்ரிய: ।
விஸ்மிதா: ஸஸ்மிதாஸ்தஸ்துராகாமே ரமணை: ஸஹ ॥ 26

தர்மயந்தோ மஹாவித்யாம் வித்யாதரமஹர்ஷய: ।
ஸஹிதாஸ்தஸ்துராகாமே வீக்ஷாம்சக்ருஸ்ச பர்வதம் ॥ 27

மமஸ்ருவுஸ்ச ததா மப்தம்ருஷீணும் பாவிதாத்மனும் ।
சாரணும் ச ஸித்தாணும் ஸ்திதாணும் விமலேம்பரே ॥ 28

ஏஷ பர்வதஸம்காமோ ஹநுமான்மாருதாத்மஜ: ।
திதீர்ஷதி மஹாவேக: ஸமுத்ரம் மகராலயம் ॥ 29

ராமார்த்தம் வானரார்த்தம் ச சிகீர்ஷன்கர்ம துஷ்கரம் ।
ஸமுத்ரஸ்ய பரம் பாரம் துஷ்ப்ராபம் ப்ராப்துமிச்சதி ॥ 30

---

ஸ்திரீகள் கூட்டம் கூட்டமாக ஆகாசத்தில் முக்தாஹாரம், தண்டயம், தோள்வளை, கைவளை முதலியவைகளைத் தரித்துக் கொண்டவர்களாயும் புன்சிரிப்புடன் ஆச்சர்யமுள்ளவர்களாயும் ஆகாசத்தில் தங்கள் கணவர்களுடன் நின்றனர். (26)

வித்யாதரர்களும் மஹரிஷிகளும் ஒன்று சேர்ந்தவர்களாயும் மஹாவித்யையை காண்பிக்கின்றவர்களாயும் ஆகாசத்தில் வீற்றிருந்தனர். மலையையும் கண்ணுேக்கினர். (27)

அப்பொழுது மலைபோன்ற வாயுபுத்ரரான இந்த ஹனுமார் மஹத்தான வேகத்தை அடைந்து ஸ்ரீராம கார்யத்திற்காகவும், வானரர்களுக்காகவும் மத்ஸ்யங்கள் நிறைந்த ஸமுத்ரத்தைத் தாண்டுவதற்கும் செய்தற்கரிய கார்யத்தைச் செய்யவும் விரும்புகிறுர். ஸமுத்ரத்தின் அடையமுடியாத அக்கரையை அடையவும் யத்தனிக்கிறுர் என்றதான ஆகாசத்திலுள்ள அநுபவிகளான மஹர்ஷிகள், சாரணர்கள், சித்தர்கள் இவர்களுடைய வார்த்தையை வித்யாதரர்கள் கேட்டனர். (28, 29,30)

इति विद्याधराः श्रुत्वा वाचस्तेषां महात्मनां ।
तमप्रमेयं ददृशुः पर्वते वानरर्षभम् ॥ ३१

दुधुवे च स रोमाणि चकम्पे चाचलोपमः ।
ननाद सुमहानादं सुमहानिव तोयदः ॥ ३२

आनुपूर्व्येण वृत्तं च लाङ्गूलं रोमभिश्चितम् ।
उत्पतिष्यन्विचिक्षेप पक्षिराज इवोरगम् ॥ ३३

तस्य लाङ्गूलमाविद्धमात्तवेगस्य पृष्ठतः ।
ददृशे गरुडेनेव ह्रियमाणो महोरगः ॥ ३४

बाहू संस्तंभयामास महापरिघसन्निभौ ।
ससाद च कपिः कट्यां चरणौ संचुकोच च ॥ ३५

இதி வித்யாதரா: ஶ்ருத்வா வாசஸ்தேஷாம் மஹாத்மனாம் |
தமப்ரமேயம் தத்ருஶு: பர்வதே வானரர்ஷபம் || **31**

துதுவே ச ஸ ரோமாணி சகம்பே சாசலோபம: |
நநாத ஸுமஹாநாதம் ஸுமஹானிவ தோயத: || **32**

ஆனுபூர்வ்யேண வ்ருத்தம் ச லாங்கூலம் ரோமபிஶ்சிதம் |
உத்பதிஷ்யன்விசிக்ஷேப பக்ஷிராஜ இவோரகம் || **33**

தஸ்ய லாங்கூலமாவித்தமாத்தவேகஸ்ய ப்ருஷ்டத: |
தத்ருஶே கருடேனேவ ஹ்ரியமாணோ மஹோரக: || **34**

பாஹூ ஸம்ஸ்தம்பயாமாஸ மஹாபரிகஸந்நிபௌ |
ஸஸாத ச கபி: கட்யாம் சரணௌ ஸம்சுகோச ச || **35**

---

வித்யாதரர்கள் அம்மஹான்களுடைய இவ்விதமான வார்த்தையைக் கேட்டு அளவிடமுடியாத அவ்வானர ஶ்ரேஷ்டனைப் பர்வதத்தில் பார்த்தனர். (31)

மலைபோன்ற அந்த ஹனுமார் ரோமாக்களை சிலிர்த்துக் கொண்டார். கொஞ்சம் அசங்கினர். பெரிய மேகம்போல மஹத்தான சப்தத்தைச் செய்தார். (32)

கிரமமாகச் சுருண்டதும் ரோமாக்களோடு கூடியதுமான வாலை, ஆகாசத்தில் கிளம்ப எண்ணம் கொண்டவராய் கருடன் ஸர்ப்பத்தைப்போல் சுழற்றி அடித்தார்.
[இங்கு ஸ்ரீ வால்மீகி கருடனை சகுனத்திற்காகவும், சத்ரு நிரஸனத்தைக் காட்டுவதற்காக ஸர்ப்பத்தைச் சுழற்றி அடித்தது போலென்றும் சுட்டிக்காட்டியுள்ளார்.] (33)

மிக்க வேகத்தை உடைய அந்த ஹனுமாருடைய வாலானது கருடனல் இழுக்கப்பட்ட பெரிய ஸர்ப்பம்போலக் காணப்பட்டது. (34)

स ददर्श ततस्तस्या विवृतं सुमहन्मुखम्।
कायमात्रं च मेधावी मर्माणि च महाकपिः॥ १९१

स तस्या विवृते वक्त्रे वज्रसंहननः कपिः।
संक्षिप्य मुहुरात्मानं निष्पपात महाबलः॥ १९२

आस्ये तस्या निमज्जन्तं ददृशुः सिद्धचारणाः।
ग्रस्यमानं यथा चन्द्रं पूर्णं पर्वणि राहुणा॥ १९३

ततस्तस्या नखैस्तीक्ष्णैर्मर्माण्युत्कृत्य वानरः।
उत्पपाताथ वेगेन मनस्संपातविक्रमः॥ १९४

ஸ ததர்ஶ ததஸ்தஸ்யா விவ்ருதம் ஸுமஹன்முகம்।
காயமாத்ரம் ச மேதாவீ மர்மாணி ச மஹாகபி:॥ 191

ஸ தஸ்யா விவ்ருதே வக்த்ரே வஜ்ரஸம்ஹனன: கபி:।
ஸம்க்ஷிப்ய முஹுராத்மானம் நிஷ்பபாத மஹாபல:॥ 192

ஆஸ்யே தஸ்யா நிமஜ்ஜந்தம் தத்ருஶு: ஸித்தசாரணா:।
க்ரஸ்யமானம் யதா சந்த்ரம் பூர்ணம் பர்வணி ராஹுணா॥ 193

ததஸ்தஸ்யா நகைஸ்தீக்ஷ்ணைர்மர்மாண்யுத்க்ருத்ய வானர:।
உத்பபாதாத வேகேன மனஸ்ஸம்பாதவிக்ரம:॥ 194

---

பிறகு மேதாவியும் மஹாகபியுமான அந்த ஹனுமார் தன்னுடைய சரீரம் போல பெரிதாக விரிந்த அவளுடைய வாயையும், பிளப்பதற்காக ப்ராணவாயு தங்கும் மர்மஸ்தானங்களையும் பார்த்தார். (191)

வஜ்ராயுதம் போன்ற சரீரமுடைய அந்த ஹனுமார் விரிந்த அவளுடைய வாயில் மஹாபலத்துடன் கூட தனது சரீரத்தைச் சுருக்கிக்கொண்டு குதித்தார். (192)

அவளுடைய வாயில் குதிக்கும் ஹனுமாரை ஸித்தசாரணர்கள் பௌர்ணமியன்று ராஹுவினால் விழுங்கப்படும் பூர்ண சந்திரனைப்போல் பார்த்தார்கள். (193)

பிறகு கூர்மையான நகங்களால் அவளுடைய மர்மஸ்தானங்களைப் பிளந்து மனோவேகம் போன்ற வேகம் படைத்த அந்த ஹனுமார் வெகு சீக்கிரமாக மேலே கிளம்பினார். (194)

तां तु दृष्ट्या च धृत्या च दाक्षिण्येन निपात्य च।
स कपिप्रवरो वेगाद्ववृधे पुनरात्मवान्॥ १९५

हृतहृत्सा हनुमता पपात विधुराऽम्भसि।
तां हतां वानरेणाशु पतितां वीक्ष्य सिंहिकाम्॥
भूतान्याकाशचारीणि तमूचुः प्लवगोत्तमम्॥ १९६

भीममद्य कृतं कर्म महत्सत्त्वं त्वया हतम्।
साधयार्थमभिप्रेतमरिष्टं प्लवतां वर॥ १९७

यस्य त्वेतानि चत्वारि वानरेन्द्र यथा तव।
धृतिर्दृष्टिर्मतिर्दाक्ष्यं स्वकर्मसु न सीदति॥ १९८

தாம் து த்ருஷ்ட்யா ச த்ருத்யா ச தாக்ஷிண்யேன நிபாத்ய ச ।
ஸ கபிப்ரவரோ வேகாத்வவ்ருதே புனராத்மவான் ॥ **195**

ஹ்ருதஹ்ருத்ஸா ஹனுமதா பபாத விதுராம்பஸி ।
தாம் ஹதாம் வானரேணாஶு பதிதாம் வீக்ஷ்ய ஸிம்ஹிகாம் ॥
பூதான்யாகாஶசாரீணி தமூசு: ப்லவகோத்தமம் ॥ **196**

பீமமத்ய க்ருதம் கர்ம மஹத்ஸத்வம் த்வயா ஹதம் ।
ஸாதயார்த்தமபிப்ரேதமரிஷ்டம் ப்லவதாம் வர ॥ **197**

யஸ்ய த்வேதானி சத்வாரி வானரேந்த்ர யதா தவ ।
த்ருதிர்த்ருஷ்டிர்மதிர்தாக்ஷ்யம் ஸ்வகர்மஸு ந ஸீததி ॥ **198**

---

*தைவானுக்கிரஹம் உள்ள அந்த வானரஶ்ரேஷ்டன் கூர்மையான புத்தியாலும், தைர்யத்தாலும் கார்யத்தை நன்கு செய்யும் திறமையாலும் அந்த ராக்ஷஸியைப் பிளந்து மறுபடியும் சரீரத்தைப் பெரிதாக்கிக் கொண்டார்.* (195)

*ஹனுமாரால் பிளக்கப்பட்ட ஹ்ருதயத்தை உடைய அந்த ஸிம்ஹிகை பீடிக்கப்பட்டு ஜலத்தில் விழுந்தாள். வானரத்தால் வெகு சீக்கிரமாகக் கொல்லப்பட்டு வீழ்ந்த அந்த ஸிம்ஹிகையைப் பார்த்து ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் ப்ராணிகள் ப்லவகோத்தமனை ஹனுமானைப் பார்த்துச் சொன்னார்கள்.* (196)

*தாண்டுகிறவர்களுள் சிறந்தவனே, உன்னால் இப்பொழுது பெரியதான ப்ராணி கொல்லப்பட்டது பயங்கரமானகார்யம் செய்யப்பட்டதாகும். மங்களகரமான நீ நினைத்த கார்யத்தை பூர்த்திசெய்.* (197)

*வானரஶ்ரேஷ்டனே, எவனொருவனிடத்தில் தைர்யம், வரப் போவதை யோசிக்கும் தன்மை, ஆலோசிக்கும் வல்லமை, கார்யத்தை நன்கு நிறைவேற்றும் ஸாமர்த்யம், ஆகிய இந்நான்கும் இருக்கின்றனவோ அவன், தான் செய்யும் கார்யத்தில் குறைவை அடையமாட்டான்.* (198)

स तैः संभावितः पूज्यः प्रतिपन्नप्रयोजनः।
जगामाकाशमाविश्य पन्नगाशनवत्कपिः॥ १९९

प्राप्तभूयिष्ठपारस्तु सर्वतः प्रतिलोकयन्।
योजनानां शतस्यान्ते वनराजिं ददर्श सः॥ २००

ददर्श च पतन्नेव विविधद्रुमभूषितम्।
द्वीपं शाखामृगश्रेष्ठो मलयोपवनानि च॥ २०१

सागरं सागरानूपं सागरानूपजान्द्रुमान्।
सागरस्य च पत्नीनां मुखान्यपि विलोकयन्॥ २०२

स महामेघसंकाशं समीक्ष्यात्मानमात्मवान्।
निरुन्धन्तमिवाकाशं चकार मतिमान्मतिम्॥ २०३

ஸ தை: ஸம்பாவித: பூஜ்ய: ப்ரதிபன்னப்ரயோஜன: ।
ஜகாமாகாஶமாவிஶ்ய பன்னகாஶனவத்கபி: ॥ 199

ப்ராப்தபூயிஷ்டபாரஸ்து ஸர்வத: ப்ரதிலோகயன் ।
யோஜனானாம் ஶதஸ்யாந்தே வனராஜிம் ததர்ஶ ஸ: ॥ 200

ததர்ஶ ச பதன்னேவ விவிதத்ருமபூஷிதம் ।
த்வீபம் ஶாகாம்ருகஶ்ரேஷ்டோ மலயோபவனானி ச ॥ 201

ஸாகரம் ஸாகரானூபம் ஸாகரானூபஜாந்த்ருமான் ।
ஸாகரஸ்ய ச பத்னீனாம் முகான்யபி விலோகயன் ॥ 202

ஸ மஹாமேகஸம்காஶம் ஸமீக்ஷ்யாத்மானமாத்மவான் ।
நிருந்தந்தமிவாகாஶம் சகார மதிமான்மதிம் ॥ 203

---

ஆகாஶசாரிகளால் கொண்டாடப்பட்டவரும் பூஜிக்கத் தக்கவரும் நினைத்த கார்யத்தைப் பூர்த்தி செய்து கொண்டவருமான ஹனுமார் வாயுபோல் மேலே சென்றார். (199)

அந்த ஹனுமார் பெரும்பாலும் கடலைத்தாண்டியவராய் நான்கு பக்கத்திலும் பார்த்து நூறு யோஜனைகளுக்கு அப்பால் மரக்கூட்டங்களைப் பார்த்தார். (200)

கீழே இறங்கும்போதே வானரஶ்ரேஷ்டனை ஹனுமார் பலவகை மரங்களாலலங்கரிக்கப்பட்ட தீவையும், தென்கரையிலுள்ள மலயபர்வதத்தின் உபவனங்களையும் பார்த்தார். (201)

ஸமுத்ரத்தையும் அதன் ஓரத்தையும் அங்குள்ள மரங்களையும் அங்கு ஸமுத்ரராஜனின் பத்னிகளாகிய நதிகளின் ஸங்கமத்தையும் பார்த்துக்கொண்டு தைர்யமும் புத்தியுமுள்ள அந்த ஹனுமார் பெரிய மேகத்துக் கொப்பான தன் உருவமானது ஆகாசம் முழுவதும் பரவியிருப்பதைப்பார்த்து நினைத்தார். (202, 203)

कायवृद्धिं प्रवेगं च मम दृष्ट्वैव राक्षसाः।
मयि कौतूहलं कुर्युरिति मेने महाकपिः॥ २०४

ततः शरीरं संक्षिप्य तन्महीधरसन्निभम्।
पुनः प्रकृतिमापेदे वीतमोह इवात्मवान्॥ २०५

तद्रूपमतिसंक्षिप्य हनुमान्प्रकृतौ स्थितः।
त्रीन्क्रमानिव विक्रम्य बलिवीर्यहरो हरिः॥ २०६

स चारुनानाविधरूपधारी परं समासाद्य समुद्रतीरम्।
परैरशक्यः प्रतिपन्नरूपः समीक्षितात्मा समवेक्षितार्थः॥ २०७

ततः स लम्बस्य गिरेः समृद्धे विचित्रकूटे निपपात कूटे।
सकेतकोद्दालकनालिकेरे महाद्रिकूटप्रतिमो महात्मा॥ २०८

காயவ்ருத்திம் ப்ரவேகம் ச மம த்ருஷ்ட்வைவ ராக்ஷஸா: ।
மயி கௌதூஹலம் குர்யுரிதி மேனே மஹாகபி: **204**

தத: ஶரீரம் ஸம்க்ஷிப்ய தன்மஹீதரஸன்னிபம் ।
புன: ப்ரக்ருதிமாபேதே வீதமோஹ இவாத்மவான் ॥ **205**

தத்ரூபமதிஸம்க்ஷிப்ய ஹனுமான்ப்ரக்ருதௌ ஸ்தித: ।
த்ரீன்க்ரமானிவ விக்ரம்ய பலிவீர்யஹரோ ஹரி: ॥ **206**

ஸ சாருநாநாவிதரூபதாரீ பரம் ஸமாஸாத்ய ஸமுத்ரதீரம் ।
பரைரஶக்ய: ப்ரதிபன்னரூப: ஸமீக்ஷிதாத்மா ஸமவேக்ஷிதார்த்த: ॥

தத: ஸ லம்பஸ்ய கிரே: ஸம்ருத்தே விசித்ரகூடே நிபபாத கூடே ।
ஸகேதகோத்தாலகநாலிகேரே மஹாத்ரிகூடப்ரதிமோ மஹாத்மா ॥

---

*மஹாகபியான ஹனுமார் தன் சரீரப்பெருக்கையும் வேகத்தையும் பார்த்து தன்னை ராக்ஷஸர்கள் ஆவலுடன் பார்ப்பார்கள் என எண்ணினார்.* (204)

*பிறகு மலைக்கொப்பான அச்சரீரத்தைச் சுருக்கிக்கொண்டு ஸ்ரீஹனுமார், வாஸனாபலத்தாலேற்பட்ட காமாதிமோஹமற்ற ஜீவன்முக்தன், ஸ்வஸ்வரூபத்தை அடைவதைப்போல் திரும்ப தன் ரூபத்தை யடைந்தார்.* (205)

*இயற்கை நிலையிலுள்ள ஸ்ரீஹனுமார். அந்த உருவத்தை மிகவும் சுருக்கிக்கொண்டு, மூன்றடி அளந்து மஹாபலியின் வீர்யத்தை அபகரித்து பிறகு வாமன ரூபத்தை அடைந்த ஸ்ரீமஹா விஷ்ணுவைப்போல ப்ரகாசித்தார்.* (206)

*பலவித ரூபங்களைத்தரிக்க வல்லவரான அந்த ஹனுமார் ஸமுத்ரத்தின் அக்கரையை அடைந்து பிறரால் அடக்கமுடியாத வரும் சுருக்கிய தன் சரீரத்தைப் பார்த்தவரும் மேல் செய்ய*

ततस्तु संप्राप्य समुद्रतीरं समीक्ष्य लङ्कां गिरिवर्यमूर्ध्नि।
कपिस्तु तस्मिन्निपपात पर्वते विधूय रूपं व्यथयन्मृगद्विजान्॥ २०९

स सागरं दानवपन्नगायुतं बलेन विक्रम्य महोर्मिमालिनम्।
निपत्य तीरे च महोदधेस्तदा ददर्श लङ्काममरावतीमिव॥ २१०

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
प्रथमः सर्गः॥ १ ॥

ததஸ்து ஸம்ப்ராப்ய ஸமுத்ரதீரம்
ஸமீக்ஷ்ய லங்காம் கிரிவர்யமூர்த்னி।
கபிஸ்து தஸ்மின்நிபபாத பர்வதே
விதூய ரூபம் வ்யதயன்ம்ருகத்விஜான்॥ 209

ஸ ஸாகரம் தானவபன்னகாயுதம்
பலேன விக்ரம்ய மஹோர்மிமாலினம்।
நிபத்ய தீரே ச மஹோததேஸ்ததா
ததர்ஶ லங்காமமராவதீமிவ॥ 210

*இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே*
*ஸுந்தரகாண்டே ப்ரதம: ஸர்க:*

---

வேண்டிய கார்யத்தைத் தீர்மானித்துக்கொண்டவரும், மஹாத்மாவும், பெரிய மலையின் சிகரம் போன்றவருமான அந்த ஹனுமார் பிறகு அவாந்தர சிகரத்துடன் கூடியதும் ஸர்வஸம்ருத்தியுடன் கூடியதும், தாழை, உத்தாலகம் எனும் நருவிலி, தென்னை இவைகளுடன் கூடியதுமான லம்ப பர்வதத்தின் சிகரத்தில் இறங்கினார். (207, 208)

பிறகு ஸமுத்ரத்தை அடைந்து பர்வதஸ்ரேஷ்டத்தின் சிகரத்தில் லங்கையையும் பார்த்து ஹனுமார் ம்ருகங்களையும் பக்ஷிகளையும் கலங்கச் செய்கிறவனாயும், பூர்வரூபத்தை விட்டவராயுமிருந்து கொண்டு அம்மலையில் இறங்கினார். (209)

அந்த ஹனுமார் அஸுரர்கள் பன்னகர்கள், நிறைந்ததும் பெரிதான அலைகளோடு கூடியதுமான ஸமுத்ரத்தை தனது சக்தியினால் தாண்டி அக்கரையில் இறங்கி அமராவதி போன்ற லங்கையைப் பார்த்தார். (210)

முதல் ஸர்கம் முற்றிற்று.

---

ஸ்ரீ:

द्वितीयः सर्गः — இரண்டாவது ஸர்கம் ॥ २ ॥

# "लङ्काप्रवेशः" – லங்கையில் ப்ரவேசித்தல்.

स सागरमनाधृष्यमतिक्रम्य महाबलः ।
त्रिकूटशिखरे लङ्कां स्थितां स्वस्थो ददर्श ह ॥ १

ततः पादपमुक्तेन पुष्पवर्षेण वीर्यवान् ।
अभिवृष्टः स्थितस्तत्र बभौ पुष्पमयो यथा ॥ २

योजनानां शतं श्रीमांस्तीर्त्वाप्युत्तमविक्रमः ।
अनिःश्वसन्कपिस्तत्र न ग्लानिमधिगच्छति ॥ ३

शतान्यहं योजनानां क्रमेयं सुबहून्यपि ।
किं पुनःसागरस्यान्तं संख्यातं शतयोजनम् ॥ ४

ஸ ஸாகரமனாத்ருஷ்யமதிக்ரம்ய மஹாபல: ।
த்ரிகூடசிகரே லங்காம் ஸ்திதாம் ஸ்வஸ்தோ ததர்ஶ ஹ ॥ 1

தத: பாதபமுக்தேன புஷ்பவர்ஷேண வீர்யவான் ।
அபிவ்ருஷ்ட: ஸ்திதஸ்தத்ர பபௌ புஷ்பமயோ யதா ॥ 2

யோஜனானாம் சதம் ஸ்ரீமாம்ஸ்தீர்த்வாப்யுத்தமவிக்ரம: ।
அநி:ஶ்வஸன்கபிஸ்தத்ர ந க்லானிமதிகச்சதி ॥ 3

ஶதான்யஹம் யோஜனானாம் க்ரமேயம் ஸுபஹூன்யபி ।
கிம் புன:ஸாகரஸ்யாந்தம் ஸம்க்யாதம் ஶதயோஜனம் ॥ 4

---

*மஹாபலிஷ்டனும் கவலையற்றவருமான அந்த ஹனுமார் தாண்டமுடியாத ஸமுத்ரத்தைத் தாண்டி த்ரிகூட சிகரத்திலுள்ள லங்கையைக் கண்டார்.*

*சத்ருதேசம் சென்றும் ஸ்ரீராமானுக்ரஹத்தால் ஸ்ரீ ஹனுமார் கவலையற்றவராக இருந்தார் என்பதை ஸ்ரீ வால்மீகி தெரியப் படுத்துகிறார்.* (1)

*பிறகு மரங்களால் விடப்பட்ட புஷ்ப வர்ஷத்தால் வர்ஷிக் கப்பட்ட வீர்யவானான அந்த ஹனுமார் புஷ்பமயமாகப் ப்ரகாசித் தார்.* (2)

*உத்தம பராக்ரமமுள்ளவரும் ஸ்ரீமானுமான அந்த ஹனுமார் நூறுயோஜனை சென்றும் ஶ்ரமத்தினால் பெருமூச்சு விடாதவராய் வாட்டத்தை அடையவில்லை.* (3)

*எத்தனையோ நூற்றுக்கணக்கான யோஜனைகள் நான் தாண்டிச் செல்லுவேன். அப்படி இருக்க என் ஸமுத்ரத்தின் நூறு யோஜனையை சொன்னேன் என்று நினைத்தார்.* (4)

स तु वीर्यवतां श्रेष्ठः प्लवतामपि चोत्तमः।
जगाम वेगवाँल्लङ्कां लङ्घयित्वा महोदधिम्॥ ५

शाद्वलानि च नीलानि गन्धवन्ति वनानि च।
गण्डवन्ति च मध्येन जगाम नगवन्ति च॥ ६

शैलांश्च तरुसंछन्नान्वनराजीश्च पुष्पिताः।
अभिचक्राम तेजस्वी हनुमान्प्लवगर्षभः॥ ७

स तस्मिन्नचले तिष्ठन्वनान्युपवनानि च।
स नगाग्रे च तां लङ्कां ददर्श पवनात्मजः॥ ८

सरलान्कर्णिकारांश्च खर्जूरांश्च सुपुष्पितान्।
प्रियालान्मुचुलिन्दांश्च कुटजान्केतकानपि॥ ९

ஸ து வீர்யவதாம் ஶ்ரேஷ்ட: ப்லவதாமபி சோத்தம:।
ஜகாம வேகவான்லங்காம் லங்கயித்வா மஹோததிம்॥ 5

ஶாத்வலானி ச நீலானி கந்தவந்தி வனானி ச।
கண்டவந்தி ச மத்யேன ஜகாம நகவந்தி ச॥ 6

ஶைலாம்ஶ்ச தருஸம்சன்னான்வனராஜீஶ்ச புஷ்பிதா:
அபிசக்ராம தேஜஸ்வீ ஹனுமான்ப்லவகர்ஷப:॥ 7

ஸ தஸ்மின்னசலே திஷ்டன்வனான்யுபவனானி ச।
ஸ நகாக்ரே ச தாம் லங்காம் ததர்ஶ பவனாத்மஜ:॥ 8

ஸரலான்கர்ணிகாராம்ஶ்ச கர்ஜூராம்ஶ்ச ஸுபுஷ்பிதான்।
ப்ரியாலான்முசுலிந்தாம்ஶ்ச குடஜான்கேதகானபி॥ 9

---

தாண்டுகிறவர்களுள் சிறந்தவரும், வீரம் படைத்தவர்களுள் தலைவருமான அந்த ஹனுமார் ஸமுத்ரத்தைத் தாண்டி வேகமாக லங்கைக்குச் சென்றார். (5)

நீலமான புல் புதற்களுக்கும் வாஸனை உள்ள காடுகளுக்கும் சிறு கற்களுடன் கூடிய சின்ன மலைகளுக்கும் நடுவில் சென்றார். (6)

தேஜஸ்வியும் வானரஶ்ரேஷ்டருமான ஹனுமார் வ்ருக்ஷங்களால் மூடப்பட்ட மலைகளையும் புஷ்பித்த காடுகளையும் தாண்டினார். (7)

வாயுபுத்ரரான ஹனுமார் கொடிமுடிகளுடன் கூடிய அம்மலையிலிருந்துகொண்டு உபவனங்களையும் அந்த லங்கையையும் பார்த்தார். (8)

தேவதாரு, கோங்கு, பேரீச்சை, நன்கு புஷ்பித்த முரளி, எலுமிச்சை, மலை மல்லிகை, தாழை, வாஸனைமிக்க ப்ரியங்கு,

प्रियङ्गून्गन्धपूर्णांश्च नीपान्सप्तच्छदांस्तथा।
असनान्कोविदारांश्च करवीरांश्च पुष्पितान्। १०

पुष्पभारनिबद्धांश्च तथा मुकुलितानपि।
पादपान्विहगाकीर्णान्पवनाधूतमस्तकान्॥ ११

हंसकारण्डवाकीर्णा वापीः पद्मोत्पलायुताः।
आक्रीडान्विविधान्रम्यान्विविधांश्च जलाशयान्॥ १२

संततान्विविधैर्वृक्षैः सर्वर्तुफलपुष्पितैः।
उद्यानानि च रम्याणि ददर्श कपिकुञ्जरः॥ १३

समासाद्य च लक्ष्मीवाँल्लङ्कां रावणपालिताम्।
परिघाभिः सपद्माभिः सोत्पलाभिरलङ्कृताम्॥ १४

ப்ரியங்கூன்கந்தபூர்ணாம்ஸ்ச நீபான்ஸப்தச்சதாம்ஸ்ததா।
அஸனான்கோவிதாராம்ஸ்ச கரவீராம்ஸ்ச புஷ்பிதான்॥ 10

புஷ்பபாரநிபத்தாம்ஸ்ச ததா முகுலிதானபி।
பாதபான்விஹகாகீர்ணான்பவனாதூதமஸ்தகான்॥ 11

ஹம்ஸகாரண்டவாகீர்ணா வாபீ: பத்மோத்பலாயுதா:।
ஆக்ரீடான்விவிதான்ரம்யான்விவிதாம்ஸ்ச ஜலாஸயான்॥ 12

ஸந்ததான்விவிதைர்வ்ருக்ஷை: ஸர்வர்துபலபுஷ்பிதை:।
உத்யானானி ச ரம்யாணி ததர்ஸ கபிகுஞ்ஜர:॥ 13

ஸமாஸாத்ய ச லக்ஷ்மீவான் லங்காம் ராவணபாலிதாம்।
பரிகாபி: ஸபத்மாபி: ஸோத்பலாபிரலங்க்ருதாம்॥ 14

---

கடம்பம், ஏழிலைப்பால், மருதை, மல்லிச்சாத்தி, புஷ்பிக்கப்பட்ட அரளி என்ற பலவகைகளான புஷ்பபாரங்களால் நிரம்பியதும், மொட்டுக்களுள்ளதும், பக்ஷிகளால் சூழப்பட்டதும், காற்றூலசைக்கப்பட்ட நுனியை உடையதுகளுமான மரங்களையும், அன்னம், நீர்க்காகம் இவைகளால் சூழப்பட்டதும், செந்தாமரை நீலோத்பலம் இவைகளோடு கூடியதுமான ஓடைகளையும், அழகிய பலவித விளையாடுமிடங்களையும், பலவகைப்பட்டதும், எல்லா ருதுக்களிலுமுள்ள புஷ்பம், பலம் இவைகளோடு கூடிய நானாவித மரங்களால் சூழப்பட்டதுமான குளங்களையும், அழகிய தோட்டங்களையும் கபிஸ்ரேஷ்டரான ஹனுமார் கண்டார். (9—13)

லக்ஷ்மீவானான ஸ்ரீ ஹனுமார் ராவணனால் காக்கப்பட்ட லங்கையை அடைந்து தாமரை நீலோத்பலம் இவைகளால் சூழப்பட்ட அகழ்களால் அலங்கரிக்கப்பட்டதும், ஸீதையைத் திருடி வந்ததினால் ராவணனால் ஏவப்பட்டு நன்கு காவலுடன் நாலா பக்கத்திலும் ஸஞ்சரிப்பவர்களும், பயங்கரமான வில்லைத்தரித்தவர்

सीतापहरणार्थेन रावणेन सुरक्षिताम्।
समन्ताद्विचरद्भिश्च राक्षसैरुग्रधन्विभिः॥ १५

काञ्चनेनावृतां रम्यां प्राकारेण महापुरीम्।
गृहैश्च ग्रहसंकाशैः शारदाम्बुदसन्निभैः॥ १६

पाण्डुराभिः प्रतोलीभिरुच्चाभिरभिसंवृताम्।
अट्टालकशताकीर्णां पताकाध्वजमालिनीम्॥ १७

तोरणैः काञ्चनैर्दिव्यैः लतापङ्क्तिविचित्रितैः।
ददर्श हनुमाँल्लङ्कां दिवि देवपुरीमिव॥ १८

गिरिमूर्ध्नि स्थितां लङ्कां पाण्डुरैर्भवनैः शुभैः।
ददर्श स कपिश्रेष्ठः पुरमाकाशगं यथा॥ १९

ஸீதாபஹரணார்த்தேன ராவணேன ஸுரக்ஷிதாம் ।
ஸமந்தாத்விசரத்பிஶ்ச ராக்ஷஸைருக்ரதந்விபி: ॥ 15

காஞ்சனேனாவ்ருதாம் ரம்யாம் ப்ராகாரேண மஹாபுரீம் ।
க்ருஹைஶ்ச க்ரஹஸம்காஶை: ஶாரதாம்புதஸந்நிபை: ॥ 16

பாண்டுராபி: ப்ரதோலீபி: உச்சாபிரபிஸம்வ்ருதாம் ।
அட்டாலகஶதாகீர்ணாம் பதாகாத்வஜமாலினீம் ॥ 17

தோரணை: காஞ்சனைர்திவ்யை: லதாபங்க்திவிசித்ரிதை: ।
ததர்ஶ ஹனுமான்லங்காம் திவி தேவபுரீமிவ ॥ 18

கிரிமூர்த்னி ஸ்திதாம் லங்காம் பாண்டுரைர்பவனை: ஶுபை: ।
ததர்ஶ ஸ கபிஶ்ரேஷ்ட: புரமாகாஶகம் யதா ॥ 19

---

களுமான ராக்ஷஸர்களால் காக்கப்பட்டதும், தங்கமயமான மதில்களால் சூழப்பட்டதும் அழகியதும் ஸூர்யாதிக்ரஹங்களுக்கு ஒப்பானதுமான வீடுகளால் சூழப்பட்டதும், வெண்மை நிறமுள்ளதும், உயர்ந்ததுமான வீதிகளால் அலங்கரிக்கப்பட்டதும், அளவற்ற மதில்களின் அக்ரபாகங்களால் சூழப்பட்டதும், கொடிமரங்களுடன் கூடியதும், தங்கமயமும் தேவலோகத்திலுள்ளது போன்றதும், கொடிகளின் வரிசைகளால் சித்திரிக்கப்பட்டதுகளுமான தோரண வாசல்களுடன் கூடியதுமான லங்கையை ஹனுமார் தேவர்களின் பட்டணமான அமராவதியைப்போல் பார்த்தார். (14—18)

கபிஶ்ரேஷ்டரான அந்த ஹனுமார் வெண்மையானவைகளும் மங்களமானதுகளுமான வீடுகளோடு த்ரிகூடமலையின் உச்சியிலிருக்கும் லங்கையை ஆகாசத்தில் உள்ள ஒரு நகரத்தைப் போலக்கண்டார். 19

पालितां राक्षसेन्द्रेण निर्मितां विश्वकर्मणा ।
प्लवमानामिवाकाशे ददर्श हनुमान्कपिः ॥ २०

वप्रप्राकारजघनां विपुलाम्बुनवाम्बराम् ।
शतघ्नीशूलकेशां तामट्टालकवतंसकाम् ॥ २१

मनसेव कृतां लङ्कां निर्मितां विश्वकर्मणा ।
द्वारमुत्तरमासाद्य चिन्तयामास वानरः ॥ २२

कैलासशिखरप्रख्यामालिखन्तीमिवाम्बरम् ।
डीयमानामिवाकाशमुच्छ्रितैर्भवनोत्तमैः ॥ २३

संपूर्णां राक्षसैर्घोरैर्नागैर्भोगवतीमिव ।
अचिन्त्यां सुकृतां स्पष्टां कुबेराध्युषितां पुरा ॥ २४

பாலிதாம் ராக்ஷஸேந்த்ரேண நிர்மிதாம் விஶ்வகர்மணா ।
ப்லவமானாமிவாகாஶே ததர்ஶ ஹனுமான்கபி: ॥ 20

வப்ரப்ராகாரஜகனாம் விபுலாம்புநவாம்பராம் ।
ஶதக்னீஶூலகேஶாம் தாமட்டாலகவதம்ஸகாம் ॥ 21

மனஸேவ க்ருதாம் லங்காம் நிர்மிதாம் விஶ்வகர்மணா ।
த்வாரமுத்தரமாஸாத்ய சிந்தயாமாஸ வானர: ॥ 22

கைலாஸஶிகரப்ரக்யாமாலிகந்தீமிவாம்பரம் ।
டீயமானாமிவாகாஶமுச்ச்ரிதைர்பவனோத்தமை: ॥ 23

ஸம்பூர்ணாம் ராக்ஷஸைர்கோரைர்நாகைர்போகவதீமிவ ।
அசிந்த்யாம் ஸுக்ருதாம் ஸ்பஷ்டாம் குபேராத்யுஷிதாம் புரா ॥

---

குரங்கான அந்த ஹனுமார் ராக்ஷஸர்களுக்குத் தலைவனை ராவணனால் காக்கப்பட்டதும் விஸ்வகர்மாவினால் அமைக்கப் பட்டதுமான லங்கையை ஆகாசத்தில் மிதப்பதைப்போலக் கண்டார். (20)

அடியில் திண்ணையுடன் கூடிய மதிற்சுவற்றை மத்ய பாக மாக உடையதும் அகழியிலுள்ள அதிகமான ஜலமாகிற புதுப் புடவை தரித்ததும், நூறு பேர்களைக் கொல்லும் பீரங்கி, சூலம் இவற்றை கேசபாசங்களாக உடையதும், கோட்டையின் மேல் பாகத்தில் முன்பக்கமாக நீண்டிருக்கும் பாகத்தை கர்ணபூஷண மாக உடையதும், மனதினால் செய்யப்பட்ட பெண்போலிருப்பது மான விஸ்வகர்மாவினால் நிர்மாணிக்கப்பட்ட லங்கையின் வடக்கு வாசற்படியை அடைந்து வானரனை ஹனுமார் எப்படிப்புகலாம், ஸ்ரீ ஸீதாதேவியை எப்படி எப்பொழுது காணலாமென சிந்தித் தார். (21, 22)

கைலாஸசிகரம் போன்றதும், ஆகாசத்தைத் தொடுவது

दंष्ट्रिभिर्बहुभिः शूरैः शूलपट्टसपाणिभिः ।
रक्षितां राक्षसैर्घोरैर्गुहामाशीविषैरिव ॥ २५

तस्याश्च महतीं गुप्तिं सागरं च निरीक्ष्य सः ।
रावणं च रिपुं घोरं चिन्तयामास वानरः ॥ २६

आगत्यापीह हरयो भविष्यन्ति निरर्थकाः ।
न हि युद्धेन वै लङ्का शक्या जेतुं सुरैरपि ॥ २७

इमां तु विषमां दुर्गां लङ्कां रावणपालिताम् ।
प्राप्यापि स महाबाहुः किं करिष्यति राघवः ॥ २८

தம்ஷ்ட்ரிபிர்பஹுபி: ஶூரை: ஶூலபட்டஸபாணிபி: ।
ரக்ஷிதாம் ராக்ஷஸைர்கோரைர்குஹாமாஶீவிஷைரிவ ॥ 25

தஸ்யாஶ்ச மஹதீம் குப்திம் ஸாகரம் ச நிரீக்ஷ்ய ஸ: ।
ராவணம் ச ரிபும் கோரம் சிந்தயாமாஸ வானர: ॥ 26

ஆகத்யாபீஹ ஹரயோ பவிஷ்யந்தி நிரர்த்தகா: ।
ந ஹி யுத்தேன வை லங்கா ஶக்யா ஜேதும் ஸுரைரபி ॥ 27

இமாம் து விஷமாம் துர்காம் லங்காம் ராவணபாலிதாம் ।
ப்ராப்யாபி ஸ மஹாபாஹு: கிம் கரிஷ்யதி ராகவ: ॥ 28

---

போன்றதும், உயர்ந்த உத்தம க்ருஹங்களால் ஆகாசத்தில் பறப்பதுபோலும், பயங்கரர்களான ராக்ஷஸர்களால் நிரம்பியிருப்பதால் ஸர்ப்பங்கள் நிறைந்த போகவதி போன்றதும், மனதினால் நினைக்க முடியாததும், நன்கு செய்யப்பட்டதும், சுத்தமாக விளங்குகிறதும், முன்பு குபேரன் வஸித்ததும், தித்திப்பற்களுடன் கூடியவர்களும், சூரர்களும், சூலம், பட்டஸம் இவைகளை கையில் தரித்தவர்களுமான வெகு ராக்ஷஸர்களால் ஸர்ப்பங்களால் ரக்ஷிக்கப்பட்ட குகைபோல் ரக்ஷிக்கப்பட்டதுமான லங்கையையும் மஹத்தான அதன் காவலையும் பார்த்தும், பயங்கரனும் சத்ருவுமான ராவணனை நினைத்தும் அந்த ஹனுமார் கவலைப்பட்டார். (23 — 26)

குரங்குகள் இங்கு வருவதே ஶ்ரமம். அப்படி வந்தாலும் தோற்றுப்போய் விடுவார்கள். ஏனெனில் தேவர்களாலும் கூட யுத்தம் செய்து லங்கையை ஜயிக்கமுடியாது. (27)

இடைஞ்சலான இடத்திலுள்ளதும் அதனால் பிறர் புகமுடியாததும் ராவணனால் ரக்ஷிக்கப்பட்டதுமான லங்கையை பெருத்த புஜங்களுள்ள ஸ்ரீராகவன் அடைந்துதான் என்ன செய்யப் போகிறார்? (28)

अवकाशो न सान्त्वस्य राक्षसेष्वभिगम्यते।
न दानस्य न भेदस्य नैव युद्धस्य दृश्यते॥ २९

चतुर्णामेव हि गतिर्वानराणां महात्मनाम्।
वालिपुत्रस्य नीलस्य मम राज्ञश्च धीमतः॥ ३०

यावज्जानामि वैदेहीं यदि जीवति वा नवा।
तत्रैव चिन्तयिष्यामि दृष्ट्वा तां जनकात्मजाम्॥ ३१

ततः स चिन्तयामास मुहूर्तं कपिकुञ्जरः।
गिरिशृङ्गे स्थितः तस्मिन्रामस्याभ्युदये स्थितः॥ ३२

अनेन रूपेण मया न शक्या रक्षसां पुरी।
प्रवेष्टुं राक्षसैर्गुप्ता क्रूरैर्बलसमन्वितैः॥ ३३

அவகாஶோ ந ஸாந்த்வஸ்ய ராக்ஷஸேஷ்வபிகம்யதே।
ந தானஸ்ய ந பேதஸ்ய நைவ யுத்தஸ்ய த்ருஶ்யதே॥ **29**

சதுர்ணமேவ ஹி கதிர்வானராணம் மஹாத்மனும்।
வாலிபுத்ரஸ்ய நீலஸ்ய மம ராக்ஞஶ்ச தீமத:॥ **30**

யாவஜ்ஜானமி வைதேஹீம் யதி ஜீவதி வா நவா।
தத்ரைவ சிந்தயிஷ்யாமி த்ருஷ்ட்வா தாம் ஜனகாத்மஜாம்॥ **31**

தத: ஸ சிந்தயாமாஸ முஹூர்த்தம் கபிகுஞ்ஜர:।
கிரிஶ்ருங்கே ஸ்தித: தஸ்மின்ராமஸ்யாப்யுதயே ஸ்தித:॥ **32**

அனேன ரூபேண மயா ந ஶக்யா ரக்ஷஸாம் புரீ।
ப்ரவேஷ்டும் ராக்ஷஸைர்குப்தா க்ரூரைர்பலஸமன்விதை:॥ **33**

---

*தமோகுணமுள்ள ராக்ஷஸர்களிடத்தில் ஸமாதானத்துக்கு இடமில்லை. அர்த்தம் நிறைந்திருப்பதால் தானத்துக்கும் இடமில்லை. பலமிருப்பதால் பேதத்துக்கும், புத்தியும் பராக்ரமுமிருப்பதால் யுத்தத்துக்கும் இடமில்லை.* (29)

*மஹாத்மாக்களான வாலிபுத்ரன், நீலன், நான், ராஜாவும் புத்திமானுமான ஸுக்ரீவன் இந்நால்வரே இங்கு வர முடியும்.* (30)

*இம்மாதிரி யோசித்து இந்த சிந்தைக்கு இப்போது இடமில்லை என்று மறுபடியும் யோசிக்கிறார். அதாவது ஸீதை உயிரோடிருக்கிறாளா, இல்லையா என்று எப்பொழுது அறிகிறேனே அப்பொழுது ஸீதையைப்பார்த்து இந்த யோசனையைச் செய்கிறேன்.* (31)

*பிறகு கபிஶ்ரேஷ்டரான ஹனுமார் அம்மலையின் சிகரத்தில் உட்கார்ந்துகொண்டு ஸ்ரீராமனது க்ஷேமத்தில் ஆவல் கொண்டு ஒரு முஹூர்த்தம் ஆலோசித்தார்.* (32)

*க்ரூரர்களும் பலமுள்ளவர்களுமான ராக்ஷஸர்களால் ரக்ஷிக்*

उग्रौजसो महावीर्या बलवन्तश्च राक्षसाः।
वञ्चनीया मया सर्वे जानकीं परिमार्गता॥ ३४

लक्ष्यालक्ष्येण रूपेण रात्रौ लङ्कापुरी मया।
प्रवेष्टुं प्राप्तकालं मे कृत्यं साधयितुं महत्॥ ३५

तां पुरीं तादृशीं दृष्ट्वा दुराधर्षां सुरासुरैः।
हनुमांश्चिन्तयामास विनिश्वस्य मुहुर्मुहुः॥ ३६

केनोपायेन पश्येयं मैथिलीं जनकात्मजाम्।
अदृष्टो राक्षसेन्द्रेण रावणेन दुरात्मना॥ ३७

உக்ரௌஜஸோ மஹாவீர்யா பலவந்தஶ்ச ராக்ஷஸா: ।
வஞ்சனீயா மயா ஸர்வே ஜானகீம் பரிமார்கதா ॥ 34

லக்ஷ்யாலக்ஷ்யேண ரூபேண ராத்ரௌ லங்காபுரீ மயா ।
ப்ரவேஷ்டும் ப்ராப்தகாலம் மே க்ருத்யம் ஸாதயிதும் மஹத் ॥

தாம் புரீம் தாத்ருஶீம் த்ருஷ்ட்வா துராதர்ஷாம் ஸுராஸுரை: ।
ஹனுமாம்ஶ்சிந்தயாமாஸ விநிஶ்வஸ்ய முஹுர்முஹு: ॥ 36

கேனோபாயேன பஶ்யேயம் மைதிலீம் ஜனகாத்மஜாம் ।
அத்ருஷ்டோ ராக்ஷஸேந்த்ரேண ராவணேன துராத்மனா ॥ 37

---

கப்பட்ட இந்த லங்கையானது என்னுல் இந்த ரூபத்தால் ப்ரவேசிக்கத்தக்கதல்ல. (33)

கடோரமான இந்த்ரிய பலமுள்ளவர்களும் மஹத்தான வீர்யமுள்ளவர்களும் சரீரபலமுள்ளவர்களுமான எல்லா ராக்ஷஸர்களையும் ஸ்ரீ ஸீதையைத் தேடும் நான் வஞ்சித்தேயாக வேண்டும். (34)

அறியக்கூடியதும், அறியக்கூடாததுமான ஸூக்ஷ்ம சரீரத்தால் ராத்ரி காலத்தில் லங்கையில் ப்ரவேசித்து மஹத்தான கார்யத்தை ஸாதிப்பதற்கு இது உசிதமான காலம். (35)

அப்படிப்பட்டதும் தேவாஸுரர்களால் ஆக்ரமிக்கமுடியாததுமான அப்பட்டிணத்தைப்பார்த்து ஹனுமார் அடிக்கடி பலவிதமான யோசனைகளைச் செய்து கவலைப்பட்டார். (36)

துராத்மாவும் ராக்ஷஸஶ்ரேஷ்டனுமான ராவணனுல் நான் பார்க்கப்படாமலிருந்துகொண்டு ஜனக புத்ரியான மைதிலியை எவ்வுபாயத்தால் பார்ப்பேன்? (37)

न विनश्येत्कथं कार्यं रामस्य विदितात्मनः।
एकामेकश्च पश्येयं रहिते जनकात्मजाम्॥ ३८

भूताश्चार्था विपद्यन्ते देशकालविरोधिताः।
विक्लबं दूतमासाद्य तमः सूर्योदये यथा॥ ३९

अर्थानर्थान्तरे बुद्धिर्निश्चितापि न शोभते।
घातयन्ति हि कार्याणि दूताः पण्डितमानिनः॥ ४०

न विनश्येत्कथं कार्यं वैक्लव्यं न कथं भवेत्।
लङ्घनं च समुद्रस्य कथं नु न वृथा भवेत्॥ ४१

ந விநஶ்யேத்கதம் கார்யம் ராமஸ்ய விதிதாத்மந:।
ஏகாமேகஶ்ச பஶ்யேயம் ரஹிதே ஜநகாத்மஜாம்॥ **38**

பூதாஶ்சார்த்தா: விபத்யந்தே தேஶகாலவிரோதிதா:।
விக்லபம் தூதமாஸாத்ய தம: ஸூர்யோதயே யதா॥ **39**

அர்த்தாநர்த்தாந்தரே புத்திர்நிஶ்சிதாபி ந ஶோபதே।
காதயந்தி ஹி கார்யாணி தூதா: பண்டிதமாநிந:॥ **40**

ந விநஶ்யேத்கதம் கார்யம் வைக்லவ்யம் ந கதம் பவேத்।
லங்கநம் ச ஸமுத்ரஸ்ய கதம் நு ந வ்ருதா பவேத்॥ **41**

---

ஜிதேந்திரியனை ஸ்ரீராமனின் கார்யம் எப்படி கெடாமலிருக்குமோ அப்படி ஒருவனாக இருந்துகொண்டு தனித்துப் பார்க்கிறேன். (38)

விவேகமற்ற தூதரை ஏவினால் ஸாதித்த காரியங்கள் கூட தேசகாலத்தின் மாறுபாட்டினால் கெடுக்கப்பட்டு, ஸூர்யோதயமானதும் இருட்டு போல், நஷ்டமாகிவிடும். (39)

இன்னது செய்யத்தக்கது இன்னது செய்யத்தகாதது என்று யஜமானர்களால் தீர்மானித்த புத்தியும் ப்ரகாசிக்காமல் போய் விடும். தன்னைப் பண்டிதனென்று நினைத்துக்கொண்ட தூதர்கள் கார்யத்தைக்கெடுத்து விடுவார்கள். (40)

முன்கூறியபடி கெட்ட தூதனின் செயல் தன்னிடத்தில் நேராமலிருக்க யோசிக்கிறார்.

ஸ்ரீராம காரியம் எப்படிச்செய்தால் கெடாமலிருக்கும்; புத்தியின்மை எப்படி வராமலிருக்கும்; ஸமுத்ரத்தைத் தாண்டியது எப்படி வீணாகாமலிருக்கும் என்றவாறு யோசித்தார். (41)

मयि दृष्टे तु रक्षोभी रामस्य विदितात्मनः।
भवेद्व्यर्थमिदं कार्यं रावणानर्थमिच्छतः॥ ४२

नहि शक्यं क्वचित्स्थातुमविज्ञातेन राक्षसैः।
अपि राक्षसरूपेण किमुतान्येन केनचित्॥ ४३

वायुरप्यत्र न ज्ञातश्चरेदिति मतिर्मम।
न ह्यस्त्यविदितं किंचिद्राक्षसानां बलीयसाम्॥ ४४

इहाहं यदि तिष्ठामि स्वेन रूपेण संवृतः।
विनाशमुपयास्यामि भर्तुरर्थश्च हीयते॥ ४५

तदहं स्वेन रूपेण रजन्यां ह्रस्वतां गतः।
लङ्कामभिपतिष्यामि राघवस्यार्थसिद्धये॥ ४६

மயி த்ருஷ்டே து ரக்ஷோபீ ராமஸ்ய விதிதாத்மன: ।
பவேத்வ்யர்த்தமிதம் கார்யம் ராவணானர்த்தமிச்சத: ॥ 42

நஹி ஶக்யம் க்வசித்ஸ்தாதுமவிக்ஞாதேன ராக்ஷஸை: ।
அபி ராக்ஷஸரூபேண கிமுதான்யேன கேனசித் ॥ 43

வாயுரப்யத்ர ந க்ஞாதஶ்சரேதிதி மதிர்மம ।
ந ஹ்யஸ்த்யவிதிதம் கிம்சித்ராக்ஷஸானாம் பலீயஸாம் ॥ 44

இஹாஹம் யதி திஷ்டாமி ஸ்வேன ரூபேண ஸம்வ்ருத: ।
விநாஶமுபயாஸ்யாமி பர்துரர்த்தஶ்ச ஹீயதே ॥ 45

ததஹம் ஸ்வேன ரூபேண ரஜன்யாம் ஹ்ரஸ்வதாம் கத: ।
லங்காமபிபதிஷ்யாமி ராகவஸ்யார்த்தஸித்தயே ॥ 46

---

நான் ராக்ஷஸர்களால் பார்க்கப்பட்டால் ஜிதேந்திரியனும் ராவணனுக்கு அழிவை விரும்புகிறவனுமான ஸ்ரீராமனுடைய இக்கார்யம் வ்யர்த்தமாக ஆகும். (42)

ராக்ஷஸ உருவத்தோடே ராக்ஷஸர்களால் அறியப்படாமல் நான் ஓரிடத்திலும் இருப்பதற்கில்லை. வேறு ஏதாவதொரு வேஷத்தினாலோவெனில் சொல்லவும் வேண்டுமோ. (43)

வாயு பகவானும் இங்கு பிறரால் அறியப்படாமல் ஸஞ்சரிக்கக்கூடுமென்று எண்ணுகிறேன். மஹாபலவான்களான ராக்ஷஸர்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. (44)

இங்கு நான் எனது நிஜரூபத்தோடு இருந்தால் நாசத்தை அடைவேன். எனது நாதனை ஸ்ரீராமனுடைய கார்யமும் கெட்டுவிடும். (45)

ஆகையால் நான் எனது ஸொந்த ரூபத்தை மிகச் சுருக்கிக் கொண்டு ஸ்ரீராகவனுடைய கார்ய ஸித்தியின்பொருட்டு இரவில் லங்காபட்டணத்துக்குள் ப்ரவேசிக்கிறேன். (46)

रावणस्य पुरीं रात्रौ प्रविश्य सुदुरासदाम्।
विचिन्वन्भवनं सर्वं द्रक्ष्यामि जनकात्मजाम्॥ ४७

इति संचिन्त्य हनुमान्सूर्यस्यास्तमयं कपिः।
आचकाङ्क्ष तदा वीरो वैदेह्या दर्शनोत्सुकः॥ ४८

सूर्ये चास्तं गते रात्रौ देहं संक्षिप्य मारुतिः।
पृषदंशकमात्रः सन्बभूवाद्भुतदर्शनः॥ ४९

प्रदोषकाले हनुमांस्तूर्णमुत्प्लुत्य वीर्यवान्।
प्रविवेश पुरीं रम्यां सुविभक्तमहापथाम्॥ ५०

प्रासादमालाविततां स्तम्भैः काञ्चनराजतैः॥
शातकुम्भमयैर्जालैर्गन्धर्वनगरोपमाम्॥ ५१

ராவணஸ்ய புரீம் ராத்ரௌ ப்ரவிஶ்ய ஸுதுராஸதாம் ।
விசின்வன்பவனம் ஸர்வம் த்ரக்ஷ்யாமி ஜனகாத்மஜாம் ॥ 47

இதி ஸம்சிந்த்ய ஹனுமான்ஸூர்யஸ்யாஸ்தமயம் கபி: ।
ஆசகாங்க்ஷ ததா வீரோ வைதேஹ்யா தர்ஶனோத்ஸுக: ॥

ஸூர்யே சாஸ்தம் கதே ராத்ரௌ தேஹம் ஸம்க்ஷிப்ய மாருதி: ।
ப்ருஷதம்ஶகமாத்ர: ஸன்பபூவாத்புததர்ஶன: ॥ 49

ப்ரதோஷகாலே ஹனுமான் தூர்ணமுத்ப்லுத்ய வீர்யவான் ।
ப்ரவிவேஶ புரீம் ரம்யாம் ஸுவிபக்தமஹாபதாம் ॥ 50

ப்ராஸாதமாலாவிததாம் ஸ்தம்பை: காஞ்சனராஜதை: ।
ஶாதகும்பமயைர்ஜாலைர்கந்தர்வநகரோபமாம் ॥ 51

---

இரவில் ராவணனுடைய அடையமுடியாத பட்டணத்தை பிரவேசித்து எல்லா வீட்டையும் தேடுகிறவனுகி ஜனக புத்ரியான ஜானகியைப் பார்க்கிறேன். (47)

இவ்விதம் எண்ணி அப்பொழுது வீரரும் ஸீதையைப் பார்க்க வேண்டுமென்று ஆசைகொண்டவருமான ஹனுமார் ஸூர்யாஸ்தமயத்தை எதிர்பார்த்திருந்தார். (48)

ஸூர்யன் அஸ்தமனமடைந்ததும் இரவில் வாயுபுத்ரரான ஹனுமார் உடலைச் சுருக்கிக்கொண்டு பூனைபோன்ற அளவுள்ளவராய்க்கொண்டு ஆச்சர்யமாய் விளங்கினர். (49)

வீர்யவானன ஹனுமார் ப்ரதோஷகாலத்தில் சீக்ரமாகத் தாவி அழகாகப் பிரிக்கப்பட்ட தெருக்களுடன் கூடிய பட்டணத்தைப் ப்ரவேசித்தார். (50)

மாளிகைகளின் வரிசையால் தொகுக்கப்பட்டதும், தங்கத் தூண்களாலும் வெள்ளித்தூண்களாலும், தங்க ஜன்னல்

सप्तभौमाष्टभौमैश्च स ददर्श महापुरीम् ।
तलैः स्फाटिकसंकीर्णैः कार्तस्वरविभूषितैः ॥ ५२

वैडूर्यमणिचित्रैश्च मुक्ताजालविभूषितैः ।
तलैः शुशुभिरे तानि भवनान्यत्र रक्षसाम् ॥ ५३

काञ्चनानि विचित्राणि तोरणानि च रक्षसाम् ।
लङ्कामुद्योतयामासुः सर्वतः समलङ्कृताम् ॥ ५४

अचिन्त्यामद्भुताकारां दृष्ट्वा लङ्कां महाकपिः ।
आसीद्विषण्णो हृष्टश्च वैदेह्या दर्शनोत्सुकः ॥ ५५

ஸப்தபௌமாஷ்டபௌமைஶ்ச ஸ ததர்ஶ மஹாபுரீம் ।
தலை: ஸ்பாடிகஸம்கீர்ணை: கார்த்தஸ்வரவிபூஷிதை: ॥ 52

வைடூர்யமணிசித்ரைஶ்ச முக்தாஜாலவிபூஷிதை: ।
தலை: ஶுஶுபிரே தானி பவனான்யத்ர ரக்ஷஸாம் ॥ 53

காஞ்சனானி விசித்ராணி தோரணானி ச ரக்ஷஸாம் ।
லங்காமுத்யோதயாமாஸு: ஸர்வத: ஸமலங்க்ருதாம் ॥ 54

அசிந்த்யாமத்புதாகாராம் த்ருஷ்ட்வா லங்காம் மஹாகபி: ।
ஆஸீத்விஷண்ணோ ஹ்ருஷ்டஶ்ச வைதேஹ்யா
தர்ஶனோத்ஸுக: ॥ 55

---

களாலும், கந்தர்வ நகரம் போன்றதும், ஏழெட்டு மாடிகளுடன் கூடியதும், ஸ்படிகங்களால் தளவரிசை செய்யப்பட்டதும், தங்கம் வைத்திழைத்ததுமான தரைகளால் ப்ரகாசிக்கும் அப்பட்டிணத்தை ஹனுமார் பார்த்தார். (51, 52)

வைடூர்யமணிகளால் சித்ரிக்கப்பட்டதும், முத்துக்களின் கூட்டங்களினால் அலங்கரிக்கப்பட்டதுமான அந்த ராக்ஷஸர்களுடைய வீடுகள் ப்ரகாசித்தன. (53)

நான்கு பக்கத்திலும் நன்கு அலங்கரிக்கப்பட்ட ராக்ஷஸர்களுடைய லங்கையை விசித்ரமான தங்கத்தோரணவாயில்கள் ப்ரகாசிக்கச்செய்தன. (54)

மஹாகபியானவர் சிந்திக்கமுடியாததும், ஆஸ்சர்யகரமும் வெண்மை நிறமுள்ள மாடிகளின் வரிசைகளை உடையதும், விலையுயர்ந்த தங்க ஜன்னல்களை உடைய வாசலை உடையதும், மிகக் கீர்த்தி வாய்ந்ததும், ராவணனுடைய கைகளால் ரக்ஷிக்கப்பட்டதும், பயங்கரமான பலமுள்ள ராக்ஷஸர்களால் சூழப்பட்டதுமான லங்கையைப் பார்த்து கவலை அடைந்தவராகவும் வைதேஹி

स पाण्डुरोद्विद्धविमानमालिनीं महार्हजाम्बूनदजालतोरणाम् ।
यशस्विनीं रावणबाहुपालितां क्षपाचरैर्भीमबलैः समावृताम् ॥ ५६

चन्द्रोऽपि साचिव्यमिवास्य कुर्वंस्तारागणैर्मध्यगतो विराजन् ।
ज्योत्स्नावितानेन वितत्य लोकमुत्तिष्ठते नैकसहस्ररश्मिः ॥ ५७

शङ्खप्रभं क्षीरमृणालवर्णमुद्गच्छमानं व्यवभासमानम् ।
ददर्श चन्द्रं स हरिप्रवीरः पोप्लूयमानं सरसीव हंसम् ॥ ५८

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
द्वितीयः सर्गः ॥२॥

ஸ பாண்டுரோத்வித்தவிமானமாலினீம்
மஹார்ஹஜாம்பூநதஜாலதோரணாம் ।
யஶஸ்வினீம் ராவணபாஹுபாலிதாம்
க்ஷபாசரைர்பீமபலை: ஸமாவ்ருதாம் ॥ 56

சந்த்ரோऽபி ஸாசிவ்யமிவாஸ்ய
குர்வம்ஸ்தாராகணைர்மத்யகதோ விராஜன் ।
ஜ்யோத்ஸ்னாவிதானேன விதத்யலோக
முத்திஷ்டதே நைகஸஹஸ்ரரஶ்மி: ॥ 57

ஶங்கப்ரபம் க்ஷீரம்ருணாலவர்ண
முத்கச்சமானம் வ்யவபாஸமானம் ।
ததர்ஶ சந்த்ரம் ஸ ஹரிப்ரவீர: போப்லூயமானம்
ஸரஸீவ ஹம்ஸம் ॥ 58

இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே த்விதீய: ஸர்க: ॥

---

யைப் பார்க்கப்போகிறோமென்ற ஆசையினால் ஸந்தோஷமடைந்தவராகவும் ஆனார். (55, 56)

சந்த்ரனும் இவருக்கு உதவி செய்பவன் போல நடுவில் இருந்துகொண்டு நக்ஷத்ர கணங்களால் ப்ரகாசிக்கிறவரும் சந்திரிகையின் கூட்டத்தால் உலகத்தில் பரவி ஆயிரக்கணக்கான கிரணங்களுள்ளவனாய் கிளம்பினான். (57)

சங்கம்போன்ற காந்தி உள்ளதும், பால்போல் வெண்மை நிறமுள்ளதும், வெளியில் கிளம்புகிறதும், நன்கு ப்ரகாசிக்கின்றதுமான சந்த்ரனை வானரங்களுள் வீரனான அந்த ஹனுமார் ஓடையில் துள்ளிக்கிளம்புகின்ற ஹம்ஸத்தைப்போல் பார்த்தார். (58)

இரண்டாவது ஸர்கம் முற்றிற்று.

ஸ்ரீ:

तृतीयः सर्गः — மூன்றாவது ஸர்கம் ॥३॥

# 'लङ्काधिदेवताविजयः' - லங்காதேவியை ஜயித்தல்

स लम्बशिखरे लम्बे लम्बतोयदसन्निभे ।
सत्त्वमास्थाय मेधावी हनुमान्मारुतात्मजः ॥ १

निशि लङ्कां महासत्त्वो विवेश कपिकुञ्जरः ।
रम्यकाननतोयाढ्यां पुरीं रावणपालिताम् ॥ २

शारदाम्बुधरप्रख्यैर्भवनैरुपशोभिताम् ।
सागरोपमनिर्घोषां सागरानिलसेविताम् ॥ ३

सुपुष्टबलसंघुष्टां यथैव विटपावतीम् ।
चारुतोरणनिर्यूहां पाण्डुरद्वारतोरणाम् ॥ ४

ஸ லம்பஶிகரே லம்பே லம்பதோயதஸன்னிபே ।
ஸத்வமாஸ்தாய மேதாவீ ஹனுமான்மாருதாத்மஜ: ॥ 1

நிஶி லங்காம் மஹாஸத்வோ விவேஶ கபிகுஞ்ஜர: ।
ரம்யகானனதோயாட்யாம் புரீம் ராவணபாலிதாம் ॥ 2

ஶாரதாம்புதரப்ரக்யைர்பவனைருபஶோபிதாம் ।
ஸாகரோபமநிர்கோஷாம் ஸாகரானிலஸேவிதாம் ॥ 3

ஸுபுஷ்டபலஸம்குஷ்டாம் யதைவ விடபாவதீம் ।
சாருதோரணநிர்யூஹாம் பாண்டுரத்வாரதோரணாம் ॥ 4

---

வானரஶ்ரேஷ்டரும் மஹாபலிஷ்டரும் மேதாவியும் வாயுபுத்ரருமான அந்த ஹனுமார் தொங்குகின்ற மேகம் போன்றதும் லம்பமென்னும் பர்வதத்தின் சிகரத்தில் இருக்கின்றதும் அழகிய காடு ஜலம் இவைகளால் நிரம்பியதும் ராவணனால் காக்கப்பட்டதுமான லங்காபுரியை இரவில் ப்ரவேசித்தார். (1, 2)

ஶரத்கால மேகத்துக்கு ஒப்பான வீடுகளால் மிகச்சோபையை அடைந்ததும், ஸமுத்ரத்தின் ஶப்தம்போன்ற ஶப்தத்தோடு கூடியதும் ஸமுத்ரக்காற்றால் ஸேவிக்கப்பட்டதும், வலுவுள்ள ஸைன்யங்களின் ஶப்தத்தோடு கூடியதும் அலகாபுரியைப்போன்றதும் அழகிய தோரண வாசல்களில் உள்ள மதம்பிடித்த யானைகளை உடையதும் வெண்மை நிறமான வாசல் தோரணங்களை உடையதும் ஸர்ப்பங்களால் ஸஞ்சரிக்கப்பட்டதும் காக்கப்பட்டதும் அழகியதுமான போகவதியைப் போன்றதும் மின்னல்களுடன் கூடிய மேகங்களால் சூழப்பட்டதும் நக்ஷத்ர மண்ட

भुजगाचरितां गुप्तां शुभां भोगवतीमिव ।
तां सविद्युद्घनाकीर्णां ज्योतिर्मार्गनिषेविताम् ॥ ५

मन्दमारुतसंचारां यथेन्द्रस्यामरावतीम् ।
शातकुम्भेन महता प्राकारेणाभिसंवृताम् ॥ ६

किङ्किणीजालघोषाभिः पताकाभिरलङ्कृताम् ।
आसाद्य सहसा हृष्टः प्राकारमभिपेदिवान् ॥
विस्मयाविष्टहृदयः पुरीमालोक्य सर्वतः ॥ ७

जाम्बूनदमयैर्द्वारैर्वैडूर्यकृतवेदिकैः ।
वज्रस्फटिकमुक्ताभिर्मणिकुट्टिमभूषितैः ॥
तप्तहाटकनिर्यूहै राजतामलपाण्डुरैः ॥ ८

புஜகாசரிதாம் குப்தாம் ஶுபாம் போகவதீமிவ ।
தாம் ஸ வித்யுத்கனாகீர்ணாம் ஜ்யோதிர்மார்கநிஷேவிதாம் ॥ 5

மந்தமாருதஸம்சாராம் யதேந்த்ரஸ்யாமராவதீம் ।
ஶாதகும்பேன மஹதா ப்ராகாரேணாபிஸம்வ்ருதாம் ॥ 6

கிங்கிணீஜாலகோஷாபி: பதாகாபிரலங்க்ருதாம் ।
ஆஸாத்ய ஸஹஸா ஹ்ருஷ்ட: ப்ராகாரமபிபேதிவான் ॥
விஸ்மயாவிஷ்டஹ்ருதய: புரீமாலோக்ய ஸர்வத: ॥ 7

ஜாம்பூநதமயைர்த்வாரைர்வைடூர்யக்ருதவேதிகை: ।
வஜ்ரஸ்படிகமுக்தாபி: மணிகுட்டிமபூஷிதை: ॥
தப்தஹாடகநிர்யூஹை ராஜதாமலபாண்டுரை: ॥ 8

---

லத்தை அளாவியதும் இளம் காற்றின் ஸஞ்சாரத்தை உடையதும் அமராவதி போன்றதும், தங்கமயமான பெருத்த மதிற்சுவரால் சூழப்பட்டதும், சின்ன மணிக்கூட்டங்களின் ஶப்தங்களுடன் கூடிய த்வஜஸ்தம்பத்தினுல் அலங்கரிக்கப்பட்டதுமான, லங்கா புரியை வேகமாக அடைந்து ஸந்தோஷமடைந்தவராய் ஆஶ்சர்யத்தால் நிறைந்த ஹ்ருதயத்துடன் நான்கு பக்கத்திலும் பட்டணத்தைப் பார்த்து மதிற் சுவற்றின் ஸமீபத்தை அடைந்தார்.

அடுத்த ஸர்கத்தின் ஆரம்பத்தில் "**अद्वारेण महाबाहुः प्राकारमभिपुप्लुवे**" என்று சொல்லப்போவதால் இங்கு "**प्राकारमभिपेदिवान्**" என்பதற்கு மதிலின் ஸமீபம் என்றே அர்த்தம் கொள்வது உசிதம் என்பது சில வ்யாக்யானக்காரர்களின் கருத்து. (3 — 7)

தங்கமயமான வாசற்படிகளாலும் வைடூர்யத்தால் செய்யப்பட்ட மேடைகளாலும், வஜ்ரம், ஸ்படிகம், முத்து இவைகளா

वैडूर्यकृतसोपानैः स्फाटिकान्तरपांसुभिः ।
चारुसंजवनोपेतैः खमिवोत्पतितैः शुभैः ॥ ९

क्रौञ्चबर्हिणसंघुष्टै राजहंसनिषेवितैः ।
तूर्याभरणनिर्घोषैः सर्वतः प्रतिनादिताम् ॥ १०

वस्वोकसाराप्रतिमां तां वीक्ष्य नगरीं ततः ।
खमिवोत्पतितां लङ्कां जहर्ष हनुमान्कपिः ॥ ११

तां समीक्ष्य पुरीं रम्यां राक्षसाधिपतेः शुभाम् ।
अनुत्तमामृद्धियुतां चिन्तयामास वीर्यवान् ॥ १२

வைடூர்யக்ருதஸோபாநை: ஸ்பாடிகாந்தரபாம்ஸுபி: ।
சாருஸம்ஜவநோபேதை: கமிவோத்பதிதை: ஶுபை: ॥ 9

க்ரௌஞ்சபர்ஹிணஸம்குஷ்டை ராஜஹம்ஸநிஷேவிதை: ।
தூர்யாபரணநிர்கோஷை: ஸர்வத: ப்ரதிநாதிதாம் ॥ 10

வஸ்வோகஸாராப்ரதிமாம் தாம் வீக்ஷ்ய நகரீம் தத: ।
கமிவோத்பதிதாம் லங்காம் ஜஹர்ஷ ஹநுமான்கபி: ॥ 11

தாம் ஸமீக்ஷ்ய புரீம் ரம்யாம் ராக்ஷஸாதிபதே: ஶுபாம் ।
அநுத்தமாம்ருத்தியுதாம் சிந்தயாமாஸ வீர்யவான் ॥ 12

---

ளும், ரத்தினங்களால் செய்யப்பட்ட திண்ணைகளாலும், உருக்கிய தங்கத்தினாலும் செய்யப்பட்ட யானைகளாலும் வெள்ளிபோல் வெண்ணிறமுள்ள வைடூர்யத்தால் செய்யப்பட்ட படிக்கட்டுகளாலும் ஸ்படிகத்தால் செய்யப்பட்ட மத்யபாகத்தை உடையதும் புழுதியற்றதுமான வைடூர்யப்படிக்கட்டுகளாலும் அழகிய நாற்புறத்தாழ்வாரங்களாலும் ஆகாசத்தை அளாவியதும் மங்களகரமானவைகளும் க்ரௌஞ்சம் மயில் இவற்றின் ஶப்தங்களோடு கூடியதும் ராஜஹம்ஸங்களால் ஸேவிக்கப்பட்டதுகளுமான வீடுகளுடன் கூடியதும் வாத்யங்கள் ஆபரணம் இவற்றின் ஶப்தங்களால் நான்கு பக்கத்திலும் நாதத்துடன் கூடியதும் இந்திரபுரிக்கொப்பானதும் ஆகாசத்தில் கிளம்பியதுபோல் இருக்கின்றதுமான அந்த நகரத்தைப் பார்த்து ஹநுமார் ஸந்தோஷப்பட்டார். (8—11)

வீர்யவானான ஹநுமார் ஸர்வோத்தமமும் ஸர்வ ஸம்ருத்தியுடன் கூடியதும் அழகு வாய்ந்ததும் மங்களமானதுமான அந்த ராக்ஷஸாதிபதியினுடைய பட்டணத்தைப் பார்த்து யோசித்தார். (12)

नेयमन्येन नगरी शक्या धर्षयितुं बलात्।
रक्षिता रावणबलैरुद्यतायुधधारिभिः॥　　१३

कुमुदाङ्गदयोर्वापि सुषेणस्य महाकपेः।
प्रसिद्धेयं भवेद्भूमिर्मैन्दद्विविदयोरपि॥　　१४

विवस्वतस्तनूजस्य हरेश्च कुशपर्वणः।
ऋक्षस्य केतुमालस्य मम चैव गतिर्भवेत्॥　　१५

समीक्ष्य तु महाबाहू राघवस्य पराक्रमम्।
लक्ष्मणस्य च विक्रान्तमभवत्प्रीतिमान्कपिः॥　　१६

तां रत्नवसनोपेतां गोष्ठागारावतंसकाम्।
यन्त्रागारस्तनीमृद्धां प्रमदामिव भूषिताम्॥　　१७

நேயமன்யேன நகரீ ஶக்யா தர்ஷயிதும் பலாத்।
ரக்ஷிதா ராவணபலை: உத்யதாயுததாரிபி:॥　　13

குமுதாங்கதயோர்வாபி ஸுஷேணஸ்ய மஹாகபே:।
ப்ரஸித்தேயம் பவேத்பூமிர்மைந்தத்விவிதயோரபி॥　　14

விவஸ்வதஸ்தனூஜஸ்ய ஹரேஶ்ச குஶபர்வண:।
ருக்ஷஸ்ய கேதுமாலஸ்ய மம சைவ கதிர்பவேத்॥　　15

ஸமீக்ஷ்ய து மஹாபாஹூ ராகவஸ்ய பராக்ரமம்।
லக்ஷ்மணஸ்ய ச விக்ராந்தமபவத்ப்ரீதிமான்கபி:॥　　16

தாம் ரத்னவஸனோபேதாம் கோஷ்டாகாராவதம்ஸகாம்।
யந்த்ராகாரஸ்தனீம்ருத்தாம் ப்ரமதாமிவ பூஷிதாம்॥　　17

---

ஆயுதம் தரித்தவர்களான ராவணனது ஸேனைகளால் ரக்ஷிக்கப்பட்ட இந்த நகரமானது ஒருவராலும் பலத்தினால் ஆக்ரமிக்க முடியாது. (13)

இந்த லங்கையானது குமுதன் அங்கதன் மஹாகபியாகிய ஸுஷேணன் மைந்தன் த்விவிதன் இவர்களுக்குப் ப்ரஸித்தமாகத் தெரிந்திருக்கும். (14)

இந்த லங்கையானது ஸூர்யபுத்ரனை ஸுக்ரீவனுக்கும் குஶபர்வா எனும் வானரனுக்கும் ரிக்ஷனுக்கும் கேதுமாலனுக்கும் எனக்கும் செல்லத்தக்கதாகும். (15)

பெருத்த புஜமுள்ள கபியான ஹனுமார் ஸ்ரீராமலக்ஷ்மணர்களுடைய பராக்ரமத்தை நினைத்து ராமலக்ஷ்மணர்களால் இந்த லங்கையானது அனாயாஸமாய் ஜயிக்கப்படும் என்று எண்ணத்தால் மிக ஸந்தோஷத்தை அடைந்தார். (16)

அந்த ஹனுமார் ரத்னமயமான ப்ராகாரங்களால் வஸ்த்ரம் தரித்திருப்பவள் போலும், பஶுக்கள் அஶ்வங்கள் கட்டும் ஶாலைக

तां नष्टतिमिरां दीपैर्भास्वरैश्च महागृहैः ।
नगरीं राक्षसेन्द्रस्य ददर्श स महाकपिः ॥ १८

अथ सा हरिशार्दूलं प्रविशन्तं महाबलम् ।
नगरी स्वेन रूपेण ददर्श पवनात्मजम् ॥ १९

सा तं हरिवरं दृष्ट्वा लङ्का रावणपालिता ।
स्वयमेवोत्थिता तत्र विकृताननदर्शना ॥ २०

पुरस्तात्कपिवर्यस्य वायुसूनोरतिष्ठत ।
मुञ्चमाना महानादमब्रवीत्पवनात्मजम् ॥ २१

தாம் நஷ்டதிமிராம் தீபைர்பாஸ்வரைஶ்ச மஹாக்ருஹை: ।
நகரீம் ராக்ஷஸேந்த்ரஸ்ய ததர்ஶ ஸ மஹாகபி: ॥ 18

அத ஸா ஹரிஶார்தூலம் ப்ரவிஶந்தம் மஹாபலம் ।
நகரீ ஸ்வேன ரூபேண ததர்ஶ பவனாத்மஜம் ॥ 19

ஸா தம் ஹரிவரம் த்ருஷ்ட்வா லங்கா ராவணபாலிதா ।
ஸ்வயமேவோத்திதா தத்ர விக்ருதானனதர்சனா ॥ 20

புரஸ்தாத்கபிவர்யஸ்ய வாயுஸூனோரதிஷ்டத ।
முஞ்சமானா மஹாநாதம் அப்ரவீத்பவனாத்மஜம் ॥ 21

---

ளாலும், வீடுகளாலும் கர்ணபூஷணம் தரித்தவள் போலும், ஆயுத மாலைகளால் ஸ்தனங்கள் உள்ளவள் போலும் இருப்பவளும் ஸம்ருத்தியுடன் கூடியவளும், அலங்கரிக்கப்பட்டவளுமான ஸ்திரீபோல் இருக்கக்கூடிய அந்த லங்கையைப் பார்த்தார். (17)

மஹாகபியான அந்த ஹனுமார் ப்ரகாசிக்கின்ற மிகப்பெரிய வீடுகளாலும் தீபங்களாலும், போக்கப்பட்ட இருட்டை உடையதாய் இருக்கிற அந்த ராக்ஷஸேந்த்ரனுடைய பட்டணத்தைப் பார்த்தார். (18)

பிறகு அந்த நகரத்து அதிஷ்டான தேவதையானவள் தனது ஸ்வய உருவத்துடன் பட்டணத்தில் ப்ரவேசிக்கும் மஹாபலிஷ்டனும் வாயுபுத்ரனுமான வானர ஶ்ரேஷ்டனைக் கண்டாள். (19)

அந்த லங்காதேவதையானவள் ராவணனால் காக்கப்பட்டவளும் விகாரமான முகத்தை உடையவளுமாய்க்கொண்டு அந்த ஹனுமாரைப்பார்த்து தானே எழுந்தாள். (20)

கபிஶ்ரேஷ்டனுடைய எதிரில் வந்து நின்றாள். பெரிய ஶப்தத்தைச் செய்து கொண்டு வாயுபுத்ரனைப் பார்த்துச் சொன்னாள். (21)

कस्त्वं केन च कार्येण इह प्राप्तो वनालय ।
कथयस्वेह यत्तत्त्वं यावत्प्राणा धरन्ति ते ॥ २२

न शक्यं खल्वियं लङ्का प्रवेष्टुं वानर त्वया ।
रक्षिता रावणबलैरभिगुप्ता समन्ततः ॥ २३

अथ तामब्रवीद्वीरो हनूमानग्रतः स्थिताम् ।
कथयिष्यामि ते तत्त्वं यन्मां त्वं परिपृच्छसि ॥ २४

का त्वं विरूपनयना पुरद्वारेऽवतिष्ठसे ।
किमर्थं चापि मां रुद्ध्वा निर्भर्त्सयसि दारुणा ॥ २५

हनुमद्वचनं श्रुत्वा लङ्का सा कामरूपिणी ।
उवाच वचनं क्रुद्धा परुषं पवनात्मजम् ॥ २६

கஸ்த்வம் கேன ச கார்யேண இஹ ப்ராப்தோ வனாலய ।
கதயஸ்வேஹ யத்தத்வம் யாவத்ப்ராணா தரந்தி தே ॥ **22**

ந ஶக்யம் கல்வியம் லங்கா ப்ரவேஷ்டும் வானர த்வயா ।
ரக்ஷிதா ராவணபலைரபிகுப்தா ஸமந்தத: ॥ **23**

அத தாமப்ரவீத்வீரோ ஹனூமானக்ரத: ஸ்திதாம் ।
கதயிஷ்யாமி தே தத்வம் யன்மாம் த்வம் பரிப்ருச்சஸி ॥ **24**

கா த்வம் விரூபநயனா புரத்வாரேऽவதிஷ்டஸே ।
கிமர்தம் சாபி மாம் ருத்வா நிர்பர்த்ஸயஸி தாருணா ॥ **25**

ஹனுமத்வசனம் ஶ்ருத்வா லங்கா ஸா காமரூபிணீ ।
உவாச வசனம் க்ருத்தா பருஷம் பவனாத்மஜம் ॥ **26**

---

*காட்டில் குடியிருக்கும் குரங்கே, நீ யார், எதற்காக இங்கு வந்தாய்? உயிர்போகுமுன் உண்மையைச் சொல்.* (22)

*ராவணனுடைய ஸைன்யத்தால் நாலுபக்கத்திலும் நன்கு சூழப்பட்டு ரக்ஷிக்கப்பட்டதான இந்த லங்கையானது உன்னால் ப்ரவேசிக்கக்கூடியதல்ல.* (23)

*பிறகு வீரனான ஹனுமார் முன்னிலையிலிருக்கும் லங்கையைப் பார்த்து நீ எதைக் கேட்கிறாயோ அந்த உண்மையை உனக்குச் சொல்லுகிறேன். நீ யார்? பயங்கர ரூபத்துடன் எதிரில் இருக்கிறாயே. கோரமானவளாய் இருந்துகொண்டு எதற்காக என்னைத் தகர்த்து பயத்தை உண்டு பண்ணுகிறாய்? என்று சொன்னார்.* (24, 25)

*ஹனுமாரின் வார்த்தையைக்கேட்டு கோரமான அந்த லங்கை கோபமடைந்தவளாகி வாயுபுத்ரரான ஹனுமாரைப் பார்த்துச் சொன்னாள்.* (26)

अहं राक्षसराजस्य रावणस्य महात्मनः।
आज्ञाप्रतीक्षा दुर्धर्षा रक्षामि नगरीमिमाम्॥ २७
न शक्या मामवज्ञाय प्रवेष्टुं नगरी त्वया।
अद्य प्राणैः परित्यक्तः स्वप्स्यसे निहतो मया॥ २८
अहं हि नगरी लङ्का स्वयमेव प्लवंगम।
सर्वतः परिरक्ष्यामि ह्येतत्ते कथितं मया॥ २९
लङ्काया वचनं श्रुत्वा हनुमान्मारुतात्मजः।
यत्नवान्स हरिश्रेष्ठः स्थितः शैल इवापरः॥ ३०
स तां स्त्रीरूपविकृतां दृष्ट्वा वानरपुङ्गवः।
आबभाषेऽथ मेधावी सत्ववान्प्लवगर्षभः॥ ३१

அஹம் ராக்ஷஸராஜஸ்ய ராவணஸ்ய மஹாத்மன:।
ஆக்ஞாப்ரதீக்ஷா துர்தர்ஷா ரக்ஷாமி நகரீமிமாம்॥ 27
ந ஶக்யா மாமவக்ஞாய ப்ரவேஷ்டும் நகரீ த்வயா।
அத்ய ப்ராணை: பரித்யக்த: ஸ்வப்ஸ்யஸே நிஹதோ மயா॥ 28
அஹம் ஹி நகரீ லங்கா ஸ்வயமேவ ப்லவங்கம।
ஸர்வத: பரிரக்ஷ்யாமி ஹ்யேதத்தே கதிதம் மயா॥ 29
லங்காயா வசனம் ஶ்ருத்வா ஹநுமான்மாருதாத்மஜ:।
யத்னவான் ஸ ஹரிஶ்ரேஷ்ட: ஸ்தித: ஶைல இவாபர:॥ 30
ஸ தாம் ஸ்த்ரீரூபவிக்ருதாம் த்ருஷ்ட்வா வானரபுங்கவ:।
ஆபபாஷேऽத மேதாவீ ஸத்வவான்ப்லவகர்ஷப:॥ 31

---

நான் ராக்ஷஸராஜனும் மஹாத்மாவுமான ராவணனுடைய வேலைக்காரி. ஒருவராலும் தகர்க்க முடியாதவள். இப்பட்டிணத்தை ரக்ஷித்து வருகிறேன். (27)

என்னை அவமதித்து இப்பட்டிணத்தில் செல்லமுடியாது. இப்பொழுது என்னால் கொல்லப்பட்டு ஜீவனற்று பூமியில் படுக்கப்போகிறாய். (28)

மறுபடியும் ஹனுமார் ஸந்தேகித்ததால் திரும்பவும் லங்கை சொல்லுகிறாள்.

ஏ ப்லவங்கம, நானே லங்காதிதேவதை. நான்கு பக்கத்திலும் நானே ரக்ஷிக்கிறேன். இதை உனக்கு முன்பே தெரிவித்து விட்டேன். (29)

வாயுபுத்ரனான ஹனுமார் லங்கையின் வார்த்தையைக்கேட்டு முயற்சியுடன் மற்றோர் மலைபோல் நின்றார். (30)

பிறகு வானரஶ்ரேஷ்டரும் மேதாவியும் மஹாபலம் வாய்ந்தவரும் தாண்டுபவர்க்குள் சிறந்தவருமான ஹனுமார் விகாரமான ஸ்த்ரீரூபத்தை உடைய அந்த ராக்ஷஸியைக் குறித்துச் சொன்னார். (31)

द्रक्ष्यामि नगरीं लङ्कां साट्टप्राकारतोरणाम् ।
[ निर्विशङ्कमिमं लोकं पश्यन्त्यास्तव सांप्रतम् ॥ ]
इत्यर्थमिह संप्राप्तः परं कौतूहलं हि मे ॥ ३२

वनान्युपवनानीह लङ्कायाः काननानि च ।
सर्वतो गृहमुख्यानि द्रष्टुमागमनं हि मे ॥ ३३

तस्य तद्वचनं श्रुत्वा लङ्का सा कामरूपिणी ।
भूय एव पुनर्वाक्यं बभाषे परुषाक्षरम् ॥ ३४

मामनिर्जित्य दुर्बुद्धे राक्षसेश्वरपालिताम् ।
न शक्यमद्य ते द्रष्टुं पुरीयं वानराधम ॥ ३५

த்ரக்ஷ்யாமி நகரீம் லங்காம் ஸாட்டப்ராகாரதோரணாம் ।
[நிர்விஶங்கமிமம் லோகம் பஶ்யந்த்யாஸ்தவ ஸாம்ப்ரதம் ॥]
இத்யர்தமிஹ ஸம்ப்ராப்த: பரம் கௌதூஹலம் ஹி மே ॥ **32**

வனான்யுபவனானீஹ லங்காயா: கானனானி ச ।
ஸர்வதோ க்ருஹமுக்யானி த்ரஷ்டுமாகமனம் ஹி மே ॥ **33**

தஸ்ய தத்வசனம் ஶ்ருத்வா லங்கா ஸா காமரூபிணீ ।
பூய ஏவ புனர்வாக்யம் பபாஷே பருஷாக்ஷரம் ॥ **34**

மாமநிர்ஜித்ய துர்புத்தே ராக்ஷஸேஶ்வரபாலிதாம் ।
ந ஶக்யமத்ய தே த்ரஷ்டும் புரீயம் வானராதம ॥ **35**

---

*லங்காநகரத்தையும், இங்குள்ள திண்ணை, மதிற்சுவர்கள் வாசல் பாகங்கள் இவைகளையும் பார்ப்பதற்காகவே இங்கு வந்தேன். இதில் எனக்கு மிகவும் ஆசையிருக்கிறது.* (32)

*பயிர்பண்ணப்பட்ட காடுகளையும், இயற்கையான காடுகளையும், அரண்மனைச் சுற்றுபுறமுள்ள புஷ்பத்தோட்டங்களையும், லங்கையில் நாற்புறமிருக்கும் வீடுகளையும் பார்ப்பதற்காகவே நான் இங்கு வந்தேன்.* (33)

*காமரூபிணியான அந்த லங்கை அவருடைய அவ்வார்த்தையைக்கேட்டு மறுபடியும் கடுமையாகச் சொன்னாள்.* (34)

*வானரர்களுள் தாழ்ந்தவனும், துர்புத்தி படைத்தவனுமான ஏ வானரனே, ராக்ஷஸேஶ்வரனால் காக்கப்படும் இந்தப் பட்டணத்தை என்னை ஜயிக்காமல் இப்பொழுது நீ பார்க்க முடியாது.* (35)

ततः स कपिशार्दूलस्तामुवाच निशाचरीम्।
दृष्ट्वा पुरीमिमां भद्रे पुनर्यास्ये यथागतम्॥ ३६
ततः कृत्वा महानादं सा वै लङ्का भयावहम्।
तलेन वानरश्रेष्ठं ताडयामास वेगिता॥ ३७
ततः स कपिशार्दूलो लङ्कया ताडितो भृशम्।
ननाद सुमहानादं वीर्यवान्पवनात्मजः॥ ३८
ततः संवर्तयामास वामहस्तस्य सोऽङ्गुलीः।
मुष्टिनाऽभिजघानैनां हनूमान्क्रोधमूर्छितः॥
स्त्री चेति मन्यमानेन नातिक्रोधः स्वयं कृतः॥ ३९
सा तु तेन प्रहारेण विह्वलाङ्गी निशाचरी।
पपात सहसा भूमौ विकृताननदर्शना॥ ४०

ததஃ ஸ கபிஶார்தூலஸ்தாமுவாச நிஶாசரீம் ।
த்ருஷ்ட்வா புரீமிமாம் பத்ரே புனர்யாஸ்யே யதாகதம் ॥ 36
ததஃ க்ருத்வா மஹாநாதம் ஸா வை லங்கா பயாவஹம் ।
தலேன வானரஶ்ரேஷ்டம் தாடயாமாஸ வேகிதா ॥ 37
ததஃ ஸ கபிஶார்தூலோ லங்கயா தாடிதோ ப்ருஶம் ।
நநாத ஸுமஹாநாதம் வீர்யவான்பவனாத்மஜஃ ॥ 38
ததஃ ஸம்வர்த்தயாமாஸ வாமஹஸ்தஸ்ய ஸோऽங்குலீஃ ।
முஷ்டிநாऽபிஜகானைனாம் ஹனூமான்க்ரோதமூர்ச்சிதஃ ॥
ஸ்த்ரீ சேதி மன்யமானேன நாதிக்ரோதஃ ஸ்வயம் க்ருதஃ 39
ஸா து தேன ப்ரஹாரேண விஹ்வலாங்கீ நிஶாசரீ ।
பபாத ஸஹஸா பூமௌ விக்ருதானனதர்ஶனா ॥ 40

---

பிறகு அந்த கபிஶ்ரேஷ்டரான ஹனுமார் அந்த ராக்ஷஸியைப் பார்த்து ஓ மங்கள ரூபிணியே, இப்பட்டிணத்தைப் பார்த்துவிட்டு வந்தபடியே திரும்பி விடுகிறேன் என்று சொன்னார். (36)

பிறகு அந்த லங்கையானவள் பயங்கரமான பெரிய ஶப்தத்தைச் செய்து வேகத்துடன்கூட வானரஶ்ரேஷ்டனைக் கையால் அடித்தாள். (37)

பிறகு லங்கையால் நன்கு அடிக்கப்பட்டவரும் வீர்யவானும் வாயுபுத்ரனுமான அந்த ஹனுமார் பெருத்த ஶப்தமிட்டார். (38)

கோபத்தினால் தன்னை மறந்து அந்த ஹனுமார் இடது கை விரல்களை முஷ்டியாகச் செய்து கொண்டு இவளை அடித்தார். ஸ்த்ரீ என்ற காரணத்தால் அதிகம் கோபங்கொள்ளவில்லை. (39)

அந்த ராக்ஷஸியோவெனில் அந்த அடியினால் வெகு ஶீக்ரமாய் விகாரமான முகம் கண் இவைகளை உடையவளாய் பூமியில் விழுந்தாள். (40)

ततस्तु हनुमान्प्राज्ञस्तां दृष्ट्वा विनिपातिताम्।
कृपां चकार तेजस्वी मन्यमानः स्त्रियं तु ताम्॥ ४१

ततो वै भृशसंविग्ना लङ्का सा गद्गदाक्षरम्।
उवाचागर्वितं वाक्यं हनुमन्तं प्लवङ्गमम्॥ ४२

प्रसीद सुमहाबाहो त्रायस्व हरिसत्तम।
समये सौम्य तिष्ठन्ति सत्त्ववन्तो महाबलाः॥ ४३

अहं तु नगरी लङ्का स्वयमेव प्लवङ्गम।
निर्जिताऽहं त्वया वीर विक्रमेण महाबल॥ ४४

ததஸ்து ஹனுமான்ப்ராக்ஞஸ்தாம் த்ருஷ்ட்வா விநிபாதிதாம்।
க்ருபாம் சகார தேஜஸ்வீ மன்யமான: ஸ்த்ரியம் து தாம்॥ **41**

ததோ வை ப்ருஶஸம்விக்ஞ லங்கா ஸா கத்கதாக்ஷரம்।
உவாசாகர்விதம் வாக்யம் ஹனுமந்தம் ப்லவங்கமம்॥ **42**

ப்ரஸீத ஸுமஹாபாஹோ த்ராயஸ்வ ஹரிஸத்தம।
ஸமயே ஸௌம்ய திஷ்டந்தி ஸத்வவந்தோ மஹாபலா:॥ **43**

அஹம் து நகரீ லங்கா ஸ்வயமேவ ப்லவங்கம।
நிர்ஜிதாऽஹம் த்வயா வீர விக்ரமேண மஹாபல॥ **44**

---

*பிறகு கோபம் தணிந்தவரும் தேஜஸ்வியுமான அந்த ஹனுமார் கீழேவிழுந்த அவளைப் பார்த்து அவள் ஸ்த்ரீயாக இருப்பதையும் உணர்ந்து அவளிடம் கருணையைச் செய்தார்.* (41)

*பிறகு மிகவும் கலங்கிய அந்த லங்கையானவள் தழுதழுத்த அக்ஷரங்களுடன் கர்வமற்றதான வார்த்தையைச் சொன்னாள்.* (42)

*அழகியவனே, பெருத்த கைகளை உடைய ஏ வானரஸ்ரேஷ்டனே, தெளிவடைந்தவனாய்க் கொண்டு நீ என்னைக் காக்கவேண்டும். மஹாபலம் படைத்தவர்களும் ஸத்வ குணமுள்ளவர்களும் ஶாஸ்த்ர மரியாதையாகிற ஸ்த்ரீகளைக்கொல்லக்கூடாதென்கிற வரம்பில் இருக்கின்றனர்.*

*(இங்கு அடிபட்டபிறகே ஹனுமாரை மஹாபாஹு என்றழைப்பதால் துஷ்டர்களுக்கு ஆபத்து நேர்ந்தபிறகே நல்லோரின் பெருமை தெரியவருகிறதென்பது புலப்படுகிறது.)* (43)

*ஓ ப்லவங்கம, நான்தான் லங்காநகரதேவதை. ஓ வீர, ஓ மஹாபல, உன்னுடைய பராக்ரமத்தால் நான் ஜயிக்கப்பட்டேன்.* (44)

इदं तु तथ्यं शृणु वै ब्रुवन्त्या मे हरीश्वर।
स्वयं स्वयंभुवा दत्तं वरदानं यथा मम॥ ४५

यदा त्वां वानरः कश्चिद्विक्रमाद्वशमानयेत्।
तदा त्वया हि विज्ञेयं रक्षसां भयमागतम्॥ ४६

स हि मे समयः सौम्य प्राप्तोऽद्य तव दर्शनात्।
स्वयंभूविहितः सत्यो न तस्यास्ति व्यतिक्रमः॥ ४७

सीतानिमित्तं राज्ञस्तु रावणस्य दुरात्मनः।
रक्षसां चैव सर्वेषां विनाशः समुपागतः॥ ४८

तत्प्रविश्य हरिश्रेष्ठ पुरीं रावणपालिताम्।
विधत्स्व सर्वकार्याणि यानि यानीह वाञ्छसि॥ ४९

இதம் து தத்யம் ஶ்ருணுவை ப்ருவந்த்யா மே ஹரீஶ்வர।
ஸ்வயம் ஸ்வயம்புவா தத்தம் வரதானம் யதா மம॥ 45

யதா த்வாம் வானர: கஶ்சித்விக்ரமாத்வஶமானயேத்।
ததா த்வயா ஹி விக்ஞேயம் ரக்ஷஸாம் பயமாகதம்॥ 46

ஸ ஹி மே ஸமய: ஸௌம்ய ப்ராப்தோऽத்ய தவ தர்ஶனாத்।
ஸ்வயம்பூவிஹித: ஸத்யோ ந தஸ்யாஸ்தி வ்யதிக்ரம:॥ 47

ஸீதாநிமித்தம் ராக்ஞஸ்து ராவணஸ்ய துராத்மன:।
ரக்ஷஸாம் சைவ ஸர்வேஷாம் விநாஶ: ஸமுபாகத: 48

தத்ப்ரவிஶ்ய ஹரிஶ்ரேஷ்ட புரீம் ராவணபாலிதாம்।
விதத்ஸ்வ ஸர்வகார்யாணி யானி யானீஹ வாஞ்சஸி॥ 49

---

ஓ ஹரீஶ்வரனே, ஸத்யமான வார்த்தையைச் சொல்லுகிறேன் கேள். ப்ரம்மதேவனால் தானாகவே எனக்கு இப்படிவரம் அளிக்கப்பட்டது. அதாவது எப்பொழுது ஓர் வானரம் பராக்ரமத்தால் உன்னை வஶப்படுத்துகிறதோ அப்பொழுது ராக்ஷஸர்களுக்கு பயம் வரப்போகிறதென்பதைத் தெரிந்துகொள். (45, 46)

ஓ அழகியவனே, உன்னைப் பார்த்தபிறகு அந்த ஸமயம் இப்பொழுது வந்துவிட்டது. ப்ரம்மாவினால் சொல்லப்பட்டது ஸத்யம்தான்; அதற்கு மாறுதல் கிடையாது. (47)

ஸீதையின் காரணமாக துஷ்ட ராஜாவான ராவணனுக்கும், எல்லா ராக்ஷஸர்களுக்கும் அழிவு வந்துவிட்டது. (48)

ஆகையால் ஓ ஹரிஶ்ரேஷ்டனே, ராவணனால் காக்கப்பட்ட பட்டணத்தில் சென்று எதை எதைச் செய்ய வேண்டுமென்று எண்ணுகிறாயோ அந்த எல்லாவற்றையும் செய்து முடித்துக் கொள். (49)

प्रविश्य शापोपहतां हरीश्वरः शुभां पुरीं राक्षसमुख्यपालिताम्।
यदृच्छया त्वं जनकात्मजां सतीं विमार्ग सर्वत्र गतो यथासुखम्॥ ५०

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
तृतीयः सर्गः ॥ ३ ॥

ப்ரவிஶ்ய ஶாபோபஹதாம் ஹரீஶ்வர:
ஶுபாம் புரீம் ராக்ஷஸமுக்யபாலிதாம் ।
யத்ருச்சயா த்வம் ஜனகாத்மஜாம் ஸதீம்
விமார்க்க ஸர்வத்ர கதோ யதாஸுகம் ॥ 50

இத்யார்ஷே ஶ்ரீமத்ராமாயணே வால்மீகிய ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே த்ருதீய: ஸர்க: ॥

---

ஹரீஶ்வரனே நீ ராக்ஷஸஶ்ரேஷ்டனால் காக்கப்பட்டதும், மங்களமானதும், ஶாபத்தால் கேடு அடைந்ததுமான பட்டணத்தை அடைந்து தன் இஷ்டப்படி ஸௌக்யமாய் ராவணனுடைய அந்த:புரம் முதலிய எல்லா இடங்களிலும் சென்று பதிவ்ரதையான ஜனகபுத்ரியை எங்கும் தேடு, என்றும் லங்காதிதேவதை சொன்னாள்.

(இங்கு உபயோகப்படுத்தப்பட்டுள்ள "ஸதீ" என்ற பதம் ஸீதை கற்புடனிருப்பதை எடுத்துக் காட்டுகிறது.) (50)

மூன்றாவது ஸர்கம் முற்றிற்று.

---

ஶ்ரீ:

चतुर्थः सर्गः — நான்காவது ஸர்கம் ॥ ४ ॥

## “लङ्कापुरी-परिभ्रमणम्” — லங்கையில் சுற்றுதல்.

स निर्जित्य पुरीं श्रेष्ठां लङ्कां तां कामरूपिणीम् ।
विक्रमेण महातेजा हनूमान्कपिसत्तमः ॥ १

अद्वारेण महाबाहुः प्राकारमभिपुप्लुवे ।
[निशि लङ्कां महासत्वो विवेश कपिकुञ्जरः ॥] २

प्रविश्य नगरीं लङ्कां कपिराजहितंकरः ।
चक्रेऽथ पादं सव्यं च शत्रूणां स तु मूर्धनि ॥ ३

ஸ நிர்ஜித்ய புரீம் ஶ்ரேஷ்டாம் லங்காம் தாம் காமரூபிணீம் ।
விக்ரமேண மஹாதேஜா: ஹனூமான் கபிஸத்தம: ॥ 1

அத்வாரேண மஹாபாஹு: ப்ராகாரமபிபுப்லுவே ।
[நிஶி லங்காம் மஹாஸத்வோ விவேஶ கபிகுஞ்ஜர:] 2

ப்ரவிஶ்ய நகரீம் லங்காம் கபிராஜஹிதம்கர: ।
சக்ரேऽத பாதம் ஸவ்யம் ச ஶத்ரூணாம் ஸ து மூர்தனி ॥ 3

---

மஹாதேஜஸ்வியும் கபிஶ்ரேஷ்டருமான அந்த ஹனுமார் காமரூபிணியும் மிகச்சிறந்தவளுமாகிய அந்த லங்காதேவதையை வென்று பெருத்த கைகளை உடையவராய்க் கொண்டு வழியில்லாத இடமாக மதில் சுவற்றைத் தாண்டினார்.

(இங்கு “அத்வாரேண அபிபுப்லுவே” என்றதால் லங்காதிதேவதைக்கு நேர்ந்த அபமானம், ராக்ஷஸர்களுக்குத் தெரிவதற்கில்லை எனப்புலப்படுகிறது.) (1, 2)

ஸுக்ரீவனுக்கு நன்மை செய்யும் அந்த ஹனுமார் லங்காநகரத்துள் இடதுகாலை முதலில் வைத்து ப்ரவேசித்தார். அது ஶத்ருவின் தலையில் கால் வைத்தது போலாம்.

प्रयाणकालेचगृहप्रवेशे विवाहकालेऽपि च दक्षिणाङ्घ्रिम् ।
कृत्वाग्रतः शत्रुपुरप्रवेशे वामं निदध्याच्चरणं नृपालः ॥

என்று வீட்டிற்குச்செல்லும்போதும் விவாஹகாலத்திலும் வலதுகாலை முதலில் வைக்கவேண்டும். ஶத்ருவின் ஊரில் இடதுகாலை முன்வைத்துப் ப்ரவேசிக்கவேண்டும் எனவும் ராஜநீதியை உபதேசித்திருக்கிறார். இதை ஒட்டியே இங்கு ஹனுமாரும் இடதுகாலை முதலில் வைத்ததாகக் கூறப்பட்டுள்ளது. (3)

प्रविष्टः सत्त्वसंपन्नो निशायां मारुतात्मजः।
स महापथमास्थाय मुक्तपुष्पविराजितम्॥ ४
[सेवितां राक्षसैर्भीमैर्बलिभिः शस्त्रपाणिभिः।]
ततस्तु तां पुरीं रम्यां लङ्कामभिययौ कपिः॥ ५

हसितोत्कृष्टनिनदैस्तूर्यघोषपुरस्सरैः।
वज्राङ्कुशनिकाशैश्च वज्रजालविभूषितैः॥ ६

गृहमेघैः पुरी रम्या बभासे द्यौरिवाम्बुदैः।
प्रजज्वाल तदा लङ्का रक्षोगणगृहैः शुभैः॥ ७

सिताभ्रसदृशैश्चित्रैः पद्मस्वस्तिकसंस्थितैः।
वर्धमानगृहैश्चापि सर्वतः सुविभूषिता॥ ८

ப்ரவிஷ்ட: ஸத்வஸம்பன்னோ நிஶாயாம் மாருதாத்மஜ: ।
ஸமாஹபதமாஸ்தாய முக்தபுஷ்பவிராஜிதம் ॥ 4
[ஸேவிதாம் ராக்ஷஸைர்பீமைர்பலிபி: ஶஸ்த்ரபாணிபி: ।]
ததஸ்து தாம் புரீம் ரம்யாம் லங்காமபியயௌ கபி: ॥ 5

ஹஸிதோத்க்ருஷ்டநினதைஸ்தூர்யகோஷபுரஸ்ஸரை: ।
வஜ்ராங்குஶநிகாஶைஶ்ச வஜ்ரஜாலவிபூஷிதை: ॥ 6

க்ருஹமேகை: புரீ ரம்யா பபாஸே த்யௌரிவாம்புதை: ।
ப்ரஜஜ்வால ததா லங்கா ரக்ஷோகணக்ருஹை: ஶுபை: ॥ 7

ஸிதாப்ரஸத்ருஶைஶ்சித்ரை: பத்மஸ்வஸ்திகஸம்ஸ்திதை: ।
வர்தமானக்ருஹைஶ்சாபி ஸர்வத: ஸுவிபூஷிதா ॥ 8

---

நல்ல பலமுள்ள வாயுபுத்ரரான அந்த ஹனுமார் இரவில் உதிர்ந்த புஷ்பங்களால் ப்ரகாசிக்கின்ற ராஜமார்க்கத்தின் வழியாகச் சென்றார். (4)

பிறகு ஹனுமார் அந்த அழகிய லங்காபட்டணத்தைக் குறித்துச் சென்றார். (5)

தூர்யவாத்யத்தின் ஶப்தத்துடன் கூடிய சிரிக்கின்றவர்களுடைய அட்டஹாஸங்களாலும், வஜ்ராயுதம், அங்குஶம் என்ற ஆயுதம் இவற்றிற் கொப்பானவைகளும் வஜ்ரமணிகளின் கூட்டங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான உத்தமக்ருஹங்களாலும், அந்த நகரமானது, மேகங்களால் ஆகாஶம்போல ப்ரகாஶித்தது. அப்பொழுது மங்களமான ராக்ஷஸக்கூட்டங்களின் வீடுகளால் அந்த லங்காபட்டணம் ஜ்வலித்தது.

சிரிக்கின்றவர்களின் அட்டஹாஸம் தூர்யவாத்யத்தின் ஶப்தம் இவை நிறைந்திருப்பதாகக் கூறியதால் லங்கையில் துக்கமே இல்லை எனத்தெரிகிறது. (6, 7)

வெண்மையான மேகங்களுக்கு ஒப்பானவைகளும் பல

तां चित्रमाल्याभरणां कपिराजहितंकरः।
राघवार्थं चरञ्श्रीमान्ददर्श च ननन्द च ॥ ९

भवनाद्भवनं गच्छन्ददर्श पवनात्मजः।
विविधाकृतिरूपाणि भवनानि ततस्ततः ॥ १०

शुश्राव मधुरं गीतं त्रिस्थानस्वरभूषितम्।
स्त्रीणां मदसमृद्धानां दिवि चाप्सरसामिव ॥ ११

தாம் சித்ரமால்யாபரணாம் கபிராஜஹிதம்கர: ।
ராகவார்த்தம் சரன்ஸ்ரீமான்ததர்ஶ ச நநந்த ச ॥ 9

பவனாத்பவனம் கச்சன்ததர்ஶ பவனாத்மஜ: ।
விவிதாக்ருதிரூபாணி பவனானிததஸ்தத: ॥ 10

ஶுஶ்ராவ மதுரம் கீதம் த்ரிஸ்தானஸ்வரபூஷிதம் ।
ஸ்த்ரீணாம் மதஸம்ருத்தானாம் திவி சாப்ஸரஸாமிவ ॥ 11

---

வர்ணமுள்ளவைகளும், தாமரைபோல் வட்டமான உருவத்தில் அமைக்கப்பட்டதும் கிழக்கு வாசல் இல்லாததும் புத்ரன், தனம் இவைகளைக் கொடுக்கக்கூடியதுமான ஸ்வஸ்திகம் என்ற அமைப்புடன் கூடியதுகளும், தெற்கு வாசற்படி இல்லாததும் ஐஸ்வர்யத்தைக் கொடுக்கக்கூடியதுமான வர்தமானம் என்ற அமைப்புடன் கூடியதுகளுமான வீடுகளால் நான்கு பக்கத்திலும் நன்கு அலங்கரிக்கப்பட்டதாகவும் அந்த லங்கா நகரம் விளங்கியது. (8)

வானரராஜனை ஸுக்ரீவனுக்கு பெருமையைக்கொடுக்க வேண்டி ஸ்ரீராம கார்யத்திற்காக ஸஞ்சரிக்கும் ஸ்ரீமானை ஹனுமார் பலவகை சித்ரங்களோடும் ஆபரணங்களோடும் கூடியதான அந்த லங்கையைப் பார்த்து ஸந்தோஷப்பட்டார்.

(இங்கு ஸந்தோஷப்பட்டார் என்பதால் தங்கு தடையின்றி லங்கா நகரத்தில் ஸஞ்சரித்து எல்லா க்ருஹங்களையும் பார்ப்பதால் ஸ்ரீராம ஸுக்ரீவர்களின் மனோபீஷ்டம் தடையின்றி நடக்கப் போகிறதென்பது புலப்படுகிறது.) (9)

வாயுபுத்ரன் வீட்டுக்கு வீடு தாவிச்சென்றுகொண்டு ஆங்காங்கு பல உருவங்களுடன் கூடிய வீடுகளைக்கண்டார். (10)

தேவலோகத்தில் அப்ஸரஸுகளுடையது போன்ற மதம் நிறைந்த லங்கையிலுள்ள ஸ்த்ரீகளின் மார்பு கண்டம் சிரஸ் என்ற மூன்று ஸ்தானங்களிலுண்டான மந்த்ர மத்ய தாரமென்கிற ஸ்வரங்களால் அழகியதும் மதுரமுமான கானத்தைக்கேட்டார். (11)

चतुर्विषाणैर्द्विरदैस्त्रिविषाणैस्तथैव च ।
परिक्षिप्तमसंबाधं रक्ष्यमाणमुदायुधैः ॥ ५

राक्षसीभिश्च पत्नीभी रावणस्य निवेशनम् ।
आहृताभिश्च विक्रम्य राजकन्याभिरावृतम् ॥ ६

तन्नक्रमकराकीर्णं तिमिंगिलझषाकुलम् ।
वायुवेगसमाधूतं पन्नगैरिव सागरम् ॥ ७

या हि वैश्रवणे लक्ष्मीर्या चेन्द्रे हरिवाहने ।
सा रावणगृहे सर्वा नित्यमेवानपायिनी ॥ ८

या च राज्ञः कुबेरस्य यमस्य वरुणस्य च ।
तादृशी तद्विशिष्टा वा ऋद्धी रक्षोगृहेष्विह ॥ ९

சதுர்விஷாணைர்த்விரதைஸ்த்ரிவிஷாணைஸ்ததைவ ச ।
பரிக்ஷிப்தமஸம்பாதம் ரக்ஷ்யமாணமுதாயுதை: ॥ 5

ராக்ஷஸீபிஸ்ச பத்னீபீ ராவணஸ்ய நிவேஶனம் ।
ஆஹ்ருதாபிஸ்ச விக்ரம்ய ராஜகன்யாபிராவ்ருதம் ॥ 6

தன்னக்ரமகராகீர்ணம் திமிங்கிலஜஷாகுலம் ।
வாயுவேகஸமாதூதம் பன்னகைரிவ ஸாகரம் ॥ 7

யா ஹி வைஶ்ரவணே லக்ஷ்மீர்யா சேந்த்ரே ஹரிவாஹனே ।
ஸா ராவணக்ருஹே ஸர்வா நித்யமேவானபாயினீ ॥ 8

யா ச ராக்ஞ: குபேரஸ்ய யமஸ்ய வருணஸ்ய ச ।
தாத்ருஶீ தத்விஶிஷ்டா வா ருத்தீ ரக்ஷோக்ருஹேஷ்விஹ ॥ 9

---

நான்கு தந்தமுள்ள யானைகளாலும் அப்படியே மூன்று தந்தங்களுள்ள யானைகளாலும் ஒன்றோடொன்று சேராமல் நான்கு பக்கத்திலும் சூழப்பட்டதும், ஆயுதம் தாங்கியவர்களால் காக்கப்படுகிறதும், ராவணனுடைய பத்னிகளாகிற ராக்ஷஸிகளாலும் பலாத்காரம்செய்து கொண்டுவரப்பட்ட ராஜகன்னிகைகளாலும் சூழப்பட்டதும், முதலை, பெரியமீன் இவற்றால் சூழப்பட்டதும் திமிங்கலம் சுறாமீன் இவற்றால் வ்யாபிக்கப்பட்டதும் காற்றின் வேகத்தால் எழுப்பப்பட்ட அலைகளை உடையதும், ஸர்ப்பங்களால் ப்ரகாசிக்கின்ற ஸமுத்ரம் போன்றதுமான அவ்வீட்டைக் கண்டார். (5—7)

குபேரனிடத்திலும் ஐராவதத்தை வாஹனமாகக் கொண்ட இந்திரனிடத்திலும் எந்த செல்வமிருக்கிறதோ அது எல்லாம் ராவணனுடைய க்ருஹத்தில் எப்பொழுதும் அழிவற்றிருந்தது (8)

இங்கு எல்லா ராக்ஷஸர்களுடைய வீடுகளிலும் ராஜாவான குபேரன் யமன் வருணன் இவர்களுடைய ஸம்ருத்தி போன்றதும் அதற்கு மேம்பட்டதுமான ஸம்ருத்தி காணப்பட்டது. (9)

तस्य हर्म्यस्य मध्यस्थं वेश्म चान्यत्सुनिर्मितम्।
बहुनिर्यूहसंकीर्णं ददर्श पवनात्मजः॥ १०

ब्रह्मणोऽर्थे कृतं दिव्यं दिवि यद्विश्वकर्मणा।
विमानं पुष्पकं नाम सर्वरत्नविभूषितम्॥ ११

परेण तपसा लेभे यत्कुबेरः पितामहात्।
कुबेरमोजसा जित्वा लेभे तद्राक्षसेश्वरः॥ १२

ईहामृगसमायुक्तैः कार्तस्वरहिरण्मयैः।
सुकृतैराचितं स्तम्भैः प्रदीप्तमिव च श्रिया॥ १३

தஸ்ய ஹர்ம்யஸ்ய மத்யஸ்தம் வேஶ்ம சான்யத்ஸுநிர்மிதம் ।
பஹுநிர்யூஹஸம்கீர்ணம் ததர்ஶ பவனாத்மஜ: ॥ 10

ப்ரம்ஹணோ(அ)ர்த்தே க்ருதம் திவ்யம் திவி யத்விஶ்வகர்மணா ।
விமானம் புஷ்பகம் நாம ஸர்வரத்னவிபூஷிதம் ॥ 11

பரேண தபஸா லேபே யத்குபேர: பிதாமஹாத் ।
குபேரமோஜஸா ஜித்வா லேபே தத்ராக்ஷஸேஶ்வர: ॥ 12

ஈஹாம்ருகஸமாயுக்தை: கார்த்தஸ்வரஹிரண்மயை: ।
ஸுக்ருதைராசிதம் ஸ்தம்பை: ப்ரதீப்தமிவ ச ஶ்ரியா ॥ 13

---

வாயுபுத்ரரான ஹனுமார் அந்த புஷ்பகத்தின் உப்ரிகைக்கு நடுவிலிருப்பதும், அழகாகச் செய்யப்பட்டதும், மதம் பிடித்த பல யானைகளால் சூழப்பட்டதுமான வேறொரு வீட்டையும் கண்டார். (10)

எந்த விமானம் புஷ்பகமென்று ப்ரஸித்திபெற்றதோ ஸர்வ ரத்னங்களாலும் அலங்கரிக்கப்பட்டதோ ப்ரம்ஹதேவனுக்காக தேவலோகத்தில் விஶ்வகர்மாவினால் செய்யப்பட்டதோ, எந்த விமானத்தை ப்ரம்ஹதேவனிடமிருந்து குபேரன் தபஸினால் அடைந்தானோ அதை குபேரனிடமிருந்து ராக்ஷஸர்களுக்கு ஈஶ்வரனான ராவணன் பராக்ரமத்தால் பெற்றுக் கொண்டான். (11, 12)

அந்த விமானம் செந்நாய்களின் பிம்பங்களை உடையதுகளும், தங்கம் பொன்மயமானதுகளும், நன்கு செய்யப்பட்டவைகளுமான தூண்களாலும், காந்தியாலும் ப்ரகாசிப்பதுபோல் கட்டப்பட்டிருந்தது. (13)

मेरुमन्दरसंकाशैरुल्लिखद्भिरिवाम्बरम्।
कूटागारैः शुभाकारैः सर्वतः समलङ्कृतम्॥ १४

ज्वलनार्कप्रतीकाशं सुकृतं विश्वकर्मणा।
हेमसोपानसंयुक्तं चारुप्रवरवेदिकम्॥ १५

जालवातायनैर्युक्तं काञ्चनैः स्फाटिकैरपि।
इन्द्रनीलमहानीलमणिप्रवरवेदिकम्॥ १६

विद्रुमेण विचित्रेण मणिभिश्च महाधनैः।
निस्तुलाभिश्च मुक्ताभिस्तलेनाभिविराजितम्॥ १७

चन्दनेन च रक्तेन तपनीयनिभेन च।
सुपुण्यगन्धिना युक्तमादित्यतरुणोपमम्॥ १८

மேருமந்தரஸம்காஶைருல்லிகத்பிரிவாம்பரம் ।
கூடாகாரை: ஶுபாகாரை: ஸர்வத: ஸமலங்க்ருதம் ॥ 14

ஜ்வலனார்க்கப்ரதீகாஶம் ஸுக்ருதம் விஶ்வகர்மணா ।
ஹேமஸோபானஸம்யுக்தம் சாருப்ரவரவேதிகம் ॥ 15

ஜாலவாதாயனைர்யுக்தம் காஞ்சனை: ஸ்பாடிகைரபி ।
இந்த்ரநீலமஹாநீலமணிப்ரவரவேதிகம் ॥ 16

வித்ருமேண விசித்ரேண மணிபிஶ்சமஹாதனை: ।
நிஸ்துலாபிஶ்ச முக்தாபி: தலேனாபிவிராஜிதம் ॥ 17

சந்தனேன ச ரக்தேன தபனீயநிபேன ச ।
ஸுபுண்யகந்தினா யுக்தமாதித்யதருணோபமம் ॥ 18

---

மேலும் அது மேரு மந்தரம் போன்ற மலைகளுக்கொப்பானதுகளும் ஆகாசத்தை அளாவி நிற்பது போன்றவைகளும் மங்களமான ரூபத்தோடு கூடியதுகளுமான சிகரங்களால் நான்கு பக்கங்களிலும் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. (14)

மேலும் அவ்விமானம் அக்னி, ஸூர்யன் இவர்களுக்கொப்பான காந்தியை உடையதும் விஶ்வகர்மாவினால் நன்கு செய்யப்பட்டதும் தங்கமயமான படிகட்டுகளுடன் கூடியதும் அழகியதும் சிறந்ததுமான மேடைகளை உடையதுமாக இருந்தது. (15)

தங்கமயமானவைகளும் ஸ்படிகக்கல்வைத்து புதைக்கப்பட்டவைகளுமான சுவற்றிற்கு மேல் பாகத்தில் அலங்காரத்துக்காக அமைக்கப்பட்ட சிறு ஜன்னல்களோடும் கீழ்பாகத்தில் காற்றிற்காக அமைக்கப்பட்ட பெரிய ஜன்னல்களோடும் கூடியதும், சிறிதும் பெரிதுமான சிறந்த இந்த்ர நீலக்கற்களால் செய்யப்பட்ட மேடைகளை உடையதும் பலவிதமான பவழத்தாலும் விலையுயர்ந்த மணிகளாலும் ஒப்பற்ற முத்துக்களாலும் செய்யப்பட்ட

कूटागारैर्वराकारैर्विविधैः समलङ्कृतम् ।
विमानं पुष्पकं दिव्यमारुरोह महाकपिः ॥ १९

तत्रस्थः स तदा गन्धं पानभक्ष्यान्नसंभवम् ।
दिव्यं संमूर्च्छितं जिघ्रद्रूपवन्तमिवानिलम् ॥ २०

स गन्धस्तं महासत्त्वं बन्धुर्बन्धुमिवोत्तमम् ।
इत एहीत्युवाचेव तत्र यत्र स रावणः ॥ २१

ततस्तां प्रस्थितः शालां ददर्श महतीं शुभाम् ।
रावणस्य मनःकान्तां कान्तामिव वरस्त्रियम् ॥ २२

मणिसोपानविकृतां हेमजालविभूषिताम् ।
स्फाटिकैरावृततलां दन्तान्तरितरूपिकाम् ॥ २३

கூடாகாரைர்வராகாரைர்விவிதை: ஸமலங்க்ருதம் ।
விமானம் புஷ்பகம் திவ்யமாருரோஹ மஹாகபி: ॥ 19

தத்ரஸ்த: ஸ ததா கந்தம் பானபக்ஷ்யான்னஸம்பவம் ।
திவ்யம் ஸம்மூர்ச்சிதம் ஜிக்ரத்ரூபவந்தமிவாநிலம் ॥ 20

ஸ கந்தஸ்தம் மஹாஸத்வம் பந்துர்பந்துமிவோத்தமம் ।
இத ஏஹீத்யுவாசேவ தத்ர யத்ர ஸ ராவண: ॥ 21

ததஸ்தாம் ப்ரஸ்தித: ஶாலாம் ததர்ஶ மஹதீம் ஶுபாம் ।
ராவணஸ்ய மன: காந்தாம் காந்தாமிவ வரஸ்த்ரியம் ॥ 22

மணிஸோபானவிக்ருதாம் ஹேமஜாலவிபூஷிதாம் ।
ஸ்பாடிகைராவ்ருததலாம் தந்தாந்தரிதரூபிகாம் ॥ 23

---

தளவரிசையால் ப்ரகாசிக்கிறதும், உருக்கிய தங்கத்துக்கு ஒப்பானதும், சிவந்ததும், சிறந்த வாஸனையோடு கூடியதுமான சந்தனத்துடன் கூடியதும், பாலஸூரியனுக்கு ஒப்பானதும், மிகச் சிறந்த உருவத்துடன் கூடிய மேல் மாடிகளால் நன்கு அலங்கரிக்கப்பட்டதும், தேவலோகத்தில் செய்ததுமான புஷ்பகமெனும் விமானத்தை மஹாகபியான ஹனுமார் ஏறினர். (16—19)

அந்த ஹனுமார் அப்பொழுது அவ்விமானத்திலிருப்பவராய், பானம் பக்ஷணம் அன்னம் இவற்றினின்று உண்டானதும், உருவ மெடுத்துவந்த காற்றைப்போல் எங்கும் வ்யாபித்ததுமான நல்ல வாஸனையை முகர்ந்தார். (20)

அந்த வாஸனையானது மஹாபலம் பொருந்திய அந்த ஹனுமாரை, ராவணன் எங்கு இருக்கிறுனே அங்கு, இங்குவா என்று பந்துவானவன் உத்தமமான பந்துவை அழைப்பது போல் கூறியதுபோலிருந்தது. (21)

பிறகு ஹனுமார் அங்கிருந்து புறப்பட்டவராய்க்கொண்டு பெரியதும் அழகியதும் ராவணனுடைய மனதுக்குப்பிடித்ததும்,

मुक्ताभिश्च प्रवालैश्च रूप्यचामीकरैरपि ।
विभूषितां मणिस्तम्भैः सुबहुस्तम्भभूषिताम् ॥ २४

समैर्ऋजुभिरत्युच्चैः समन्तात्सुविभूषितैः ।
स्तम्भैः पक्षैरिवात्युच्चैर्दिवं संप्रस्थितामिव ॥ २५

महत्या कुथयाऽऽस्तीर्णां पृथिवीलक्षणाङ्कया ।
पृथिवीमिव विस्तीर्णां सराष्ट्रगृहमालिनीम् ॥ २६

नादितां मत्तविहगैर्दिव्यगन्धाधिवासिताम् ।
परार्ध्यास्तरणोपेतां रक्षोधिपनिषेविताम् ॥ २७

धूम्रामगरुधूपेन विमलां हंसपाण्डुराम् ।
चित्रां पुष्पोपहारेण कल्माषीमिव सुप्रभाम् ॥ २८

முக்தாபிஸ்ச ப்ரவாலைஸ்ச ரூப்யசாமீகரைரபி ।
விபூஷிதாம் மணிஸ்தம்பை: ஸுபஹுஸ்தம்பபூஷிதாம் ॥ 24

ஸமைர்ருஜுபிரத்யுச்சை: ஸமந்தாத்ஸுவிபூஷிதை: ।
ஸ்தம்பை: பக்ஷைரிவாத்யுச்சைர்திவம் ஸம்ப்ரஸ்திதாமிவ ॥ 25

மஹத்யா குதயாऽऽஸ்தீர்ணாம் ப்ருதிவீலக்ஷணங்கயா ।
ப்ருதிவீமிவ விஸ்தீர்ணாம் ஸராஷ்ட்ரக்ருஹமாலினீம் ॥ 26

நாதிதாம் மத்தவிஹகைர்திவ்யகந்தாதிவாஸிதாம் ।
பரார்த்யாஸ்தரணோபேதாம் ரக்ஷோதிபநிஷேவிதாம் ॥ 27

தூம்ராமகருதூபேன விமலாம் ஹம்ஸபாண்டுராம் ।
சித்ராம் புஷ்போபஹாரேண கல்மாஷீமிவ ஸுப்ரபாம் ॥ 28

---

உத்தமஸ்த்ரீபோல் அழகு வாய்ந்ததும், ரத்னங்களால் செய்யப்பட்ட படிக்கட்டுகளோடு கூடியதும், தங்க ஜன்னல்களால் அலங்கரிக்கப்பட்டதும், ஸ்படிகங்களிழைத்து தளவரிசை செய்யப்பட்டதும், நடுவில் தந்தம் வைத்து புதைக்கப்பட்ட உருவத்தை உடையதும், முத்துக்களாலும் பவழங்களாலும் வெள்ளி, தங்கம் இவைகளாலும் ரத்ன மயமான தூண்களாலும் அலங்கரிக்கப்பட்டதும், மற்றும் பல தூண்களாலும் அலங்கரிக்கப்பட்டதும், ஸமமானவைகளும் நேரானவைகளும் மிக உயரமுள்ளவைகளும் சுற்றிலும் நன்கு அலங்கரிக்கப்பட்டதுகளும் இறக்கைகள் போன்றதுகளுமான தூண்களால் ஸ்வர்கத்துக்குப் புறப்பட்டது போலிருப்பதும், மலை, கடல், ஆறு, காடு போன்ற சித்ரங்கள் வரையப்பட்ட பெரிய கம்பளத்தினல் விரிக்கப்பட்டிருப்பதும், நகரங்கள் வீடுகள் இவைகளுடன் கூடிய விஸ்தாரமான பூமி

मनःसंह्लादजननीं वर्णस्यापि प्रसादिनीम्।
तां शोकनाशिनीं दिव्यां श्रियः संजननीमिव॥ २९

इन्द्रियाणीन्द्रियार्थैस्तु पञ्च पञ्चभिरुत्तमैः।
तर्पयामास मातेव तदा रावणपालिता॥ ३०

स्वर्गोऽयं देवलोकोऽयमिन्द्रस्येयं पुरी भवेत्।
सिद्धिर्वेयं परा हि स्यादित्यमन्यत मारुतिः॥ ३१

மன:ஸம்ஹ்லாதஜனனீம் வர்ணஸ்யாபி ப்ரஸாதினீம் ।
தாம் ஶோகநாஶினீம் திவ்யாம் ஶ்ரிய: ஸம்ஜனனீமிவ ॥ 29

இந்த்ரியாணீந்த்ரியார்த்தைஸ்து பஞ்ச பஞ்சபிருத்தமை: ।
தர்ப்பயாமாஸ மாதேவ ததா ராவணபாலிதா ॥ 30

ஸ்வர்கோऽயம் தேவலோகோऽயமிந்த்ரஸ்யேயம் புரீ பவேத் ।
ஸித்திர்வேயம் பரா ஹி ஸ்யாதித்யமன்யத மாருதி: ॥ 31

---

போன்றதும், மதம் பிடித்த பக்ஷிகளால் ஶப்திக்கப்பட்டதும், திவ்யகந்தங்களால் வாஸனையுடன் கூடியதும், விலையுயர்ந்த விரிப்புக்களுடன் கூடியதும், ராக்ஷஸேஶ்வரனால் வஸிக்கப்பட்டதும், அகிலின் புகையால் மங்கிய புகை நிறமுள்ளதாயும், நிர்மலமாயும், ஹம்ஸம் போல் வெண்ணிறமுள்ளதாயும், அர்ச்சிக்கப்பட்ட புஷ்பங்களால் விசித்ரமாயும், நல்ல காந்தியுடன் கூடிய வஸிஷ்டரின் பசு போன்றதும், மனதிற்கு ஆனந்தத்தைக் கொடுக்கிறதும், தேககாந்தியைக் கொடுக்கக்கூடியதும், ஶோகத்தைப் போக்குகிறதும், தேவலோகத்திலுண்டானதும், சோபையை நன்கு கொடுக்கக்கூடியது போல் இருக்கக்கூடியதுமான அந்த மண்டபத்தைக் கண்டார். (22—29)

அப்பொழுது சிறந்தவைகளும் ஐந்து வகைப்பட்டவைகளுமான இந்த்ரியங்களின் விஷயங்களான ரூபம், ரஸம், கந்தம், ஸ்பர்ஶம், ஶப்தம் இவைகளால் ஐந்து இந்த்ரியங்களையும் ராவணனால் காக்கப்பட்ட அந்த மண்டபம் தாய்போல் திருப்திசெய்வித்தது. (30)

இது போகபூமியாக இருக்கவேண்டும், அல்லது தேவர்களின் இருப்பிடமாக இருக்கவேண்டும், அல்லது இந்த்ரனுடைய பட்டணமான அமராவதியாக இருக்கவேண்டும், அல்லது உயர்ந்த ஸித்திகளைப் பெற்ற ப்ரம்ஹாவின் லோகமாயிருக்கவேண்டும் என வாயுபுத்ரரான ஹனுமார் நினைத்தார். (31)

प्रध्यायत इवापश्यत्प्रदीपांस्तत्र काञ्चनान् ।
धूर्तानिव महाधूर्तैर्देवनेन पराजितान् ॥ ३२

दीपानां च प्रकाशेन तेजसा रावणस्य च ।
अर्चिर्भिर्भूषणानां च प्रदीप्तेत्यभ्यमन्यत ॥ ३३

ततोऽपश्यत्कुथासीनं नानावर्णाम्बरस्रजम् ।
सहस्रं वरनारीणां नानावेषविभूषितम् ॥ ३४

परिवृत्तेऽर्धरात्रे तु पाननिद्रावशं गतम् ।
क्रीडित्वोपरतं रात्रौ सुष्वाप बलवत्तदा ॥ ३५

ப்ரத்யாயத இவாபஶ்யத்ப்ரதீபாம்ஸ்தத்ர காஞ்சனான் ।
தூர்த்தானிவ மஹாதூர்த்தைர்தேவனேன பராஜிதான் ॥ 32

தீபானாம் ச ப்ரகாஶேன தேஜஸா ராவணஸ்ய ச ।
அர்சிர்பிர்பூஷணானாம் ச ப்ரதீப்தேத்யப்யமன்யத ॥ 33

ததோऽபஶ்யத்குதாஸீனம் நானாவர்ணாம்பரஸ்ரஜம் ।
ஸஹஸ்ரம் வரநாரீணாம் நானாவேஷவிபூஷிதம் ॥ 34

பரிவ்ருத்தேऽர்தராத்ரேது பானநித்ராவஶம் கதம் ।
க்ரீடித்வோபரதம் ராத்ரௌ ஸுஷ்வாப பலவத்ததா ॥ 35

---

மேலும் அவர் அங்கு மஹாதூர்த்தர்களால் சூதாட்டத்தில் தோற்கடிக்கப்பட்ட சூதாட்டக்காரர் ஆழ்ந்து யோசனை செய்வது போலிருக்கக் கூடிய பெரிய தீபங்களைக் கண்டார்.

(அதாவது அங்கிருக்கும் அசையாத ஜ்வாலைகளுடன் கூடிய விளக்குகளைப் பார்த்தால் சூதாட்டத்தில் தோற்றவர்கள் அசையாது உட்கார்ந்து கொண்டு கவலைப்படுவதுபோல் இருந்ததென்பது கருத்தாம்.) (32)

தீபங்களின் ப்ரகாஶத்தாலும், ராவணனின் காந்தியாலும், ஆபரணங்களின் ஒளியினாலும் அந்த மண்டபத்தை தீப்பிடித்துக் கொண்டதாகவே எண்ணினார். (33)

பிறகு பல வேஷங்களால் அலங்கரிக்கப்பட்டவர்களும், பல வகைப்பட்ட நிறமுள்ள புடவைகளையும் பூமாலைகளையும் தரித்தவர்களும், ரத்ன கம்பளங்களில் உட்கார்ந்து இருப்பவர்களுமான ஆயிரக்கணக்கான ஸ்த்ரீகளைக் கண்டார். (34)

ராத்ரியில் விளையாடி நடுராத்ரி வந்ததும் ஓய்வை அடைந்ததும், குடி, தூக்கம் இவற்றிற்கு வசப்பட்டதுமான ஆயிரக்கணக்கான அப்பெண்களின் கூட்டமானது அப்பொழுது நன்கு தூங்கிற்று. (35)

तत्प्रसुप्तं विरुरुचे निःशब्दान्तरभूषणम् ।
निःशब्दहंसभ्रमरं यथा पद्मवनं महत् ॥ ३६

तासां संवृतदन्तानि मीलिताक्षाणि मारुतिः ।
अपश्यत्पद्मगन्धीनि वदनानि सुयोषिताम् ॥ ३७

प्रबुद्धानीव पद्मानि तासां भूत्वा क्षपाक्षये ।
पुनः संवृतपत्राणि रात्राविव बभुस्तदा ॥ ३८

इमानि मुखपद्मानि नियतं मत्तषट्पदाः ।
अम्बुजानीव फुल्लानि प्रार्थयन्ति पुनः पुनः ॥ ३९

इति चामन्यत श्रीमानुपपत्त्या महाकपिः ।
मेने हि गुणतस्तानि समानि सलिलोद्भवैः ॥ ४०

தத்ப்ரஸுப்தம் விருருசே நி:ஶப்தாந்தரபூஷணம் ।
நி:ஶப்தஹம்ஸப்ரமரம் யதா பத்மவனம் மஹத் ॥ 36

தாஸாம் ஸம்வ்ருததந்தானி மீலிதாக்ஷாணி மாருதி: ।
அபஶ்யத்பத்மகந்தீனி வதனானி ஸுயோஷிதாம் ॥ 37

ப்ரபுத்தானீவ பத்மானி தாஸாம் பூத்வா க்ஷபாக்ஷயே ।
புன: ஸம்வ்ருதபத்ராணி ராத்ராவிவ பபுஸ்ததா ॥ 38

இமானி முகபத்மானி நியதம் மத்தஷட்பதா: ।
அம்புஜானீவ புல்லானி ப்ரார்த்தயந்தி புன: புன: ॥ 39

இதி சாமன்யத ஸ்ரீமானுபபத்யா மஹாகபி: ।
மேனே ஹி குணதஸ்தானி ஸமானி ஸலிலோத்பவை: ॥ 40

நன்கு தூங்குகின்ற அப்பெண்களின் கூட்டமானது ஹம்ஸம் வண்டு இவைகளின் ஶப்தமற்ற பெரிய தாமரை ஓடைபோல் ஆபரணங்களின் பலவகைப்பட்ட ஶப்தமற்றதாய் ப்ரகாசித்தது. (36)

மறைக்கப்பட்ட பற்களை உடையதுகளும், மூடப்பட்ட கண்களை உடையதுகளும், தாமரையின் வாஸனையை உடையதுகளுமான அந்த அழகிய ஸ்த்ரீகளின் முகங்களை வாயுபுத்ரரான ஹனுமார் பார்த்தார். (37)

அப்பொழுது அந்த முகங்கள் காலையில் மலர்ந்து மறுபடி இரவில் மூடிக்கொண்ட இதழ்களை உடைய தாமரைகள் போல் ப்ரகாஶித்தன. (38)

இந்த தாமரை போன்ற முகங்களை மதம் பிடித்த வண்டுகள் நிஶ்சயமாய் மலர்ந்த தாமரைகளென்றே அடிக்கடி ப்ரார்த்திக்கின்றன என்று ஸ்ரீமானும் மஹாகபியுமான ஹனுமார் யுக்தியால் நினைத்தார். மேலும் அம்முகங்களை குளிர்ச்சி, வாஸனை முதலிய குணங்களால் தாமரைகளுக்கு ஸமமாகவே நினைத்தார். (39, 40)

सा तस्य शुशुभे शाला ताभिः स्त्रीभिर्विराजिता ।
शारदीव प्रसन्ना द्यौस्ताराभिरभिशोभिता ॥ ४१

स च ताभिः परिवृतः शुशुभे राक्षसाधिपः ।
यथा ह्युडुपतिः श्रीमांस्ताराभिरभिसंवृतः ॥ ४२

याश्च्यवन्तेऽम्बरात्ताराः पुण्यशेषसमावृताः ।
इमास्ताः सङ्गताः कृत्स्ना इति मेने हरिस्तदा ॥ ४३

ताराणामिव सुव्यक्तं महतीनां शुभार्चिषाम् ।
प्रभावर्णप्रसादाश्च विरेजुस्तत्र योषिताम् ॥ ४४

व्यावृत्तगुरुपीनस्त्रक्प्रकीर्णवरभूषणाः ।
पानव्यायामकालेषु निद्रापहृतचेतसः ॥ ४५

ஸா தஸ்ய ஶுஶுபே ஶாலா தாபி: ஸ்த்ரீபிர்விராஜிதா ।
ஶாரதீவப்ரஸன்னா த்யௌஸ்தாராபிரபிஶோபிதா ॥ 41

ஸ ச தாபி: பரிவ்ருத: ஶுஶுபே ராக்ஷஸாதிப: ।
யதா ஹ்யுடுபதி: ஶ்ரீமான்ஸ்தாராபிரபிஸம்வ்ருத: ॥ 42

யாஶ்ச்யவந்தேऽம்பராத்தாரா: புண்யஶேஷஸமாவ்ருதா: ।
இமாஸ்தா: ஸங்கதா: க்ருத்ஸ்னா இதி மேனே ஹரிஸ்தா ॥ 43

தாராணாமிவ ஸுவ்யக்தம் மஹதீனாம் ஶுபார்சிஷாம் ।
ப்ரபாவர்ணப்ரஸாதாஶ்ச விரேஜுஸ்தத்ரயோஷிதாம் ॥ 44

வ்யாவ்ருத்தகுருபீனஸ்ரக்ப்ரகீர்ணவரபூஷணா: ।
பானவ்யாயாமகாலேஷு நித்ராபஹ்ருதசேதஸ: ॥ 45

---

அந்த மண்டபமானது அந்த ராவணனுடைய ஸ்த்ரீகளால் ப்ரகாஶிக்கச் செய்யப்பட்டு ஶரத்காலத்து தெளிந்த ஆகாஶமானது நக்ஷத்ரகணங்களால் ப்ரகாஶிப்பது போல் ப்ரகாஶித்தது. (41)

அந்த ஸ்த்ரீகளால் சூழப்பட்ட அந்த ராக்ஷஸாதிபன் நக்ஷத்ரங்களால் சூழப்பட்டவனும் ஶ்ரீமானுமான சந்த்ரன் போல் ப்ரகாஶித்தான். (42)

ஆகாசத்திலிருந்து மீதமுள்ள ஸ்வல்பபுண்யத்துடன் கூடிய யாதொரு நக்ஷத்ரங்கள் உதிர்ந்தனவோ அவையாவும் இம்மாதிரி அப்பொழுது ஒன்று சேர்ந்து ப்ரகாஶித்ததென்று ஹனுமார் நினைத்தார். (43)

பெரிதும், அழகிய சோபை உள்ளதுமான நக்ஷத்ரங்களுடையதுபோல அந்த ஸ்த்ரீகளின் தேககாந்தி ரூபம் மலர்ச்சி இவைகள் ப்ரகாஶித்தன. (44)

குடித்த பிறகு கானம், ந்ருத்யம், ஸம்போகம் முதலிய விளையாட்டு ஸமயத்தில் புரண்டதுகளான பெரிதும் நீளமுமுள்ள

व्यावृत्ततिलकाः काश्चित्काश्चिदुद्भ्रान्तनूपुराः ।
पार्श्वे गलितहाराश्च काश्चित्परमयोषितः ॥ ४६

मुक्ताहारावृताश्चान्याः काश्चिद्विस्रस्तवाससः ।
व्याविद्धरशनादामाः किशोर्य इव वाहिताः ॥ ४७

सुकुण्डलधराश्चान्या विच्छिन्नमृदितस्रजः ।
गजेन्द्रमृदिताः फुल्ला लता इव महावने ॥ ४८

चन्द्रांशुकिरणाभाश्च हाराः कासांचिदुत्कटाः ।
हंसा इव बभुः सुप्ताः स्तनमध्येषु योषिताम् ॥ ४९

வ்யாவ்ருத்ததிலகா: காஸ்சித்காஸ்சிதுத்ப்ராந்தநூபுரா: ।
பார்ஸ்வே கலிதஹாராஸ்ச காஸ்சித்பரமயோஷித: ॥ **46**

முக்தாஹாராவ்ருதாஸ்சான்யா: காஸ்சித்விஸ்ரஸ்தவாஸஸ: ।
வ்யாவித்தரஸனாதாமா: கிஸோர்ய இவ வாஹிதா: ॥ **47**

ஸுகுண்டலதராஸ்சான்யா விச்சின்னம்ருதிதஸ்ரஜ: ।
கஜேந்த்ரம்ருதிதா: புல்லா லதா இவ மஹாவனே ॥ **48**

சந்த்ராம்ஸுகிரணாபாஸ்ச ஹாரா: காஸாம்சிதுத்கடா: ।
ஹம்ஸா இவ பபு: ஸுப்தா: ஸ்தனமத்யேஷு யோஷிதாம் ॥

---

புஷ்பமாலைகள், சிதறிய உயர்ந்த ஆபரணங்கள், இவைகளை உடையவர்களாகவும், தூக்கத்தினால் அபகரிக்கப்பட்ட மனதை உடையவர்களாகவும் ஸ்த்ரீகள் ப்ரகாஸித்தனர். (45)

உத்தம ஸ்த்ரீகள் சிலர் அழிந்த பொட்டுள்ளவர்களாகவும், இன்னும் சிலர் நழுவிய தண்டையை உடையவர்களாயும், மற்றும் சிலர் பக்கத்தில் நழுவிய புஷ்பமாலையை உடையவர்களுமாகப் ப்ரகாஸித்தனர். (46)

அறுந்த முக்தாஹாரத்தை உடையவர்களாகவும் அவிழ்ந்த புடவையை உடையவர்களாகவும், புடவை அவிழாமல் இருப்பதற்காக கட்டிய பட்டுக்கயறு அறுந்தவர்களுமான மற்றும் சில ஸ்த்ரீகள் ஶ்ரமத்தைப் போக்கிக்கொள்ள ஜேணம் முதலியவற்றைக் கழற்றி மணலில் அவிழ்த்து விடப்பட்ட பெண் குதிரைகள் போல் ப்ரகாஸித்தனர். (47)

அறுந்தும் கசங்கியதுமான மாலைகளை உடையவர்களும், அழகிய குண்டலங்களை தரித்திருப்பவர்களுமான மற்றும் சில ஸ்த்ரீகள் பெரும் காட்டில் மத்த கஜத்தால் கசக்கப்பட்டதுகளும் மலர்ந்ததுகளுமான கொடிகள் போல் விளங்கினர். (48)

சில ஸ்த்ரீகளின் ஸ்தன மத்திகளிலிருக்கும், சந்த்ர ஸூர்யர்களின் கிரணங்கள் போல் ப்ரகாஸிக்கின்றதுகளும் பெருத்தவை

अपरासां च वैडूर्याः कादम्बा इव पक्षिणः।
हेमसूत्राणि चान्यासां चक्रवाका इवाभवन्॥ ५०

हंसकारण्डवाकीर्णाश्चक्रवाकोपशोभिताः।
आपगा इव ता रेजुर्जघनैः पुलिनैरिव॥ ५१

किङ्किणीजालसंकोशास्ता हेमविपुलाम्बुजाः।
भावग्राहा यशस्तीराः सुप्ता नद्य इवाबभुः॥ ५२

मृदुष्वङ्गेषु कासांचित्कुचाग्रेषु च संस्थिताः।
बभूवुर्भ्रमराणीव शुभा भूषणराजयः॥ ५३

அபராஸாம் ச வைடூர்யா: காதம்பா இவ பக்ஷிண: ।
ஹேமஸூத்ராணி சான்யாஸாம் சக்ரவாகா இவாபவன் ॥ **50**

ஹம்ஸகாரண்டவாகீர்ணாஶ்சக்ரவாகோபஶோபிதா: ।
ஆபகா இவ தா ரேஜு: ஜகனை: புளினைரிவ ॥ **51**

கிங்கிணீஜாலஸம்கோஶாஸ்தா ஹேமவிபுலாம்புஜா: ।
பாவக்ராஹா யஶஸ்தீரா ஸுப்தா நத்ய இவாபபு: ॥ **52**

ம்ருதுஷ்வங்கேஷு காஸாம்சித்குசாக்ரேஷு ச ஸம்ஸ்திதா: ।
பபூவுர்ப்ரமராணீவ ஶுபா பூஷணராஜய: ॥ **53**

---

*களுமான முத்துமாலைகள் தூங்கிய ஹம்ஸங்கள் போல் ப்ரகாஶித்தன.* (49)

*மற்றும் சிலருடைய வைடூர்யங்களாலான ஹாரங்கள் கள ஹம்ஸங்கள் போலும், மற்றும் சிலருடைய ஸ்வர்ணமயமான மாலைகள் சக்ரவாகப்பக்ஷிகள் போலும் இருந்தன.* (50)

*அந்த ஸ்த்ரீகள் தன் ஜகனங்களால், ஹம்ஸம், மீன்குத்தி இவை நிறைந்தவைகளும் சக்ரவாகப் பக்ஷிகளால் சோபிக்கின்றதுகளுமான ஆறுகள், மணற் திட்டுகளால் ப்ரகாஶிப்பதுபோல் ப்ரகாஶித்தனர்.* (51)

*தூங்கும் சில ஸ்த்ரீகள் கால் சதங்கைகளாகிற மொட்டுகளை உடையதுகளும் முகங்களாகிற தங்கத்தாமரையை உடையதுகளும் மன்மத விகாரங்களாகிற முதலையை உடையதுகளும் புகழாகிற கரையை உடையதுகளுமான நதிகள் போலப் ப்ரகாஶித்தனர்.* (52)

*மற்றும் சில ஸ்த்ரீகளின் ம்ருதுவான அங்கங்களிலும் ஸ்தனங்களின் அக்ரபாகங்களிலுமிருக்கின்ற அழகிய ஆபரண ஜாலங்கள் காமுகர்கள் போல் ப்ரகாஶித்தன.* (53)

अंशुकान्ताश्च कासांचिन्मुखमारुतकम्पिताः।
उपर्युपरि वक्त्राणां व्याधूयन्ते पुनः पुनः॥ ५४

ताः पताका इवोद्धूताः पत्नीनां रुचिरप्रभाः।
नानावर्णसुवर्णानां वक्त्रमूलेषु रेजिरे॥ ५५

ववल्गुश्चात्र कासांचित्कुण्डलानि शुभार्चिषाम्।
मुखमारुतसंसर्गान्मन्दं मन्दं सुयोषिताम्॥ ५६

शर्करासवगन्धैश्च प्रकृत्या सुरभिः सुखः।
तासां वदननिःश्वासः सिषेवे रावणं तदा॥ ५७

रावणाननशङ्काश्च काश्चिद्रावणयोषितः।
मुखानि स्म सपत्नीनामुपाजिघ्रन्पुनः पुनः॥ ५८

அம்ஶுகாந்தாஶ்ச காஸாம்சின்முகமாருதகம்பிதா: ।
உபர்யுபரி வக்த்ராணாம் வ்யாதூயந்தே புன: புன: ॥ 54

தா: பதாகா இவோத்தூதா: பத்னீனாம் ருசிரப்ரபா: ।
நாநாவர்ணஸுவர்ணானாம் வக்த்ரமூலேஷு ரேஜிரே ॥ 55

வவல்குஶ்சாத்ர காஸாம்சித்குண்டலானி ஶுபார்சிஷாம் ।
முகமாருதஸம்ஸர்கான்மந்தம் மந்தம் ஸுயோஷிதாம் ॥ 56

ஶர்கராஸவகந்தைஶ்ச ப்ரக்ருத்யா ஸுரபி: ஸுக: ।
தாஸாம் வதனநி:ஶ்வாஸ: ஸிஷேவே ராவணம் ததா ॥ 57

ராவணானனஶங்காஶ்ச காஶ்சித்ராவணயோஷித: ।
முகானி ஸ்ம ஸபத்னீனாமுபாஜிக்ரன்புன: புன: ॥ 58

---

*மற்றும் சிலருடைய மூச்சுக்காற்றால் அசைக்கப்பட்ட மேலாடையின் அக்ரபாகங்கள் முகங்களுக்கு மேல் திரும்பத் திரும்ப பறக்கின்றன.* (54)

*பலவித வர்ணங்களால் நல்ல சோபை உள்ளவர்களான ராவணனுடைய பத்னிகளுடைய முகங்களின் அடிப்பாகங்களில் அழகிய காந்தியுள்ள அந்த மேலாக்குகள் அசைந்ததுகளாய்க் கொண்டு கொடிகள் போல ப்ரகாஶித்தன.* (55)

*இங்கு மற்றும் அழகிய காந்தி உள்ள உத்தம ஸ்த்ரீகளுடைய குண்டலங்கள் மூச்சுக்காற்றின் சேர்க்கையினால் மெள்ள மெள்ள அசைந்தன.* (56)

*சர்க்கரைச் சாராயத்தின் வாஸனையினாலும், இயற்கையினாலும், வாஸனையுடன் கூடியதும், ஸுகமானதாயுமிருக்கிற அப் பெண்களின் முகத்தின் மூச்சுக்காற்றானது அப்பொழுது ராவணனை ஸேவித்தது.* (57)

*மற்றும் சில ராவணஸ்த்ரீகள் சக்களத்திகளின் முகங்களை*

अत्यर्थं सक्तमनसो रावणे ता वरस्त्रियः ।
अस्वतन्त्राः सपत्नीनां प्रियमेवाचरंस्तदा ॥ ५९

बाहूनुपनिधायान्याः पारिहार्यविभूषितान् ।
अंशुकानि च रम्याणि प्रमदास्तत्र शिश्यिरे ॥ ६०

अन्या वक्षसि चान्यस्यास्तस्याः काश्चित्पुनर्भुजम् ।
अपरा त्वङ्कमन्यस्यास्तस्याश्चाप्यपरा भुजौ ॥ ६१

ऊरुपार्श्वकटीपृष्ठमन्योन्यस्य समाश्रिताः ।
परस्परनिविष्टाङ्ग्यो मदस्नेहवशानुगाः ॥ ६२

அத்யர்த்தம் ஸக்தமனஸோ ராவணே தா வரஸ்த்ரிய: ।
அஸ்வதந்த்ரா: ஸபத்னீனாம் ப்ரியமேவாசரம்ஸ்ததா ॥ 59

பாஹூனுபநிதாயான்யா: பாரிஹார்யவிபூஷிதான் ।
அம்ஶுகானி ச ரம்யாணி ப்ரமதாஸ்தத்ர ஶிஶ்யிரே ॥ 60

அன்யா வக்ஷஸி சான்யஸ்யாஸ்தஸ்யா: காஶ்சித்புனர்புஜம் ।
அபரா த்வங்கமன்யஸ்யாஸ்தஸ்யாஶ்சாப்யபரா புஜௌ ॥ 61

ஊருபார்ஶ்வகடீப்ருஷ்டமன்யோன்யஸ்ய ஸமாஶ்ரிதா: ।
பரஸ்பரநிவிஷ்டாங்க்யோ மதஸ்நேஹவஶானுகா: ॥ 62

---

ராவணனுடைய முகமென்று ஸந்தேஹித்தவர்களாய் திரும்பத் திரும்ப முகர்ந்து பார்த்தனர். (58)

ராவணனிடத்தில் மிகவும் பற்றுள்ள அந்த உத்தம ஸ்த்ரீகள் குடி தூக்கம் இவைகளுக்கு வசப்பட்டு அப்பொழுது சக்களத்திகளுக்குப் ப்ரியத்தையே செய்தனர்.

(அதாவது இவர்களும் அவர்களுடைய முகத்தைத் திரும்பப் பார்த்தனர் என்பது கருத்து.) (59)

மற்றும் சிலர் வளைகளால் அலங்கரிக்கப்பட்ட கைகளை தலைக்குத் தலையணையாக வைத்துக் கொண்டும் மற்றும் சில ஸ்த்ரீகள் அழகிய மேலாக்கைத் தலையணையாக வைத்துக்கொண்டும் தூங்கினர். (60)

மற்றொருவள் இன்னொரு ஸ்த்ரீயின் மார்பிலும் அவளுடைய கையை மற்றும் பலரும், மற்றொருவள் வேறொருவளுடைய மடியிலும் அவளுடைய கைகளை தலையணையாக வைத்துக்கொண்டு தூங்கினர். (61)

ஒருவர்க்கொருவர் துடையையும் பக்கத்தையும் பின்பாகத்தையும் அடைந்தவர்களாயும் ஒருவர்க்கொருவர் தொடுக்கப்பட்ட அங்கங்களை உடையவர்களாயும் மதத்தினாலேற்பட்ட ஸ்நேஹத்திற்கு உட்பட்டவர்களாயும் தூங்கினர். (62)

[अन्योन्यस्याङ्गसंस्पर्शात्प्रीयमाणाः सुमध्यमाः ।
एकीकृतभुजाः सर्वाः सुषुपुस्तत्र योषितः ॥] ६३

अन्योन्यभुजसूत्रेण स्त्रीमाला ग्रथिता हि सा ।
मालेव ग्रथिता सूत्रे शुशुभे मत्तषट्पदा ॥ ६४

लतानां माधवे मासि फुल्लानां वायुसेवनात् ।
अन्योन्यमालाग्रथितं संसक्तकुसुमोच्चयम् ॥ ६५

व्यतिवेष्टितसुस्कन्धमन्योन्यभ्रमराकुलम् ।
आसीद्वनमिवोद्धूतं स्त्रीवनं रावणस्य तत् ॥ ६६

उचितेष्वपि सुव्यक्तं न तासां योषितां तदा ।
विवेकः शक्य आधातुं भूषणाङ्गाम्बरस्रजाम् ॥ ६७

[அன்யோன்யஸ்யாங்கஸம்ஸ்பர்ஶாத்ப்ரீயமாணா: ஸுமத்யமா: ।
ஏகீக்ருதபுஜா: ஸர்வா: ஸுஷுபுஸ்தத்ர யோஷித: ॥] 63

அன்யோன்யபுஜஸூத்ரேண ஸ்த்ரீமாலா க்ரதிதாஹி ஸா ।
மாலேவ க்ரதிதா ஸூத்ரே ஶுஶுபே மத்தஷட்பதா ॥ 64

லதானாம் மாதவே மாஸி புல்லானாம் வாயுஸேவனாத் ।
அன்யோன்யமாலாக்ரதிதம் ஸம்ஸக்தகுஸுமோச்சயம் ॥ 65

வ்யதிவேஷ்டிதஸுஸ்கந்தமன்யோன்யப்ரமராகுலம் ।
ஆஸீத்வனமிவோத்தூதம் ஸ்த்ரீவனம் ராவணஸ்ய தத் ॥ 66

உசிதேஷ்வபி ஸுவ்யக்தம் ந தாஸாம் யோஷிதாம் ததா ।
விவேக: ஶக்ய ஆதாதும் பூஷணாங்காம்பரஸ்ரஜாம் ॥ 67

---

ஒருவர்க்கொருவருடைய கைகளாகிற கயற்றில் தொடுக்கப்பட்ட அந்த ஸ்த்ரீகளின் மாலையானது நூலில் தொடுக்கப்பட்டதும் மதம் பிடித்த வண்டுகளுடன் கூடியதுமான பூமாலைபோல் ப்ரகாஶித்தது. (63, 64)

வஸந்த ருதுவின் வைகாசி மாதத்தில் மலர்ந்த புஷ்பங்களுடன் கூடிய கொடிகளுடைய கூட்டம் போல் ஒன்றுக்கொன்று மாலையாக பின்னிக்கொண்டதும் ஒன்றுக்கொன்று பின்னிக்கொண்ட நல்ல கிளைகள் போன்ற தோள்களை உடையதும் ஒன்றுக்கொன்று கேஶங்களாலும் வண்டுக் கூட்டங்களாலும் சூழ்ந்ததும் காற்றடிப்பதால் அகன்றதுமாக அந்த ராவணனுடைய ஸ்த்ரீகளின் ஸமூகமானது ப்ரகாஶித்தது. (65, 66)

அந்த அந்த ஆபரணங்களும் உசிதமான ஸ்தானங்களிலிருந்த போதிலும் அப்பொழுது அந்த ஸ்த்ரீகளுடைய, ஆபரணம் அவ

रावणे सुखसंविष्टे ताः स्त्रियो विविधप्रभाः ।
ज्वलन्तः काञ्चना दीपाः प्रैक्षन्तानिमिषा इव ॥ ६८

राजर्षिपितृदैत्यानां गन्धर्वाणां च योषितः ।
राक्षसानां च याः कन्यास्तस्य कामवशं गताः ६९

युद्धकामेन ताः सर्वा रावणेन हृताः स्त्रियः ।
समदा मदनेनैव मोहिताः काश्चिदागताः ॥ ७०

ராவணே ஸுகஸம்விஷ்டே தா: ஸ்த்ரியோ விவிதப்ரபா:
ஜ்வலந்த: காஞ்சநா தீபா: ப்ரைக்ஷந்தாநிமிஷா இவ ॥ **68**

ராஜர்ஷிபித்ருதைத்யாநாம் கந்தர்வாணாம் ச யோஷித: ।
ராக்ஷஸாநாம் ச யா: கன்யாஸ்தஸ்ய காமவசம் கதா: ॥ **69**

யுத்தகாமேன தா: ஸர்வா: ராவணேன ஹ்ருதா: ஸ்த்ரிய: ।
ஸமதா மதனேனைவ மோஹிதா: காஸ்சிதாகதா: ॥ **70**

---

யவம், வஸ்த்ரம், மாலை, இவைகளின் பிரிவை இவை இன்னருடை யவை என ஸ்பஷ்டமாக அறிய முடியவில்லை. (அதாவது எல்லோருடைய ஆபரணங்களும் அங்கங்களும் வஸ்த்ரங்களும் ஒன்றுக்கொன்று பின்னிக்கொண்டிருந்ததால் இது இன்னருடைய தென பிரித்தறிய முடியவில்லை எனக்கருத்து.) (67)

ராவணன் ஸுகமாகத் தூங்குங்கால், ப்ரகாஸிக்கும் தங்க விளக்குகள் இமை கொட்டாதவை போல், பலவித காந்தியுள்ள அந்த ஸ்த்ரீகளைப் பார்க்கின்றவைபோல் இருந்தன.

(இதனல் ராவணன் விழித்துக் கொண்டிருக்கையில் தீபங்கள் கூட அவன் ஸ்த்ரீகளை பார்க்கமுடியாது என்பது கருத்து.) (68)

[இங்கு ஸீதை ஒருவளுக்குமட்டும் ராவணனிடத்தில் விருப்பமில்லை என்பதைக் காட்டுவதற்காக, பல ஸ்த்ரீகளுக்கு அவனிடத்திலுள்ள விருப்பத்தை எடுத்துக்காட்டுகிறார்.]

ராஜரிஷிகள், பித்ருக்கள், அஸுரர்கள் கந்தர்வர்கள் இவர்களின் ஸ்த்ரீகளும் ராக்ஷஸர்களின் கன்னிகைகளும் அவனிடம் ஆசை கொண்டு வந்தனர். அவர்கள் யாவரும் யுத்தம் செய்வதில் ஆவலுள்ள ராவணனல் அபஹரித்துக் கொண்டுவரப்பட்டவர்கள். அதாவது இவர்களை அபஹரித்துக் கொண்டு வருவதால் இவர்களின் உறவினர் சண்டைக்கு வரவேண்டுமென்பது அவனது கருத்து. மதம் பிடித்த சிலர் மன்மதனல் மோஹத்தை அடைவிக்கப்பட்டுத் தானே வந்தவர்கள். மிகஸ்ரேஷ்டமானவ

न तत्र काश्चित्प्रमदाः प्रसह्य वीर्योपपन्नेन गुणेन लब्धाः।
न चान्यकामाऽपि न चान्यपूर्वा विना वरार्हां जनकात्मजां ताम्॥ ७१

न चाकुलीना न च हीनरूपा नादक्षिणा नानुपचारयुक्ता।
भार्याऽभवत्तस्य न हीनसत्त्वा न चापि कान्तस्य न कामनीया॥ ७२

बभूव बुद्धिस्तु हरीश्वरस्य यदीदृशी राघवधर्मपत्नी।
इमा यथा राक्षसराजभार्याः सुजातमस्येति हि साधुबुद्धेः॥ ७३

ந தத்ர காஸ்சித்ப்ரமதா: ப்ரஸஹ்ய
வீர்யோபபன்னேன குணேன லப்தா: ।
ந சான்யகாமாऽபி ந சான்யபூர்வா
விநா வரார்ஹாம் ஜனகாத்மஜாம் தாம் ॥ 71

ந சாகுலீநா ந ச ஹீனரூபா
நாதக்ஷிணா நானுபசாரயுக்தா ।
பார்யாऽபவத்தஸ்ய ந ஹீனஸத்வா
ந சாபி காந்தஸ்ய ந காமநீயா ॥ 72

பபூவ புத்திஸ்து ஹரீஸ்வரஸ்ய
யதீத்ருஸீ ராகவதர்மபத்னீ ।
இமா யதா ராக்ஷஸராஜபார்யா:
ஸுஜாதமஸ்யேதி ஹி ஸாதுபுத்தே: ॥ 73

---

ளான ஸீதையைத்தவிர மதம் பிடித்த மற்ற ஸ்த்ரீகள் எல்லோரும் பராக்ரமத்தோடு கூடிய அவனுடைய குணத்தாலேயே அடையப்பட்டவர்கள். அதில் ஒருவளும் பலாத்காரமாகக் கொண்டு வரப்பட்டவளோ பிறனிடத்தில் தற்போது விருப்பமுள்ளவளோ அல்லது பிறனிடத்தில் முன்பு விருப்பம் கொண்டவளோ இல்லவே இல்லை. (69—71)

நல்ல குலத்தில் பிறக்காதவளோ, அழகில்லாதவளோ, ஸாமர்த்யமில்லாதவளோ, மரியாதை செய்யப்படாதவளோ, பலமற்றவளோ, கணவன் கண்டு ப்ரியப்படத்தகாதவளோ அப்பொழுது அந்த ராவணனுக்கு மனைவியாக இல்லை. (72)

ராக்ஷஸராஜனை ராவணனுடைய மனைவிகளான இந்த ஸ்த்ரீகளைப்போல் ஸ்ரீராகவனுடைய தர்மபத்னியான ஸ்ரீஸீதையும் இவ்விதம் பர்த்தாவுடன் சேர்ந்திருப்பாளேயாகில் இந்த ராவணனுக்கு அது க்ஷேமமாகுமென நல்ல புத்திமானை ஹனுமாருக்குப்பட்டது.

(இங்கு ஸாதுபுத்தி என ஹனுமாரைக் குறிப்பிட்டது ஸாது புத்திபடைத்தவர்களுக்குத்தான் ஸாதுவான மார்க்கமும் புலப்

पुनश्च सोऽचिन्तयदार्तरूपो ध्रुवं विशिष्टा गुणतो हि सीता।
अथायमस्यां कृतवान्महात्मा लङ्केश्वरः कष्टमनार्यकर्म ॥ ७४

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
नवमः सर्गः ॥ ९॥

புனஶ்ச ஸோऽசிந்தயதார்த்தரூபோ
த்ருவம் விஶிஷ்டா குணதோ ஹி ஸீதா ।
அதாயமஸ்யாம் க்ருதவான்மஹாத்மா
லங்கேஶ்வர: கஷ்டமனார்யகர்ம ॥ 74

இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே நவம: ஸர்க: ॥

படும் என்பதை எடுத்துக்காட்டுவதற்கே என்பது குறிப்பிடத்தக்கது.

இங்கு ஸாதுபுத்தியான ஹரீஸ்வரனுக்கு இந்த ஸீதையானவள் ஸ்வயம்வரத்துக்கு முன்பே மற்ற ராக்ஷஸ ஸ்த்ரீகளைப்போல் பத்னியாக கிடைத்திருந்தால் ராவணனுடைய ஜன்மா பயனுள்ளதாக ஆகுமெனத் தோன்றியதாகவும் பொருள் கூறுவதுண்டு. ஆனல் இதை "ஸாதுபுத்தே:" என்று விசேஷணம் கொடுத்திருப்பதால் ஸ்வயமாகத் தோன்றியதில்லை என்றும் குரங்கு ஜாதியில் பிறந்ததால் இந்த விபரீத புத்தி அவருக்கு உண்டாயிருக்கக்கூடுமென்றும் இதைத் தானே உணர்ந்து பச்சாதாபத்துடன் மேலும் வேறுவிதமாகவே யோசிப்பதாகவும் **"पुनश्च सोऽचिन्तयत्"** எனும் மேல் ஶ்லோகத்தால் குறிப்பிடுகிறுர்.) (73)

ஸ்ரீஸீதை நிஶ்சயமாக குணத்தில் சிறந்தவள். இப்படிப்பட்ட இவளிடத்தில் இந்த லங்கேஶ்வரனும் மஹாத்மாவுமான ராவணன் தகாத காரியத்தைச் செய்திருக்கிறுனே என மிகவருத்தப்பட்டு மறுபடியும் அவர் சிந்தித்தார். (74)

ஒன்பதாவது ஸர்கம் முற்றிற்று.

श्रीः

दशमः सर्गः — பத்தாவது ஸர்கம் ॥ १० ॥

# “मन्दोदरीदर्शनम्” - மந்தோதரியைப் பார்த்தல்.

तत्र दिव्योपमं मुख्यं स्फाटिकं रत्नभूषितम् ।
अवेक्षमाणो हनुमान्ददर्श शयनासनम् ॥ १

दान्तकाञ्चनचित्राङ्गैर्वैडूर्यैश्च वरासनैः ।
महार्हास्तरणोपेतैरुपपन्नं महाधनैः ॥ २

तस्य चैकतमे देशे सोऽग्र्यमालाविभूषितम् ।
ददर्श पाण्डुरं छत्रं ताराधिपतिसंनिभम् ॥ ३

जातरूपपरिक्षिप्तं चित्रभानुसमप्रभम् ।
अशोकमालाविततं ददर्श परमासनम् ॥ ४

தத்ர திவ்யோபமம் முக்யம் ஸ்பாடிகம் ரத்னபூஷிதம் ।
அவேக்ஷமாணோ ஹனுமான் ததர்ஶ ஶயனாஸனம் ॥ 1

தாந்தகாஞ்சனசித்ராங்கைர்வைடூர்யைஶ்ச வராஸனை: ।
மஹார்ஹாஸ்தரணோபேதைருபபன்னம் மஹாதனை: ॥ 2

தஸ்ய சைகதமே தேஶே ஸோऽக்ர்யமாலாவிபூஷிதம் ।
ததர்ஶ பாண்டுரம் சத்ரம் தாராதிபதிஸன்னிபம் ॥ 3

ஜாதரூபபரிக்ஷிப்தம் சித்ரபானுஸமப்ரபம் ।
அஶோகமாலாவிததம் ததர்ஶ பரமாஸனம் ॥ 4

---

ஹனுமார் அங்கு தேவலோகத்தில் செய்த இந்த்ரனுடைய படுக்கை போன்றதும், சிறந்ததும், ஸ்படிக மயமும், ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டதும், தந்தம், தங்கம் இவைகளால் சித்தரிக்கப் பட்ட கால் முதலிய அங்கங்களை உடையதும், வைடூர்ய மயமும் விலையுயர்ந்த விரிப்புக்களுடன் கூடியதும், அதிக விலையுள்ளதுகளு மான படுக்கக்கூடிய சிறந்த மெத்தைகளுடன் கூடிய கட்டிலைப் பார்த்தார். (1, 2)

அக்கட்டிலில் மேல்ப்ரதேசத்தில் சிறந்த மாலைகளால் அலங் கரிக்கப்பட்டதும் சந்த்ரனுக்கொப்பானதுமான வெண்குடையை அந்த ஹனுமார் கண்டார். (3)

திரும்பவும் கட்டிலை வர்ணிக்கிறார். தங்கத்தினால் செய்யப் பட்டதும் அக்னிக்கு ஒப்பான காந்தி உள்ளதும் தொங்குகின்ற அசோக புஷ்பத்தின் மாலைகளை உடையதுமான சிறந்த கட்டிலைக் கண்டார். (4)

वालव्यजनहस्ताभिर्वीज्यमानं समन्ततः ।
गन्धैश्च विविधैर्जुष्टं वरधूपेन धूपितम् ॥ ५

परमास्तरणास्तीर्णमाविकाजिनसंवृतम् ।
दामभिर्वरमाल्यानां समन्तादुपशोभितम् ॥ ६

तस्मिञ्जीमूतसंकाशं प्रदीप्तोत्तमकुण्डलम् ।
लोहिताक्षं महाबाहुं महारजतवाससम् ॥ ७

लोहितेनानुलिप्ताङ्गं चन्दनेन सुगन्धिना ।
सन्ध्यारक्तमिवाकाशे तोयदं सतडिद्गणम् ॥ ८

वृतमाभरणैर्दिव्यैः सुरूपं कामरूपिणम् ।
सवृक्षवनगुल्माढ्यं प्रसुप्तमिव मन्दरम् ॥ ९

வாலவ்யஜனஹஸ்தாபிர்வீஜ்யமானம் ஸமந்தத: |
கந்தைஸ்ச விவிதைர்ஜுஷ்டம் வரதூபேன தூபிதம் ||

பரமாஸ்தரணஸ்தீர்ணமாவிகாஜினஸம்வ்ருதம் |
தாமபிர்வரமால்யானும் ஸமந்தாதுபஸோபிதம் || 6

தஸ்மின்ஜீமூதஸம்காஸம் ப்ரதீப்தோத்தமகுண்டலம் |
லோஹிதாக்ஷம் மஹாபாஹும் மஹாராஜதவாஸஸம் || 7

லோஹிதேனனுலிப்தாங்கம் சந்தனேன ஸுகந்தின |
ஸந்த்யாரக்தமிவாகாஸே தோயதம் ஸதடித்கணம் || 8

வ்ருதமாபரணைர்திவ்யை: ஸுரூபம் காமரூபிணம் |
ஸவ்ருக்ஷவனகுல்மாட்யம் ப்ரஸுப்தமிவ மந்தரம் || 9

---

வெண்சாமரங்களை கையிலேந்திய ஸ்த்ரீகளால் வீசப்பட்டதும், பலவகைப்பட்ட வாஸனைகளால் நாலு பக்கத்திலும் ஸேவிக்கப்பட்டதும், மிகுந்த வாஸனையுள்ள தூபத்தால் வாஸனையுள்ளதாகச் செய்யப்பட்டதும், விரிக்கப்பட்ட மிகச்சிறந்த விரிப்பை உடையதும், செம்மறி ஆட்டின் தோலினல் உரைபோடப்பட்டதும் சிறந்த புஷ்பங்களின் மாலைகளால் நான்கு பக்கத்திலும் சோபையுடன் கூடியதுமான கட்டிலை அந்த ஹனுமார் கண்டார். (5, 6)

அந்தக் கட்டிலில் மேகத்துக்கு ஒப்பானவனும், மிக ப்ரகாசமுள்ள குண்டலங்களுடன் கூடியவனும், சிவந்த கண்களை உடையவனும், பெருத்த கைகளோடு கூடியவனும், சிறந்த ஜரிகை வஸ்த்ரம் உடுத்தியவனும், நல்ல வாஸனையுடன் கூடிய சந்தனத்தால் பூசப்பட்டவனும், ஆகாசத்தில் ஸந்த்யாகாலத்தால் சிவப்பு நிறமுள்ள மின்னல்களுடன் கூடிய கருமேகத்தைப்போன்றவனும், திவ்யமான ஆபரணங்களைத் தரித்தவனும், அழகு வாய்ந்தவனும், காமரூபியும், வ்ருக்ஷங்களுடன் கூடிய காடுகள் புதர்கள்

क्रीडित्वोपरतं रात्रौ वराभरणभूषितम् ।
प्रियं राक्षसकन्यानां राक्षसानां सुखावहम् ॥ १०

पीत्वाऽप्युपरतं चापि ददर्श स महाकपिः ।
भास्वरे शयने वीरं प्रसुप्तं राक्षसाधिपम् ॥ ११

निःश्वसन्तं यथा नागं रावणं वानरर्षभः ।
आसाद्य परमोद्विग्नः सोपासर्पत्सुभीतवत् ॥ १२

अथारोहणमासाद्य वेदिकान्तरमाश्रितः ।
सुप्तं राक्षसशार्दूलं प्रेक्षते स्म महाकपिः ॥ १३

க்ரீடித்வோபரதம் ராத்ரௌ வராபரணபூஷிதம் ।
ப்ரியம் ராக்ஷஸகன்யாஞம் ராக்ஷஸாஞம் ஸுகாவஹம் ॥ 10

பீத்வாऽப்யுபரதம் சாபி ததர்ஶ ஸ மஹாகபி: ।
பாஸ்வரே ஶயனே வீரம் ப்ரஸுப்தம் ராக்ஷஸாதிபம் ॥ 11

நி:ஶ்வஸந்தம் யதா நாகம் ராவணம் வானரர்ஷப: ।
ஆஸாத்ய பரமோத்விக்ன: ஸோபாஸர்பத்ஸுபீதவத் ॥ 12

அதாரோஹணமாஸாத்ய வேதிகாந்தரமாஶ்ரித: ।
ஸுப்தம் ராக்ஷஸஶார்தூலம் ப்ரேக்ஷதே ஸ்ம மஹாகபி: ॥ 13

---

இவைகள் நிறைந்ததும், அசைவற்றதுமான மந்தரமலை போன்றவனும், ராத்ரியில் விளையாடி ஓய்ச்சலை அடைந்தவனும், மிகச் சிறந்த ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவனும், ராக்ஷஸ கன்னிகைகளின் ப்ரியத்துக்கு பாத்ரமானவனும், ராக்ஷஸர்களுக்கு ஸுகத்தைச் செய்கிறவனும், மத்யத்தைக் குடித்து ஓய்வடைந்திருப்பவனும், வெண்மையான மெத்தையில் நன்கு தூங்குகின்றவனும், வீரனுமான அந்த ராக்ஷஸாதிபனை அந்த மஹாகபி கண்டார். (7 — 11)

பெருமூச்சு விடுகின்ற யானை போன்ற அந்த ராவணனை வானரஶ்ரேஷ்டர் அடைந்து மிகக் கவலைக்கொண்டு மிகப் பயந்தவன் போல கொஞ்சம் பின்னடைந்தார்.

(ஜகன்மாதாவான ஸ்ரீ ஸீதாதேவியை அபகரித்த பாபி இவன் என்ற அபிப்ராயத்தால் ஸமீபம் செல்லாது பின்வாங்கினார் என்பது கருத்து.) (12)

பிறகு படிக்கட்டை ஏறி ஓர் படியில் உட்கார்ந்துகொண்டு மஹாகபி தூங்குகின்ற ராக்ஷஸஶ்ரேஷ்டனைக் கண்டார். (13)

शुशुभे राक्षसेन्द्रस्य स्वपतः शयनोत्तमम् ।
गन्धहस्तिनि संविष्टे यथा प्रस्रवणं महत् ॥ १४

काञ्चनाङ्गदनद्धौ च ददर्श स महात्मनः ।
विक्षिप्तौ राक्षसेन्द्रस्य भुजाविन्द्रध्वजोपमौ ॥ १५

ऐरावतविषाणाग्रैरापीडनकृतव्रणौ ।
वज्रोल्लिखितपीनांसौ विष्णुचक्रपरिक्षतौ ॥ १६

पीनौ समसुजातांसौ सङ्गतौ बलसंयुतौ ।
सुलक्षणनखाङ्गुष्ठौ स्वङ्गुलीतललक्षितौ ॥ १७

संहतौ परिघाकारौ वृत्तौ करिकरोपमौ ।
विक्षिप्तौ शयने शुभ्रे पञ्चशीर्षाविवोरगौ ॥ १८

ஶுஶுபே ராக்ஷஸேந்த்ரஸ்ய ஸ்வபத: ஶயனோத்தமம் ।
கந்தஹஸ்தினி ஸம்விஷ்டே யதா ப்ரஸ்ரவணம் மஹத் ॥ 14

காஞ்சனாங்கதநத்தௌ ச ததர்ஶ ஸ மஹாத்மன: ।
விக்ஷிப்தௌ ராக்ஷஸேந்த்ரஸ்ய புஜாவிந்த்ரத்வஜோபமௌ ॥ 15

ஐராவதவிஷாணாக்ரைராபீடனக்ருதவ்ரணௌ ।
வஜ்ரோல்லிகிதபீனாம்ஸௌ விஷ்ணுசக்ரபரிக்ஷதௌ ॥ 16

பீனௌ ஸமஸுஜாதாம்ஸௌ ஸங்கதௌ பலஸம்யுதௌ ।
ஸுலக்ஷணநகாங்குஷ்டௌ ஸ்வங்குலீதலலக்ஷிதௌ ॥ 17

ஸம்ஹதௌ பரிகாகாரௌ வ்ருத்தௌ கரிகரோபமௌ ।
விக்ஷிப்தௌ ஶயனே ஶுப்ரே பஞ்சஶீர்ஷாவிவோரகௌ ॥

---

தூங்குகின்ற ராக்ஷஸ ஶ்ரேஷ்டனுடைய படுக்கையானது, எந்த யானையின் மதஜலத்தால் மற்ற யானைகள் பயந்து ஓடுமோ அப்படிப்பட்ட கந்தஹஸ்தியாகிற மதம்பிடித்த யானையானது தூங்கும்பொழுது பெரிய ப்ரஸ்ரவண மலைபோல் ப்ரகாசித்தது. (14)

அந்த மஹாகபியானவர் மஹாத்மாவான ராக்ஷஸ ஶ்ரேஷ்டனுடைய படுக்கையில் வைக்கப்பட்டதுகளும், தங்கவளைகள் போடப்பட்டவைகளும், இந்த்ரத்வஜத்திற்கு ஒப்பானவைகளும், ஐராவதத்தின் தந்தத்தின் நுனியின் உரசலால் செய்யப்பட்ட காயத்தின் வடுவை உடையதுகளும், வஜ்ராயுதத்தால் கீறப்பட்ட பெரிய தோள்களை உடையதுகளும், விஷ்ணு சக்கரத்தால் காயப்படுத்தப்பட்டவைகளும், பெருத்தவைகளும், ஒன்றோடொன்று ஸமமாய் இருப்பவைகளும், ஸமமானவைகளும், அழகியவைகளுமான தோள்களை உடையவைகளும், உடலுக்கு ஏற்றதுகளும், பலத்துடன் கூடியதுகளும், நல்ல லக்ஷணத்துடன் கூடிய நகங்

शशक्षतजकल्पेन सुशीतेन सुगन्धिना।
चन्दनेन परार्ध्येन स्वनुलिप्तौ स्वलंकृतौ॥ १९

उत्तमस्त्रीविमृदितौ गन्धोत्तमनिषेवितौ।
यक्षपन्नगगन्धर्वदेवदानवराविणौ॥ २०

ददर्श स कपिस्तस्य बाहू शयनसंस्थितौ।
मन्दरस्यान्तरे सुप्तौ महाही रुषिताविव॥ २१

ताभ्यां स परिपूर्णाभ्यां भुजाभ्यां राक्षसेश्वरः।
शुशुभेऽचलसंकाशः शृङ्गाभ्यामिव मन्दरः॥ २२

ஶஶக்ஷதஜகல்பேன ஸுஶீதேன ஸுகந்தினா।
சந்தனேன பரார்த்யேன ஸ்வனுலிப்தௌ ஸ்வலம்க்ருதௌ॥

உத்தமஸ்த்ரீவிம்ருதிதௌ கந்தோத்தமநிஷேவிதௌ।
யக்ஷபன்னககந்தர்வதேவதானவராவிணௌ॥ 20

ததர்ஶ ஸ கபிஸ்தஸ்ய பாஹூ ஶயனஸம்ஸ்திதௌ।
மந்தரஸ்யாந்தரே ஸுப்தௌ மஹாஹீ ருஷிதாவிவ॥ 21

தாப்யாம் ஸ பரிபூர்ணாப்யாம் புஜாப்யாம் ராக்ஷஸேஶ்வர:।
ஶுஶுபேऽசலஸம்காஶ: ஶ்ருங்காப்யாமிவ மந்தர:॥ 22

---

கள், கட்டை விரல்கள் இவைகளை உடையதுகளும், அழகிய விரல்கள், உள்ளங்கை இவைகளோடு கூடியவைகளும், கெட்டியான ஸந்திபந்தங்களை உடையதுகளும், தாழ்ப்பாள்கள் போன்றதுகளும், வட்டமாக உள்ளதுகளும், யானையின் துதிக்கை போன்றதுகளும், வெண்மையான படுக்கையில் விரிக்கப்பட்டதுகளுமான கைகளை ஐந்துதலை நாகங்களைப்போல் கண்டார். (15 — 18)

முயல் ரத்தத்திற்கொப்பானதும், மிகக் குளிர்ச்சியானதும், நல்ல வாசனை உள்ளதும், சிறந்ததுமான சந்தனத்தால் நன்கு பூசப்பட்டதுகளும், நன்கு அலங்கரிக்கப்பட்டவைகளும், உத்தம ஸ்த்ரீகளால் பிடிக்கப்பட்டவைகளும், சிறந்த வாஸனைகளுடன் கூடியதுகளும், யக்ஷர், பன்னகர், கந்தர்வர்கள், தேவர்கள், அஸுரர்கள் இவர்களை அலரச்செய்கிறதுகளும், படுக்கையில் இருப்பவைகளுமான அந்த ராவணனுடைய கைகளை, மந்தர மலையின் பொந்தில் நன்கு தூங்குகின்றவைகளும், கோபங்கொண்டவைகளுமான பெரிய ஸர்ப்பங்களைப்போல் அந்த கபியான ஹனுமார் பார்த்தார். (19 — 21)

ராக்ஷஸ ஶ்ரேஷ்டனும் மலைக்கு ஒப்பானவனுமான அந்த ராவணன் ஸர்வ லக்ஷணங்களும் நிரம்பிய அக்கைகளால், சிகரங்களோடு கூடிய மந்தரமலைபோல் ப்ரகாசித்தான். (22)

चूतपुन्नागसुरभिर्वकुलोत्तमसंयुतः ।
मृष्टान्नरससंयुक्तः पानगन्धपुरस्सरः ॥ २३

तस्य राक्षससिंहस्य निश्चक्राम महामुखात् ।
शयानस्य विनिःश्वासः पूरयन्निव तद्गृहम् ॥ २४

मुक्तामणिविचित्रेण काञ्चनेन विराजितम् ।
मुकुटेनापवृत्तेन कुण्डलोज्ज्वलिताननम् ॥ २५

रक्तचन्दनदिग्धेन तथा हारेण शोभिना ।
पीनायतविशालेन वक्षसाऽभिविराजितम् ॥ २६

पाण्डुरेणापविद्धेन क्षौमेण क्षतजेक्षणम् ।
महार्हेण सुसंवीतं पीतेनोत्तमवाससा ॥ २७

சூதபுன்னாகஸுரபிர்வகுலோத்தமஸம்யுத: ।
ம்ருஷ்டான்னரஸஸம்யுக்த: பானகந்தபுரஸ்ஸர: ॥ 23

தஸ்ய ராக்ஷஸஸிம்ஹஸ்ய நிஶ்சக்ராம மஹாமுகாத் ।
ஶயானஸ்ய விநி:ஶ்வாஸ: பூரயன்னிவ தத்க்ருஹம் ॥ 24

முக்தாமணிவிசித்ரேண காஞ்சனேன விராஜிதம் ।
முகுடேனாபவ்ருத்தேன குண்டலோஜ்வலிதானனம் ॥ 25

ரக்தசந்தனதிக்தேன ததா ஹாரேண ஶோபினா ।
பீனாயதவிஶாலேன வக்ஷஸாऽபிவிராஜிதம் ॥ 26

பாண்டுரேணாபவித்தேன க்ஷௌமேண க்ஷதஜேக்ஷணம் ।
மஹார்ஹேண ஸுஸம்வீதம் பீதேனோத்தமவாஸஸா ॥ 27

---

தூங்குகின்ற அந்த ராக்ஷஸ ராஜனுடைய முகத்திலிருந்து வரும் பெரிதான மூச்சுக்காற்றானது, மா, புன்னாகம் இவற்றின் வாஸனையை உடையதும், சிறந்த தாழம்பூவின் வாஸனையுள்ளதும், அறுசுவை உண்டியை உண்டதாலேற்பட்ட வாஸனையையுடையதும், மத்யபானம் செய்ததாலேற்பட்ட வாஸனையை முன்னிட்டுக் கொண்டதுமாய் அந்த வீட்டை நிரப்புகிறதுபோல வெளிக்கிளம்பிற்று.

(இங்கு மத்யபானம் செய்ததாலேற்பட்ட வாஸனையை முன்னிட்டுக் கொண்டதாய் என்றதால், திலகவ்யாக்யானத்தில் ராவணன் ராக்ஷஸனாய் இருப்பதால் வாமாசாரத்தால் ஸ்ரீ வித்யாராதனம்செய்து மத்யபானம் செய்தானென்று கூறப்பட்டுள்ளது.) (23, 24)

முத்து, மணி இவைகளால் சித்தரிக்கப்பட்டதும், தங்கத்தால் செய்யப்பட்டதும், புறண்டதுமான மகுடத்தால் ப்ரகாசிக்கச் செய்யப்பட்டவனும், குண்டலத்தினால் மிகப் ப்ரகாசிக்கின்ற முகத்தை உடையவனும், செஞ்சந்தனத்தால் பூசப்பட்டதும், ஹாரத்தால் சோபையுடன் கூடியதும், பருத்ததும், அகண்டது

माषराशिप्रतीकाशं निःश्वसन्तं भुजङ्गवत् ।
गाङ्गे महति तोयान्ते प्रसुप्तमिव कुञ्जरम् ॥ २८

चतुर्भिः काञ्चनैर्दीपैर्दीप्यमानैश्चतुर्दिशम् ।
प्रकाशीकृतसर्वाङ्गं मेघं विद्युद्गणैरिव ॥ २९

पादमूलगताश्चापि ददर्श सुमहात्मनः ।
पत्नीः स प्रियभार्यस्य तस्य रक्षःपतेर्गृहे ॥ ३०

शशिप्रकाशवदनाश्चारुकुण्डलभूषिताः ।
अम्लानमाल्याभरणा ददर्श हरियूथपः ॥ ३१

மாஷராஶிப்ரதீகாஶம் நி:ஶ்வஸந்தம் புஜங்கவத் ।
காங்கே மஹதி தோயாந்தே ப்ரஸுப்தமிவ குஞ்ஜரம் । 28

சதுர்பி: காஞ்சனைர்தீபைர்தீப்யமானைஶ்சதுர்திஶம் ।
ப்ரகாஶீக்ருதஸர்வாங்கம் மேகம் வித்யுத்கணைரிவ ॥ 29

பாதமூலகதாஶ்சாபி ததர்ஶ ஸுமஹாத்மன: ।
பத்னீ: ஸ ப்ரியபார்யஸ்ய தஸ்ய ரக்ஷ:பதேர்க்ருஹே ॥ 30

ஶஶிப்ரகாஶவதனாஶ்சாருகுண்டலபூஷிதா: ।
அம்லானமால்யாபரணா ததர்ஶ ஹரியூதப: ॥ 31

---

மான மார்பினல் ப்ரகாசிக்கின்றவனும், ரத்தம் போன்ற கண்களை உடையவனும், வெண்மைநிறமுள்ளதும், கொஞ்சம் விலகியதும், பட்டு நூலால் செய்யப்பட்டதும், விலையுயர்ந்ததுமான உத்தம பீதாம்பரத்தை உடுத்திஇருப்பவனும், உளுந்துக்குவியல் போன்றவனும், பாம்புபோல் பெருமூச்சு விடுகிறவனும், பெரியதான கங்கா நதியின் மத்தியில் படுத்து தூங்குகின்ற யானை போன்றவனும், நாலு திக்குகளிலும் ப்ரகாசிக்கின்ற நான்கு ஸ்வர்ண மயமான தீபங்களால், மின்னல் கூட்டங்களால் மேகம்போல் ப்ரகாசப்படுத்தப்பட்ட எல்லா அவயவங்களையும் உடையவனுமான ராவணனையும், நல்ல மஹாத்மாவும் மனைவிகளிடத்தில் ப்ரியமுள்ளவனுமான அந்த ராக்ஷஸ ராஜனுடைய காலடியை அடைந்தவர்களான அவனது பத்தினிகளையும் அவனுடைய வீட்டில் கண்டார். (25 — 30)

வானர ஶ்ரேஷ்டரான ஹனுமார் சந்த்ரனை ஒத்த முககாந்தியை உடையவர்களும், அழகிய குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்டவர்களுமான வாடாத மாலையை ஆபரணமாய் அணிந்த தேவ கன்னிகைகளையும் கண்டார். (31)

नृत्तवादित्रकुशला राक्षसेन्द्रभुजाङ्कगाः ।
वराभरणधारिण्यो निषण्णा ददृशे हरिः ॥ ३२

वज्रवैडूर्यगर्भाणि श्रवणान्तेषु योषिताम् ।
ददर्श तापनीयानि कुण्डलान्यङ्गदानि च ॥ ३३

तासां चन्द्रोपमैर्वक्त्रैः शुभैर्ललितकुण्डलैः ।
विरराज विमानं तन्नभस्तारागणैरिव ॥ ३४

मदव्यायामखिन्नास्ता राक्षसेन्द्रस्य योषितः ।
तेषु तेष्ववकाशेषु प्रसुप्तास्तनुमध्यमाः ॥ ३५

ந்ருத்தவாதித்ரகுமலா ராக்ஷஸேந்த்ரபுஜாங்ககா: ।
வராபரணதாரிண்யோ நிஷண்ணு தத்ருமே ஹரி: ॥ 32

வஜ்ரவைடூர்யகர்ப்பாணி ம்ரவணுந்தேஷு யோஷிதாம் ।
ததர்ம தாபனீயானி குண்டலான்யங்கதானி ச ॥ 33

தாஸாம் சந்த்ரோபமைர்வக்த்ரை: மூபைர்லலிதகுண்டலை:
விரராஜ விமானம் தந்நபஸ்தாராகணைரிவ ॥ 34

மதவ்யாயாமகின்னுஸ்தா ராக்ஷஸேந்த்ரஸ்ய யோஷித: ।
தேஷு தேஷ்வவகாமேஷு ப்ரஸுப்தாஸ்தனுமத்யமா: ॥ 35

---

*ஹனுமார் நர்த்தனம் வாத்யம் இவைகளில் தேர்ந்தவர்களும், ராக்ஷஸேந்த்ரனுடைய தோள், மடி இவைகளில் படுத்து தூங்கு கிறவர்களும், சிறந்த ஆபரணங்களை தரித்திருப்பவர்களும், தூங்கு கின்றவர்களுமான தேவகன்னிகைகளைக் கண்டார்.* (32)

*தங்கத்தால் செய்யப்பட்டதுகளும், நடுவில் வஜ்ரம் வைடூர் யம் வைத்து இழைக்கப்பட்டதுகளும் காதின் அடிப்பாகத்தை அடைந்ததுகளுமான ஸ்த்ரீகளுடைய குண்டலங்களையும் தோள் வளைகளையும் கண்டார்.*
*(இங்கு தூங்கும்போது கைகளை தலையின்கீழ் வைத்திருப்ப தால் தோள்வளைகளும் காதுகளின் அடிப்பாகத்திலிருப்பதாகக் கூறப்பட்டது.)* (33)

*சந்த்ரனுக்கொப்பானதுகளும், அழகிய குண்டலங்களை உடை யதுகளும், மங்களமானதுகளுமான அந்த ஸ்த்ரீகளின் முகங் களால் அந்த விமானுகாரமான கட்டிலானது நக்ஷத்ர கணங் களால் ஆகாமம்போல் ப்ரகாசித்தது.* (34)

*ஸம்போகத்தால் ம்ரமமடைந்தவர்களும், அழகிய இடையை உடையவர்களுமான ராக்ஷஸேந்த்ரனுடைய ஸ்த்ரீகள் அந்தந்த இடங்களில் தூங்கினுர்கள்.* (35)

अङ्गहारैस्तथैवान्या कोमलैर्नृत्तशालिनी ।
विन्यस्तशुभसर्वाङ्गी प्रसुप्ता वरवर्णिनी ॥ ३६

काचिद्वीणां परिष्वज्य प्रसुप्ता संप्रकाशते ।
महानदीप्रकीर्णेव नलिनी पोतमाश्रिता ॥ ३७

अन्या कक्षगतेनैव मड्डुकेनासितेक्षणा ।
प्रसुप्ता भामिनी भाति बालपुत्रेव वत्सला ॥ ३८

அங்கஹாரைஸ்ததைவான்யா கோமளைர்ந்ருத்தஶாலினீ ।
வின்யஸ்தஶுபஸர்வாங்கீ ப்ரஸுப்தா வரவர்ணினீ ॥ 36

காசித்வீணாம் பரிஷ்வஜ்ய ப்ரஸுப்தா ஸம்ப்ரகாஶதே ।
மஹாநதீப்ரகீர்ணேவ நளினீ போதமாஶ்ரிதா ॥ 37

அன்யா கக்ஷகதேனைவ மட்டுகேனாஸிதேக்ஷணா ।
ப்ரஸுப்தா பாமினீ பாதி பாலபுத்ரேவ வத்ஸலா ॥ 38

---

அழகிய அங்காபிநயங்களுடன் நர்த்தனம் செய்யும் ஸ்வபாவம் உள்ளவளும், படுக்கையில் அழகிய அங்கங்களை அழகாக வைத்துப் படுத்தவளும், சிறந்த நிறமுள்ளவளுமான மற்றொரு ஸ்த்ரீ அப்படியே தூங்கினாள்.

(இங்கு அங்காபிநயம் என்னும் பொருளைத்தரும் "अङ्गहार" எனும் பதத்துக்கு வ்யாக்யானம் பரதஶாஸ்த்ரத்தில்

अङ्गानां योग्यदेशेषु हरणेन यथोचितम् ।
अङ्गनिर्हरणीयत्वादङ्गहारस्तथोच्यते ॥

அங்கானாம் யோக்யதேஶேஷு ஹரணேன யதோசிதம் ।
அங்கநிர்ஹரணீயத்வாத் அங்கஹாரஸ்ததோச்யதே ॥

என்று சொல்லப்பட்டிருக்கிறது. தூங்கும்போது அங்காபிநயம் என்று குறிப்பிட்டது வாஸனாபலத்தால் அப்படி நடக்கிறாள் என்பது கருத்து.) (36)

மற்றொரு ஸ்த்ரீ வீணையை கட்டிக்கொண்டு நன்கு தூங்குகின்றவளாய், பெரிய நதியில் போகின்றதும் யத்ருச்சையாகவந்த தெப்பக்கட்டையை அடைந்ததுமான தாமரைக் கொடிபோல் நன்கு ப்ரகாசிக்கிறாள். (37)

கருவிழியாளான மற்றொரு ஸ்த்ரீ கழுக்கட்டை அடைந்த ம்ருதங்க வாத்யத்தால் ப்ரேமையுடன் இளம் குழந்தையை ஆலிங்கனம் செய்துகொண்டவள் போல் அழகுவாய்ந்தவளாய் ப்ரகாசிக்கிறாள். (38)

पटहं चारुसर्वाङ्गी पीड्य शेते शुभस्तनी ।
चिरस्य रमणं लब्ध्वा परिष्वज्येव भामिनी ॥ ३९

काचिद्वंशं परिष्वज्य सुप्ता कमललोचना ।
रहः प्रियतमं गृह्य सकामेव च कामिनी ॥ ४०

विपञ्चीं परिगृह्यान्या नियता नृत्तशालिनी ।
निद्रावशमनुप्राप्ता सहकान्तेव भामिनी ॥ ४१

अन्या कनकसंकाशैर्मृदुपीनैर्मनोरमैः ।
मृदङ्गं परिपीड्याङ्गैः प्रसुप्ता मत्तलोचना ॥ ४२

படஹம் சாருஸர்வாங்கீ பீட்ய ஶேதே ஶுபஸ்தனீ ।
சிரஸ்ய ரமணம் லப்த்வா பரிஷ்வஜ்யேவ பாமினீ ॥ 39

காசித்வம்ஶம் பரிஷ்வஜ்ய ஸுப்தா கமலலோசனா ।
ரஹ: ப்ரியதமம் க்ருஹ்ய ஸகாமேவ ச காமினீ ॥ 40

விபஞ்சீம் பரிக்ருஹ்யான்யா நியதா ந்ருத்தஶாலினீ ।
நித்ராவஶமனுப்ராப்தா ஸஹகாந்தேவ பாமினீ ॥ 41

அன்யா கனகஸம்காஶைர்ம்ருதுபீனைர்மனோரமை: ।
ம்ருதங்கம் பரிபீட்யாங்கை: ப்ரஸுப்தா மத்தலோசனா ॥ 42

---

அழகிய எல்லா அங்கங்களையும் உடையவளும், மங்களமான ஸ்தனங்களை உடையவளுமான அழகிய மற்றொரு ஸ்த்ரீ வெகு நாள் கழித்துவந்த தன் நாயகனை அடைந்து ஆலிங்கனம் செய்து கொண்டவள்போல் படஹ வாத்யத்தை அணைத்துக்கொண்டு தூங்குகிறாள். (39)

தாமரைபோன்ற கண்களை உடைய மற்றொரு ஸ்த்ரீ காமத்தை உடையவளாய்க்கொண்டு தனிமையில் தனக்கு இஷ்டமான நாயகனை அடைந்து இஷ்டத்தை பூர்த்திசெய்து கொண்டவள்போல் குழலைக்கட்டிக்கொண்டு தூங்குகிறாள். (40)

நர்த்தனம் செய்யும் ஸ்வபாவம் உள்ளவளும், அடக்கத்துடன் கூடியவளுமான மற்றொரு அழகிய ஸ்த்ரீ, ஏழு தந்திகளுடன் கூடிய விபஞ்சி எனும் வீணையைக் கட்டிக்கொண்டு தன் நாயகனோடு கூடி இருப்பவள்போல நித்ரைக்கு வஶமானாள். (41)

மதத்தோடு கூடிய கண்களை உடைய மற்றொரு ஸ்த்ரீ தங்க வர்ணம் போன்றதும், ம்ருதுவாயும், பெருத்தும் இருக்கிறதுகளும், மனதிற்கு ப்ரியத்தைக் கொடுக்கக்கூடியவைகளுமான அவயவங்களால் மத்தளத்தை அணைத்துக்கொண்டு நன்கு தூங்குகிறாள். (42)

भुजपार्श्वान्तरस्थेन कक्षगेन कृशोदरी ।
पणवेन सहानिन्द्या सुप्ता मदकृतश्रमा ॥ ४३
डिण्डिमं परिगृह्यान्या तथैवासक्तडिण्डिमा ।
प्रसुप्ता तरुणं वत्समुपगूह्येव भामिनी ॥ ४४
काचिदाडम्बरं नारी भुजसंयोगपीडितम् ।
कृत्वा कमलपत्राक्षी प्रसुप्ता मदमोहिता ॥ ४५
कलशीमपविध्यान्या प्रसुप्ता भाति भामिनी ।
वसन्ते पुष्पशबला मालेव परिमार्जिता ॥ ४६
पाणिभ्यां च कुचौ काचित्सुवर्णकलशोपमौ ।
उपगूह्याबला सुप्ता निद्राबलपराजिता ॥ ४७

புஜபார்ஸ்வாந்தரஸ்தேன கக்ஷகேன க்ருஸோதரீ ।
பணவேன ஸஹாநிந்த்யா ஸுப்தா மதக்ருதஸ்ரமா ॥ 43
டிண்டிமம் பரிக்ருஹ்யான்யா ததைவாஸக்தடிண்டிமா ।
ப்ரஸுப்தா தருணம் வத்ஸமுபகூஹ்யேவ பாமினீ ॥ 44
காசிதாடம்பரம் நாரீ புஜஸம்யோகபீடிதம் ।
க்ருத்வா கமலபத்ராக்ஷீ ப்ரஸுப்தா மதமோஹிதா ॥ 45
கலஸீமபவித்யான்யா ப்ரஸுப்தா பாதி பாமினீ ।
வஸந்தே புஷ்பஸபலா மாலேவ பரிமார்ஜிதா ॥ 46
பாணிப்யாம் ச குசௌ காசித்ஸுவர்ணகலஸோபமௌ ।
உபகூஹ்யாபலா ஸுப்தா நித்ராபலபராஜிதா ॥ 47

---

சுருங்கிய வயிற்றை உடையவளும், ஸம்போகத்தால் ஸ்ரமத்தை உடையவளும், ஸர்வாங்க ஸுந்தரியுமான மற்றொரு ஸ்த்ரீ கக்ஷத்திலிருக்கிற பணவ வாத்யத்துடன் தூங்குகிறாள். (43)

மற்றொரு அழகிய ஸ்த்ரீ டிண்டிமம் எனும் வாத்யத்தை வைத்துக்கொண்டு தூக்கத்தில் மற்றொரு டிண்டிமத்தை ஆலிங்கனம் செய்துகொண்டவளாய் இருந்துகொண்டு குழந்தையைக் கட்டிக்கொண்டு யுவாவான நாயகனை ஆலிங்கனம் செய்து கொண்டவள்போல நன்கு தூங்கினாள். (44)

மத்யபானத்தால் மோஹத்தை அடைந்தவளும், செந்தாமரை இதழ்போன்ற கண்களை உடையவளுமான மற்றொரு ஸ்த்ரீ ஆடம்பரம் என்ற தூர்ய வாத்ய விசேஷத்தை ஆலிங்கனம் செய்துகொண்டு நன்கு தூங்குகிறாள். (45)

தூங்கிக்கொண்டிருக்கும் அழகிய மற்றொரு ஸ்த்ரீ, ஜலமுள்ள குடத்தைக் கவிழ்த்து வஸந்த ஸமயத்தில் ஜலம் தெளிக்கப்பட்டதும், புஷ்பங்கள் நிறைந்ததுமான மாலைபோல் ப்ரகாசிக்கிறாள். (46)

தூக்கத்தின் வலுவால் ஜயிக்கப்பட்டவளான மற்றொரு ஸ்த்ரீ கைகளால் தங்கக்குடங்களுக்கு ஒப்பான ஸ்தனங்களை ஆலிங்கனம் செய்துகொண்டு தூங்குகிறாள். (47)

अन्या कमलपत्राक्षी पूर्णेन्दुसदृशानना ।
अन्यामालिङ्ग्य सुश्रोणीं प्रसुप्ता मदविह्वला ॥ ४८

आतोद्यानि विचित्राणि परिष्वज्य वरस्त्रियः ।
निपीड्य च कुचैः सुप्ताः कामिन्यः कामुकानिव ॥ ४९

तासामेकान्तविन्यस्ते शयानां शयने शुभे ।
ददर्श रूपसंपन्नामपरां स कपिः स्त्रियम् ॥ ५०

मुक्तामणिसमायुक्तैर्भूषणैः सुविभूषिताम् ।
विभूषयन्तीमिव तत्स्वश्रिया भवनोत्तमम् ॥ ५१

गौरीं कनकवर्णाङ्गीमिष्टामन्तःपुरेश्वरीम् ।
कपिर्मन्दोदरीं तत्र शयानां चारुरूपिणीम् ॥ ५२

அன்யா கமலபத்ராக்ஷீ பூர்ணேந்துஸத்ருஶானனா ।
அன்யாமாலிங்க்ய ஸுஶ்ரோணீம் ப்ரஸுப்தா மதவிஹ்வலா ॥

ஆதோத்யானி விசித்ராணி பரிஷ்வஜ்ய வரஸ்த்ரிய: ।
நிபீட்ய ச குசை: ஸுப்தா: காமின்ய: காமுகாநிவ ॥ 49

தாஸாமேகாந்தவின்யஸ்தே ஶயானாம் ஶயனே ஶுபே ।
ததர்ஶ ரூபஸம்பன்னாமபராம் ஸ கபி: ஸ்த்ரியம் ॥ 50

முக்தாமணிஸமாயுக்தைர்பூஷணை: ஸுவிபூஷிதாம் ।
விபூஷயந்தீமிவ தத்ஸ்வஶ்ரியா பவனோத்தமம் ॥ 51

கௌரீம் கனகவர்ணாங்கீமிஷ்டாமந்த:புரேஶ்வரீம் ।
கபிர்மந்தோதரீம் தத்ர ஶயானாம் சாருரூபிணீம் ॥ 52

---

செந்தாமரை இதழ்போன்ற கண்களை உடையவளும், பூர்ண சந்த்ரனுக்கு ஒப்பான முகத்தை உடையவளுமான மற்றொரு ஸ்த்ரீ மதத்தால் கலங்கியவளாய் இருந்துகொண்டு அழகிய பின் பாகத்தை உடையவளான மற்றொருவளை கட்டிக்கொண்டு தூங்கினாள். (48)

காமவேகம் கொண்ட சிறந்த மற்றும் சில ஸ்த்ரீகள் தன்னிடம் ஆசைகொண்டவர்களான நாயகர்களை அணைத்துக் கொண்டதுபோல் ஸ்தனங்களோடு பலவிதமான வாத்யங்களை இறுக அணைத்துக்கொண்டு தூங்கினர். (49)

அந்த ஹனுமார் அந்த ஸ்த்ரீகளை விட்டு விலகி தனியாக இருக்கின்ற அழகிய படுக்கையில் படுத்திருக்கின்ற ரூபத்தோடு கூடிய மற்றொரு ஸ்த்ரீயைப் பார்த்தார். (50)

முத்து, மணி இவைகளுடன் கூடிய ஆபரணங்களால் நன்கு அலங்கரிக்கப்பட்டவளும், தனது காந்தியால் அந்த படுக்கை

स तां दृष्ट्वा महाबाहुर्भूषितां मारुतात्मजः ।
तर्कयामास सीतेति रूपयौवनसंपदा ॥ ५३

हर्षेण महता युक्तो ननन्द हरियूथपः ।
[दृष्ट्वा सीतेति हृष्टोऽभूद्दीनश्चारित्रदर्शनात् ॥] ५४

आस्फोटयामास चुचुम्ब पुच्छं ननन्द चिक्रीड जगौ जगाम ।
स्तम्भानरोहन्निपपात भूमौ निदर्शयन्स्वां प्रकृतिं कपीनाम् ॥ ५५

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
दशमः सर्गः ॥ १० ॥

ஸ தாம் த்ருஷ்ட்வா மஹாபாஹுர்பூஷிதாம் மாருதாத்மஜ: ।
தர்க்கயாமாஸ ஸீதேதி ரூபயௌவனஸம்பதா ॥ 53

ஹர்ஷேண மஹதா யுக்தோ நநந்த ஹரியூதப: ।
[த்ருஷ்டா ஸீதேதி ஹ்ருஷ்டோऽபூத்தீனஶ்சாரித்ரதர்ஶனாத் ॥

ஆஸ்போடயாமாஸ சுசும்ப புச்சம்
நநந்த சிக்ரீட ஜகௌ ஜகாம ।
ஸ்தம்பானரோஹன்நிபபாத பூமௌ
நிதர்ஶயன்ஸ்வாம் ப்ரக்ருதிம் கபீனாம் ॥ 55

இத்யார்ஷே ஶ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே தஶம: ஸர்க: ॥

---

அறையை அலங்கரிப்பவள் போன்றவளும், தங்கநிறமுள்ளவளும், மெருகு கொடுத்த தங்கம் போன்ற அங்கங்களை உடையவளும், ராவணனுக்குப் பிடித்தவளும் அந்தப்புரத்திற்கு நாயகியும், அழகியரூபம் வாய்ந்தவளும், அலங்கரிக்கப்பட்டவளும், தூங்குகின்றவளுமான அந்த மந்தோதரியை, வாயுபுத்ரரும் பெருத்த கைகளை உடையருமான அந்த ஹனுமார் அழகு, யௌவனம் இந்த ஸம்பத்தால் மட்டிலும் ஸீதை என்று எண்ணினர்.

(அதாவது ஸீதை இவ்விதம் படுப்பாளா என்று யோசிக்காமல் அழகு, யௌவனம் இவற்றை மட்டும்கொண்டு தீர்மானித்தார் என்பது கருத்து.) (51 — 53)

மேலும் அந்த வானர ஶ்ரேஷ்டர் மிகுந்த ஸந்தோஷத்தோடு கூடியவராய் மேன்மேலும் ஆனந்தப்பட்டார். (54)

தோளைத்தட்டினர், வாலை முத்தமிட்டார், ஆனந்தக்களிப்பெய்தினர், கூத்தாடினர், மெள்ளப் பாடினர், உல்லாஸமாக நடந்தார், குரங்குகளின் இயற்கைக் குணத்தைக் காண்பிக்கின்றவராய் தூண்களில் ஏறி பூமியில் குதித்தார். (55)

பத்தாவது ஸர்கம் முற்றிற்று.

ஶ்ரீ:

एकादशः सर्गः — பதினோராவது ஸர்கம் ॥ ११ ॥

# “पानभूमिविचयः” — பானசாலையில் தேடுதல்.

अवधूय च तां बुद्धिं बभूवावस्थितस्तदा ।
जगाम चापरां चिन्तां सीतां प्रति महाकपिः ॥ १

न रामेण वियुक्ता सा स्वप्तुमर्हति भामिनी ।
न भोक्तुं नाप्यलंकर्तुं न पानमुपसेवितुम् ॥ २

नान्यं नरमुपस्थातुं सुराणामपि चेश्वरम् ।
नहि रामसमः कश्चिद्विद्यते त्रिदशेष्वपि ॥
अन्येयमिति निश्चित्य पानभूमौ चचार सः ॥ ३

அவதூய ச தாம் புத்திம் பபூவாவஸ்திதஸ்ததா ।
ஜகாம சாபராம் சிந்தாம் ப்ரதி மஹாகபி: ॥ 1

ந ராமேண வியுக்தா ஸா ஸ்வப்துமர்ஹதி பாமினீ ।
ந போக்தும் நாப்யலம்கர்த்தும் ந பானமுபஸேவிதும் ॥ 2

நான்யம் நரமுபஸ்தாதும் ஸுராணாமபி சேஶ்வரம் ।
நஹி ராமஸம: கஶ்சித்வித்யதே த்ரிதஶேஷ்வபி ॥
அன்யேயமிதி நிஶ்சித்ய பானபூமௌ சசார ஸ: ॥ 3

---

அப்பொழுது மஹாகபியான ஹனுமார் மண்டோதரியை ஸீதை என்று நினைத்த அந்த புத்தியை உதறித் தள்ளிவிட்டு கவலையற்றவராய் இருந்துகொண்டு ஸீதையைக் குறித்து வேறொரு சிந்தையை அடைந்தார்.

(இந்த ஶ்லோகத்தில் மஹாகபி என்றதற்கு 'பெரும் குரங்கு' என்று அர்த்தம். இப்படிச் சொன்னதற்குக் காரணம் ராவணனுடைய ஸமீபத்தில் ஸௌக்யமாய் நித்ரைசெய்யும் மண்டோதரியை ஸீதை என்று நினைத்ததே காரணம்.) (1)

அழகிய பதிவ்ரதையான அந்த ஸீதை ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்து நித்ரை செய்யமாட்டாள். சாப்பிடவும் மாட்டாள். அலங்காரமும் செய்துகொள்ள மாட்டாள். மதுபானமும் செய்ய மாட்டாள். தேவர்களுக்கு அதிபனான தேவேந்த்ரனையிலும் வேறு புருஷனை அடையமாட்டாள். தேவர்களிலும் ஸ்ரீராமருக்கு ஸமமானவர் கிடையாது. ஆகையால் இவள் வேறு ஸ்த்ரீயாக இருக்கவேண்டுமென்று நிஶ்சயித்து ஸ்ரீ ஹனுமார் பானபூமியில் ஸஞ்சரித்தார். (2, 3)

क्रीडितेनापराः क्लान्ता गीतेन च तथा पराः।
नृत्तेन चापराः क्लान्ताः पानविप्रहतास्तथा॥ ४

मुरवेषु मृदङ्गेषु पीठिकासु च संस्थिताः।
तथाऽऽस्तरणमुख्येषु संविष्टाश्चापराः स्त्रियः॥ ५

अङ्गनानां सहस्रेण भूषितेन विभूषणैः।
रूपसँल्लापशीलेन युक्तगीतार्थभाषिणा॥ ६

देशकालाभियुक्तेन युक्तवाक्याभिधायिना।
रताभिरतसंसुप्तं ददर्श हरियूथपः॥ ७

க்ரீடிதேனபரா: க்லாந்தா கீதேன ச ததா பரா:।
ந்ருத்தேன சாபரா: க்லாந்தா: பானவிப்ரஹதாஸ்ததா॥ 4

முரவேஷு ம்ருதங்கேஷு பீடிகாஸு ச ஸம்ஸ்திதா:।
ததாऽஸ்தரணமுக்யேஷு ஸம்விஷ்டாஶ்சாபரா: ஸ்த்ரிய:॥ 5

அங்கனானும் ஸஹஸ்ரேண பூஷிதேன விபூஷணை:।
ரூபஸல்லாபஶீலேன யுக்தகீதார்த்தபாஷிணு॥ 6

தேஶகாலாபியுக்தேன யுக்தவாக்யாபிதாயிணு।
ரதாபிரதஸம்ஸுப்தம் ததர்ஶ ஹரியூதப:॥ 7

---

*இந்த ஶ்லோகங்களால் பானபூமியில் பார்த்தவர்களைக் கூறுகிறார்.—*

*மற்றும் சில விளையாட்டினுல் வாடிய ஸ்த்ரீகளையும், கானத்தினுல் வாட்டமடைந்த சிலரையும், நர்த்தனத்தினுல் வாடிய சிலரையும், குடியினுல் வாடியவர்களையும், முறவமெனும் வாத்யங்களிலும், ம்ருதங்க வாத்யங்களிலும், சின்ன ஆஸனங்களிலும், அப்படியே உயர்ந்த விரிப்புகளிலும் இருந்துகொண்டே தூங்கும் மற்றும் சிலரையும், ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டதும், நித்ரையில் ஏற்பட்ட ப்ரமையினுல் தங்கள் தங்களுடைய ரூப விஷயமான வர்ணனையை ஶ்லாகித்துப் பேசிக்கொண்டிருப்பதும், தூங்கும் ஸமயத்திலும் கான ஶாஸ்த்ரத்தின் பொருளை பிழையில்லாமல் யுக்தமாய் பேசும் ஸ்வபாவமுள்ளதும், தேஶ காலத்திற்கு ஏற்றதாயும் யுக்தமாயுமிருக்கிற வார்த்தையைப் பேசுகிறதுமான ஆயிரக்கணக்கான ஸ்த்ரீகளின் கூட்டத்தோடு உள்ளும் புறமும் இரண்டிலும் ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய ஸ்த்ரீபோகத்தை அனுபவித்து தூங்கிக்கொண்டிருக்கும் ராவணனையும் அந்த வானர ஸேனைக்கு அதிபரான ஹனுமார் கண்டார்.* (4 — 7)

तासां मध्ये महाबाहुः शुशुभे राक्षसेश्वरः।
गोष्ठे महति मुख्यानां गवां मध्ये यथा वृषः॥ ८

स राक्षसेन्द्रः शुशुभे ताभिः परिवृतः स्वयम्।
करेणुभिर्यथाऽरण्ये परिकीर्णो महाद्विपः॥ ९

सर्वकामैरुपेतां च पानभूमिं महात्मनः।
ददर्श हरिशार्दूलस्तस्य रक्षःपतेर्गृहे॥ १०

मृगाणां महिषाणां च वराहाणां च भागशः।
तत्र न्यस्तानि मांसानि पानभूमौ ददर्श सः॥ ११

தாஸாம் மத்யே மஹாபாஹு: ஶுஶுபே ராக்ஷஸேஶ்வர: ।
கோஷ்டே மஹதி முக்யாநாம் கவாம் மத்யே யதா வ்ருஷ: ॥ 8

ஸ ராக்ஷஸேந்த்ர: ஶுஶுபே தாபி: பரிவ்ருத: ஸ்வயம் ।
கரேணுபிர்யதாऽரண்யே பரிகீர்ணோ மஹாத்விப: ॥ 9

ஸர்வகாமைருபேதாம் ச பானபூமிம் மஹாத்மன: ।
ததர்ஶ ஹரிஶார்தூலஸ்தஸ்ய ரக்ஷ:பதேர்க்ருஹே ॥ 10

ம்ருகாணாம் மஹிஷாணாம் ச வராஹாணாம் ச பாகஶ: ।
தத்ர ந்யஸ்தானி மாம்ஸானி பானபூமௌ ததர்ஶ ஸ: ॥ 11

---

*அப்படிப்பட்ட ஸ்த்ரீகளுடைய நடுவில் பெருத்த கைகளை உடையவனும், ராக்ஷஸ ஶ்ரேஷ்டனுமான ராவணன், பெரும் கொட்டிலில் சிறந்த பசுக்களின் நடுவில் காளைபோல் விளங்கினான்.* (8)

*அந்த ஸ்த்ரீகளால் சூழப்பட்ட அந்த ராக்ஷஸ ஶ்ரேஷ்டனை ராவணன் தான் பெண் யானைகளால் சூழப்பட்ட பெரும் கஜம் போல் விளங்கினான்.* (9)

*கபிஶ்ரேஷ்டரான ஹனுமார் எல்லா போக்ய வஸ்துக்களாலும் நிரம்பிய பானஶாலையையும், ராக்ஷஸாதிபதியும் மஹாத்மாவுமான அந்த ராவணனுடைய வீட்டில் பார்த்தார்.*

*(இங்கு ராவணனை மஹாத்மா எனக் குறிப்பிட்டது* **"दानेन भोगो भवति"** "தானேன போகோ பவதி" *என்று ஸ்ரீ மஹாபாரதம் விதுர நீதியில் சொல்லிய வசனப்படி ராவணனுடைய தானத்தால் அவனுக்குக் கிடைத்திருக்கும் ஸகல ஸம்ருத்திகளையும் எடுத்துக் காட்டுவதற்கேயாகும்.)* (10)

*மேலும் அந்த ஹனுமார், அங்கு பிரித்து தனித்தனியே வைக்கப்பட்டிருக்கும் மான், எருமை, பன்றி இவைகளுடைய மாம்ஸங்களையும் பார்த்தார்.* (11)

रौक्मेषु च विशालेषु भाजनेष्वर्धभक्षितान्।
ददर्श हरिशार्दूलो मयूरान्कुक्कुटांस्तथा॥ १२
वराहवार्ध्राणसकान्दधिसौवर्चलायुतान्।
शल्यान्मृगमयूरांश्च हनुमानन्ववैक्षत॥
क्रकरान्विविधान्सिद्धांश्चकोरानर्धभक्षितान्॥ १३
महिषानेकशल्यांश्च छागांश्च कृतनिष्ठितान्।
लेह्यानुच्चावचान्पेयान्भोज्यानि विविधानि च॥ १४
तथाऽऽम्ललवणोत्तंसैर्विविधै रागषाडवैः।
हारनूपुरकेयूरैरपविद्धैर्महाधनैः॥ १५

ரௌக்மேஷு ச விஶாலேஷு பாஜனேஷ்வர்தபக்ஷிதான்।
ததர்ஶ ஹரிஶார்தூலோ மயூரான்குக்குடாம்ஸ்ததா॥ 12
வராஹவார்த்ராணஸகான்ததிஸௌவர்சலாயுதான்।
ஶல்யான்ம்ருகமயூராம்ஶ்ச ஹநுமானன்வவைக்ஷத॥
க்ரகரான்விவிதான்ஸித்தாம்ஶ்சகோரானர்த்தபக்ஷிதான்॥ 13
மஹிஷானேகஶல்யாம்ஶ்ச சாகாம்ஶ்ச க்ருதநிஷ்டிதான்।
லேஹ்யானுச்சாவசான்பேயான்போஜ்யானி விவிதானி ச॥ 14
ததாऽऽம்லலவணோத்தம்ஸைர்விவிதை ராகஷாடவை:।
ஹாரநூபுரகேயூரைரபவித்தைர்மஹாதனை:॥ 15

---

ஹரிஶ்ரேஷ்டரான ஹநுமார் அகலமுள்ள தங்கமயமான பாத்ரங்களில் பாதி சாப்பிடப்பட்டு மீதி வைக்கப்பட்ட மயில்களேயும், கோழிகளேயும், அப்படியே தயிர் ஸௌவர்ச்சலம் எனும் ஒருவகை உப்பு இவைகளே கலந்து செய்யப்பட்ட பன்றிகளேயும், விஷ்ணு தர்மத்தில் கூறியபடி கறுத்த கழுத்தும், சிவந்த தலேயும், வெளுத்த இறக்கைகளுமுள்ள வார்த்ராணஸம் என்ற ஒருவகை பக்ஷிகளேயும், முள்ளம்பன்றி, மான், மயில் இவைகளேயும், பலவிதமான பக்வம் செய்யப்பட்ட க்ரகரமென்ற பக்ஷிகளேயும், பாதி சாப்பிட்டு மீதிவைக்கப்பட்ட சகோர பக்ஷிகளேயும் ஹநுமார் கண்டார்.

(இங்கு பலதடவை "மான் முதலிய ம்ருகங்களின் மாம்ஸங்களே" என்றது தேச பேதங்களில் ம்ருக பாஹுல்யத்தைக் குறிப்பிடுவதற்காகும்.) (12, 13)

மேலும் அங்கு எருமைகடா, ஒரு முள்உள்ள மத்ஸ்யம் இவைகளேயும், நன்கு பக்வம் செய்யப்பட்ட ஆடுகளேயும், நக்கிச் சாப்பிடக்கூடியவைகளேயும், உயர்ந்த பானம் செய்யக்கூடிய பொருள்களேயும், பலவகைப்பட்ட புஜிக்கக்கூடிய வஸ்துக்களேயும் இந்த யாவற்றையும் ஹநுமார் கண்டார். (14)

அப்படியே புளிப்பு உப்பு இவை அதிகமான பதார்த்தங்களா

पानभाजनविक्षिप्तैः फलैश्च विविधैरपि।
कृतपुष्पोपहारा भूरधिकं पुष्यति श्रियम्॥ १६

तत्र तत्र च विन्यस्तैः सुश्लिष्टैः शयनासनैः।
पानभूमिर्विना वह्निं प्रदीप्तेवोपलक्ष्यते॥ १७

बहुप्रकारैर्विविधैर्वरसंस्कारसंस्कृतैः।
मांसैः कुशलसंयुक्तैः पानभूमिगतैः पृथक्॥ १८

दिव्याः प्रसन्ना विविधाः सुराः कृतसुरा अपि।
शर्करासवमाध्वीकपुष्पासवफलासवाः॥ १९

वासचूर्णैश्च विविधैर्दृष्टास्तैस्तैः पृथक् पृथक्।
सन्तता शुशुभे भूमिर्माल्यैश्च बहुसंस्थितैः॥ २०

பானபாஜனவிக்ஷிப்தை: பலைஶ்ச விவிதைரபி।
க்ருதபுஷ்போபஹாரா பூரதிகம் புஷ்யதி ஶ்ரியம்॥ 16

தத்ர தத்ர ச வின்யஸ்தை: ஸுஶ்லிஷ்டை: ஶயநாஸனை:।
பானபூமிர்விநா வன்ஹிம் ப்ரதீப்தேவோபலக்ஷ்யதே॥ 17

பஹுப்ரகாரைர்விவிதைர்வரஸம்ஸ்காரஸம்ஸ்க்ருதை:।
மாம்ஸை: குஶலஸம்யுக்தை: பானபூமிகதை: ப்ருதக்॥ 18

திவ்யா: ப்ரஸன்னா விவிதா: ஸுரா: க்ருதஸுரா அபி।
ஶர்கராஸவமாத்வீகபுஷ்பாஸவபலாஸவா:॥ 19

வாஸசூர்ணைஶ்ச விவிதைர்த்ருஷ்டாஸ்தைஸ்தை: ப்ருதக் ப்ருதக்।
ஸந்ததா ஶுஶுபே பூமிர்மால்யைஶ்ச பஹுஸம்ஸ்திதை:॥ 20

---

*லும், பலவிதமான வெண்கடுகோடு கூடிய ஆறுவித ரஸங்களுடன் கூடிய பக்ஷணங்களாலும், விலையுயர்ந்தவைகளும் நழுவினதுகளுமான முக்தாஹாரங்கள், தண்டைகள், தோள்வளைகள் இவற்றாலும், பானபாத்ரங்களில் சிதறிக்கிடந்த பலவகை பழங்களாலும், புஷ்பங்களாலும் பூஜிக்கப்பட்ட பூமியானது அதிகமான சோபையை வ்ருத்திசெய்கிறது.* (15, 16)

*நன்கு அமைக்கப்பட்டதுகளும், ஆங்காங்கு வைக்கப்பட்டதுகளுமான படுக்கைகளுடன் கூடிய கட்டில்களாலும் பானசாலையானது நெருப்பில்லாமலே ப்ரகாசிப்பதுபோல் தென்படுகிறது.* (17)

*பலவகை ரஸமுள்ளவைகளும், பலவகைப்பட்டவைகளும் சிறந்த சமையற்காரர்களால் சமைக்கப்பட்டவைகளும், கொண்டாடும்படிக்கு உப்பு உறப்புகள் சேர்க்கப்பட்டவைகளும், தனித்*

हिरण्मयैश्च विविधैर्भाजनैः स्फाटिकैरपि ।
जाम्बूनदमयैश्चान्यैः करकैरभिसंवृता ॥ २१

राजतेषु च कुम्भेषु जाम्बूनदमयेषु च ।
पानश्रेष्ठं तदा भूरि कपिस्तत्र ददर्श सः ॥ २२

सोऽपश्यच्छातकुम्भानि शीधोर्मणिमयानि च ।
राजतानि च पूर्णानि भाजनानि महाकपिः ॥ २३

क्वचिदर्धावशेषाणि क्वचित्पीतानि सर्वशः ।
क्वचिन्नैव प्रपीतानि पानानि च ददर्श ह ॥ २४

ஹிரண்மயைஶ்ச விவிதைர்பாஜனை: ஸ்பாடிகைரபி ।
ஜாம்பூநதமயைஶ்சான்யை: கரகைரபிஸம்வ்ருதா ॥ 21

ராஜதேஷு ச கும்பேஷு ஜாம்பூநதமயேஷு ச ।
பானஶ்ரேஷ்டம் ததா பூரி கபிஸ்தத்ர ததர்ஶ ஸ: ॥ 22

ஸோऽபஶ்யச்சாதகும்பானி ஶீதோர்மணிமயானி ச ।
ராஜதானி ச பூர்ணானி பாஜனானி மஹாகபி: ॥ 23

க்வசிதர்தாவஶேஷாணி க்வசித்பீதானி ஸர்வஶ: ।
க்வசின்னைவ ப்ரபீதானி பானானி ச ததர்ஶ ஹ ॥ 24

---

தனியாக பானபூமியில் இருக்கின்றதுகளுமான மாம்ஸங்களோடு கூடிய அம்ருதமதன காலத்திலுண்டான வாருணீ என்ற மத்ய வகையைச் சேர்ந்த கள்ளுகளும், தெளிவானதுகளும், காய்ச்சப் பட்டதுகளும், தேனினல் செய்யப்பட்டவைகளும், பழரஸங் களால் செய்யப்பட்டவைகளுமான கள்ளுகள் தனித்தனியாக பலவகைப்பட்ட அந்தந்த வாஸனைப் பொடியுடன் கூடியவை களாகக் காணப்பட்டன. பல இடங்களில் வைக்கப்பட்ட புஷ்பங்களால் இடைவிடாது நிரம்பி இருக்கிறதும், பலவகைப் பட்ட தங்கப் பாத்திரங்களாலும், ஸ்படிகப் பாத்திரங்களாலும், பொன்னினல் செய்யப்பட்ட குடங்களாலும் நன்கு சூழப் பட்டதுமான பூமியானது நன்கு ப்ரகாசித்தது. (18 — 21)

அங்கு அந்த ஹனுமார் வெள்ளிக் குடங்களிலும், தங்கக் குடங்களிலும் நிரம்பியிருந்த கள்ளை அப்பொழுது கண்டார். (22)

அந்த ஹனுமார் கள்நிரம்பிய தங்கக் குடங்களையும், ரத்னக் குடங்களையும், வெள்ளிக் குடங்களையும் கண்டார். (23)

ஓரிடத்தில் பாதி குடித்து மிஞ்சியதுகளும், ஓரிடத்தில் முழுமையும் குடிக்கப்பட்டதுகளும், ஓரிடத்தில் குடிக்கப்படாத வைகளுமான பானங்களை அந்த ஹனுமார் கண்டார். (24)

क्वचिद्भक्ष्यांश्च विविधान्क्वचित्पानानि भागशः ।
क्वचिदन्नावशेषाणि पश्यन्वै विचचार ह ॥ २५

क्वचित्प्रभिन्नैः करकैः क्वचिदालोलितैर्घटैः ।
क्वचित्संपृक्तमाल्यानि जलानि च फलानि च ॥ २६

शयनान्यत्र नारीणां शुभ्राणि बहुधा पुनः ।
परस्परं समाश्लिष्य काश्चित्सुप्ता वराङ्गनाः ॥ २७

काश्चिच्च वस्त्रमन्यस्याः स्वपन्त्याः परिधाय च ।
आहृत्य चाबलाः सुप्ता निद्राबलपराजिताः ॥ २८

तासामुच्छ्वासवातेन वस्त्रं माल्यं च गात्रजम् ।
नात्यर्थं स्पन्दते चित्रं प्राप्य मन्दमिवानिलम् ॥ २९

க்வசித்பக்ஷ்யாம்ஶ்ச விவிதான்க்வசித்பாநானி பாகஶ: ।
க்வசிதன்னவஶேஷாணி பஶ்யந்வை விசசார ஹ ॥ 25
க்வசித்ப்ரபின்னை: கரகை: க்வசிதாலோலிதைர்கடை: ।
க்வசித்ஸம்ப்ருக்தமால்யானி ஜலானி ச பலானி ச ॥ 26
ஶயநான்யத்ர நாரீணாம் ஶுப்ராணி பஹுதா புன: ।
பரஸ்பரம் ஸமாஶ்லிஷ்ய காஶ்சித்ஸுப்தா வராங்கனா: ॥ 27
காஶ்சிச்ச வஸ்த்ரமன்யஸ்யா: ஸ்வபந்த்யா: பரிதாய ச ।
ஆஹ்ருத்ய சாபலா: ஸுப்தா நித்ராபலபராஜிதா: ॥ 28
தாஸாமுச்ச்வாஸவாதேன வஸ்த்ரம் மால்யம் ச காத்ரஜம் ।
நாத்யர்த்தம் ஸ்பந்ததே சித்ரம் ப்ராப்ய மந்தமிவானிலம் ॥ 29

---

ஓரிடத்தில் பலவகைப்பட்ட பக்ஷணங்களேயும், ஓரிடத்தில் பிரித்துவைக்கப்பட்ட பானங்களேயும், ஓரிடத்தில் சாப்பிட்டு மீதமுள்ள அன்னங்களேயும் பார்த்துக்கொண்டு ஸஞ்சரித்தார். (25)

ஓரிடத்தில் உடைந்த குடங்களோடு கூடியதாகவும், ஓரிடத்தில் ததும்பிய குடங்களோடு கூடியதாகவும், ஓரிடத்தில் புஷ்பமாலைகள் நிரம்பியதாகவுமுள்ள ஜலங்களேயும், பழங்களேயும் கண்டார். (26)

மறுபடியும் அந்த இடத்தில் நன்கு வெண்மை நிறமுள்ள ஸ்த்ரீகளின் படுக்கைகளேயும் சிறந்த அங்கங்களுடன் கூடிய சில பெண்கள் ஒருவர்க்கொருவர் ஆலிங்கனம் செய்துகொண்டு தூங்குவதையும் கண்டார். (27)

நித்ரையின் வேகத்தால் பரவசர்களான ஸ்த்ரீகள் தூங்குகின்ற மற்றொருவளின் வஸ்த்ரத்தை இழுத்துக் கட்டிக்கொண்டு தூங்குவதையும் கண்டார். (28)

அவர்களுடைய மூச்சுக்காற்ருல் சரீரத்திலுள்ள வஸ்த்ரம், மாலை இவை மந்தமாருதத்தை அடைந்தது போல் ரொம்பவும் அசையவில்லை. இது என்ன ஆச்சர்யம்! (29)

चन्दनस्य च शीतस्य शीधोर्मधुरसस्य च ।
विविधस्य च माल्यस्य धूपस्य विविधस्य च ॥
बहुधा मारुतस्तत्र गन्धं विविधमुद्वहन् ॥ ३०
रसानां चन्दनानां च धूपानां चैव मूर्छितः ।
प्रववौ सुरभिर्गन्धो विमाने पुष्पके तदा ॥ ३१
श्यामावदातास्तत्रान्याः काश्चित्कृष्णा वराङ्गनाः ।
काश्चित्काञ्चनवर्णाङ्ग्यः प्रमदा राक्षसालये ॥ ३२
तासां निद्रावशत्वाच्च मदनेन विमूर्छितम् ।
पद्मिनीनां प्रसुप्तानां रूपमासीद्यथैव हि ॥ ३३
एवं सर्वमशेषेण रावणान्तःपुरं कपिः ।
ददर्श सुमहातेजा न ददर्श च जानकीम् ॥ ३४

சந்தனஸ்ய ச ஶீதஸ்ய ஶீதோர்மதுரஸஸ்ய ச ।
விவிதஸ்ய ச மால்யஸ்ய தூபஸ்ய விவிதஸ்ய ச ॥
பஹுதா மாருதஸ்தத்ர கந்தம் விவிதமுத்வஹன் ॥ 30
ரஸாநாம் சந்தநாநாம் ச தூபாநாம் சைவ மூர்ச்சித: ।
ப்ரவவௌ ஸுரபிர்கந்தோ விமானே புஷ்பகே ததா ॥ 31
ஶ்யாமாவதா: தத்ரான்யா: காஶ்சித்க்ருஷ்ணா வராங்கநா: ।
காஶ்சித்காஞ்சனவர்ணாங்க்ய: ப்ரமதா ராக்ஷஸாலயே ॥ 32
தாஸாம் நித்ராவஶத்வாச்ச மதனேன விமூர்ச்சிதம் ।
பத்மினீநாம் ப்ரஸுப்தாநாம் ரூபமாஸீத்யதைவ ஹி ॥ 33
ஏவம் ஸர்வமஶேஷேண ராவணாந்த:புரம் கபி: ।
ததர்ஶ ஸுமஹாதேஜா ந ததர்ஶ ச ஜானகீம் ॥ 34

---

பானசாலையிலிருந்து திரும்புகையில் மறுபடி புஷ்பகத்தைப் பார்த்ததை வர்ணிக்கிறார்.

அந்த இடத்தில் காற்றானது குளிர்ந்த சந்தனத்தினுடையவும் இனிமையான கள்ளினுடையவும் பலவகையான புஷ்பமாலைகளுடையவும் பலவகை தூபத்தினுடையதுமான பல வாஸனைகளை தாங்கிக்கொண்டு இருந்ததோடு ரஸங்களுடையவும் சந்தனத்தினுடையவும் தூபங்களுடையதுமான நல்ல வாஸனையானது பரவிக்கொண்டு அப்பொழுது அந்த விமானத்தில் வீசியது. (30, 31)

அங்கு ராக்ஷஸக்ருஹத்தில் நீலவர்ணமுள்ளவர்களும் வெண்நிறமுள்ளவர்களும் கறுப்புநிறமுள்ளவர்களும் தங்க நிறமுள்ளவர்களுமான உத்தம ஸ்த்ரீகள் தூங்கினர். (32)

நித்ரைக்கு வசப்பட்டிருப்பதாலும் காமத்தாலும் வாடிய அந்த ஸ்த்ரீகளின் ரூபமானது இரவில் மொட்டிட்ட தாமரைகளின் ரூபம்போல் ப்ரகாசமாகவே இருந்தது. (33)

மஹாதேஜஸ்வியான அந்த ஹனுமார் இப்படி ராவணனு

निरीक्षमाणश्च तदा ताः स्त्रियः स महाकपिः ।
जगाम महतीं चिन्तां धर्मसाध्वसशङ्कितः ॥ ३५
परदारावरोधस्य प्रसुप्तस्य निरीक्षणम् ।
इदं खलु ममात्यर्थं धर्मलोपं करिष्यति ॥ ३६
नहि मे परदाराणां दृष्टिर्विषयवर्तिनी ।
अयं चात्र मया दृष्टः परदारपरिग्रहः ॥ ३७
तस्य प्रादुरभूच्चिन्ता पुनरन्या मनस्विनः ।
निश्चितैकान्तचित्तस्य कार्यनिश्चयदर्शिनी ॥ ३८
कामं दृष्टा मया सर्वा विश्वस्ता रावणस्त्रियः ।
न हि मे मनसः किंचिद्वैकृत्यमुपपद्यते ॥ ३९

நிரீக்ஷமாணஸ்ச ததா தா: ஸ்த்ரிய: ஸ மஹாகபி: ।
ஜகாம மஹதீம் சிந்தாம் தர்மஸாத்வஸஸங்கித: ॥ 35
பரதாராவரோதஸ்ய ப்ரஸுப்தஸ்ய நிரீக்ஷணம் ।
இதம் கலு மமாத்யர்த்தம் தர்மலோபம் கரிஷ்யதி ॥ 36
நஹி மே பரதாராணும் த்ருஷ்டிர்விஷயவர்த்தினீ ।
அயம் சாத்ர மயா த்ருஷ்ட: பரதாரபரிக்ரஹ: ॥ 37
தஸ்ய ப்ராதுரபூச்சிந்தா புனரன்யா மனஸ்வின: ।
நிஸ்சிதைகாந்தசித்தஸ்ய கார்யநிஸ்சயதர்ஸினீ ॥ 38
காமம் த்ருஷ்டா மயா ஸர்வா விஸ்வஸ்தா ராவணஸ்த்ரிய: ।
ந ஹி மே மனஸ: கிம்சித்வைக்ருத்யமுபபத்யதே ॥ 39

---

டைய அந்த:புரம் முழுவதையும் மீதமில்லாமல் பார்த்தார். ஜானகியைமட்டும் காணவில்லை. (34)

அப்பொழுது மஹாகபியான அந்த ஹனுமார் அந்த ஸ்த்ரீகளைப் பார்த்துக்கொண்டு தர்மத்துக்கு லோபம் வந்துவிடுமோ என்ற பயத்தால் கவலையடைந்து பெருத்த யோசனையை அடைந்தார். (35)

தூங்குகின்ற பிறருடைய மனைவியைப் பார்த்தலானது எனது தர்மத்துக்குக் குறைவைச் செய்யப் போகிறது. (36)

எனது பார்வையானது பிறர் மனைவிகளைக் கண்டதில்லை. இங்கு பிறர் மனைவிகள் என்னால் பார்க்கப்பட்டனர். (37)

மனஸ்வியும் எப்பொழுதும் ஒரேவித எண்ணமுள்ளவருமான அந்த ஹனுமாருக்கு மறுபடியும் இந்த கார்யத்தைச் செய்வது, இந்த கார்யத்தைச் செய்யக் கூடாது என தீர்மானத்தைக் கண்ட மற்றொரு எண்ணம் தோன்றிற்று. (38)

ராவணனுடைய எல்லா ஸ்த்ரீகளும் என்னால் பார்க்கப்பட்டனர். என் மனதுக்கு கொஞ்சமும் மாறுதல் ஏற்படவில்லை. (39)

मनो हि हेतुः सर्वेषामिन्द्रियाणां प्रवर्तने ।
शुभाशुभास्ववस्थासु तच्च मे सुव्यवस्थितम् ॥ ४०

नान्यत्र हि मया शक्या वैदेही परिमार्गितुम् ।
स्त्रियो हि स्त्रीषु दृश्यन्ते सदा संपरिमार्गणे ॥ ४१

यस्य सत्त्वस्य या योनिस्तस्यां तत्परिमार्ग्यते ।
न शक्या प्रमदा नष्टा मृगीषु परिमार्गितुम् ॥ ४२

तदिदं मार्गितं तावच्छुद्धेन मनसा मया ।
रावणान्तःपुरं सर्वं दृश्यते न च जानकी ॥ ४३

மநோ ஹி ஹேது: ஸர்வேஷாமிந்த்ரியாணாம் ப்ரவர்த்தநே ।
ஶுபாஶுபாஸ்வவஸ்தாஸு தச்ச மே ஸுவ்யவஸ்திதம் ॥ **40**

நான்யத்ர ஹி மயா ஶக்யா வைதேஹீ பரிமார்கிதும் ।
ஸ்த்ரியோ ஹி ஸ்த்ரீஷு த்ருஶ்யந்தே ஸதா ஸம்பரிமார்கணே ॥

யஸ்ய ஸத்வஸ்ய யா யோநி: தஸ்யாம் தத்பரிமார்க்யதே ।
ந ஶக்யா ப்ரமதா நஷ்டா ம்ருகீஷு பரிமார்கிதும் ॥ **42**

ததிதம் மார்கிதம் தாவச்சுத்தேந மநஸா மயா ।
ராவணாந்த:புரம் ஸர்வம் த்ருஶ்யதே ந ச ஜாநகீ ॥ **43**

---

புண்ய பாபகார்யங்களில் எல்லா இந்த்ரியங்களையும் தூண்டுவதற்கு மனதல்லவா காரணம். அந்த என் மனதோ நிலைத்திருக்கிறது. (40)

இன்னும் மஹாராஜாவின் தூதனாக வந்த தான் செய்த கார்யம் தப்பில்லை என்பதை இதனால் எடுத்துச் சொல்லுகிறார்.

நான் ஸீதையை வேறு இடத்தில் தேட முடியாது. ஏனெனில் ஸ்த்ரீகள் ஸ்த்ரீகளிருக்குமிடங்களில்தான் எப்பொழுதும் காணப்படுவார்கள். (41)

எந்த ப்ராணி எந்த ஜாதியைச் சேர்ந்ததோ அங்கேதான் அது காணப்படும். ஸ்த்ரீயைக் காணவில்லை என்றால் பெண் மான்களுள்ள இடத்தில் தேட முடியாது. (42)

(அதனால் ராவணனுடைய அந்த:புரத்தில் ஸீதையைத் தேடினேன் என்பது கருத்து.)

ஆகையால் ஶுத்தமான மனதோடு ராவணனுடைய அந்த:புரம் முழுவதையும் தேடினேன். ஆனால் ஜனகபுத்ரியான ஸீதை காணப்படவில்லை. (43)

देवगन्धर्वकन्याश्च नागकन्याश्च वीर्यवान् ।
अवेक्षमाणो हनुमान्नैवापश्यत जानकीम् ॥ ४४

तामपश्यन्कपिस्तत्र पश्यंश्चान्या वरस्त्रियः ।
अपक्रम्य तदा वीरः प्रध्यातुमुपचक्रमे ॥ ४५

स भूयस्तु परं श्रीमान्मारुतिर्यत्नमास्थितः ।
आपानभूमिमुत्सृज्य तद्विचेतुं प्रचक्रमे ॥ ४६

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
एकादशः सर्गः ॥ ११ ॥

தேவகந்தர்வகன்யாஸ்ச நாககன்யாஸ்ச வீர்யவான் ।
அவேக்ஷமாணோ ஹநுமான்நைவாபஸ்யத ஜானகீம் ॥ **44**

தாமபஸ்யன்கபிஸ்தத்ர பஸ்யம்ஸ்சான்யா வரஸ்த்ரிய: ।
அபக்ரம்ய ததா வீர: ப்ரத்யாதுமுபசக்ரமே ॥ **45**

ஸ பூயஸ்து பரம் ஸ்ரீமான்மாருதிர்யத்னமாஸ்தித: ।
ஆபானபூமிமுத்ஸ்ருஜ்ய தத்விசேதும் ப்ரசக்ரமே ॥ **46**

*இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே ஏகாதஸ: ஸர்க: ॥*

---

*வீர்யவானான ஹநுமார் தேவகன்னிகைகளையும் கந்தர்வ கன்னிகைகளையும் நாககன்னிகைகளையும் பார்க்கின்றவராகி ஸீதையைமட்டும் பார்க்கவில்லை.* (44)

*அங்கு வீரரான அந்த ஹநுமார் ஸீதையைக் காணமல்மற்ற சிறந்த ஸ்த்ரீகளை பார்க்கின்றவராய் அப்பொழுது சற்று வெளியே நகர்ந்து ஆழ்ந்து ஆலோசிக்க ஆரம்பித்தார்.* (45)

*ஸ்ரீமானும் வாயுபுத்ரனுமான அந்த ஹநுமார் பானசாலையை விட்டு வெளியே சென்று மறுபடியும் பெருமுயற்சி கொண்டவராய் அந்த ஸீதையை வேறு இடத்தில் தேட ஆரம்பித்தார்.* (46)

*பதினோராவது ஸர்கம் முற்றிற்று.*

---

ஶ்ரீ:

द्वादशः सर्गः — பன்னிரண்டாவது ஸர்கம் ॥ १२ ॥

# "हनूमद्विषादः" — ஹனுமாரின் துக்கம்.

स तस्य मध्ये भवनस्य मारुतिर्लतागृहांश्चित्रगृहान्निशागृहान् ।
जगाम सीतां प्रति दर्शनोत्सुको न चैव तां पश्यति चारुदर्शनाम् ॥ १

स चिन्तयामास ततो महाकपिः प्रियामपश्यन्रघुनन्दनस्य ताम् ।
ध्रुवं हि सीता म्रियते यथा न मे विचिन्वतो दर्शनमेति मैथिली ॥ २

ஸ தஸ்ய மத்யே பவனஸ்ய மாருதிர்
லதாக்ருஹாம்ஶ்சித்ரக்ருஹான்நிஶாக்ருஹான் ।
ஜகாம ஸீதாம் ப்ரதி தர்ஶனோத்ஸுகோ
ந சைவ தாம் பஶ்யதி சாருதர்ஶனாம் ॥ 1

ஸ சிந்தயாமாஸ ததோ மஹாகபி:
ப்ரியாமபஶ்யன்ரகுநந்தனஸ்ய தாம் ।
த்ருவம் ஹி ஸீதா ம்ரியதே யதா ந மே
விசின்வதோ தர்ஶனமேதி மைதிலீ ॥ 2

---

*மிகத்தேடியும் ஸீதையைக் காணமல் கவலை கொண்டவராய் திரும்பத்திரும்ப தேடிய இடத்தையே தேடினார் என்பதை இதனால் சொல்லுகிறார்:-*

அந்த வாயுபுத்ரரான ஹனுமார் அந்த ராவணனுடைய மாளிகையின் மத்தியில் கொடிகளாலான வீடுகளையும், ச்ருங்காரமான வீடுகளையும், இரவில் தூங்குவதற்கான வீடுகளையும் அடைந்தார். ஸீதையைப் பார்க்கவேண்டுமென்ற விருப்பம் கொண்ட அவர் அழகிய பார்வையை உடையவளான அவளை மட்டும் பார்க்கவில்லை. (1)

பிறகு அந்த மஹாகபியான ஹனுமார் ராகவனுடைய பத்னியான அந்த ஸீதையைக் காணாதவராகி நிஸ்சயமாகவே ஸீதை மரித்திருந்தால் எப்படி தென்படமாட்டாளோ அப்படி எனக்கு இதுவரை காணப்படவில்லையே என்று எண்ணி மிகக்கவலை கொண்டார். (2)

सा राक्षसानां प्रवरेण जानकी स्वशीलसंरक्षणतत्परा सती ।
अनेन नूनं प्रतिदुष्टकर्मणा हता भवेदार्यपथे परे स्थिता ॥ ३

विरूपरूपा विकृता विवर्चसो महानना दीर्घविरूपदर्शनाः ।
समीक्ष्य सा राक्षसराजयोषितो भयाद्विनष्टा जनकेश्वरात्मजा ॥ ४

सीतामदृष्ट्वा ह्यनवाप्य पौरुषं विहृत्य कालं सह वानरैश्चिरम् ।
न मेऽस्ति सुग्रीवसमीपगा गतिः सुतीक्ष्णदण्डो बलवांश्च वानरः ॥ ५

ஸா ராக்ஷஸானாம் ப்ரவரேண ஜானகீ
ஸ்வஶீலஸம்ரக்ஷணதத்பரா ஸதீ ।
அனேன நூனம் ப்ரதிதுஷ்டகர்மணா
ஹதா பவேதார்யபதே பரே ஸ்திதா ॥ 3

விரூபரூபா விக்ருதா விவர்சஸோ
மஹானனா தீர்கவிரூபதர்ஶனா: ।
ஸமீக்ஷ்ய ஸா ராக்ஷஸராஜயோஷிதோ
பயாத்விநஷ்டா ஜனகேஶ்வராத்மஜா ॥ 4

ஸீதாமத்ருஷ்ட்வா ஹ்யனவாப்ய பௌருஷம்
விஹ்ருத்ய காலம் ஸஹ வானரைஶ்சிரம் ।
ந மேऽஸ்தி ஸுக்ரீவஸமீபகா கதி:
ஸுதீக்ஷ்ணதண்டோ பலவாம்ஶ்ச வானர: ॥ 5

---

*கவலையின் ப்ரகாரங்களைச் சொல்லுகிறார்:-*

*மிகச்சிறந்த முன்னோர்களின் வழியில் இருப்பவளும், பதிவ்ரதையும் ஜனகபுத்ரியும் தன் பதிவ்ரதாதர்மத்தைக் காப்பாற்றிக் கொள்வதில் ஈடுபட்டவளுமான அந்த ஸீதை ராக்ஷஸர்களுள் சிறந்தவனும் கெட்ட கார்யத்தையே செய்கிறவனுமான இந்த ராவணனால் நிஶ்சயம் கொல்லப்பட்டிருப்பாள்.* (3)

*அந்த ஜனகபுத்ரியான ஸீதை கைகால் முதலிய சில அவயவங்களற்றவர்களும் விகாரமான வேஷங்கள் உள்ளவர்களும் பெருத்த முகத்தை உடையவர்களும் நீண்டதுகளும் விகாரமான துகளுமான பார்வையை உடையவர்களுமான ராக்ஷஸராஜனை ராவணனுடைய ஸ்த்ரீகளைப் பார்த்து பயத்தால் தானே மரித்திருக்கக்கூடும்.* (4)

*ஸீதையைப் பார்க்காமலும் பராக்ரம ஸாத்யமான ப்ரயோஜனத்தை அடையாமலும் வானரர்களோடு பலகாலம் அலைந்து திரிந்துவிட்டு பிறகு நான் ஸுக்ரீவ ஸமீபத்திற்குப் போகவேண்டிய அவஶ்யமே இல்லை. ஏனெனில் வானரனும் பலவானுமான ஸுக்ரீவன் மிகக்கடுமையான தண்டனை உடையவனல்லவா!* (5)

दृष्टमन्तःपुरं सर्वं दृष्टा रावणयोषितः ।
न सीता दृश्यते साध्वी वृथा जातो मम श्रमः ॥ ६

किं नु मां वानराः सर्वे गतं वक्ष्यन्ति संगताः ।
गत्वा तत्र त्वया वीर किं कृतं तद्वदस्व नः ॥ ७

अदृष्ट्वा किं प्रवक्ष्यामि तामहं जनकात्मजाम् ।
ध्रुवं प्रायमुपैष्यन्ति कालस्य व्यतिवर्तने ॥ ८

किं वा वक्ष्यति वृद्धश्च जाम्बवानङ्गदश्च सः ।
गतं पारं समुद्रस्य वानराश्च समागताः ॥ ९

த்ருஷ்டமந்த:புரம் ஸர்வம் த்ருஷ்டா ராவணயோஷித: ।
ந ஸீதா த்ருஶ்யதே ஸாத்வீ வ்ருதா ஜாதோ மம ஶ்ரம: ॥ 6

கிம் நு மாம் வானரா: ஸர்வே கதம் வக்ஷ்யந்தி ஸங்கதா: ।
கத்வா தத்ர த்வயா வீர கிம் க்ருதம் தத்வதஸ்வ ந: ॥ 7

அத்ருஷ்ட்வா கிம் ப்ரவக்ஷ்யாமி தாமஹம் ஜனகாத்மஜாம் ।
த்ருவம் ப்ராயமுபைஷ்யந்தி காலஸ்ய வ்யதிவர்த்தனே ॥ 8

கிம் வா வக்ஷ்யதி வ்ருத்தஶ்ச ஜாம்பவானங்கதஶ்ச ஸ: ।
கதம் பாரம் ஸமுத்ரஸ்ய வானராஶ்ச ஸமாகதா: ॥ 9

---

அந்த:புரம் முழுவதையும் பார்த்தேன். ராவணனுடைய ஸ்த்ரீகளையும் பார்த்தேன். பதிவ்ரதையான ஸீதையை மட்டும் பார்க்கவில்லை. இதனால் நான் பட்ட ஶ்ரமமெல்லாம் வீணாயிற்று. (6)

ஸுக்ரீவனிடம் போகாதபோனாலும் அங்கதன் முதலியவர்களிடம் செல்வதால் உண்டாகும் ஶ்ரமத்தை எண்ணுகிறார்.

ஸீதையைப் பார்க்காமல் திரும்பிச்சென்ற என்னை எல்லா வானரங்களும் சேர்ந்து என்ன சொல்லுவார்களோ! ஓ வீர, லங்கைக்குச் சென்று என்ன செய்தாய்? அதை எங்களுக்குச்சொல் என்றும் கேட்பார்களே! (7)

அந்த ஜனக புத்ரியை பார்க்காமல் அவர்களுக்கு நான் என்ன பதில் சொல்லுவேன். நான் சொல்லாமலிருந்தால், வெகு கால மானதைப் பார்த்து அவர்கள் நிஶ்சயம் உயிரை விட்டுவிடுவார்கள். (8)

திரும்பிச்சென்ற என்னைப்பார்த்து வயது முதிர்ந்த ஜாம்பவானும் அந்த அங்கதனும் மற்ற வானரங்களும் சேர்ந்து குறைவாகச் சொல்லுவார்கள். (9)

अनिर्वेदः श्रियो मूलमनिर्वेदः परं सुखम् ।
अनिर्वेदो हि सततं सर्वार्थेषु प्रवर्तकः ॥ १०

करोति सफलं जन्तोः कर्म यत्तत्करोति सः ।
तस्मादनिर्वेदकृतं यत्नं चेष्टेऽहमुत्तमम् ॥ ११

भूयस्तावद्विचेष्यामि देशान्रावणपालितान् ।
आपानशाला विचितास्तथा पुष्पगृहाणि च ॥ १२

चित्रशालाश्च विचिता भूयः क्रीडागृहाणि च ।
निष्कूटान्तररथ्याश्च विमानानि च सर्वशः ॥ १३

அநிர்வேத: ஶ்ரியோமூலம் அநிர்வேத: பரம் ஸுகம் ।
அநிர்வேதோ ஹி ஸததம் ஸர்வார்த்தேஷு ப்ரவர்த்தக: ॥ 10

கரோதி ஸபலம் ஜந்தோ: கர்ம யத்தத்கரோதி ஸ: ।
தஸ்மாதனிர்வேதக்ருதம் யத்னம் சேஷ்டே஽ஹமுத்தமம் ॥ 11

பூயஸ்தாவத்விசேஷ்யாமி தேஶான்ராவணபாலிதான் ।
ஆபானஶாலா விசிதாஸ்ததா புஷ்பக்ருஹாணி ச ॥ 12

சித்ரஶாலாஶ்ச விசிதா பூய: க்ரீடாக்ருஹாணி ச ।
நிஷ்கூடாந்தரரத்யாஶ்ச விமானானி ச ஸர்வஶ: ॥ 13

---

*உற்சாகத்தை விடுவது கெடுதலென்று நினைத்து உற்சாகத்தை அடையவேண்டி அதைப் புகழ்ந்து பேசுகிறார்.*

*இந்த்ரியங்களைத் தன்தனது கார்யங்களில் நன்கு ஈடுபடுத்துவது உற்சாகமாகும். அப்படிச் செய்யாதது நிர்வேதமாகும்.*

*லக்ஷ்மி வருவதற்கு மூலகாரணம் உற்சாகமேயாகும். ஸுகத்துக்குக் காரணமும் அதுவேயாகும். எல்லா காரியங்களிலும் எப்பொழுதும் ஏவுவது உற்சாகமல்லவா?* (10)

*ப்ராணிகள் செய்யும் யாதொரு கார்யமுண்டோ அதைப் பயனுள்ளதாகச் செய்வது உற்சாகமேயாகும். ஆகையால் உற்சாகத்தால் செய்யக்கூடிய உத்தம முயற்சியை நான் ஆரம்பிக்கிறேன்.* (11)

*ராவணனால் ரக்ஷிக்கப்பட்ட தேசங்களை மறுபடியும் தேடுகிறேன். குடிக்குமிடங்கள், புஷ்பக்ருஹங்கள், சித்ரமெழுதும் இடங்கள், மறுபடி விளையாடுமிடங்கள், வீட்டிலுள்ள தோட்டங்கள், சின்ன தெருக்கள், எங்கும் உள்ள விமானங்கள் முதலிய இடங்கள் வெகுதடவை தேடப்பட்டன.* (12, 13)

इति संचिन्त्य भूयोऽपि विचेतुमुपचक्रमे ।
भूमीगृहांश्चैत्यगृहान्गृहातिगृहकानपि ॥ १४

उत्पतन्निपतंश्चापि तिष्ठन्गच्छन्पुनः पुनः ।
अपावृण्वंश्च द्वाराणि कवाटान्यवघाटयन् ॥ १५

प्रविशन्निष्पतंश्चापि प्रपतन्नुत्पतन्नपि ।
सर्वमप्यवकाशं स विचचार महाकपिः ॥ १६

चतुरङ्गुलमात्रोऽपि नावकाशः स विद्यते ।
रावणान्तःपुरे तस्मिन्यं कपिर्न जगाम सः ॥ १७

प्राकारान्तररथ्याश्च वेदिकाश्चैत्यसंश्रयाः ।
दीर्घिकाः पुष्करिण्यश्च सर्वं तेनावलोकितम् ॥ १८

இதி ஸம்சிந்த்ய பூயோऽபி விசேதுமுபசக்ரமே ।
பூமீக்ருஹாம்ஶ்சைத்யக்ருஹான்க்ருஹாதிக்ருஹகானபி ॥ 14
உத்பதன்நிபதம்ஶ்சாபி திஷ்டன்கச்சன்புன: புன: ।
அபாவ்ருண்வம்ஶ்ச த்வாராணி கவாடான்யவகாடயன் ॥ 15
ப்ரவிஶன்நிஷ்பதம்ஶ்சாபி ப்ரபதன்னுத்பதன்னபி ।
ஸர்வமப்யவகாஶம் ஸ விசசார மஹாகபி: ॥ 16
சதுரங்குலமாத்ரோऽபி நாவகாஶ: ஸ வித்யதே ।
ராவணாந்த:புரே தஸ்மின்யம் கபிர்ந ஜகாம ஸ: ॥ 17
ப்ராகாராந்தரரத்யாஶ்ச வேதிகாஶ்சைத்யஸம்ஶ்ரயா: ।
தீர்கிகா: புஷ்கரிண்யஶ்ச ஸர்வம் தேனாவலோகிதம் ॥ 18

---

இவ்விதம் எண்ணி மறுபடியும் சுரங்கங்களையும், நாலு சந்துகள் கூடுமிடங்களிலுள்ள மண்டபங்களையும், வீடுகளையும், விளையாடுவதற்காக வீட்டுக்கு வெகுதூரத்தில் கட்டப்பட்ட மாளிகைகளையும் தேட ஆரம்பித்தார். (14)

மேலே ஏறுவதும் கீழே குதிப்பதும், நிற்பதும் திரும்பத் திரும்பப்போவதும் வாசற்படிகளை மறைத்துக்கொண்டும் கதவுகளைத் திறந்துகொண்டும் உள்ளே புகுந்தும் வெளியே வந்தும் சுரங்கங்களில் குதித்தும் மேலே கிளம்பியும் ஆக இவ்வாறு அந்த ஹனுமார் எல்லா இடங்களையும் தேடினார். (15, 16)

ராவணனுடைய அந்த:புரத்தில் அந்த ஹனுமார் சென்று தேடாத இடம் நாலு அங்குலம்கூட கிடையாது. (17)

ப்ராகாரத்தின் மத்தியிலுள்ள மந்த்ரிகுமாரர் வீடுகள், நான்கு சந்துகள் கூடுமிடங்களிலுள்ள மரங்களின் அடிப்பாகங்களிலுள்ள மேடைகள், ஏரிகள், குளங்கள் எல்லாம் அவரால் பார்க்கப்பட்டது. (18)

राक्षस्यो विविधाकारा विरूपा विकृतास्तदा।
दृष्टा हनुमता तत्र न तु सा जनकात्मजा॥ १९
रूपेणाप्रतिमा लोके वरा विद्याधरस्त्रियः।
दृष्टा हनुमता तत्र नतु राघवनन्दिनी॥ २०
नागकन्या वरारोहाः पूर्णचन्द्रनिभाननाः।
दृष्टा हनुमता तत्र न तु सीता सुमध्यमा॥ २१
प्रमथ्य राक्षसेन्द्रेण नागकन्या बलाद्धृताः।
दृष्टा हनुमता तत्र न सा जनकनन्दिनी॥ २२

ராக்ஷஸ்யோ விவிதாகாரா விரூபா விக்ருதாஸ்ததா।
த்ருஷ்டா ஹனுமதா தத்ர ந து ஸா ஜனகாத்மஜா॥ 19
ரூபேணாப்ரதிமா லோகே வரா வித்யாதரஸ்த்ரிய:।
த்ருஷ்டா ஹனுமதா தத்ர நது ராகவநந்திநீ॥ 20
நாககன்யா வராரோஹா: பூர்ணசந்த்ரநிபானனா:।
த்ருஷ்டா ஹனுமதா தத்ர ந து ஸீதா ஸுமத்யமா॥ 21
ப்ரமத்ய ராக்ஷஸேந்த்ரேண நாககன்யா பலாத்த்ருதா:।
த்ருஷ்டா ஹனுமதா தத்ர ந ஸா ஜனகநந்தினீ॥ 22

---

அங்கு அப்பொழுது பலவகைப்பட்ட உருவ முள்ளவர்களும் அழகற்றவர்களும் விகாரமானவர்களுமான ராக்ஷஸிகள் ஹனுமாரால் பார்க்கப்பட்டனர். ஜனகபுத்ரியான ஸீதையோ வெனில் பார்க்கப்படவில்லை. (19)

உலகில் உருவத்தில் நிகரற்றவர்களும் மிகச்சிறந்தவர்களுமான வித்யாதர ஸ்த்ரீகள் அங்கு ஹனுமாரால் பார்க்கப்பட்டனர். (20)

அங்கு ஹனுமாரால் நல்ல அழகுவாய்ந்தவர்களும் பூர்ண சந்த்ரனுக்கு ஒப்பான முகத்தை உடையவர்களுமான நாக கன்னிகைகள் பார்க்கப்பட்டனர். அழகிய இடையை உடையவளான ஸீதையோவெனில் பார்க்கப்படவில்லை. (21)

இங்கு நாககன்னிகைகளை பலாத்காரத்தால் கொண்டுவரப் பட்டதாகச் சொல்வதால் கீழ் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட நாககன்னிகைகள் முறைப்படி விவாஹம் செய்து கொள்ளப் பட்டவர்கள் என்பது தெரிகிறது.

ராக்ஷஸ ஶ்ரேஷ்டனை ராவணனால் சண்டையில் சத்ருக்களை ஜயித்து பலாத்காரத்தால் கொண்டுவரப்பட்ட நாககன்னிகைகள் ஹனுமாரால் பார்க்கப்பட்டனர். அந்த இடத்தில் ஜனகனுடைய பெண்மட்டும் பார்க்கப்படவில்லை. (22)

सोऽपश्यंस्तां महाबाहुः पश्यंश्चान्या वरस्त्रियः।
विषसाद मुहुर्धीमान्हनुमान्मारुतात्मजः॥ २३

उद्योगं वानरेन्द्राणां प्लवनं सागरस्य च।
व्यर्थं वीक्ष्यानिलसुतश्चिन्तां पुनरुपागमत्॥ २४

अवतीर्य विमानाच्च हनुमान्मारुतात्मजः।
चिन्तामुपजगामाथ शोकोपहतचेतनः॥ २५

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
द्वादशः सर्गः॥ १२॥

ஸோऽபஶ்யம்ஸ்தாம் மஹாபாஹு: பஶ்யம்ஶ்சான்யா
வரஸ்த்ரிய: ।
விஷஸாத முஹுர்தீமான்ஹனுமான்மாருதாத்மஜ: ॥ 23

உத்யோகம் வானரேந்த்ராணாம் ப்லவனம் ஸாகரஸ்ய ச ।
வ்யர்த்தம் வீக்ஷ்யானிலஸுதஶ்சிந்தாம் புனருபாகமத் ॥ 24

அவதீர்ய விமானச்ச ஹனுமான்மாருதாத்மஜ: ।
சிந்தாமுபஜகாமாத ஶோகோபஹததசேதன: ॥ 25

இத்யார்ஷே ஶ்ரீமத்ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே த்வாதஶ: ஸர்க: ॥

---

பெருத்த கைகளை உடையவரும் புத்திமானும் வாயுபுத்ரனுமான அந்த ஹனுமார் அந்த ஸீதையைப் பாராமல் மற்ற உத்தம ஸ்த்ரீகளைப் பார்த்து பல தடவை வருந்தினர். (23)

வானரஶ்ரேஷ்டர்களின் முயற்சியையும், ஸமுத்ரத்தைத் தாண்டியதையும் வீணனதாக எண்ணி அந்த வாயுபுத்ரன் மறுபடி கவலையை அடைந்தார். (24)

வாயுபுத்ரரான ஹனுமார் விமானத்திலிருந்து கீழே இறங்கி ஶோகத்தால் தடைபட்ட சித்தத்துடன்கூட கவலைப்பட்டார். (25)

பன்னிரண்டாவது ஸர்கம் முற்றிற்று.

ஸ்ரீ:

त्रयोदशः सर्गः — பதிமூன்றுவது ஸர்கம் ॥ १३ ॥

# "हनुमान्निर्वेदः" — ஹனுமார் கலக்கமடைதல்.

विमानात्तु सुसंक्रम्य प्राकारं हरियूथपः।
हनुमान्वेगवानासीद्यथा विद्युद्धनान्तरे ॥ १

संपरिक्रम्य हनुमान्रावणस्य निवेशनात्।
अदृष्ट्वा जानकीं सीतामब्रवीद्वचनं कपिः ॥ २

भूयिष्ठं लोलिता लङ्का रामस्य चरता प्रियम्।
न हि पश्यामि वैदेहीं सीतां सर्वाङ्गशोभनाम् ॥ ३

पल्वलानि तटाकानि सरांसि सरितस्तथा।
नद्योऽनूपवनान्ताश्च दुर्गाश्च धरणीधराः ॥
लोलिता वसुधा सर्वा न तु पश्यामि जानकीम् ॥ ४

விமானாத்து ஸுஸங்க்ரம்ய ப்ராகாரம் ஹரியூதப: ।
ஹனுமான்வேகவானாஸீத்யதா வித்யுத்கனாந்தரே ॥ 1

ஸம்பரிக்ரம்ய ஹனுமான்ராவணஸ்ய நிவேஶனாத் ।
அத்ருஷ்ட்வா ஜானகீம் ஸீதாமப்ரவீத்வசனம் கபி: ॥ 2

பூயிஷ்டம் லோலிதா லங்கா ராமஸ்ய சரதா ப்ரியம் ।
ந ஹி பஶ்யாமி வைதேஹீம் ஸீதாம் ஸர்வாங்கஶோபனாம் ॥

பல்வலானி தடாகானி ஸராம்ஸி ஸரிதஸ்ததா ।
நத்யோऽனூபவனாந்தாஶ்ச துர்காஶ்ச தரணீதரா: ॥
லோலிதா வஸுதா ஸர்வா ந து பஶ்யாமி ஜானகீம் ॥ 4

---

வானர ஸைன்யத்தைக் காப்பவரும் வேகமுள்ளவருமான ஹனுமார் விமானத்திலிருந்து மதிலில் தாவிக்குதித்து நடு மேகத்தில் மின்னல்போல் ப்ரகாசித்தார். (1)

கபியான ஹனுமார் ராவணனுடைய வீட்டிலிருந்து ப்ராகாரத்துக்குத்தாண்டி ஸீதையைப்பாராமல் இவ்விதம் சொன்னார். (2)

ஸ்ரீராமனுக்குப் ப்ரியத்தைச்செய்யும் என்னால் லங்கை பலதடவை தேடப்பட்டது. ஸர்வாங்க ஸுந்தரியான விதேஹ குலத்தில் பிறந்த ஸீதையை நான் காணவில்லை. (3)

குளம், குட்டைகள், ஓடைகள், வாய்க்கால்கள், நதிகள், ஈரமுள்ள காட்டுப்பிரதேசங்கள், அகழ்கள், மலைகள் எல்லா ப்ரதேசங்களும் தேடப்பட்டன. ஜனக புத்ரியை மட்டும் காணவில்லை. (4)

इह संपातिना सीता रावणस्य निवेशने।
आख्याता गृध्रराजेन न च पश्यामि तामहम्॥ ५

किंनु सीताऽथ वैदेही मैथिली जनकात्मजा।
उपतिष्ठेत विवशा रावणं दुष्टचारिणम्॥ ६

क्षिप्रमुत्पततो मन्ये सीतामादाय रक्षसः।
बिभ्यतो रामबाणानामन्तरा पतिता भवेत्॥ ७

अथवा ह्रियमाणायाः पथि सिद्धनिषेविते।
मन्ये पतितमार्याया हृदयं प्रेक्ष्य सागरम्॥ ८

இஹ ஸம்பாதிநா ஸீதா ராவணஸ்ய நிவேஶனே ।
ஆக்யாதா க்ருத்ரராஜேன ந ச பஶ்யாமி தாமஹம் ॥ 5

கிம்னு ஸீதாऽத வைதேஹீ மைதிலீ ஜனகாத்மஜா ।
உபதிஷ்டேத விவஶா ராவணம் துஷ்டசாரிணம் ॥ 6

க்ஷிப்ரமுத்பததோ மன்யே ஸீதாமாதாய ரக்ஷஸ: ।
பிப்யதோ ராமபாணாநாமந்தரா பதிதா பவேத் ॥ 7

அதவா ஹ்ரியமாணாயா: பதி ஸித்தநிஷேவிதே ।
மன்யே பதிதமார்யாயா ஹ்ருதயம் ப்ரேக்ஷ்ய ஸாகரம் ॥ 8

---

கழுகுகளுக்கு அரசனை ஸம்பாதியால் ராவணன் வீட்டில் இருப்பதாகச் சொல்லப்பட்ட ஸீதையை மட்டும் காணவில்லே. (5)

விதேஹ குலத்தில் பிறந்தவளும் மிதிலா நகரத்தைச் சேர்ந்தவளும் ஜனக புத்ரியும் அயோனிஜையுமான ஸீதையானவள் பரவசையாகி துஷ்டசாரியான ராவணனை அடைந்திருப்பாளா என்ன? (அதாவது அடைந்திருக்கமாட்டாள் என்பது கருத்து.) (இங்கு, முன்பு மந்தோதரியை ஸீதை என்று நினைத்தது சரியா என்று மறுபடி ஆலோசித்து ஸீதையின் குலம், தேசம் முதலியவற்ருல் அவள் மந்தோதரிதான், ஸீதையல்ல என்பதை உணருகிருர்.) (6)

(ஆனால் தேவியைக் காணவில்லேயே என்பதற்குச் சில காரணங்களை ஊஹிக்கிருர்.)

ஸீதையை எடுத்துக்கொண்டு ராவணன் வேகமாக மேலே செல்லும்போது ராமபாணம் வந்துவிழுமோ என்ற பயத்தால் நடுங்கிய அவன் கையிலிருந்து ஸீதை நழுவி கீழே விழுந்திருக்க வேண்டும். (7)

அப்படி இல்லாவிட்டால் ஸித்தர்களால் ஸேவிக்கப்பட்ட ஆகாசமார்க்கத்தில் அபகரித்து எடுத்துச்செல்லப்படுகின்ற ஸீதையின் மனம் ஸமுத்ரத்தைக்கண்டு வெளிக்கிளம்பி இருக்கக்

रावणस्योरुवेगेन भुजाभ्यां पीडितेन च ।
तया मन्ये विशालाक्ष्या त्यक्तं जीवितमार्यया ॥ ९

उपर्युपरि वा नूनं सागरं क्रमतस्तदा ।
विवेष्टमाना पतिता समुद्रे जनकात्मजा ॥ १०

अहो क्षुद्रेण वाऽनेन रक्षन्ती शीलमात्मनः ।
अबन्धुर्भक्षिता सीता रावणेन तपस्विनी ॥ ११

अथवा राक्षसेन्द्रस्य पत्नीभिरसितेक्षणा ।
अदुष्टा दुष्टभावाभिर्भक्षिता सा भविष्यति ॥ १२

ராவணஸ்யோருவேகேன புஜாப்யாம் பீடிதேன ச ।
தயா மன்யே விஶாலாக்ஷ்யா த்யக்தம் ஜீவிதமார்யயா ॥ 9

உபர்யுபரி வா நூனம் ஸாகரம் க்ரமதஸ்ததா ।
விவேஷ்டமாநா பதிதா ஸமுத்ரே ஜனகாத்மஜா ॥ 10

அஹோ க்ஷுத்ரேண வாऽனேன ரக்ஷந்தீ ஶீலமாத்மன: ।
அபந்துர்பக்ஷிதா ஸீதா ராவணேன தபஸ்விநீ ॥ 11

அதவா ராக்ஷஸேந்த்ரஸ்ய பத்னீபிரஸிதேக்ஷணா ।
அதுஷ்டா துஷ்டபாவாபிர்பக்ஷிதா ஸா பவிஷ்யதி ॥ 12

---

கூடும் என்று நினைக்கிறேன். (அதாவது மரணம் ஏற்பட்டிருக்கும் என்று கருத்து.)

பெரும் துக்கத்தையோ பெரும் சந்தோஷத்தையோ சிலர் கேட்டாலும் பார்த்தாலும் மரணமடைந்து விடுவதை நாம் பார்த்திருக்கின்றோம். அம்மாதிரி இங்கு ஸமுத்ரத்தைப் பார்த்ததும் ஸ்ரீராமன் இவ்வளவு பெரிய ஸமுத்ரத்தை எப்படி தாண்டி நம்மை அழைத்துச் செல்லப்போகிறார் என எண்ணி பயந்து ஸீதை மரணமடைந்திருக்கக்கூடும். (8)

ராவணனுடைய துடைகளின் வேகத்தாலும் கைகளால் ஏற்பட்ட நெருக்கலாலும் விசாலமான கண்களைப்படைத்தவளும் அப்படியே மிகச் சிறந்தவளுமான ஸீதையினால் உயிர் விடப்பட்டிருக்குமென எண்ணுகிறேன். (9)

அப்படியே மேன்மேலும் ஸமுத்ரத்தைத் தாண்டிச்செல்லுகின்ற அந்த ராவணனிடமிருந்து அந்த ஜானகி பிரளுகின்றவளாய் ஸமுத்ரத்தில் வீழ்ந்திருக்கக்கூடும். (10)

மஹா தபஸ் சக்தி படைத்தவளும், பந்து ஜனங்கள் ஸமீபத்திலில்லாதவளும், தனது ஒழுக்கத்தை காக்கிறவளுமான ஸீதை நீசனான இந்த ராவணனால் சாப்பிடப்பட்டிருக்கக்கூடும். (11)

கெட்ட எண்ணமுள்ளவர்களான ராவணனுடைய மனைவிகளால் கருவிழிகளை உடையவளும், துஷ்டை இல்லாதவளுமான அந்த ஜானகி சாப்பிடப்பட்டிருக்கக்கூடும். (12)

संपूर्णचन्द्रप्रतिमं पद्मपत्रनिभेक्षणम्।
रामस्य ध्यायती वक्त्रं पञ्चत्वं कृपणा गता॥ १३

हा राम लक्ष्मणेत्येवं हाऽयोध्ये चेति मैथिली।
विलप्य बहु वैदेही न्यस्तदेहा भविष्यति॥ १४

अथवा निहिता मन्ये रावणस्य निवेशने।
नूनं लालप्यते सीता पञ्जरस्थेव शारिका॥ १५

जनकस्य सुता सीता रामपत्नी सुमध्यमा।
कथमुत्पलपत्राक्षी रावणस्य वशं व्रजेत्॥ १६

विनष्टा वा प्रणष्टा वा मृता वा जनकात्मजा।
रामस्य प्रियभार्यस्य न निवेदयितुं क्षमम्॥ १७

ஸம்பூர்ணசந்த்ரப்ரதிமம் பத்மபத்ரநிபேக்ஷணம்।
ராமஸ்ய த்யாயதீ வக்த்ரம் பஞ்சத்வம் க்ருபணா கதா॥ 13

ஹா ராம லக்ஷ்மணேத்யேவம் ஹாऽயோத்யே சேதி மைதிலீ।
விலப்ய பஹு வைதேஹீ ந்யஸ்ததேஹா பவிஷ்யதி॥ 14

அதவா நிஹிதா மன்யே ராவணஸ்ய நிவேஶனே।
நூனம் லாலப்யதே ஸீதா பஞ்ஜரஸ்தேவ ஶாரிகா॥ 15

ஜனகஸ்ய ஸுதா ஸீதா ராமபத்னீ ஸுமத்யமா।
கதமுத்பலபத்ராக்ஷீ ராவணஸ்ய வஶம் வ்ரஜேத்॥ 16

விநஷ்டா வா ப்ரணஷ்டா வா ம்ருதா வா ஜனகாத்மஜா।
ராமஸ்ய ப்ரியபார்யஸ்ய ந நிவேதயிதும் க்ஷமம்॥ 17

---

பூர்ண சந்த்ரனை ஒத்ததும் தாமரை இதழுக்கு ஸமமான கண்களை உடையதுமான ஸ்ரீராமனுடைய முகத்தை த்யானம் செய்கின்றவளும் வேறு திக்கற்றவளுமான ஸீதை மரணமடைந்திருக்கக்கூடும். (13)

மிதிலையைச் சேர்ந்தவளும் விதேஹ ராஜனின் பெண்ணுமான அந்த ஸீதை, ஏ ராம, ஏ லக்ஷ்மண, அயோத்தியாபுரியே என்றிவ்வாறு புலம்பி ஶரீரத்தை விட்டிருக்கக்கூடும். (14)

அப்படி இல்லாவிட்டால் ராவணனுடைய க்ருஹத்தில் ஸீதை ரஹஸ்யமாக வைக்கப்பட்டு கூட்டிலுள்ள நாரைபக்ஷி போல் அடிக்கடி புலம்பிக்கொண்டிருப்பாள். (15)

ஜனகபுத்ரியும் ஸ்ரீராகவனது தர்மபத்னியும் அழகிய மத்ய பாகத்தை உடையவளும் நீலோத்பலத்தின் இதழ்போன்ற கண்களை உடையவளுமான ஸீதை ராவணனுக்கு எப்படி வசப்படுவாள்! (16)

ஜனகபுத்ரியான ஸீதை சுரங்கம் முதலியவற்றில் வைக்கப்பட்டிருப்பாளோ அல்லது ஸமுத்ரம் முதலியவற்றில் விழுந்து ஜீவனை

निवेद्यमाने दोषः स्याद्दोषः स्याद‍निवेदने ।
कथं नु खलु कर्तव्यं विषमं प्रतिभाति मे ॥ १८

अस्मिन्नेवं गते कार्ये प्राप्तकालं क्षमं च किम् ।
भवेदिति मतं भूयो हनुमान्प्रविचारयत् ॥ १९

यदि सीतामदृष्ट्वाऽहं वानरेन्द्रपुरीमितः ।
गमिष्यामि ततः को मे पुरुषार्थो भविष्यति ॥ २०

ममेदं लङ्घनं व्यर्थं सागरस्य भविष्यति ।
प्रवेशश्चैव लङ्कायां राक्षसानां च दर्शनम् ॥ २१

நிவேத்யமானே தோஷ: ஸ்யாத்தோஷ: ஸ்யாதநிவேதனே ।
கதம் நு கலு கர்த்தவ்யம் விஷமம் ப்ரதிபாதி மே ॥ 18

அஸ்மின்னேவம் கதே கார்யே ப்ராப்தகாலம் க்ஷமம் ச கிம் ।
பவேதிதி மதம் பூயோ ஹனுமான்ப்ரவிசாரயத் ॥ 19

யதி ஸீதாமத்ருஷ்ட்வாऽஹம் வானரேந்த்ரபுரீமித: ।
கமிஷ்யாமி தத: கோ மே புருஷார்த்தோ பவிஷ்யதி ॥ 20

மமேதம் லங்கனம் வ்யர்த்தம் ஸாகரஸ்ய பவிஷ்யதி ।
ப்ரவேஶஸ்சைவ லங்காயா ராக்ஷஸானாம் ச தர்ஶனம் ॥ 21

---

விட்டாளோ அல்லது ஸ்வயமாகவே ஜீவனை விட்டுவிட்டாளோ ப்ரியமான மனைவியை உடைய ராமனுக்கு இந்தச் செய்தி தெரிவிப்பதற்கு உசிதமானதல்ல. (17)

தெரிவித்தாலும் தோஷமேற்படும். அதாவது ஸ்ரீராமன் இச் செய்தி கேட்டதும் ப்ராணனை விட்டுவிடுவார். தெரிவிக்காமலிருந்தாலும் யஜமானனை வஞ்சித்த தோஷமேற்படும். இதற்கு என்ன செய்வது? இவ்விரண்டும் செய்யமுடியாததாகத் தோன்றுகிறதே. (18)

இப்படிப்பட்ட இந்த கார்யத்தில் காலத்திற்கு உசிதமாயும், சொல்லுதற்கு யோக்யமாயும் ஸர்வஸம்மதமாயுமுள்ளது எது ஆகும் என்று மறுபடியும் ஹனுமார் யோசித்தார். (19)

நான் ஸீதையைப் பார்க்காமல் இங்கிருந்து கிஷ்கிந்தைக்குச் செல்லுவேனாகில் எனக்கு என்ன பயன் உண்டாகும். (20)

இம்மாதிரி ஸமுத்ரத்தைத் தாண்டியதும், லங்காப்ரவேசமும், ராக்ஷஸர்களைக் கண்டதும் பயனற்றதாக ஆகிவிடும். (21)

किं मां वक्ष्यति सुग्रीवो हरयो वा समागताः ।
किष्किन्धां समनुप्राप्तौ तौ वा दशरथात्मजौ ॥ २२

गत्वा तु यदि काकुत्स्थं वक्ष्यामि परमप्रियम् ।
न दृष्टेति मया सीता ततस्त्यक्ष्यति जीवितम् ॥ २३

परुषं दारुणं क्रूरं तीक्ष्णमिन्द्रियतापनम् ।
सीतानिमित्तं दुर्वाक्यं श्रुत्वा स न भविष्यति ॥ २४

तं तु कृच्छ्रगतं दृष्ट्वा पञ्चत्वगतमानसम् ।
भृशानुरक्तो मेधावी न भविष्यति लक्ष्मणः ॥ २५

கிம் மாம் வக்ஷ்யதி ஸுக்ரீவோ ஹரயோ வா ஸமாகதா: ।
கிஷ்கிந்தாம் ஸமனுப்ராப்தௌ தௌ வா தஶரதாத்மஜௌ ॥ 22

கத்வா து யதி காகுத்ஸ்தம் வக்ஷ்யாமி பரமப்ரியம் ।
ந த்ருஷ்டேதி மயா ஸீதா ததஸ்த்யக்ஷ்யதி ஜீவிதம் ॥ 23

பருஷம் தாருணம் க்ரூரம் தீக்ஷ்ணமிந்த்ரியதாபனம் ।
ஸீதாநிமித்தம் துர்வாக்யம் ஶ்ருத்வா ஸ ந பவிஷ்யதி ॥ 24

தம் து க்ருச்ச்ரகதம் த்ருஷ்ட்வா பஞ்சத்வகதமானஸம் ।
ப்ருஶானுரக்தோ மேதாவீ ந பவிஷ்யதி லக்ஷ்மண: ॥ 25

---

கிஷ்கிந்தைக்குச் சென்ற என்னை, ஸுக்ரீவனே ஒன்றுகூடிக் கொண்ட வானரர்களோ அந்த தஶரத புத்ரர்களோ என்ன சொல்லுவார்களோ. (22)

அங்கு சென்று ஸீதையைக் காணவில்லை என்று ராமனிடத்தில் அப்ரியமான வார்த்தையைச் சொல்லுவேனாகில் அதைக் கேட்டதுமே அவர் ஜீவனை விட்டு விடுவார். (23)

அந்த ராமன் ஸீதையின் விஷயமானதும் கர்ணகடூரமானதும் பயங்கரமானதும் உக்ரமும் ஸஹிக்க முடியாததும் இந்த்ரியத்தை தபிக்கும்படி செய்கிறதுமான கெட்ட வார்த்தையைக் கேட்டு ஜீவித்திருக்கமாட்டார். (24)

மேதாவியும் மிக்க அன்பை ராமனிடத்தில் வைத்தவனுமான லக்ஷ்மணன் கஷ்டமான நிலையை அடைந்தவரும் மரணமடைவதற்கு ஸித்தமாயிருப்பவருமான ராமரைப் பார்த்து ஜீவித்திருக்கமாட்டார்.

(இங்கு லக்ஷ்மணனை மேதாவி என்றது பொன்மானை இது "மாயாம்ருகம்" என்று சொல்லி அதை விரட்டுவதிலிருந்து ஸ்ரீராமனை தடுத்தும் ஸ்ரீராமன் கேட்காததால் ஸீதாபஹரணம் முதலிய பின்னல் உண்டான அனர்த்தங்களை குறிப்பிடுவதற்காகும்.) (25

विनष्टौ भ्रातरौ श्रुत्वा भरतोऽपि मरिष्यति।
भरतं च मृतं दृष्ट्वा शत्रुघ्नो न भविष्यति॥ २६

पुत्रान्मृतान्समीक्ष्याथ न भविष्यन्ति मातरः।
कौसल्या च सुमित्रा च कैकेयी च न संशयः २७

कृतज्ञः सत्यसन्धश्च सुग्रीवः प्लवगाधिपः।
रामं तथागतं दृष्ट्वा ततस्त्यक्ष्यति जीवितम्॥ २८

दुर्मना व्यथिता दीना निरानन्दा तपस्विनी।
पीडिता भर्तृशोकेन रुमा त्यक्ष्यति जीवितम्॥ २९

वालिजेन तु दुःखेन पीडिता शोककर्शिता।
पञ्चत्वं च गते राज्ञि ताराऽपि न भविष्यति॥ ३०

விநஷ்டௌ ப்ராதரௌ ஶ்ருத்வா பரதோऽபி மரிஷ்யதி ।
பரதம் ச ம்ருதம் த்ருஷ்ட்வா ஶத்ருக்னோ ந பவிஷ்யதி ॥ 26

புத்ராந்ம்ருதாந்ஸமீக்ஷ்யாத ந பவிஷ்யந்தி மாதர: ।
கௌஸல்யா ச ஸுமித்ரா ச கைகேயீ ச ந ஸம்ஶய: ॥ 27

க்ருதக்ஞ: ஸத்யஸந்தஶ்ச ஸுக்ரீவ: ப்லவகாதிப: ।
ராமம் ததாகதம் த்ருஷ்ட்வா ததஸ்த்யக்ஷ்யதி ஜீவிதம் ॥ 28

துர்மனா வ்யதிதா தீனா நிரானந்தா தபஸ்வினீ ।
பீடிதா பர்த்ருஶோகேன ருமா த்யக்ஷ்யதி ஜீவிதம் ॥ 29

வாலிஜேன து து:கேன பீடிதா ஶோககர்ஶிதா ।
பஞ்சத்வம் ச கதே ராக்ஞி தாராऽபி ந பவிஷ்யதி ॥ 30

---

*பரதனும் ப்ராதாக்கள் மரித்ததைக் கேட்டு மரித்து விடுவான். ஶத்ருக்னனும் பரதன் மரித்ததைப் பார்த்து ஜீவித்திருக்க மாட்டான்.* (26)

*பிள்ளைகள் இறந்ததைக் கேட்க தாயார்கள் மூவரும் ஜீவித்திருக்கமாட்டார்கள் இதில் ஸந்தேகமில்லை.* (27)

*செய்நன்றி மறவாதவனும் ஸத்யப்ரதிக்ஞனும் வானர ஸைன்யத்துக்கு அதிபனுமான ஸுக்ரீவனும் ராமனது இந்த நிலையைப் பார்த்து உடனே ஜீவனை விட்டுவிடுவான்.* (28)

*ருமையும் தன் புருஷன் மரித்ததாலேற்பட்ட சோகத்தால் பீடிக்கப்பட்டவளாயும், கலங்கின மனமுள்ளவளாயும், துக்கத்தை அடைந்தவளாயும் கவலை அடைந்தவளாயுமிருந்து கொண்டு ஜீவனை விட்டுவிடுவாள்.* (29)

*தாரையும் தன் புருஷனை வாலி மரித்ததாலுண்டான சோகத்தால் மிகவும் இளைத்துவிட்டாள். இப்பொழுது ராஜாவான ஸுக்ரீவன் மரித்ததைக்கேட்டு ஜீவித்திருக்கமாட்டாள்.* (30)

मातापित्रोर्विनाशेन सुग्रीवव्यसनेन च ।
कुमारोऽप्यङ्गदः कस्माद्धारयिष्यति जीवितम् ॥ ३१
भर्तृजेन तु दुःखेन ह्यभिभूता वनौकसः ।
शिरांस्यभिहनिष्यन्ति तलैर्मुष्टिभिरेव च ॥ ३२
सान्त्वेनानुप्रदानेन मानेन च यशस्विना ।
लालिताः कपिराजेन प्राणांस्त्यक्ष्यन्ति वानराः ॥ ३३
न वनेषु न शैलेषु न निरोधेषु वा पुनः ।
क्रीडामनुभविष्यन्ति समेत्य कपिकुञ्जराः ॥ ३४
सपुत्रदाराः सामात्या भर्तृव्यसनपीडिताः ।
शैलाग्रेभ्यः पतिष्यन्ति समेत्य विषमेषु च ॥ ३५

மாதாபித்ரோர்விநாஶேந ஸுக்ரீவவ்யஸநேந ச ।
குமாரோப்யங்கத: கஸ்மாத்தாரயிஷ்யதி ஜீவிதம் ॥ 31

பர்த்ருஜேந து து:கேந ஹ்யபிபூதா வனௌகஸ:
ஶிராம்ஸ்யபிஹனிஷ்யந்தி தலைர்முஷ்டிபிரேவ ச ॥ 32

ஸாந்த்வேநாநுப்ரதாநேந மாநேந ச யஶஸ்விநா ।
லாலிதா: கபிராஜேந ப்ராணாம்ஸ்த்யக்ஷ்யந்தி வாநரா: ॥ 33

ந வநேஷு ந ஶைலேஷு ந நிரோதேஷு வா புந: ।
க்ரீடாமநுபவிஷ்யந்தி ஸமேத்ய கபிகுஞ்ஜரா: ॥ 34

ஸபுத்ரதாரா: ஸாமாத்யா பர்த்ருவ்யஸநபீடிதா: ।
ஶைலாக்ரேப்ய: பதிஷ்யந்தி ஸமேத்ய விஷமேஷு ச ॥ 35

---

*மாதாபிதாக்களின் மரணத்தாலும் ஸுக்ரீவனுடைய மரணத்தாலேற்பட்ட துக்கத்தாலும் குமாரனான அங்கதன் எப்படி ஜீவித்திருப்பான்.* (31)

*யஜமானன் மரணமடைந்த துக்கத்தால் பீடிக்கப்பட்ட குரங்குகளும் கைகளாலும் முஷ்டிகளாலும் தலையிலடித்துக் கொள்வார்கள்.* (32)

*கீர்த்திவாய்ந்த கபிராஜனான ஸுக்ரீவனால் இனிமையான சொல்லினாலும், நல்ல கொடையினாலும், வரவேற்பினாலும், பெருமைபடுத்தப்பட்ட வானரர்கள் ப்ராணன்களை விட்டுவிடுவார்கள்.* (33)

*கபிஶ்ரேஷ்டர்கள் காடுகளிலும் மலைகளிலும் குகைகளிலும் ஒன்றுகூடியவர்களாய் விளையாடமாட்டார்கள்.* (34)

*மேலும் பிள்ளைகள், பத்னிகள், மந்த்ரிகள் இவர்களுடன் ஒன்றுகூடியவர்களும் யஜமானனான ஸுக்ரீவன் மரித்ததாலுண்டான துக்கத்தால் பீடிக்கப்பட்டவர்களாயும் இருந்துகொண்டு மலைகளின் உச்சிகளிலிருந்து கரடுமுரடான ப்ரதேசங்களில் விழப்போகிறார்கள்.* (35)

विषमुद्बन्धनं वापि प्रवेशं ज्वलनस्य वा ।
उपवासमथो शस्त्रं प्रचरिष्यन्ति वानराः ॥ ३६

घोरमारोदनं मन्ये गते मयि भविष्यति ।
इक्ष्वाकुकुलनाशश्च नाशश्चैव वनौकसाम् ॥ ३७

सोऽहं नैव गमिष्यामि किष्किन्धां नगरीमितः ।
न च शक्ष्याम्यहं द्रष्टुं सुग्रीवं मैथिलीं विना ॥ ३८

मय्यगच्छति चेहस्थे धर्मात्मानौ महारथौ ।
आशया तौ धरिष्येते वानराश्च मनस्विनः ॥ ३९

हस्तादानो मुखादानो नियतो वृक्षमूलिकः ।
वानप्रस्थो भविष्यामि ह्यदृष्ट्वा जनकात्मजाम् ॥ ४०

விஷமுத்பந்தனம் வாபி ப்ரவேஶம் ஜ்வலனஸ்ய வா ।
உபவாஸமதோ ஶஸ்த்ரம் ப்ரசரிஷ்யந்தி வானரா: ॥ 36

கோரமாரோதனம் மன்யே கதே மயி பவிஷ்யதி ।
இக்ஷ்வாகுகுலநாஶஶ்ச நாஶஶ்சைவ வனௌகஸாம் ॥ 37

ஸோऽஹம் நைவ கமிஷ்யாமி கிஷ்கிந்தாம் நகரீமித: ।
ந ச ஶக்ஷ்யாம்யஹம் த்ரஷ்டும் ஸுக்ரீவம் மைதிலீம் விநா ॥

மய்யகச்சதி சேஹஸ்தே தர்மாத்மானௌ மஹாரதௌ ।
ஆஶயா தௌ தரிஷ்யேதே வானராஶ்ச மனஸ்வின: ॥ 39

ஹஸ்தாதானோ முகாதானோ நியதோ வ்ருக்ஷமூலிக: ।
வானப்ரஸ்தோ பவிஷ்யாமி ஹ்யத்ருஷ்ட்வா ஜனகாத்மஜாம் ॥

---

விஷத்தை உட்கொள்வதையோ தூக்கிட்டுக் கொள்வதையோ அக்னியில் இறங்குவதையோ உபவாஸத்தையோ, கத்தியால் வெட்டிக்கொள்வதையோ வானரர்கள் செய்யப்போகிறார்கள். (36)

நான் அங்கு சென்றால் அழுகைக்குரல் கடுமையாக ஏற்படுமென்று நினைக்கிறேன். இக்ஷ்வாகு குலத்திற்கும் குரங்குகளுக்கும் நாசமேற்படும் என்று நினைக்கிறேன். (37)

அந்த நான் இங்கிருந்து கிஷ்கிந்தைக்குப் போகவே மாட்டேன். ஸீதையைப் பார்க்காமலோ அழைத்துச் செல்லாமலோ ஸுக்ரீவனை நான் பார்க்கமாட்டேன். (38)

நான் அங்கு போகாமல் இங்கேயே இருப்பேனாகில் மஹாரதர்களும் தர்மாத்மாக்களுமான அந்த ராமலக்ஷ்மணர்களும் அந்த மனஸ்விகளான வானரர்களும் திரும்பி வருவேன் என்ற ஆசையால் உயிருடனிருப்பார்கள். (39)

தானாக கையில் போட்டால் அதைச் சாப்பிடுகிறவனாகவும் வாயில் போட்டதைச் சாப்பிடுகிறவனாகவும் மரத்தடியில் வஸிப்ப

सागरानूपजे देशे बहुमूलफलोदके।
चितां कृत्वा प्रवेक्ष्यामि समिद्धमरणीसुतम् ॥ ४१

उपविष्टस्य वा सम्यग्लिङ्गिनं साधयिष्यतः।
शरीरं भक्षयिष्यन्ति वायसाः श्वापदानि च ॥ ४२

इदं महर्षिभिर्दृष्टं निर्याणमिति मे मतिः।
सम्यगापः प्रवेक्ष्यामि न चेत्पश्यामि जानकीम् ॥ ४३

सुजातमूला सुभगा कीर्तिमाला यशस्विनी।
प्रभग्ना चिररात्रीयं मम सीतामपश्यतः ॥ ४४

ஸாகரானூபஜே தேஶே பஹு²மூலபலோதகே ।
சிதாம் க்ருத்வா ப்ரவேக்ஷ்யாமி ஸமித்தமரணீஸு²தம் ॥ 41

உபவிஷ்டஸ்ய வா ஸம்யக்லிங்கினம் ஸாதயிஷ்யத: ।
ஶரீரம் பக்ஷயிஷ்யந்தி வாயஸா: ஶ்வாபதானி ச ॥ 42

இதம் மஹர்ஷிபிர்த்ருஷ்டம் நிர்யாணமிதி மே மதி: ।
ஸம்யகா³ப: ப்ரவேக்ஷ்யாமி ந சேத்பஶ்யாமி ஜானகீம் ॥ 43

ஸு²ஜாதமூலா ஸு²பகா கீர்த்திமாலா யஶஸ்வினீ ।
ப்ரபக்³னா சிரராத்ரீயம் மம ஸீதாமபஶ்யத: ॥ 44

---

வனுகவும், இந்த்ரியங்களை அடக்கியவனுகவுமிருந்து கொண்டு வானப்ரஸ்தனுக இருக்கப்போகிறேன். (40)

ஸமுத்ரத்துக்குப் பக்கத்திலுள்ள ஈரமானதும் கிழங்கு, பழம், ஜலம் இவைகள் நிறைந்ததுமான ப்ரதேசத்தில் சிதையை ஏற்படுத்தி நன்கு எரிகின்ற அரணிகடைந்த அக்னியில் ப்ரவேசிப்பேன். (41)

ப்ராயோபவேசம் செய்து ப்ராணனை விடுகின்ற என்னுடைய சரீரத்தை காக்கைகளும் புலி முதலிய துஷ்ட ஜந்துக்களும் சாப்பிடப்போகின்றன. (42)

இம்மாதிரி மரிப்பதால் ப்ராணத்யாகம் செய்த தோஷம் இல்லை என்பதற்கு ஆதாரம் கூறுகிருர்:—

மஹர்ஷிகளால் காணப்பட்ட இந்த மார்கம் எனக்கும் ஸம்மதம். ஸீதையைப் பார்க்காவிட்டால் ஜலத்தில் விழுந்து விடப் போகிறேன். (43)

ஸீதையைப் பார்க்காத எனக்கு இந்த ராத்ரியானது மிக வளர்ந்ததாகவும் ஆரம்பத்திலேயே லங்காதிதேவதையின் ஜயத்தை கொடுத்ததாகவும் சந்த்ரோதயத்தால் அழகியதாகவும் மேலும் மேலும் கீர்த்தியைக் கொடுக்கிறதாகவும் ஹனுமார் லங்கையைப் ப்ரவேசித்தார் என்று புகழைக் கொடுக்கிறதாகவும் இருந்து கொண்டு பயனற்றதாக ஆகிவிட்டது. (44)

तापसो वा भविष्यामि नियतो वृक्षमूलिकः।
नेतः प्रतिगमिष्यामि तामदृष्ट्वाऽसितेक्षणाम् ॥ ४५
यदीतः प्रतिगच्छामि सीतामनधिगम्य ताम्।
अङ्गदः सह तैः सर्वैर्वानरैर्न भविष्यति ॥ ४६
विनाशे बहवो दोषा जीवन्भद्राणि पश्यति।
तस्मात्प्राणान्धरिष्यामि ध्रुवो जीवति संगमः ॥ ४७
एवं बहुविधं दुःखं मनसा धारयन्मुहुः।
नाध्यगच्छत्तदा पारं शोकस्य कपिकुञ्जरः ॥ ४८
[ततो विक्रममासाद्य धैर्यवान्कपिकुञ्जरः]।
रावणं वा वधिष्यामि दशग्रीवं महाबलम् ॥
काममस्तु हृता सीता प्रत्याचीर्णं भविष्यति ॥ ४९

தாபஸோ வா பவிஷ்யாமி நியதோ வ்ருக்ஷமூலிக:।
நேத: ப்ரதிகமிஷ்யாமி தாமத்ருஷ்ட்வாऽஸிதேக்ஷணாம் ॥ 45
யதீத: ப்ரதிகச்சாமி ஸீதாமனதிகம்ய தாம்।
அங்கத: ஸஹ தை: ஸர்வைர்வானரைர்ந பவிஷ்யதி ॥ 46
விநாஶே பஹவோ தோஷா ஜீவன்பத்ராணி பஶ்யதி।
தஸ்மாத்ப்ராணான்தரிஷ்யாமி த்ருவோ ஜீவதி ஸம்கம: ॥ 47
ஏவம் பஹுவிதம் து:கம் மனஸா தாரயன்முஹு:।
நாத்யகச்சத்ததா பாரம் ஶோகஸ்ய கபிகுஞ்ஜர: ॥ 48
[ததோ விக்ரமமாஸாத்ய தைர்யவான்கபிகுஞ்ஜர:]।
ராவணம் வா வதிஷ்யாமி தஶக்ரீவம் மஹாபலம் ॥
காமமஸ்து ஹ்ருதா ஸீதா ப்ரத்யாசீர்ணம் பவிஷ்யதி ॥ 49

---

தபஸ்வியாக ஆவது அல்லது மரிப்பது என்று முன்சொல்லப்பட்ட இருமார்கங்களில் தபஸ்வியாக ஆவதே மேல் என்கிறார்:—

கருவிழிகளை உடையவளான அந்த ஸீதையைப் பார்க்காமல் இங்கிருந்து திரும்பிப் போவதில்லை. மரத்தடியில் வஸித்து இந்த்ரியங்களையடக்கி தபஸ்வியாக ஆகப்போகிறேன். (45)

இங்கிருந்து அந்த ஸீதையை அடையாமல் திரும்பிச் செல்வேனேயாகில் எல்லா வானரர்களுடன் அங்கதனும் ஜீவித்திருக்க மாட்டான். (46)

ஜீவனை விட்டுவிடுவதில் அநேக தோஷங்களிருக்கின்றன. உயிருடனிருந்தால் நன்மைகளைப் பார்க்கிறான். நான் ஜீவித்திருந்தால் ராமாதிகளுடைய ஸம்பந்தம் அவஶ்யம் ஏற்படும். ஆகையால் ப்ராணன்களை வைத்திருக்கப்போகிறேன். (47)

அப்பொழுது கபிஶ்ரேஷ்டரான ஹனுமார் இவ்விதம் அடிக்கடி பலவகைத் துக்கத்தை மனதில் கொண்டு சோகத்தின் கரையை அடையவில்லை. (48)

பத்துத்தலை உள்ளவனும் மஹாபலம் பொருந்தியவனுமான

अथ वैनं समुत्क्षिप्य उपर्युपरि सागरम्।
रामायोपहरिष्यामि पशुं पशुपतेरिव ॥ ५०

इति चिन्तां समापन्नः सीतामनधिगम्य ताम्।
ध्यानशोकपरीतात्मा चिन्तयामास वानरः ॥ ५१

यावत्सीतां हि पश्यामि रामपत्नीं यशस्विनीम्।
तावदेतां पुरीं लङ्कां विचिनोमि पुनः पुनः ॥ ५२

संपातिवचनाच्चापि रामं यद्यानयाम्यहम्।
अपश्यन्राघवो भार्यां निर्दहेत्सर्ववानरान् ॥ ५३

அத வைனம் ஸமுத்க்ஷிப்ய உபர்யுபரி ஸாகரம் ।
ராமாயோபஹரிஷ்யாமி பஶும் பஶுபதேரிவ ॥ 50

இதி சிந்தாம் ஸமாபன்ன: ஸீதாமனதிகம்ய தாம் ।
த்யானஶோகபரீதாத்மா சிந்தயாமாஸ வானர: ॥ 51

யாவத்ஸீதாம் ஹி பஶ்யாமி ராமபத்னீம் யஶஸ்வினீம் ।
தாவதேதாம் புரீம் லங்காம் விசிநோமி புன: புன: ॥ 52

ஸம்பாதிவசனாச்சாபி ராமம் யத்யானயாம்யஹம் ।
அபஶ்யன்ராகவோ பார்யாம் நிர்தஹேத்ஸர்வவானரான் ॥ 53

---

ராவணனையாவது கொன்றுவிடுகிறேன். ஸீதை அபஹரிக்கப்பட்டவளாகவே இருக்கட்டும். பதில் செய்ததாக ஆகிவிடும். (49)

ராவணனை கொன்றுவிடுவேனென்பது நம்பத்தக்கதாகாதோ என்று வேறுவிதமாகவும் ஆலோசிக்கிறார்:—

அப்படி இல்லாவிட்டால் இந்த ராவணனை ஸமுத்ரத்திற்கு மேலாக தூக்கி எடுத்துவந்து, யாகத்தில் அஜத்தை பரமேஶ்வரனைப்ப்ரார்த்தித்து யூபஸ்தம்பத்தில் கட்டுவதுபோல் ராமனிடத்தில் ஒப்படைத்து விடுகிறேன். (50)

இவ்விதம் அந்த ஸீதையை அடையாமல் கவலை கொண்டவராய்க்கொண்டு த்யானத்தாலும் சோகத்தாலும் சூழப்பட்ட மனதை உடையவராய்க்கொண்டு ஹனுமார் சிந்தித்தார். (51)

கீர்த்தி வாய்ந்த ராமபத்னியான ஸீதையைப் பார்க்கும்வரையில் இந்த லங்கையில் திரும்பத்திரும்பத் தேடப்போகிறேன். (52)

முன்பு ஸம்பாதி சொன்ன வார்த்தையை நம்பி ராமனை இங்கு அழைத்து வந்திருந்தேனேயானால் பத்னியான ஸீதையைப் பாராத ஸ்ரீராமர் ஸர்வ வானரங்களையும் எரித்திருப்பார். (53)

इहैव नियताहारो वत्स्यामि नियतेन्द्रियः ।
न मत्कृते विनश्येयुः सर्वे ते नरवानराः ॥ ५४

अशोकवनिका चेयं दृश्यते या महाद्रुमा ।
इमामभिगमिष्यामि न हीयं विचिता मया ॥ ५५

वसून्रुद्रांस्तथादित्यानश्विनौ मरुतोऽपि च ।
नमस्कृत्वा गमिष्यामि रक्षसां शोकवर्धनः ॥ ५६

जित्वा तु राक्षसान्सर्वानिक्ष्वाकुकुलनन्दिनीम् ।
संप्रदास्यामि रामाय यथा सिद्धिं तपस्विने ॥ ५७

स मुहूर्तमिव ध्यात्वा चिन्तावग्रथितेन्द्रियः ।
उदतिष्ठन्महातेजा हनूमान्मारुतात्मजः ॥ ५८

இஹைவ நியதாஹாரோ வத்ஸ்யாமி நியதேந்த்ரிய: ।
ந மத்க்ருதே விநஶ்யேயு: ஸர்வே தே நரவாநரா: ॥ 54

அஶோகவநிகா சேயம் த்ருஶ்யதே யா மஹாத்ருமா ।
இமாமபிகமிஷ்யாமி ந ஹீயம் விசிதா மயா ॥ 55

வஸூந்ருத்ராம்ஸ்ததாதித்யாநஶ்விநௌ மருதோऽபி ச ।
நமஸ்க்ருத்வா கமிஷ்யாமி ரக்ஷஸாம் ஶோகவர்த்தந: ॥ 56

ஜித்வா து ராக்ஷஸாந்ஸர்வாநிக்ஷ்வாகுகுலநந்திநீம் ।
ஸம்ப்ரதாஸ்யாமி ராமாய யதா ஸித்திம் தபஸ்விநே ॥ 57

ஸ முஹூர்த்தமிவ த்யாத்வா சிந்தாவக்ரதிதேந்த்ரிய: ।
உததிஷ்டந்மஹாதேஜா ஹநுமாந்மாருதாத்மஜ: ॥ 58

---

இங்கேயே ஆஹாரத்தைக்குறைத்தும் இந்த்ரியங்களை அடக்கியும் வஸிக்கப்போகிறேன். நான் இப்படிச் செய்வேனுகில் அந்த ராமாதிகளும் வானரர்களும் இறக்கமாட்டார்கள். (54)

பெரிய மரங்களுடன் கூடிய அசோகவனமும் காணப்படுகிறது. இதில் ப்ரவேசிக்கப்போகிறேன். இதில் நான் இதுவரை தேடவில்லை. (55)

அஷ்டவஸுக்களையும் ஏகாதஸ ருத்ரர்களையும் த்வாதஸாதித்யர்களையும் ஸப்த மருத்துக்களையும் நமஸ்கரித்துவிட்டு ராக்ஷஸர்களுக்கு சோகத்தைக் கொடுக்கிறவனுய் அசோக வனத்திற்குச் செல்லப்போகிறேன். (56)

எல்லா ராக்ஷஸர்களையும் ஜெயித்து இக்ஷ்வாகு குலத்திற்கு ஸந்தோஷத்தை உண்டு பண்ணுகின்ற ஸீதையை ராமனின் பொருட்டு, தபஸ்வியின் பொருட்டு அந்த தபஸால் ப்ரீதியடைந்த தெய்வம் தபஸின் பலனைக் கொடுப்பதுபோல் கொடுக்கப்போகிறேன். (57)

மஹாதேஜஸ்வியும் வாயுபுத்ரனுமான ஹனுமார் கவலையால்

नमोऽस्तु रामाय सलक्ष्मणाय देव्यै च तस्यै जनकात्मजायै ।
नमोऽस्तु रुद्रेन्द्रयमानिलेभ्यो नमोऽस्तु चन्द्रार्कमरुद्गणेभ्यः ॥
स तेभ्यस्तु नमस्कृत्वा सुग्रीवाय च मारुतिः ।
दिशः सर्वाः समालोक्य ह्यशोकवनिकां प्रति ॥ ६०
स गत्वा मनसा पूर्वमशोकवनिकां शुभाम् ।
उत्तरं चिन्तयामास वानरो मारुतात्मजः ॥ ६१
ध्रुवं तु रक्षोबहुला भविष्यति वनाकुला ।
अशोकवनिका चिन्त्या सर्वसंस्कारसंस्कृता ॥ ६२

நமோऽஸ்து ராமாய ஸ லக்ஷ்மணாய
தேவ்யை ச தஸ்யை ஜனகாத்மஜாயை ।
நமோऽஸ்து ருத்ரேந்த்ரயமாநிலேப்யோ
நமோऽஸ்து சந்த்ரார்க்கமருத்கணேப்ய: ॥ 59
ஸ தேப்யஸ்து நமஸ்க்ருத்வா ஸுக்ரீவாய ச மாருதி: ।
திஶ: ஸர்வா: ஸமாலோக்ய ஹ்யஶோகவனிகாம் ப்ரதி ॥ 60
ஸ கத்வா மனஸா பூர்வமஶோகவனிகாம் ஶுபாம் ।
உத்தரம் சிந்தயாமாஸ வானரோ மாருதாத்மஜ: ॥ 61
த்ருவம் து ரக்ஷோபஹுலா பவிஷ்யதி வனாகுலா ।
அஶோகவனிகா சிந்த்யா ஸர்வஸம்ஸ்காரஸம்ஸ்க்ருதா ॥ 62

---

கலங்கி ஒரு முஹூர்த்தம் த்யானம் செய்தார். அதாவது இது வரையில் தேடியும் ஸீதையைக் காணவில்லையே அதற்கு என்ன பாபம் தடையாக இருக்கக்கூடும் என்று யோசித்து ஸ்ரீராமாதிகளை நமஸ்கரிக்காமல் மஹேந்த்ர மலையிலிருந்து புறப்பட்டதே காரணமென்று உணர்ந்து அவர்களை நமஸ்கரிக்க எழுந்தார். (58)

லக்ஷ்மணனோடு கூடிய ராமனுக்கும் ஜனகபுத்ரியும் தேவியுமான அந்த ஸீதைக்கும் ருத்ரன் இந்த்ரன் யமன் வாயு சந்த்ரன் ஸூர்யன் மருத்கணம் இவர்கள் எல்லோருக்கும் நமஸ்காரம். (59)

அந்த வாயுபுத்ரன் அவர்களை நமஸ்கரித்துவிட்டு ஸுக்ரீவனுக்கும் நமஸ்காரம் செய்து அசோகவனம் போவதற்காக எல்லா திக்குகளையும் பார்த்து மங்களமான அசோகவனத்தை அடைந்து மேல் செய்யவேண்டியதை ஆலோசித்தார்.

ஹனுமார் எப்பொழுதும் தான் செய்யும் கார்யத்தை முன்னதாகவே மனதால் ஒருமுறை யோசிப்பது வழக்கம். கிஷ்கிந்தா காண்டமுடிவில் லங்கைக்குப் புறப்படும் முன்பு மனதால் லங்கையை அடைந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் கார்யத்தை ஆரம்பிப்பவர்கள் முன்னதாகவே ஒரு முறை மனதால் சிந்தித்துப்பார்க்கவேண்டுமென்பது கருத்து. (60, 61)

ராக்ஷஸர்கள் நிறைந்ததும், வ்ருக்ஷங்களால் வ்யாபிக்கப்பட்ட

रक्षिणश्चात्र विहिता नूनं रक्षन्ति पादपान् ।
भगवानपि सर्वात्मा नातिक्षोभं प्रवाति वै ॥ ६३

संक्षिप्तोऽयं मयात्मा च रामार्थे रावणस्य च ।
सिद्धिं मे संविधास्यन्ति देवाः सर्षिगणास्त्विह ॥ ६४

ब्रह्मा स्वयंभूर्भगवान्देवाश्चैव दिशन्तु मे ।
सिद्धिमग्निश्च वायुश्च पुरुहूतश्च वज्रभृत् ॥ ६५

वरुणः पाशहस्तश्च सोमादित्यौ तथैव च ।
अश्विनौ च महात्मनौ मरुतः शर्व एव च ॥ ६६

सिद्धिं सर्वाणि भूतानि भूतानां चैव यः प्रभुः ।
दास्यन्ति मम ये चान्ये ह्यदृष्टाः पथिगोचराः ॥ ६७

ரக்ஷிணஶ்சாத்ர விஹிதா நூனம் ரக்ஷந்தி பாதபான் ।
பகவானபி ஸர்வாத்மா நாதிக்ஷோபம் ப்ரவாதி வை ॥ **63**

ஸம்க்ஷிப்தோऽயம் மயாத்மா ச ராமார்த்தே ராவணஸ்ய ச ।
ஸித்திம் மே ஸம்விதாஸ்யந்தி தேவா: ஸர்ஷிகணாஸ்த்விஹ ॥

ப்ரம்ஹா ஸ்வயம்பூர்பகவான்தேவாஶ்சைவ திஶந்து மே ।
ஸித்திமக்னிஶ்ச வாயுஶ்ச புருஹூதஶ்ச வஜ்ரப்ருத் ॥ **65**

வருண: பாஶஹஸ்தஶ்ச ஸோமாதித்யௌ ததைவச ।
அஶ்வினௌ ச மஹாத்மானௌ மருத: ஶர்வ ஏவ ச ॥ **66**

ஸித்திம் ஸர்வாணி பூதானி பூதானாம் சைவ ய: ப்ரபு: ।
தாஸ்யந்தி மம யே சான்யே ஹ்யத்ருஷ்டா: பதிகோசரா: ॥ **67**

---

தும், உழுதல் புல்களை அகற்றுதல் இவற்றால் சுத்தம் செய்யப்பட்டதுமான இந்த அசோகவனம் தேடத்தகுந்தது. (62)

இங்கு காவலுக்கு அமர்த்தப்பட்ட காவலாளிகள் வ்ருக்ஷங்களை நிஶ்சயம் காப்பார்கள். பகவானும் ஸர்வ வ்யாபியுமான வாயு மிகவும் அசையும்படி வீசவில்லை. (63)

ராம கார்ய ஸித்திக்காகவும் ராவணன் அறியாமலிருப்பதற்காகவும் என் தேகத்தைச் சுருக்கிக்கொண்டேன். இங்கு ரிஷிகணங்களோடு கூடிய தேவர்கள் எனக்கு கார்யஸித்தியை உண்டு பண்ணவேண்டும். (64)

தானாக உண்டானவரும் பகவானுமான ப்ரம்மாவும், தேவர்களும், எனக்கு கார்ய ஸித்தியைக்கொடுக்கட்டும். மற்றும் அக்னியும், வாயுவும், வஜ்ராயுதம் தரித்த இந்த்ரனும், பாசத்தைக் கையிலுள்ள வருணனும், சந்த்ர ஸூர்யர்களும், மஹாத்மாக்களான அஶ்வினி தேவர்களும், ஸப்த மருத்துக்களும், பரமேஶ்வரனும் எல்லா பூதங்களும், பூதங்களுக்கெல்லாம் ப்ரபுவான ஸர்வேஶ்வரனும்,

तदुन्नसं पाण्डुरदन्तमव्रणं शुचिस्मितं पद्मपलाशलोचनम् ।
द्रक्ष्ये तदार्यावदनं कदान्वहं प्रसन्नताराधिपतुल्यदर्शनम् ॥ ६८

क्षुद्रेण पापेन नृशंसकर्मणा सुदारुणालङ्कृतवेषधारिणा ।
बलाभिभूता ह्यबला तपस्विनी कथं नु मे दृष्टिपथेऽद्य सा भवेत् ॥ ६९

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
त्रयोदशः सर्गः ॥ १३ ॥

ததுன்னஸம் பாண்டுரதந்தமவ்ரணம்
ஶுசிஸ்மிதம் பத்மபலாஶலோசனம் ।
த்ரக்ஷ்யே ததார்யாவதனம் கதான்வஹம்
ப்ரஸன்னதாராதிபதுல்யதர்ஶனம் ॥ 68

க்ஷுத்ரேண பாபேன ந்ருஶம்ஸகர்மணா
ஸுதாருணாலங்க்ருதவேஷதாரிணா ।
பலாபிபூதா ஹ்யபலா தபஸ்வினீ
கதம் நு மே த்ருஷ்டிபதேऽத்ய ஸா பவேத் ॥ 69

*இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே த்ரயோதஶ: ஸர்க: ॥*

---

மற்றும் எனக்கு புலப்படாதவர்களும் மார்கத்திலிருப்பவர்களு மான தேவர்கள் எல்லாம் எனக்கு கார்யஸித்தியைக் கொடுக்கட்டும். (65—67)

ஆகையால் உயர்ந்த மூக்குள்ளதும், வெண்மையான பற்களை உடையதும், குற்றமற்றதும், பரிஶுத்தமான மந்தஹாஸத்துடன் கூடியதும், தாமரைப்பூவின் இதழ்போன்ற கண்களை உடையதும், சுத்தமாகப் ப்ரகாசிக்கும் சந்த்ரனுக்கு ஒப்பானதுமான அந்த தாயான ஸீதையின் முகத்தை எப்பொழுது நான் பார்க்கப்போகிறேன். (68)

நீசனும், பாபியும், க்ரூரமான கார்யங்களைச் செய்கிறவனும், அதிபயங்கரமான அலங்காரம் வேஷம் இவைகளை உடையவனுமான ராவணனால் பலாத்காரமாக அபஹரிக்கப்பட்டவளும் கவலையை அடைந்தவளுமான அந்த ஸீதை என் கண்ணுக்கு இப்பொழுது எப்படி புலப்படுவாள். (69)

பதிமூன்றுவது ஸர்கம் முற்றிற்று.

---

ஸ்ரீ:

चतुर्दशः सर्गः — பதினான்காவது ஸர்கம் ॥ १४ ॥

# "अशोकवनान्वेषणम्"

# அசோகவனத்தில் தேடுதல்.

स मुहूर्तमिव ध्यात्वा मनसा चाधिगम्य ताम् ।
अवप्लुतो महातेजाः प्राकारं तस्य वेश्मनः ॥ १

स तु संहृष्टसर्वाङ्गः प्राकारस्थो महाकपिः ।
पुष्पिताग्रान्वसन्तादौ ददर्श विविधान्द्रुमान् ॥ २

सालानशोकान्भव्यांश्च चम्पकांश्च सुपुष्पितान् ।
उद्दालकान्नागवृक्षांश्चूतान्कपिमुखानपि ॥ ३

अथाम्रवणसंछन्नां लताशतसमावृताम् ।
ज्यामुक्त इव नाराचः पुप्लुवे वृक्षवाटिकाम् ॥ ४

ஸ முஹூர்த்தமிவ த்யாத்வா மனஸா சாதிகம்ய தாம் ।
அவப்லுதோ மஹாதேஜா: ப்ராகாரம் தஸ்ய வேஶ்மன: ॥ 1

ஸ து ஸம்ஹ்ருஷ்டஸர்வாங்க: ப்ராகாரஸ்தோ மஹாகபி: ।
புஷ்பிதாக்ரான்வஸந்தாதௌ தத3ர்ஶ விவிதாந்த்ருமான் ॥ 2

ஸாலானஶோகான்பவ்யாம்ஶ்ச சம்பகாம்ஶ்ச ஸுபுஷ்பிதான் ।
உத்தாலகான்நாகவ்ருக்ஷாம்ஶ்சூதான்கபிமுகானபி ॥ 3

அதாம்ரவணஸம்சன்னாம் லதாஶதஸமாவ்ருதாம் ।
ஜ்யாமுக்த இவ நாராச: புப்லுவே வ்ருக்ஷவாடிகாம் ॥ 4

---

மஹாதேஜஸ்வியான அந்த ஹனுமார் முஹூர்த்தகாலம் த்யானித்து அந்த ஸீதையை மனதால் அடைந்து, அந்த ராவணனுடைய வீட்டிலிருந்து அஶோகவனத்தின் ப்ராகாரத்தைக் குறித்துத்தாவினார். (1)

ஸந்தோஷத்தால் பெருத்த எல்லா அங்கங்களை உடையவரும் ப்ராகாரத்திலே இருப்பவரும் மஹாகபியுமான அந்த ஹனுமாரோவெனில் வஸந்தகால ஆரம்பத்தில் நுனியில் புஷ்பித்தவைகளான பலவகையான தேக்கு, அழகிய அஶோகம் நன்கு பூத்தவைகளான சம்பகம், நறுவிலி, நாககேஸரம், மா, கொடிப்புங்கு முதலிய மரங்களையும் பார்த்தார். (2, 3)

பிறகு மாந்தோப்புகள் நிரம்பியதும், நூற்றுக்கணக்கான கொடிகளால் சூழப்பட்டதுமான மரங்களடர்ந்த அந்த அஶோகவனத்தில் நாணிலிருந்தும் விடுபட்ட அம்புபோல் தாவினார். (4)

स प्रविश्य विचित्रां तां विहगैरभिनादिताम्।
राजतैः काञ्चनैश्चैव पादपैः सर्वतो वृताम्॥ ५

विहगैर्मृगसङ्घैश्च विचित्रां चित्रकाननाम्।
उदितादित्यसंकाशां ददर्श हनुमान्कपिः॥ ६

वृतां नानाविधैर्वृक्षैः पुष्पोपगफलोपगैः।
कोकिलैर्भृङ्गराजैश्च मत्तैर्नित्यनिषेविताम्॥ ७

प्रहृष्टमनुजे काले मृगपक्षिसमाकुले।
मत्तबर्हिणसंघुष्टां नानाद्विजगणायुताम्॥ ८

मार्गमाणो वरारोहां राजपुत्रीमनिन्दिताम्।
सुखप्रसुप्तान्विहगान्बोधयामास वानरः॥ ९

ஸ ப்ரவிஶ்ய விசித்ராம் தாம் விஹகைரபிநாதிதாம் ।
ராஜதை: காஞ்சனைஶ்சைவ பாதபை: ஸர்வதோ வ்ருதாம் ॥ 5

விஹகைர்ம்ருகஸங்கைஶ்ச விசித்ராம் சித்ரகானனாம் ।
உதிதாதித்யஸங்காஶாம் ததர்ஶ ஹனுமான்கபி: ॥ 6

வ்ருதாம் நானாவிதைர்வ்ருக்ஷை: புஷ்போபகபலோபகை: ।
கோகிலைர்ப்ருங்கராஜைஶ்ச மத்தைர்நித்யநிஷேவிதாம் ॥ 7

ப்ரஹ்ருஷ்டமனுஜே காலே ம்ருகபக்ஷிஸமாகுலே ।
மத்தபர்ஹிணஸங்குஷ்டாம் நானாத்விஜகணாயுதாம் ॥ 8

மார்கமாணோ வராரோஹாம் ராஜபுத்ரீமநிந்திதாம் ।
ஸுகப்ரஸுப்தான்விஹகான்போதயாமாஸ வானர: ॥ 9

---

அந்த கபியான ஹனுமார் பக்ஷிகளால் ஶப்தம் செய்யப்பட்டதும், வெள்ளிமயமான மரங்களாலும், தங்கமயமான மரங்களாலும், நாலாபக்கத்திலும் சூழ்ந்ததும், பக்ஷிகளாலும் மான் கூட்டங்களாலும் விசித்ரமானதும், அழகிய காடுகளை உடையதும் உதய ஸூர்யனுக்கொப்பானதும், பூ, பழம் இவைகள் நிரம்பிய பலவித வ்ருக்ஷங்களால் சூழப்பட்டதும், மதம் பிடித்த குயில்களாலும், வண்டுகளாலும் தினம் ஸேவிக்கப்பட்டதும், கொழுத்த மயில்களின் ஶப்தத்தோடு கூடியதும், பலவித பக்ஷிக்கூட்டங்களோடு கூடியதுமான அந்த அஶோக வனத்தை, ஸந்தோஷமடைந்த மனிதர்களை உடையதும், மான்கள், பக்ஷிகள் இவை நிரம்பி இருக்கக்கூடியதுமான வஸந்தத்தின் ஆரம்பகாலத்தில் கண்டார். (5—8)

ராஜகுமாரியும், குற்றமற்றவளும், சிறந்தவளுமான அந்த ஸீதையைத் தேடுகின்றவராகி ஹனுமார் மரத்துக்கு மரம் தாவும் ஶப்தத்தால் ஸுகமாகத் தூங்கும் பக்ஷிகளை எழுப்பிவிட்டார். (9)

उत्पतद्भिर्द्विजगणैः पक्षैः सालाः समाहताः ।
अनेकवर्णा विविधा मुमुचुः पुष्पवृष्टयः ॥ १०

पुष्पावकीर्णः शुशुभे हनुमान्मारुतात्मजः ।
अशोकवनिकामध्ये यथा पुष्पमयो गिरिः ॥ ११

दिशः सर्वाः प्रधावन्तं वृक्षषण्डगतं कपिम् ।
दृष्ट्वा सर्वाणि भूतानि वसन्त इति मेनिरे ॥ १२

वृक्षेभ्यः पतितैः पुष्पैरवकीर्णा पृथग्विधैः ।
रराज वसुधा तत्र प्रमदेव विभूषिता ॥ १३

तरस्विना ते तरवस्तरसाऽभिप्रकम्पिताः ।
कुसुमानि विचित्राणि ससृजुः कपिना तदा ॥ १४

உத்பதத்பிர்த்விஜகணை: பக்ஷை: ஸாலா: ஸமாஹதா: ।
அநேகவர்ணா விவிதா முமுசு: புஷ்பவ்ருஷ்டய: ॥ 10

புஷ்பாவகீர்ண: ஶுஶுபே ஹனுமான்மாருதாத்மஜ: ।
அஶோகவனிகாமத்யே யதா புஷ்பமயோ கிரி: ॥ 11

திஶ: ஸர்வா: ப்ரதாவந்தம் வ்ருக்ஷஷண்டகதம் கபிம் ।
த்ருஷ்ட்வா ஸர்வாணி பூதானி வஸந்த இதி மேனிரே ॥ 12

வ்ருக்ஷேப்ய: பதிதை: புஷ்பைரவகீர்ணா ப்ருதக்விதை: ।
ரராஜ வஸுதா தத்ர ப்ரமதேவ விபூஷிதா ॥ 13

தரஸ்விநா தே தரவஸ்தரஸாऽபிப்ரகம்பிதா: ।
குஸுமானி விசித்ராணி ஸஸ்ருஜு: கபிநா ததா ॥ 14

---

*எழுந்து மேலே பறந்து செல்லும் பக்ஷிக்கூட்டங்களின் இறக்கைகளால் அடிக்கப்பட்ட மரங்கள் பல வர்ணமுள்ள பலவகையான புஷ்ப வர்ஷங்களை வர்ஷித்தன.* (10)

*வாயுபுத்ரரான ஹனுமார் புஷ்பங்களால் வாரி இறைக்கப் பட்டவராய் அஶோகவனத்தின் நடுவில் புஷ்பமயமான மலைபோல் விளங்கினார்.* (11)

*நாலா திக்குகளிலும் ஓடுகின்றவரும் மரக்கூட்டங்களின் நடுவை அடைந்தவருமான ஹனுமாரைப்பார்த்து எல்லா ப்ராணி களும் வஸந்தன் என்றே எண்ணின.* (12)

*மரங்களினின்று விழுந்தவைகளும், பலவிதங்களுமான புஷ் பங்களால் நிரம்பிய பூமியானது அலங்காரம் செய்துகொள்ளப் பட்ட ஸ்த்ரீபோல் ப்ரகாசித்தது.* (13)

*வேகமுள்ள அந்த ஹனுமாரால் வேகத்துடன் அசைக்கப் கப்பட்ட வ்ருக்ஷங்கள், பலவகை வர்ணமுள்ள புஷ்பங்களை அப்பொழுது உதிர்த்தன.* (14)

निर्धूतपत्रशिखराः शीर्णपुष्पफलद्रुमाः।
निक्षिप्तवस्त्राभरणा धूर्ता इव पराजिताः॥ १५

हनूमता वेगवता कम्पितास्ते नगोत्तमाः।
पुष्पपर्णफलान्याशु मुमुचुः पुष्पशालिनः॥ १६

विहङ्गसङ्घैर्हीनास्ते स्कन्धमात्राश्रया द्रुमाः।
बभूवुरगमाः सर्वे मारुतेनेव निर्धुताः॥ १७

निर्धूतकेशी युवतिर्यथा मृदितवर्णका।
निष्पीतशुभदन्तोष्ठी नखैर्दन्तैश्च विक्षता॥ १८

तथा लाङ्गूलहस्तैश्च चरणाभ्यां च मर्दिता।
बभूवाशोकवनिका प्रभग्नवरपादपा॥ १९

நிர்தூதபத்ரஶிகரா: ஶீர்ணபுஷ்பபலத்ருமா: ।
நிக்ஷிப்தவஸ்த்ராபரணா தூர்த்தா இவ பராஜிதா: ॥ 15

ஹநூமதா வேகவதா கம்பிதாஸ்தே நகோத்தமா: ।
புஷ்பபர்ணபலான்யாஶு முமுசு: புஷ்பஶாலின: ॥ 16

விஹங்கஸங்கைர்ஹீனாஸ்தே ஸ்கந்தமாத்ராஶ்ரயா த்ருமா: ।
பபூவுரகமா: ஸர்வே மாருதேனேவ நிர்துதா: ॥ 17

நிர்தூதகேஶீ யுவதிர்யதா ம்ருதிதவர்ணகா ।
நிஷ்பீதஶுபதந்தோஷ்டீ நகைர்தந்தைஶ்ச விக்ஷதா ॥ 18

ததா லாங்கூலஹஸ்தைஶ்ச சரணாப்யாம் ச மர்திதா ।
பபூவாஶோகவனிகா ப்ரபக்னவரபாதபா ॥ 19

---

உதிர்க்கப்பட்ட மேலே உள்ள இலைகளை உடையதுகளும் உதிர்ந்த புஷ்பம், பழம் இவைகளை உடையதுகளுமான வ்ருக்ஷங்கள், சூதாட்டத்தில் தோல்வியடைந்து வஸ்த்ரம், ஆபரணம் முதலியவற்றை பறிகொடுத்த சூதாடிகள் போலிருந்தன. (15)

வேகமுள்ள ஹனுமாரால் அசைக்கப்பட்டதுகளும், புஷ்பங்களுடன் கூடியதுகளுமான அந்த சிறந்த மரங்கள் வெகு சீக்ரமாய் புஷ்பம், பழம், இலை இவைகளை உதிர்த்தன. (16)

பக்ஷிக்கூட்டங்களற்றதும், வெறும் கிளைகளுடன் மட்டும் இருப்பவைகளுமான அந்த வ்ருக்ஷங்கள் காற்றினால் அசைக்கப்பட்டதுகள்போல் ஸேவிக்கத்தகாதவைகளாய் இருந்தன. (17)

கலைந்த கேசபாசங்களை உடையவளும், வாஸனைப்பூச்சு அழிந்தவளும், அதரபானத்தால் சுத்தமான பற்கள்போன்ற உதட்டை உடையவளும், நகங்கள், பற்கள் இவைகளால் காயம் செய்யப்பட்டவளுமான யுவதிபோல் வாலினாலும், கைகளாலும், கால்களாலும் மிதிக்கப்பட்டு முறிந்த சிறந்த வ்ருக்ஷங்களை உடையதான அந்த அஶோகம் இருந்தது. (18, 19)

महालतानां दामानि व्यधमत्तरसा कपिः ।
यथा प्रावृषि विन्ध्यस्य मेघजालानि मारुतः ॥ २०

स तत्र मणिभूमीश्च राजतीश्च मनोरमाः ।
तथा काञ्चनभूमीश्च ददर्श विचरन्कपिः ॥ २१

वापीश्च विविधाकाराः पूर्णाः परमवारिणा ।
महार्हैर्मणिसोपानैरुपपन्नास्ततस्ततः ॥ २२

मुक्ताप्रवालसिकताः स्फाटिकान्तरकुट्टिमाः ।
काञ्चनैस्तरुभिश्चित्रैस्तीरजैरुपशोभिताः ॥ २३

फुल्लपद्मोत्पलवनाश्चक्रवाकोपकूजिताः ।
नत्यूहरुतसंघुष्टा हंससारसनादिताः ॥ २४

மஹாலதானும் தாமானி வ்யதமத்தரஸா கபி: ।
யதா ப்ராவ்ருஷி விந்த்யஸ்ய மேகஜாலானி மாருத: ॥ 20

ஸ தத்ர மணிபூமீஸ்ச ராஜதீஸ்ச மனோரமா: ।
ததா காஞ்சனபூமீஸ்ச ததர்ஶ விசரன்கபி: ॥ 21

வாபீஸ்ச விவிதாகாரா: பூர்ணா: பரமவாரிணா ।
மஹார்ஹைர்மணிஸோபானைருபபன்னாஸ்ததஸ்தத: ॥ 22

முக்தாப்ரவாலஸிகதா: ஸ்பாடிகாந்தரகுட்டிமா: ।
காஞ்சனைஸ்தருபிஸ்சித்ரைஸ்தீரஜைருபஶோபிதா: ॥ 23

புல்லபத்மோத்பலவனாஸ்சக்ரவாகோபகூஜிதா: ।
நத்யூஹருதஸங்குஷ்டா ஹம்ஸஸாரஸனாதிதா: ॥ 24

---

ஹனுமார் வேகத்தினால் பெரும் கொடிகளின் மாலைகளை, வர்ஷா காலத்தில் வாயுவானவன் விந்த்ய மலையைச்சேர்ந்த மேகக் கூட்டங்களைப்போல் சிதறடித்தார். (20)

அந்த ஹனுமார் அங்கு ரத்னக்கற்களால் தளவரிசை செய்யப்பட்ட ப்ரதேஶங்களையும், தங்கத்தால் பதிக்கப்பட்ட ப்ரதேஶங்களையும் பலவித உருவமுள்ளதுகளும், சிறந்த ஜலம் நிரம்பியதும் ஆங்காங்கு சிறந்த மணிகளால் கட்டப்பட்ட படிக்கட்டுகளுடன் கூடியதுகளும், முத்துக்கள், பவழங்கள் இவைகளாகிய மணல்களை உடையதுகளும், ஸ்படிகக்கற்களை மத்தியில் வைத்துக்கட்டப்பட்டவைகளும், கரையில் முளைத்தவைகளும், ஸ்வர்ணமயமானதுகளும் சித்ரவர்ணமுள்ளதுகளுமான மரங்களால் ப்ரகாசிப்பவைகளும், மலர்ந்த தாமரை, நீலோத்பலம் இவற்றின் குவியலை உடையதுகளும், சக்ரவாகப்பக்ஷிகளால் ஶப்திக்கப்பட்டதுகளும், நச்சுக்குருவிகளின் ஶப்தத்தோடு சூழ்ந்ததுகளும், ஹம்ஸம், ஸாரஸம் எனும் இப்பறவைகளின் ஶப்தத்தை உடையதுகளும், நீண்டதுகளும் மரங்களோடு கூடியதுகளும், அம்ருதத்திற்கு

दीर्घाभिर्द्रुमयुक्ताभिः सरिद्भिश्च समन्ततः।
अमृतोपमतोयाभिः शिवाभिरुपसंस्कृताः॥ २५
लताशतैरवतताः सन्तानकुसुमावृताः।
नानागुल्मावृतघनाः करवीरकृतान्तराः। २६
ततोऽम्बुधरसंकाशं प्रवृद्धशिखरं गिरिम्।
विचित्रकूटं कूटैश्च सर्वतः परिवारितम्॥ २७
शिलागृहैरवततं नानावृक्षैः समावृतम्।
ददर्श हरिशार्दूलो रम्यं जगति पर्वतम्॥ २८
ददर्श च नगात्तस्मान्नदीं निपतितां कपिः।
अङ्कादिव समुत्पत्य प्रियस्य पतितां प्रियाम्॥ २९

தீர்க்காபிர்த்ருமயுக்தாபி: ஸரித்பிஸ்ச ஸமந்தத: |
அம்ருதோபமதோயாபி: ஶிவாபிருபஸம்ஸ்க்ருதா: || **25**

லதாஶதைரவததா: ஸந்தானகுஸுமாவ்ருதா: |
நானாகுல்மாவ்ருதகனா: கரவீரக்ருதாந்தரா: || **26**

ததோ஽ம்புதரஸம்காஶம் ப்ரவ்ருத்தஶிகரம் கிரிம் |
விசித்ரகூடம் கூடைஸ்ச ஸர்வத: பரிவாரிதம் || **27**

ஶிலாக்ருஹைரவததம் நானாவ்ருக்ஷைஸ்ஸமாவ்ருதம் |
ததர்ஶ ஹரிஶார்தூலோ ரம்யம் ஜகதி பர்வதம் || **28**

ததர்ஶ ச நகாத்தஸ்மான்நதீம் நிபதிதாம் கபி: |
அங்காதிவ ஸமுத்பத்ய ப்ரியஸ்ய பதிதாம் ப்ரியாம் || **29**

---

ஒப்பான ஜலத்தை உடையவைகளும் பரிசுத்தமானவைகளுமான ஆறுகளால் நாலாபக்கத்தில் பெருக்கெடுத்து ஓடும்படி செய்யப் பட்டவைகளும், பலவித கொடிகளால் சூழ்ந்ததுகளும், கற்பக வ்ருக்ஷத்தின் பூக்கள் நிறைந்ததும் பலவித புதர்களால் நெருக்க மாக சூழப்பட்டவைகளும் அலரிப்புஷ்பங்களால் செய்யப்பட்ட இடைவெளியை உடையவைகளுமான குளங்களையும் பார்த் தார். (21—26)

பிறகு, மேகத்துக்கு ஒப்பானதுகளும், மிக வளர்ச்சி பெற்றதுகளும், பலவகைப்பட்டவைகளுமான உச்சிகளை உடைய தும், தன் குன்றுகளால் நாலாபக்கத்திலும் சூழ்ந்ததும், கல்லா லான வீடுகளாலும், பலவித மரங்களாலும் சூழ்ந்ததும் உலகத்தி லேயே மிக அழகியதுமான பர்வதத்தை அந்த ஹனுமார் கண்டார். (27, 28)

ஹனுமார் அந்த மலையிலிருந்தும், பெருகி ஓடும் ஆற்றை நாயகனுடைய மடியிலிருந்து கோபத்தால் எழுந்து ஓடும் மனைவி யைப் போல் பார்த்தார். (29)

जले निपतिताग्रैश्च पादपैरुपशोभिताम्।
वार्यमाणामिव क्रुद्धां प्रमदां प्रियबन्धुभिः॥ ३०

पुनरावृत्ततोयां च ददर्श स महाकपिः।
प्रसन्नामिव कान्तस्य कान्तां पुनरुपस्थिताम्॥ ३१

तस्यादूरात्स पद्मिन्यो नानाद्विजगणायुताः।
ददर्श हरिशार्दूलो हनुमान्मारुतात्मजः॥ ३२

कृत्रिमां दीर्घिकां चापि पूर्णां शीतेन वारिणा।
मणिप्रवरसोपानां मुक्तासिकतशोभिताम्॥ ३३

विविधैर्मृगसङ्घैश्च विचित्रां चित्रकाननाम्।
प्रासादैः सुमहद्भिश्च निर्मितैर्विश्वकर्मणा॥
काननैः कृत्रिमैश्चापि सर्वतः समलङ्कृताम्॥ ३४

ஜலே நிபதிதாக்ரைஸ்ச பாதபைருபஸோபிதாம் |
வார்யமாணுமிவ க்ருத்தாம் ப்ரமதாம் ப்ரியபந்துபி: || 30

புனராவ்ருத்ததோயாம் ச ததர்ஸ ஸ மஹாகபி: |
ப்ரஸன்னுமிவ காந்தஸ்ய காந்தாம் புனருபஸ்திதாம் || 31

தஸ்யாதூராத்ஸ பத்மின்யோ நாணுத்விஜகணுயுதா: |
ததர்ஸ ஹரிஸார்தூலோ ஹனுமான்மாருதாத்மஜ: || 32

க்ருத்ரிமாம் தீர்கிகாம் சாபி பூர்ணும் ஸீதேன வாரிணு |
மணிப்ரவரஸோபானும் முக்தாஸிகதஸோபிதாம் || 33

விவிதைர்ம்ருகஸங்கைஸ்ச விசித்ராம் சித்ரகானனும் |
ப்ராஸாதை: ஸுமஹத்பிஸ்ச நிர்மிதைர்விஸ்வகர்மணு ||
கானனை: க்ருத்ரிமைஸ்சாபி ஸர்வத: ஸமலங்க்ருதாம் || 34

---

அந்த கபியான ஹனுமார் தனது பந்துக்களால், கோபமடைந்தவளும் தடுக்கப்பட்டவளுமான ஒரு ஸ்த்ரீயைப்போல் ஜலத்தில் விழுந்த அக்ரபாகத்தை உடைய வ்ருக்ஷங்களால் ப்ரகாஸிப்பதும், கோபம் அடங்கி அவளே திரும்பிவந்து தன் நாயகனை அடைவது போல் அம்மரங்களின் அக்ரங்களால் தடைபட்டு மறுபடியும் தான் கிளம்பிய மலையின் பக்கமாகவே பெருக ஆரம்பித்த ஜலத்தை உடையதுமான ஒரு நதியையும் கண்டார். (30, 31)

அதற்குப் பக்கத்தில் ஹரிஸ்ரேஷ்டரும் வாயுபுத்ரருமான அந்த ஹனுமார் பலவிதப் பக்ஷிக்கூட்டங்களுடன் கூடிய தாமரை ஓடைகளையும், வெட்டப்பட்டதும் குளிர்ந்த ஜலம் நிரம்பியதும் சிறந்த மணிமயமான படிக்கட்டுகளை உடையதும், முத்து மணல்களால் விளங்குவதும், பலவிதமான மான் கூட்டங்களால் அழகியதும், அழகிய காடுகளை உடையதும், விஸ்வகர்மாவினுல் கட்டப்பட்டதுகளும் மிகப்பெரியதுகளுமான மாளிகைகளாலும் நட்டு

ये केचित्पादपास्तत्र पुष्पोपगफलोपगाः।
सच्छत्राः सवितर्दीकाः सर्वे सौवर्णवेदिकाः॥ ३५

लताप्रतानैर्बहुभिः पर्णैश्च बहुभिर्वृताम्।
काञ्चनीं शिंशुपामेकां ददर्श हनुमान्कपिः॥
वृतां हेममयीभिस्तु वेदिकाभिः समन्ततः॥ ३६

सोऽपश्यद्भूमिभागांश्च गर्तप्रस्रवणानि च।
सुवर्णवृक्षानपरान्ददर्श शिखिसन्निभान्॥ ३७

तेषां द्रुमाणां प्रभया मेरोरिव दिवाकरः।
अमन्यत तदा वीरः काञ्चनोऽस्मीति वानरः॥ ३८

யே கேசித்பாதபாஸ்தத்ர புஷ்போபகபலோபகா: ।
ஸச்சத்ரா: ஸவிதர்தீகா: ஸர்வே ஸௌவர்ணவேதிகா: ॥ 35

லதாப்ரதாநைர்பஹுபி: பர்ணைஶ்ச பஹுபிர்வ்ருதாம் ।
காஞ்சநீம் ஶிம்ஶுபாமேகாம் ததர்ஶ ஹநுமான்கபி: ॥
வ்ருதாம் ஹேமமயீபிஸ்து வேதிகாபி: ஸமந்தத: ॥ 36

ஸோऽபஶ்யத்பூமிபாகாம்ஶ்ச கர்த்தப்ரஸ்ரவணாநி ச ।
ஸுவர்ணவ்ருக்ஷானபரான்ததர்ஶ ஶிகிஸன்னிபான் ॥ 37

தேஷாம் த்ருமாணாம் ப்ரபயா மேரோரிவ திவாகர: ।
அமன்யத ததா வீர: காஞ்சநோऽஸ்மீதி வானர: ॥ 38

---

வளர்க்கப்பட்ட உத்யானங்களாலும் சுற்றிலும் நன்கு அலங்கரிக்கப்பட்டதுமான சிறு குளத்தையும் பார்த்தார். (32—34)

அங்கு இருந்த மரங்கள் யாவும் புஷ்பங்களும் பழங்களும் நிறைந்தவைகளும் குடையின் உருவம்போல் தழைத்து இருப்பவைகளும் மேடைகளுடன் கூடியதுகளாகவும் அந்த எல்லா மேடைகளுமே தங்கமயமான படிக்கட்டுகளை உடையதுகளாகவுமிருந்தன. (35)

கபியான ஹனுமார் அநேக கொடிகளாலும் அதிகமான இலைகளாலும் சூழ்ந்ததும் தங்கமயமானதும் சுற்றிலும் ஸ்வர்ணமயமான மேடைகளால் சூழப்பட்டதுமான ஒரு ஶிம்ஶுபா வ்ருக்ஷத்தைப் பார்த்தார். (36)

அந்த ஹனுமார் மற்றும் பூப்ரதேசங்களையும் பள்ளங்களில் ஓடும் நீரோடைகளையும் மயிலுக்கு ஸமமான மற்ற தங்கமயமான மரங்களையும் கண்டார். (37)

அப்பொழுது வீரரும் வானரருமான ஹனுமார் மேருபர்வதத்தின் ஒளியால் விளங்கும் ஸூர்யன் போல், தன்னையும் தங்கமயமான வ்ருக்ஷங்களின் காந்தியால் தங்கமயமாய் இருக்கிறேன் என்று எண்ணினார். (38)

तां काञ्चनैस्तरुगणैर्मारुतेन च वीजिताम्।
किङ्किणीशतनिर्घोषां दृष्ट्वा विस्मयमागमत्॥ ३९

स पुष्पिताग्रां रुचिरां तरुणाङ्कुरपल्लवाम्।
तामारुह्य महाबाहुः शिंशुपां पर्णसंवृताम्॥ ४०

इतो द्रक्ष्यामि वैदेहीं रामदर्शनलालसाम्।
इतश्चेतश्च दुःखार्तां संपतन्तीं यदृच्छया॥ ४१

अशोकवनिका चेयं दृढं रम्या दुरात्मनः।
चम्पकैश्चन्दनैश्चापि वकुलैश्च विभूषिता॥ ४२

தாம் காஞ்சனைஸ்தருகணைர்மாருதேன ச வீஜிதாம் ।
கிங்கிணீஶதநிர்கோஷாம் த்ருஷ்ட்வா விஸ்மயமாகமத் ॥ 39

ஸ புஷ்பிதாக்ராம் ருசிராம் தருணாங்குரபல்லவாம் ।
தாமாருஹ்ய மஹாபாஹு: ஶிம்ஶபாம் பர்ணஸம்வ்ருதாம் ॥

இதோ த்ரக்ஷ்யாமி வைதேஹீம் ராமதர்ஶனலாலஸாம் ।
இதஶ்சேதஶ்ச து:கார்த்தாம் ஸம்பதந்தீம் யத்ருச்சயா ॥ 41

அஶோகவனிகா சேயம் த்ருடம் ரம்யா துராத்மன: ।
சம்பகைஶ்சந்தனைஶ்சாபி வகுலைஶ்ச விபூஷிதா ॥ 42

---

மேலும் அந்த ஹனுமார் தங்கமயமான வ்ருக்ஷங்களின் ஸமூ க்த்தாலும், காற்றினல் வீசப்பட்டதும் அநேக ஶதங்கைகளின் ஒலிகளை உடையதுமான அந்த ஶிம்ஶபா வ்ருக்ஷத்தைப் பார்த்து ஆஶ்சர்யத்தை அடைந்தார்.

(இம்மரங்களில் பழங்களைப்போல் மணிகளும் ஸஹஜமாகவே இருக்கின்றன என்பது கருத்து. அதனல் தான் ஆஶ்சர்யமடைந்த தாகவும் கூறப்பட்டுள்ளது.) (39)

நுனியில் புஷ்பித்ததும், அழகியதும், அழகிய முளை, துளிர் இவற்றை உடையதும், இலைகள் நிறைந்திருப்பதுமான அந்த ஶிம்ஶபா வ்ருக்ஷத்தில் ஏறி அந்த பெருத்த கைகளை உடைய ஹனுமார் இங்கிருந்தும் விதேஹராஜன் புத்ரியும் துக்கத்தால் பீடிக் கப்பட்டவளும் ராமனைக் காணவேண்டுமென்ற விருப்பம் கொண்டவளும் யத்ருச்சையாக இங்குமங்கும் வருகின்றவளு மான ஸ்ரீஸீதாதேவியைக் காணப்போகிறேன். (40, 41)

சம்பகம், சந்தனம், தாழை இவைகளால் அலங்கரிக்கப் பட்ட துராத்மாவான ராவணனுடைய இந்த அசோகவனம் மிக அழகானது. (42)

इयं च नलिनी रम्या द्विजसङ्घनिषेविता।
इमां सा राममहिषी नूनमेष्यति जानकी॥ ४३

सा रामा राममहिषी राघवस्य प्रिया सती।
वनसंचारकुशला नूनमेष्यति जानकी॥ ४४

अथवा मृगशावाक्षी वनस्यास्य विचक्षणा।
वनमेष्यति साऽयेह रामचिन्तानुकर्शिता॥ ४५

रामशोकाभिसंतप्ता सा देवी वामलोचना।
वनवासे रता नित्यमेष्यते वनचारिणी॥ ४६

இயம் ச நலினீ ரம்யா த்விஜஸங்கநிஷேவிதா।
இமாம் ஸா ராமமஹிஷீ நூனமேஷ்யதி ஜானகீ॥ 43

ஸா ராமா ராமமஹிஷீ ராகவஸ்ய ப்ரியா ஸதீ।
வனஸஞ்சாரகுஶலா நூனமேஷ்யதி ஜானகீ॥ 44

அதவா ம்ருகஶாபாக்ஷீ வனஸ்யாஸ்ய விசக்ஷணா।
வனமேஷ்யதி ஸாऽர்யேஹ ராமசிந்தானுகர்ஶிதா॥ 45

ராமஶோகாபிஸம்தப்தா ஸா தேவீ வாமலோசனா।
வனவாஸே ரதா நித்யமேஷ்யதே வனசாரிணீ॥ 46

---

பக்ஷிக்கூட்டங்களால் ஸேவிக்கப்பட்ட இந்த தாமரை ஓடையும் அழகாக இருக்கிறது. இப்படிப்பட்ட இந்த வனத்திற்கு ராமனது பட்டமஹிஷியும் ஜனகபுத்ரியுமான ஸீதை நிஸ்சயம் வருவாள். (43)

ராமனது ராணியும் ராகவனுக்கு ப்ரியமானவளும் பதிவ்ரதையும் காட்டில் அலைந்து திரிவதில் தேர்ந்தவளுமான அந்த ஸீதை கட்டாயம் இங்கு வருவாள். (44)

அப்படி இல்லாவிட்டால் மான் குட்டியின் கண்களைப் போன்ற கண்களை உடையவளும் இந்த வனத்தில் பழக்கப்பட்டவளும் ராமனையே எண்ணி அந்த ஸோகத்தால் இளைத்தவளுமான அந்த ஸீதை இங்கு அவஸ்யம் வருவாள்.

(இங்கு காட்டில் தேர்ந்தவள் என்று சொன்னதால் இங்கு ஸஞ்சரித்து இதன் அழகுகளைப் பார்த்து தனக்கு ஏற்பட்ட துக்கத்தை போக்கிக் கொள்வதில் தேர்ந்தவள் என்பது தெரிகிறது.) (45)

ஸ்ரீராமனைப்பற்றிய ஸோகத்தால் மிகவும் தாபத்தை அடைந்தவளும், அழகிய கண்களை உடையவளும், அரண்யவாஸத்தில் ஈடுபட்டவளும், அரண்யத்திலேயே ஸஞ்சரிப்பவளுமான அந்த ஸீதாதேவி தினம் இங்கு வரப்போகிறாள். (46)

वनेचराणां सततं नूनं स्पृहयते पुरा ।
रामस्य दयिता भार्या जनकस्य सुता सती ॥ ४७

संध्याकालमनाः श्यामा ध्रुवमेष्यति जानकी ।
नदीं चेमां शिवजलां सन्ध्यार्थे वरवर्णिनी ॥ ४८

तस्याश्चाप्यनुरूपेयमशोकवनिका शुभा ।
शुभा या पार्थिवेन्द्रस्य पत्नी रामस्य संमता ॥ ४९

यदि जीवति सा देवी ताराधिपनिभानना ।
आगमिष्यति साऽवश्यमिमां शिवजलां नदीम् ॥ ५०

வனேசராணும் ஸததம் நூனம் ஸ்ப்ருஹயதே புரா ।
ராமஸ்ய தயிதா பார்யா ஜனகஸ்ய ஸுதா ஸதீ ॥ 47

ஸந்த்யாகாலமனு: ஶ்யாமா த்ருவமேஷ்யதி ஜானகீ ।
நதீம் சேமாம் ஶிவஜலாம் ஸந்த்யார்த்தே வரவர்ணினீ ॥ 48

தஸ்யாஶ்சாப்யனுரூபேயமஶோகவனிகா ஶுபா ।
ஶுபா யா பார்த்திவேந்த்ரஸ்ய பத்னீ ராமஸ்ய ஸம்மதா ॥ 49

யதி ஜீவதி ஸா தேவீ தாராதிபநிபானனு ।
ஆகமிஷ்யதி ஸாऽவஶ்யமிமாம் ஶிவஜலாம் நதீம் ॥ 50

---

*ஸ்ரீராமனது ப்ரியமான மனேவியும், ஜனகபுத்ரியும், பதிவ்ரதையுமான ஸீதை முன்பு எப்பொழுதும் காட்டுப் ப்ராணிகளிடத்தில் ப்ரியம் காட்டி வந்தாள்.*

*மேலும் ஸந்த்யாகால கர்மானுஷ்டானங்களைச் செய்வதற்கான ஸ்நானம் முதலியவைகளைச் செய்வதற்காகவும், ஸந்த்யா கால த்யானத்தின் பொருட்டும், அந்த உத்தமியான ஜானகி நல்ல ஜலத்தை உடைய இந்த நதிக்கு நிஶ்சயம் வருவாள்.*

*(இங்கு ஸந்த்யாகால கர்மானுஷ்டானம் என்பது ஸ்த்ரீகளுக்கு அக்காலத்தில் செய்யவேண்டிய ஸ்நானம், தேவதாத்யானம் முதலியவற்றைக் குறிக்கும். ஸந்த்யாவந்தனம் ஸ்த்ரீகளுக்கு கிடையாதாகையால் இவ்விதம் அர்த்தம் செய்துகொள்ள வேண்டும்.)* (47, 48)

*சிறந்த அரசனை ஸ்ரீராமனுக்கு மிகவும் இஷ்டமானவளும், அழகியவளும், பத்னியுமான அந்த ஸீதைக்கு இவ்வழகிய அசோக வனமானது மிக ஏற்றது.* (49)

*சந்த்ரனுக்கு ஒப்பான முகத்தை உடைய அந்த தேவியான ஸீதை உயிருடனிருப்பாளாகில் அவள் இந்த பரிசுத்தமான ஜலத்தை உடைய நதிக்கு அவஶ்யம் வருவாள்.* (50)

एवं तु मत्वा हनुमान्महात्मा प्रतीक्षमाणो मनुजेन्द्रपत्नीम्।
अवेक्षमाणश्च ददर्श सर्वं सुपुष्पिते पर्णघने निलीनः॥ ५१

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
चतुर्दशः सर्गः॥ १४॥

ஏவம் து மத்வா ஹனுமான்மஹாத்மா
ப்ரதீக்ஷமாணோ மனுஜேந்த்ரபத்னீம்।
அவேக்ஷமாணஸ்ச ததர்ஸ ஸர்வம்
ஸுபுஷ்பிதே பர்ணகனே நிலீன:॥ 51

இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே சதுர்தஸ: ஸர்க:॥

---

மஹாத்மாவும், நரஸ்ரேஷ்டனை ராமனுடைய பத்னியை எதிர்பார்ப்பவருமான அந்த ஹனுமார் நன்கு பூத்ததும் இலைகள் அடர்ந்ததுமான இடத்தில் மறைந்தவராயும் நன்கு உற்றுப்பார்க்கிறவராயுமிருந்துகொண்டு அந்த அசோகவனம் முழுவதையும் கண்டார். (51)

பதினான்காவது ஸர்கம் முற்றிற்று.

---

ஸ்ரீ:

पञ्चदशः सर्गः — பதினைந்தாவது ஸர்கம் ॥ १५ ॥

# "सीतादर्शनम्" — ஸீதையைக் காணுதல்.

स वीक्षमाणस्तत्रस्थो मार्गमाणश्च मैथिलीम् ।
अवेक्षमाणश्च महीं सर्वां तामन्ववैक्षत ॥ १

सन्तानकलताभिश्च पादपैरुपशोभिताम् ।
दिव्यगन्धरसोपेतां सर्वतः समलङ्कृताम् ॥ २

तां स नन्दनसंकाशां मृगपक्षिभिरावृताम् ।
हर्म्यप्रासादसंबाधां कोकिलाकुलनिस्वनाम् ॥ ३

काञ्चनोत्पलपद्माभिर्वापीभिरुपशोभिताम् ।
बह्वासनकुथोपेतां बहुभूमिगृहायुताम् ॥ ४

ஸ வீக்ஷமாணஸ்தத்ரஸ்த்தோ மார்கமாணஸ்ச மைதிலீம் ।
அவேக்ஷமாணஸ்ச மஹீம் ஸர்வாம் தாமன்வவைக்ஷத ॥ 1

ஸந்தானகலதாபிஸ்ச பாதபைருபஸோபிதாம் ।
திவ்யகந்தரஸோபேதாம் ஸர்வத: ஸமலங்க்ருதாம் ॥ 2

தாம் ஸ நந்தஸங்காஸாம் ம்ருகபக்ஷிபிராவ்ருதாம் ।
ஹர்ம்யப்ராஸாதஸம்பாதாம் கோகிலாகுலநிஸ்வனாம் ॥ 3

காஞ்சனோத்பலபத்மாபிர்வாபீபிருபஸோபிதாம் ।
பஹ்வாஸனகுதோபேதாம் பஹுபூமிக்ருஹாயுதாம் ॥ 4

---

அந்த ஹநுமார் அந்த ஸிம்ஸுபா வ்ருக்ஷத்திலிருந்து கொண்டே ஸீதையைத் தேடுகின்றவரும் அதன் காரணமாக நாலாபக்கத்திலும் பார்வையைச் செலுத்துகிறவரும் அப்பூப்ர தேசம் முழுவதையும் உற்றுநோக்குகிறவராயுமிருந்துகொண்டு அந்த அசோகவனத்தைக் கண்டார். (1)

தேவலோகத்துக் கொடிகளாலும் வ்ருக்ஷங்களாலும் விளங்குகிறதும், அழகிய வாஸனை ரஸங்களோடு கூடியதும், நாலாபக்கத்திலும் நன்கு அலங்கரிக்கப்பட்டதும், நந்தன வனத்துக்கு ஒப்பானதும், மான்கள் பக்ஷிகள் இவற்றால் சூழ்ந்திருப்பதும், உப்ரிகைகள் மாளிகைகள் நிறைந்ததும், குயில்களின் ஒலி நிரம்பியதும், தங்க நீலோத்பலம் தாமரை இவைகளை உடைய குளங்களால் ப்ரகாசிப்பதும், பலவித ஆஸனங்களோடும் விரிப்புகளோடும் கூடியதும், அநேக சுரங்கங்களோடு கூடியதும், எல்லா ருதுக்களின் புஷ்பங்களாலும் பழுத்த மரங்களாலும் அழகியதும் புஷ்

सर्वर्तुकुसुमै रम्यां फलवद्भिश्च पादपैः ।
पुष्पितानामशोकानां श्रिया सूर्योदयप्रभाम् ॥ ५

प्रदीप्तामिव तत्रस्थो मारुतिः समुदैक्षत ।
निष्पत्रशाखां विहगैः क्रियमाणामिवासकृत् ॥ ६

विनिष्पतद्भिः शतशश्चित्रैः पुष्पावतंसकैः ।
आमूलपुष्पनिचितैरशोकैः शोकनाशनैः ॥ ७

पुष्पभारातिभारैश्च स्पृशद्भिरिव मेदिनीम् ।
कर्णिकारैः कुसुमितैः किंशुकैश्च सुपुष्पितैः ॥
स देशः प्रभया तेषां प्रदीप्त इव सर्वतः ॥ ८

पुन्नागाः सप्तपर्णाश्च चम्पकोद्दालकास्तथा ।
विवृद्धमूला बहवः शोभन्ते स्म सुपुष्पिताः ॥ ९

ஸர்வர்துகுஸுமை ரம்யாம் பலவத்பிஸ்ச பாதபை: ।
புஷ்பிதாநுமஶோகாநும் ஶ்ரியா ஸூர்யோதயப்ரபாம் ॥ 5

ப்ரதீப்தாமிவ தத்ரஸ்த்தோ மாருதி: ஸமுதைக்ஷத ।
நிஷ்பத்ரஶாகாம் விஹகை: க்ரியமாணுமிவாஸக்ருத் ॥ 6

விநிஷ்பதத்பி: ஶதஶஶ்சித்ரை: புஷ்பாவதம்ஸகை: ।
ஆமூலபுஷ்பநிசிதைரஶோகை: ஶோகநாஶநை: ॥ 7

புஷ்பபாராதிபாரைஸ்ச ஸ்ப்ருஶத்பிரிவ மேதினீம் ।
கர்ணிகாரை: குஸுமிதை: கிம்ஶுகைஸ்ச ஸுபுஷ்பிதை: ॥
ஸ தேஶ: ப்ரபயா தேஷாம் ப்ரதீப்த இவ ஸர்வத: ॥ 8

புன்நுகா: ஸப்தபர்ணுஸ்ச சம்பகோத்தாலகாஸ்ததா ।
விவ்ருத்தமூலா பஹவ: ஶோபந்தே ஸ்ம ஸுபுஷ்பிதா: ॥ 9

---

பித்த அசோக வ்ருக்ஷங்களின் காந்தியால் ஸூர்ய உதயத்து காந்தியை உடையதும், விசித்ரமான புஷ்பங்களாகிற ஆபரணங்களால் எரிகிறது போல் இருப்பதும், அடிக்கடி நூற்றுக்கணக்கில் வெளிக்கிளம்பிச் செல்லுகின்ற பக்ஷிகளால் இலைகளில்லாத கிளைகளை உடையதாகச் செய்யப்படுவது போன்றதும், அடிமுதற்கொண்டு புஷ்பக் குவியல்களை உடையதும், பூமியை புஷ்பக்குவியல்களின் பாரங்களால் தொடுவது போன்றதும், துக்கத்தைப் போக்கக்கூடிய அசோகங்களாலும், பூத்ததுகளான கொன்றை மரங்களாலும், நன்கு பூத்த புரச மரங்களாலும், சூழ்ந்த அந்த ப்ரதேசம் அந்த வ்ருக்ஷங்களின் காந்தியால் நாலாபக்கத்திலும் எரிவது போல் ப்ரகாசித்தது. (2—8)

புன்னை, எழிலைப்பால், சம்பகம், நறுவிலி, அப்படியே அடி பருத்தவைகளும் நன்கு பூத்தவைகளுமான பல வ்ருக்ஷங்கள் ப்ரகாசித்தன. (9)

शातकुम्भनिभाः केचित्केचिदग्निशिखोपमाः।
नीलाञ्जननिभाः केचित्तत्राशोकाः सहस्रशः॥ १०

नन्दनं विविधोद्यानं चित्रं चैत्ररथं यथा।
अतिवृत्तमिवाचिन्त्यं दिव्यं रम्यं श्रियावृतम्॥ ११

द्वितीयमिव चाकाशं पुष्पज्योतिर्गणायुतम्।
पुष्परत्नशतैश्चित्रं पञ्चमं सागरं यथा॥ १२

सर्वर्तुपुष्पैर्निचितं पादपैर्मधुगन्धिभिः।
नानानिनादैरुद्यानं रम्यं मृगगणैर्द्विजैः॥ १३

ஶாதகும்பநிபா: கேசித்கேசிதக்னிஶிகோபமா: ।
நீலாஞ்ஜனநிபா: கேசித்தத்ராஶோகா: ஸஹஸ்ரஶ: ॥ 10

நந்தனம் விவிதோத்யானம் சித்ரம் சைத்ரரதம் யதா ।
அதிவ்ருத்தமிவாசிந்த்யம் திவ்யம் ரம்யம் ஶ்ரியாவ்ருதம் ॥ 11

த்விதீயமிவ சாகாஶம் புஷ்பஜ்யோதிர்கணாயுதம் ।
புஷ்பரத்னஶதைஶ்சித்ரம் பஞ்சமம் ஸாகரம் யதா ॥ 12

ஸர்வர்துபுஷ்பைர்நிசிதம் பாதபைர்மதுகந்திபி: ।
நாநாநிநாதைருத்யானம் ரம்யம் ம்ருககணைர்த்விஜை: ॥ 13

---

சில வ்ருக்ஷங்கள் தங்கத்துக்கு ஒப்பானவைகளாகவும், மற்றும் சில அக்னி ஜ்வாலைக்கு ஸத்ருஶமானவைகளாகவும், சில மரங்கள் கறுத்த மைக்கு ஸமமானவைகளாகவும் இப்படி ஆயிரக் கணக்கான அஶோக வ்ருக்ஷங்கள் அங்கு இருக்கின்றன. (10)

பல தோட்டங்களுடன் கூடிய இந்த்ரனுடைய விளையாட்டு ஸ்தலமாகிய நந்தனவனம் போலவும், குபேரனுடைய க்ரீடாவனமாகிய சைத்ரரதம்போலவும் அழகியதும், இந்த தோட்டங்களை அதிக்ரமித்ததும், மனதுக்கு எட்டாததும் திவ்யமாயும் மனோஹரமாயும், சோபையுடன் கூடியதாயும், புஷ்பங்களாகிற நக்ஷத்ர கணங்களுடன் கூடி இரண்டாவது ஆகாசம் போல் இருக்கிறதும், புஷ்பங்களாகிற பலவித ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட ஐந்தாவது ஸமுத்ரம் போலிருக்கிறதும், ஆறு ருதுக்களிலுமுண்டான புஷ்பங்களுள்ளதும், தேனினால் வாஸனையாக உள்ளதுகளுமான வ்ருக்ஷங்களால் நெருக்கமாக இருக்கிறதும், பல ஶப்தக் கூட்டங்களோடு கூடிய ம்ருகங்களாலும் பக்ஷிகளாலும் அழகியதும் பல வகைப்பட்ட கந்தங்களை உடைய ப்ரவாஹங்களை உடையதும் புண்யமான வாஸனையுடன் கூடியதும், மனதுக்குத் திருப்தியை உண்டுபண்ணக்கூடியதும், வாஸனை நிறைந்த ஹிமயமலை போல

अनेकगन्धप्रवहं पुण्यगन्धं मनोरमम्।
शैलेन्द्रमिव गन्धाढ्यं द्वितीयं गन्धमादनम्॥ १४

अशोकवनिकायां तु तस्यां वानरपुङ्गवः।
स ददर्शाविदूरस्थं चैत्यप्रासादमुच्छ्रितम्॥ १५

मध्ये स्तम्भसहस्रेण स्थितं कैलासपाण्डुरम्।
प्रवालकृतसोपानं तप्तकाञ्चनवेदिकम्॥ १६

मुष्णन्तमिव चक्षूंषि द्योतमानमिव श्रिया।
विमलं प्रांशुभावत्वादुल्लिखन्तमिवाम्बरम्॥ १७

அநேககந்தப்ரவஹம் புண்யகந்தம் மனோரமம் ।
ஶைலேந்த்ரமிவ கந்தாட்யம் த்விதீயம் கந்தமாதனம் ॥ 14

அஶோகவனிகாயாம் து தஸ்யாம் வானரபுங்கவ: ।
ஸ ததர்ஶாவிதூரஸ்தம் சைத்யப்ராஸாதமுச்ச்ரிதம் ॥ 15

மத்யே ஸ்தம்பஸஹஸ்ரேண ஸ்திதம் கைலாஸபாண்டுரம் ।
ப்ரவாலக்ருதஸோபானம் தப்தகாஞ்சனவேதிகம் ॥ 16

முஷ்ணந்தமிவ சக்ஷூம்ஷி த்யோதமானமிவஶ்ரியா ।
விமலம் ப்ராம்ஶுபாவத்வாதுல்லிகந்தமிவாம்பரம் ॥ 17

---

வும், இரண்டாவது கந்தமாதனம் போலவும் இருக்கின்ற ஓர் தோட்டத்தை அந்த அசோகவனத்தில் வானரஶ்ரேஷ்டர் கண்டார். (11 — 14)

அந்த அசோகவனத்தில் வானரஶ்ரேஷ்டரான ஹனுமார் ஸமீபத்திலிருக்கிறதும், உயரமானதும், நடுவில் ஆயிரம் தூண்கள் நிரம்பியதும், கைலாஸ பர்வதம்போல் வெண்மை நிறமானதும், பவழத்தினால் செய்யப்பட்ட படிக்கட்டுகளுடன் கூடியதும், உருக்கிய தங்கத்தால் செய்த மேடைகளை உடையதும், கண்களைப் பறிப்பது போன்றதும், சோபையினால் ப்ரகாசிக்கின்றதும், நிர்மலமானதும், உயர்ந்திருப்பதால் ஆகாசத்தைக் கீறுவதுபோலிருப்பதுமான சைத்யப்ராஸாதம் என்னும் புத்தர்களின் கோயில்களைப் போன்ற ஒரு மாளிகையைக் கண்டார்.

(சைத்ய ப்ராஸாதத்தைச் சிலர் ராவணனுடைய குலதெய்வத்தின் கோயில் என்றும் சொல்வதுண்டு.)

(இங்கு ஸ்ரீராமனது அனந்த கல்யாண குணங்களை வர்ணிக்கத்துடங்கிய ஸ்ரீவால்மீகி மரங்களையும் புஷ்பங்களையும் ஓடைகளையும் வர்ணிப்பதன் நோக்கம் இவையாவும் ஸ்ரீபகவானது விபூதி என்பதைக் காட்டுவதற்கேயாகும்.) (15 — 17)

ततो मलिनसंवीतां राक्षसीभिः समावृताम् ।
उपवासकृशां दीनां निःश्वसन्तीं पुनः पुनः ॥ १८

ददर्श शुक्लपक्षादौ चन्द्ररेखामिवामलाम् ।
मन्दं प्रख्यायमानेन रूपेण रुचिरप्रभाम् ॥ १९

पिनद्धां धूमजालेन शिखामिव विभावसोः ।
पीतेनैकेन संवीतां क्लिष्टेनोत्तमवाससा ॥ २०

सपङ्कामनलङ्कारां विपद्मामिव पद्मिनीम् ।
व्रीडितां दुःखसंतप्तां परिम्लानां तपस्विनीम् ॥ २१

ग्रहेणाङ्गारकेणेव पीडितामिव रोहिणीम् ।
अश्रुपूर्णमुखीं दीनां कृशामनशनेन च ॥ २२

ததோ மலினஸம்வீதாம் ராக்ஷஸீபி: ஸமாவ்ருதாம் ।
உபவாஸக்ருஶாம் தீனாம் நி:ஶ்வஸந்தீம் புன: புன: ॥ 18

ததர்ஶ ஶுக்லபக்ஷாதௌ சந்த்ரேகாமிவாமலாம் ।
மந்தம் ப்ரக்யாயமானேன ரூபேண ருசிரப்ரபாம் ॥ 19

பினத்தாம் தூமஜாலேன ஶிகாமிவ விபாவஸோ: ।
பீதேனைகேன ஸம்வீதாம் க்லிஷ்டேனோத்தமவாஸஸா ॥ 20

ஸபங்காமனலங்காராம் விபத்மாமிவ பத்மினீம் ।
வ்ரீடிதாம் து:கஸந்தப்தாம் பரிம்லானாம் தபஸ்வினீம் ॥ 21

க்ரஹேணாங்காரகேணேவ பீடிதாமிவ ரோஹிணீம் ।
அஶ்ருபூர்ணமுகீம் தீனாம் க்ருஶாமனஶனேன ச ॥ 22

---

*அதைப் பார்த்தபிறகு அழுக்கான வஸ்த்ரம் தரித்தவளும், ராக்ஷஸிகளால் நன்கு சூழப்பட்டவளும், ஆஹாரமின்மையால் இளைத்தவளும், எளியவளும், திரும்பத்திரும்ப பெருமூச்சு விடுகிறவளும், சுக்ல பக்ஷத்தின் ஆரம்பமாகிய ப்ரதமையில் நிர்மலமான சந்த்ரமண்டலம் போன்றவளும், மெதுவாய் அறியக்கூடிய ரூபத்துடன் கூடியவளும், அழகிய காந்தி உள்ளவளும், தூமக்கூட்டத்தால் சூழப்பட்ட அக்னியின் ஜ்வாலைபோன்றவளும், அழுக்கடைந்ததும் மஞ்சநிறமுள்ளதுமான ஒரு உத்தம வஸ்த்ரத்தைத் தரித்தவளும், அழுக்குடன் கூடியவளும், அலங்காரங்களற்றவளும், பூவில்லா தாமரை ஓடை போன்றவளும், லக்ஷ்மணனை அவமதித்துப் பேசியதாலுண்டான லஜ்ஜையுடன் கூடியவளும், அதனால் ராமலக்ஷ்மணர்கள் இல்லாததால் அதிக துக்கத்தால் தாபத்தை அடைந்தவளும், நன்கு வாடியவளும், த்யானம் பண்ணுகிறவளும், அங்காரக க்ரஹத்தால் பீடிக்கப்பட்ட ரோஹிணி போன்றவளும், கண் ஜலம் நிறைந்த முகத்துடன் கூடியவளும், தைன்யத்தை அடைந்தவளும், சாப்பிடாததால் இளைத்தவளும், சோகத்தால்*

शोकध्यानपरां दीनां नित्यं दुःखपरायणाम् ।
प्रियं जनमपश्यन्तीं पश्यन्तीं राक्षसीगणम् ॥ २३

स्वगणेन मृगीं हीनां श्वगणाभिवृतामिव ।
नीलनागाभया वेण्या जघनं गतयैकया ॥ २४

नीलया नीरदापाये वनराज्या महीमिव ।
सुखार्हां दुःखसंतप्तां व्यसनानामकोविदाम् ॥ २५

तां समीक्ष्य विशालाक्षीमधिकं मलिनां कृशाम् ।
तर्कयामास सीतेति कारणैरुपपादिभिः ॥ २६

ह्रियमाणा तदा तेन रक्षसा कामरूपिणा ।
यथारूपा हि दृष्टा वै तथारूपेयमङ्गना ॥ २७

ஶோகத்⁴யானபராம் தீ³நாம் நித்யம் து³:க²பராயணாம் ।
ப்ரியம் ஜனமபஶ்யந்தீம் பஶ்யந்தீம் ராக்ஷஸீக³ணம் ॥ 23

ஸ்வக³ணேன ம்ருகீ³ம் ஹீனாம் ஶ்வக³ணாபி⁴வ்ருதாமிவ ।
நீலநாகா³ப⁴யா வேண்யா ஜக⁴னம் க³தயைகயா ॥ 24

நீலயா நீரதா³பாயே வனராஜ்யா மஹீமிவ ।
ஸுகா²ர்ஹாம் து³:க²ஸந்தப்தாம் வ்யஸனானாமகோவிதா³ம் ॥ 25

தாம் ஸமீக்ஷ்ய விஶாலாக்ஷீமதி⁴கம் மலினாம் க்ருஶாம் ।
தர்க்கயாமாஸ ஸீதேதி காரணைருபபாதி³பி⁴: ॥ 26

ஹ்ரியமாணா ததா³ தேன ரக்ஷஸா காமரூபிணா ।
யதா²ரூபா ஹி த்³ருஷ்டா வை ததா²ரூபேயமங்க³னா ॥ 27

---

*கவலைப்படுகிறவளும், நடுங்கியவளும், நித்யம் துக்கத்தை அனுபவிப்பவளும், அன்பர்களான ராமலக்ஷ்மணர்களைக் காணாமல் ராக்ஷஸிகளின் கூட்டத்தைப் பார்ப்பவளும், தன் கூட்டம் விலகி நாய்க்கூட்டத்தால் சூழப்பட்ட பெண்மான் போன்றவளும், கருநாகம் போன்றதும் பின்புறம் கீழே தொங்குகிறதுமான ஒற்றைப்பின்னலால் ஶரத்காலத்தில் கறுத்த மரக்கூட்டத்தால் பூமிபோன்றவளும், ஸுகத்தை அனுபவிக்க ஏற்றவளும், துக்கத்தால் மிகத்தாபத்தை அடைந்தவளும், இதற்குமுன் துக்கத்தையே அறியாதவளும், அகண்ட கண்களை உடையவளும், அதிகமாக அழுக்கடைந்தவளும், இளைத்தவளுமான அந்த ஸீதையைப்பார்த்து பொருத்தமான காரணங்களால் ஸீதை என்று ஊஹித்தார்.* (18 — 26)

*அப்பொழுது இஷ்டப்படி ரூபம் தரிக்கக்கூடிய அந்த ராக்ஷஸனால் அபஹரிக்கப்பட்டவளாய் எந்த ரூபத்துடன் பார்த்தேனோ அதே ரூபத்துடன் இந்த ஸ்த்ரீ இருக்கிறாள்.* (27)

पूर्णचन्द्राननां सुभ्रूं चारुवृत्तपयोधराम् ।
कुर्वन्तीं प्रभया देवीं सर्वा वितिमिरा दिशः ॥ २८

तां नीलकेशीं बिम्बोष्ठीं सुमध्यां सुप्रतिष्ठिताम् ।
सीतां पद्मपलाशाक्षीं मन्मथस्य रतिं यथा ॥ २९

इष्टां सर्वस्य जगतः पूर्णचन्द्रप्रभामिव ।
भूमौ सुतनुमासीनां नियतामिव तापसीम् ॥ ३०

निःश्वासबहुलां भीरुं भुजगेन्द्रवधूमिव ।
शोकजालेन महता विततेन न राजतीम् ॥ ३१

संसक्तां धूमजालेन शिखामिव विभावसोः ।
तां स्मृतीमिव संदिग्धामृद्धिं निपतितामिव ॥ ३२

பூர்ணசந்த்ரானனாம் ஸுப்ரூம் சாருவ்ருத்தபயோதராம் ।
குர்வந்தீம் ப்ரபயா தேவீம் ஸர்வா விதிமிரா திஶ: ॥ 28

தாம் நீலகேஶீம் பிம்போஷ்டீம் ஸுமத்யாம் ஸுப்ரதிஷ்டிதாம் ।
ஸீதாம் பத்மபலாஶாக்ஷீம் மன்மதஸ்ய ரதிம் யதா ॥ 29

இஷ்டாம் ஸர்வஸ்ய ஜகத: பூர்ணசந்த்ரப்ரபாமிவ ।
பூமௌ ஸுதனுமாஸீனாம் நியதாமிவ தாபஸீம் ॥ 30

நி:ஶ்வாஸபஹுலாம் பீரும் புஜகேந்த்ரவதூமிவ ।
ஶோகஜாலேன மஹதா விததேன ந ராஜதீம் ॥ 31

ஸம்ஸக்தாம் தூமஜாலேன ஶிகாமிவ விபாவஸோ: ।
தாம் ஸ்ம்ருதீமிவ ஸம்திக்தாம்ருத்திம் நிபதிதாமிவ ॥ 32

---

*பூர்ண சந்த்ரன் போன்ற முகமுள்ளவளும், அழகிய புருவமுள்ளவளும், அழகுடன் வட்டமாக இருக்கின்ற ஸ்தனங்களை உடையவளும், பத்து திக்குகளையும் தனது காந்தியால் இருட்டு இல்லாமல் செய்கின்றவளும், தேவஸ்த்ரீ போன்றவளும், கறுத்த கேசங்களை உடையவளும், கோவப்பழம் போன்ற உதட்டை உடையவளும், ப்ரஸித்தமானவைகளும் பூமியில் பதிந்த கால்களை உடையவளும், அயோனிஜையும் செந்தாமரை இதழ்போன்ற கண்களை உடையவளும், மன்மதனுக்கு ரதிபோன்றவளும், பூர்ண சந்த்ரனின் காந்திபோல் எல்லா உலகத்துக்கும் ப்ரியமானவளும், பூமியில் உட்கார்ந்திருப்பவளும், அழகிய சரீரமுள்ளவளும் நியமத்துடன் கூடிய தபஸ்விபோல பூமியில் படுப்பது முதலிய தர்மங்களை உடையவளும், நாகராஜாவின் மனைவி போல் அதிகமாக பெருமூச்சு விடுகிறவளும், பயந்தவளும், பெரிதும் துடர்ந்து இருக்கிறதுமான சோகக்கூட்டத்தால் ப்ரகாச மற்றவளும், புகைக்கூட்டத்தால் ஸம்பந்திக்கப்பட்ட அக்னியின் ஜ்வாலை போன்றவளும், குருபரம்பரையாக அறிந்து கொள்ளாததால் ஸந்தேகமான அர்த்*

विहतामिव च श्रद्धामाशां प्रतिहतामिव।
सोपसर्गां यथा सिद्धिं बुद्धिं सकलुषामिव॥ ३३

अभूतेनापवादेन कीर्तिं निपतितामिव।
रामोपरोधव्यथितां रक्षोहरणकर्शिताम्॥ ३४

अबलां मृगशावाक्षीं वीक्षमाणां ततस्ततः।
बाष्पाम्बुपरिपूर्णेन कृष्णवक्त्राक्षिपक्ष्मणा॥
वदनेनाप्रसन्नेन निःश्वसन्तीं पुनः पुनः॥ ३५

मलपङ्कधरां दीनां मण्डनार्हाममण्डिताम्।
प्रभां नक्षत्रराजस्य कालमेघैरिवावृताम्॥ ३६

விஹதாமிவ ச ஶ்ரத்தாமாஶாம் ப்ரதிஹதாமிவ ।
ஸோபஸர்காம் யதா ஸித்திம் புத்திம் ஸகலுஷாமிவ ॥ 33

அபூதேனுபவாதேன கீர்த்திம் நிபதிதாமிவ ।
ராமோபரோதவ்யதிதாம் ரக்ஷோஹரணகர்ஶிதாம் ॥ 34

அபலாம் ம்ருகஶாபாக்ஷீம் வீக்ஷமாணும் ததஸ்தத: ।
பாஷ்பாம்புபரிபூர்ணேன க்ருஷ்ணவக்த்ராக்ஷிபக்ஷ்மணு ॥
வதனேனுப்ரஸன்னேன நி:ஶ்வஸந்தீம் புன: புன: ॥ 35

மலபங்கதராம் தீனும் மண்டனுர்ஹாமமண்டிதாம் ।
ப்ரபாம் நக்ஷத்ரராஜஸ்ய காலமேகைரிவாவ்ருதாம் ॥ 36

---

*தத்தைத் தரும் ப்ரஸித்தமனு முதலிய ஸ்ம்ருதியைப் போன்றவளும், அந்யாயமாய் அழிக்கப்பட்ட ஐஶ்வர்யம் போன்றவளும், நாஸ்திகர்களின் சொல்லினுல் அழிக்கப்பட்ட ஆஸ்திக்ய புத்தியைப் போன்றவளும், தடைபட்ட இஷ்ட ஸித்தியைப் போன்றவளும், இடையூறுடன்கூடிய தபஸ்ஸித்தியைப் போன்றவளும், ராகத்வேஷாதிகளால் கலங்கிய புத்திபோன்றவளும், பொய்யான அபவாதத்தால் அழிக்கப்பட்ட கீர்த்தி போன்றவளும், ராமனை அடைவதற்குத் தடை செய்வதால் பீடையை அடைந்தவளும், ராவணன் எடுத்து வந்ததால் இளைத்தவளும், பலமற்றவளும், பெண் மான் போன்ற கண்களை உடையவளும், நான்கு பக்கங்களையும் பார்க்கிறவளும், கண்ஜலத்தால் நிறைந்ததும் கறுத்ததும் வளைந்ததுமான இமைகளுடன் கூடியதும், தெளிவற்றதுமான முகத்தோடு கூடியவளும், திரும்பத்திரும்ப பெருமூச்சு விடுகிறவளும், ஸ்நானமில்லாததால் அழுக்கடைந்தவளும், மனக்கவலை உள்ளவளும், அலங்கரிக்கத்தக்கவளும், அலங்கரிக்கப்படாதவளும், கருமேகங்களால் சூழப்பட்ட நக்ஷத்ர ராஜனை சந்த்ரன் போன்ற காந்தி உடையவளும், அடிக்கடி அப்யஸிக்காததால் தீர்மானமாக உச்சரிக்க முடியாத வித்யையைப் போன்றவளுமான ஸீதையைத்*

तस्य संदिदिहे बुद्धिर्मुहुः सीतां निरीक्ष्य तु।
आम्नायानामयोगेन विद्यां प्रशिथिलामिव॥ ३७

दुःखेन बुबुधे सीतां हनुमाननलंकृताम्।
संस्कारेण यथा हीनां वाचमर्थान्तरं गताम्॥ ३८

तां समीक्ष्य विशालाक्षीं राजपुत्रीमनिन्दिताम्।
तर्कयामास सीतेति कारणैरुपपादिभिः॥ ३९

वैदेह्या यानि चाङ्गेषु तदा रामोऽन्वकीर्तयत्।
तान्याभरणजालानि शाखाशोभीन्यलक्षयत्॥ ४०

தஸ்ய ஸந்திதிஹே புத்திர்முஹு: ஸீதாம் நிரீக்ஷ்ய து।
ஆம்ஞயாஞமயோகேன வித்யாம் ப்ரஶிதிலாமிவ॥ 37

து:கேன புபுதே ஸீதாம் ஹனுமானனலங்க்ருதாம்।
ஸம்ஸ்காரேண யதா ஹீனும் வாசமர்த்தாந்தரம் கதாம்॥ 38

தாம் ஸமீக்ஷ்ய விஶாலாக்ஷீம் ராஜபுத்ரீமநிந்திதாம்।
தர்க்கயாமாஸ ஸீதேதி காரணைருபபாதிபி:॥ 39

வைதேஹ்யா யானி சாங்கேஷு ததா ராமோऽன்வகீர்த்தயத்।
தான்யாபரணஜாலானி ஶாகாஶோபீன்யலக்ஷயத்॥ 40

---

திரும்பத்திரும்பப் பார்த்து அந்த ஹனுமாருக்கு ஸந்தேஹமுண்டாயிற்று.

(இங்கு நாகராஜன் மனைவி போன்றவள் என்றதால் துஷ்டர்களால் தகையமுடியாதவள் என்றும், அக்னியின் ஜ்வாலை போன்றவள் என்பதால் பாதிவ்ரத்யம் நிறைந்தவள் என்றும் தெரிகிறது.) (28 — 37)

ஹனுமார் அலங்காரமில்லாத ஸீதையை நல்ல வ்யுத்பத்தி இல்லாததால் வேறு அர்த்தத்தைக் கொடுக்கக்கூடிய ஶப்தத்தைப் போல் உணர்ந்தார். (38)

அகண்ட கண்களை உடையவளும், அரச குமாரியும் குற்றமற்றவளுமான அவளைப்பார்த்து பொருத்தமான காரணங்களால் ஸீதை என்று ஊஹித்தார். (39)

ஹனுமார் கிளம்பும்போது ஶ்ரீராமன் ஸீதையின் சரீரத்தில் எந்த எந்த ஆபரணங்கள் இருப்பதாகக் கூறினரோ அவைகளை கிளைகளில் ப்ரகாசிப்பதாகக் கண்டார்.

(ஶ்ரீராமனைப் பிரிந்திருப்பதால் ஆபரணங்களை அணிந்து கொள்ள மனமின்றி அவைகளை கிளைகளில் மாட்டியிருந்தாள் என்பது கருத்து.) (40)

सुकृतौ कर्णवेष्टौ च श्वदंष्ट्रौ च सुसंस्थितौ।
मणिविद्रुमचित्राणि हस्तेष्वाभरणानि च॥ ४१

श्यामानि चिरयुक्तत्वात्तथा संस्थानवन्ति च।
तान्येवैतानि मन्येऽहं यानि रामोऽन्वकीर्तयत्॥ ४२

तत्र यान्यवहीनानि तान्यहं नोपलक्षये।
यान्यस्या नावहीनानि तानीमानि न संशयः॥ ४३

पीतं कनकपट्टाभं स्रस्तं तद्वसनं शुभम्।
उत्तरीयं नगासक्तं तदा दृष्टं प्लवङ्गमैः॥ ४४

भूषणानि च मुख्यानि दृष्टानि धरणीतले।
अनयैवापविद्धानि स्वनवन्ति महान्ति च॥ ४५

ஸுக்ருதௌ கர்ணவேஷ்டௌ ச ஶ்வதம்ஷ்ட்ரௌ
ச ஸுஸம்ஸ்திதௌ।
மணிவித்ருமசித்ராணி ஹஸ்தேஷ்வாபரணானி ச॥ 41

ஶ்யாமானி சிரயுக்தத்வாத்ததா ஸம்ஸ்தானவந்தி ச।
தான்யேவைதானி மன்யேऽஹம் யானி ராமோऽன்வகீர்த்தயத்॥

தத்ர யான்யவஹீனானி தான்யஹம் நோபலக்ஷயே।
யான்யஸ்யா நாவஹீனானி தானீமானி ந ஸம்ஶய:॥ 43

பீதம் கனகபட்டாபம் ஸ்ரஸ்தம் தத்வஸனம் ஶுபம்।
உத்தரீயம் நகாஸக்தம் ததா த்ருஷ்டம் ப்லவங்கமை:॥ 44

பூஷணானி ச முக்யானி த்ருஷ்டானி தரணீதலே।
அனயைவாபவித்தானி ஸ்வனவந்தி மஹாந்தி ச॥ 45

---

நன்கு செய்யப்பட்ட குண்டலங்களையும் லோலக்குகளையும் கைகளிலுள்ள மணிகள் பவழங்கள் இவற்றால் அழகான ஆபரணங்களையும் விரஹதாபத்தால் கறுத்ததுகளும் வெகு நாளாக தரித்திருப்பதால் பதிந்திருப்பவைகளுமான இந்த ஆபரணங்களையும் ஸ்ரீராமனால் சொல்லப்பட்டவைகளே என்று நான் நினைக்கிறேன். (41, 42)

அங்கு கழற்றி எறிந்தவைகள் இங்கு காணவில்லை. கழற்றாத யாதொரு ஆபரணங்களுண்டோ அவைகளே இவை; இதில் ஸந்தேகமில்லை. (43)

மஞ்சள் நிறமுள்ளதும் தங்கத்தகடு போன்ற காந்தி உடையதும் அவளால் எறியப்பட்டதும் மங்களமானதுமான மேல் வஸ்த்ரம் மரக்கிளைகளில் ஸம்பந்திக்கப்பட்டதாக அப்பொழுது ஸுக்ரீவன் முதலியவர்களால் பார்க்கப்பட்டது. சிறந்தவைகளும் பெரியதுகளும் ஶப்தத்தோடு கூடியதுகளுமான ஆபரணங்கள் இவளாலேயே பூமியில் எறியப்பட்டன. (44, 45)

इदं चिरगृहीतत्वाद्वसनं क्लिष्टवत्तरम् ।
तथाऽपि नूनं तद्वर्णं तथा श्रीमद्यथेतरत् ॥ ४६

इयं कनकवर्णाङ्गी रामस्य महिषी प्रिया ।
प्रनष्टाऽपि सती याऽस्य मनसो न प्रनश्यति ॥ ४७

इयं सा यत्कृते रामश्चतुर्भिः परितप्यते ।
कारुण्येनानृशंस्येन शोकेन मदनेन च ॥ ४८

स्त्री प्रनष्टेति कारुण्यादाश्रितेत्यानृशंस्यतः ।
पत्नी नष्टेति शोकेन प्रियेति मदनेन च ॥ ४९

अस्या देव्या यथा रूपमङ्गप्रत्यङ्गसौष्टवम् ।
रामस्य च यथारूपं तस्येयमसितेक्षणा ॥ ५०

இதம் சிரக்ருஹீதத்வாத்வஸனம் க்லிஷ்டவத்தரம் ।
ததாऽபி நூனம் தத்வர்ணம் ததா ஸ்ரீமத்யதேதரத் ॥ 46

இயம் கனகவர்ணாங்கீ ராமஸ்ய மஹிஷீ ப்ரியா ।
ப்ரனஷ்டாऽபி ஸதீ யாऽஸ்ய மனஸோ ந ப்ரனஶ்யதி ॥ 47

இயம் ஸா யத்க்ருதே ராமஶ்சதுர்பி: பரிதப்யதே ।
காருண்யேனாந்ருஶம்ஸ்யேன ஶோகேன மதனேன ச ॥ 48

ஸ்த்ரீ ப்ரனஷ்டேதி காருண்யாதாஶ்ரிதேத்யான்ருஶம்ஸ்யத: ।
பத்னீ நஷ்டேதி ஶோகேன ப்ரியேதி மதனேன ச ॥ 49

அஸ்யா தேவ்யா யதா ரூபமங்கப்ரத்யங்கஸௌஷ்டவம் ।
ராமஸ்ய ச யதாரூபம் தஸ்யேயமஸிதேக்ஷணா ॥ 50

---

இந்த வஸ்த்ரமானது வெகு நாளாய் தரித்ததினால் மிகவும் அழுக்கடைந்திருக்கிறது. அப்படி இருந்தபோதிலும் அந்தமேலாக்கானது எப்படி சோபையுடனிருந்ததோ அதே வர்ணத்துடன் இதுவுமிருக்கிறது. நிஶ்சயம். (46)

தங்க நிறம் போன்றவளும் ஸ்ரீராமனுக்குப் பட்டமஹிஷியும் ப்ரியையுமான இந்த பதிவ்ரதையான ஸீதையானவள் கண்ணுக்குத் தெரியாமலிருந்தாலும் ராமனுடைய மனதிலிருந்து பிரியவில்லை. (47)

ராமன் எந்த ஸீதையின் விஷயமாய், ஸ்த்ரீயை ரக்ஷிக்காமல் விட்டு விட்டேனே என்ற காருண்யத்தாலும், அண்டியவர்களை ரக்ஷிக்கவேண்டுமென்ற எண்ணத்தாலும், அண்டியவர்களைக்காக்கவில்லையே என்ற தாபத்தாலும் அன்புள்ளவள் காணமற்போய் விட்டாள் என்ற காமத்தாலும் ஆக இந்நான்கினாலும் பரிதாபத்தை அடைகிறாரோ, அவளே இந்த ஸீதையாவாள். (48, 49)

இந்த தேவியின் சரீரத்திலும் அங்கங்களிலும் எந்த அழகும் அமைப்பும் உண்டோ அவ்வழகும் அமைப்பும் ஸ்ரீராமனிடத்

अस्या देव्या मनस्तस्मिंस्तस्य चास्यां प्रतिष्ठितम् ।
तेनेयं स च धर्मात्मा मुहूर्तमपि जीवति ॥ ५१

दुष्करं कृतवान्रामो हीनो यदनया प्रभुः ।
धारयत्यात्मनो देहं न शोकेनावसीदति ॥ ५२

दुष्करं कुरुते रामो य इमां मत्तकाशिनीम् ।
सीतां विना महाबाहुर्मुहूर्तमपि जीवति ॥ ५३

அஸ்யா தேவ்யா மனஸ்தஸ்மிம்ஸ்தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டிதம் ।
தேனேயம் ஸ ச தர்மாத்மா முஹூர்த்தமபி ஜீவதி ॥ 51

துஷ்கரம் க்ருதவான்ராமோ ஹீனோ யதனயா ப்ரபு: ।
தாரயத்யாத்மனோ தேஹம் ந ஶோகேனாவஸீததி ॥ 52

துஷ்கரம் குருதே ராமோ ய இமாம் மத்தகாஶினீம் ।
ஸீதாம் வினா மஹாபாஹுர்முஹூர்த்தமபி ஜீவதி ॥ 53

---

திலும் அமைந்திருக்கிறது. அவருக்கு கறுத்த கண்களை உடைய இவள் பொருத்தமானவள். (50)

இந்த தேவியின் மனது ஸ்ரீராமனிடத்திலும் ஸ்ரீராமனுடைய மனது தேவியினிடத்திலும் நிலைத்திருக்கிறது. அதனால் இவளும் தர்மாத்மாவான ஸ்ரீராமனும் முஹூர்த்தமாவது ஜீவித்திருக்கிறார்கள்.

(அதாவது அப்படி இல்லாவிட்டால் இவர்கள் ஒருமுஹூர்த்தமும் ஜீவித்திருக்கமாட்டார்கள் என்பது கருத்து.) (51)

இவளை விட்டுப்பிரிந்த ப்ரபுவான ஸ்ரீராமன் தனது தேகத்தை வைத்துக்கொண்டிருப்பதால் க்ரூரமான கார்யத்தைச் செய்தவனாகிறான். ஶோகத்தால் இந்த சரீரமானது நஶிக்கவில்லையே.

(அதாவது ஸீதையின் தேஹம் ஸ்ரீராமனுக்கு அடிமையானது ஆகையால் அவள் தானாக தனது தேஹத்தைத் த்யாகம் செய்ய முடியாது. ஸ்ரீராமனோவெனில் ஸ்வதந்த்ரன். அப்படியிருக்க அவன் த்யாகம் செய்யவில்லையே என்பதுதான் ஆஶ்சர்யம். இதைக் காண்பிக்கவே இங்கு தனது தேஹம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.) (52)

இந்த அழகிய ஸீதையில்லாமல் எந்த மஹாபாஹுவான ராமன் முஹூர்த்தகாலமும் ஜீவித்திருக்கிறானோ அது கடூரமான கார்யத்தைச் செய்ததாகும். (53)

एवं सीतां तदा दृष्ट्वा हृष्टः पवनसंभवः ।
जगाम मनसा रामं प्रशशंस च तं प्रभुम् ॥ ५४

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
पञ्चदशः सर्गः ॥ १५ ॥

ஏவம் ஸீதாம் ததா த்ருஷ்ட்வா ஹ்ருஷ்ட: பவனஸம்பவ: ।
ஜகாம மனஸா ராமம் ப்ரஶஶம்ஸ ச தம் ப்ரபும் ॥ 54

இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே பஞ்சதஶ: ஸர்க: ॥

---

அப்பொழுது வாயுபுத்ரரான ஹனுமார் இம்மாதிரி பதிவ்ரதா தர்மத்துடன் கூடிய ஸீதையைப் பார்த்து ஸந்தோஷமடைந்து மனதினால் ஸ்ரீராமனை நினைத்தார். அப்பிரபுவைக் கொண்டாடவும் கொண்டாடினார்.

(அதாவது ஸீதை கெட்டுப்போனதும் தேடாமல் வேறு கலியாணம் செய்து கொண்டிருந்தால் இவளைப் பார்க்கும் பாக்யம் எனக்கு கிடைத்திருக்காது. அப்படி இல்லாமல் ஸ்ரீராமன் என்னைத்தேட அனுப்பியதாலல்லவா இத்தேவியைப் பார்க்க முடிந்தது என எண்ணிக்கொண்டாடினார் என்பது கருத்து.) (54)

பதினைந்தாவது ஸர்கம் முற்றிற்று.

---

ஸ்ரீ:

षोडशः सर्गः — பதினாறுவது ஸர்கம் ॥ १६ ॥

# "सीतानुशोचनम्"

# ஸீதையைப்பார்த்து வருந்துதல்.

प्रशस्य तु प्रशस्तव्यां सीतां तां हरिपुङ्गवः ।
गुणाभिरामं रामं च पुनश्चिन्तापरोऽभवत् ॥ १

स मुहूर्तमिव ध्यात्वा बाष्पपर्याकुलेक्षणः ।
सीतामाश्रित्य तेजस्वी हनुमान्विललाप ह ॥ २

मान्या गुरुविनीतस्य लक्ष्मणस्य गुरुप्रिया ।
यदि सीताऽपि दुःखार्ता कालो हि दुरतिक्रमः ॥ ३

रामस्य व्यवसायज्ञा लक्ष्मणस्य च धीमतः ।
नात्यर्थं क्षुभ्यते देवी गङ्गेव जलदागमे ॥ ४

ப்ரஶஸ்ய து ப்ரஶஸ்தவ்யாம் ஸீதாம் தாம் ஹரிபுங்கவ: ।
குணாபிராமம் ராமம் ச புனஶ்சிந்தாபரோऽபவத் ॥ 1

ஸ முஹூர்த்தமிவ த்யாத்வா பாஷ்பபர்யாகுலேக்ஷண: ।
ஸீதாமாஶ்ரித்ய தேஜஸ்வீ ஹனுமான்விலலாப ஹ ॥ 2

மான்யா குருவினீதஸ்ய லக்ஷ்மணஸ்ய குருப்ரியா ।
யதி ஸீதாऽபி து:கார்த்தா காலோ ஹி துரதிக்ரம: ॥ 3

ராமஸ்ய வ்யவஸாயக்ஞா லக்ஷ்மணஸ்ய ச தீமத: ।
நாத்யர்த்தம் க்ஷுப்யதே தேவீ கங்கேவ ஜலதாகமே ॥ 4

---

வானரஶ்ரேஷ்டரான ஹனுமார் புகழத்தக்க அந்த ஸீதையையும் தனது குணங்களால் சிறந்து விளங்கும் ஸ்ரீராமனையும் புகழ்ந்து மறுபடியும் ஸீதையின் விஷயமான துக்கத்தால் கவலை கொள்ளலானார். (1)

கண்ணீரால் கலங்கிய கண்களை உடையவரும் தேஜஸ்வியுமான அந்த ஹனுமார் ஸீதையின் இந்த நிலையைக் குறித்து ஒரு முஹூர்த்தம் த்யானித்து விட்டு அழுதார். (2)

பெரியோர்களிடத்தில் வணக்கமுள்ள லக்ஷ்மணனுக்கு பூஜிக்கத்தக்கவளும் ஸ்ரீராமனுடைய பத்னியுமான ஸீதையும் பீடிக்கப்பட்டாளாகில் காலகதியை ஒருவரும் மீறமுடியாதென்பதற்கு வேறு என்ன ஸாக்ஷி வேண்டும். (3)

புத்திமானன ராமனுடையவும் லக்ஷ்மணனுடையவும் எப்படியும் நம்மை தனது பராக்ரமத்தால் காப்பாற்றுவார்கள் என்ற அபிப்பிராயத்தை, அறிந்த ஸீதையானவள் வர்ஷா காலத்திலும் கலங்காத கங்கா நதிபோல் கலக்கத்தை அடையவில்லை. (4)

तुल्यशीलवयोवृत्तां तुल्याभिजनलक्षणाम् ।
राघवोऽर्हति वैदेहीं तं चेयमसितेक्षणा ॥ ५
तां दृष्ट्वा नवहेमाभां लोककान्तामिव श्रियम् ।
जगाम मनसा रामं वचनं चेदमब्रवीत् ॥ ६
अस्या हेतोर्विशालाक्ष्या हतो वाली महाबलः ।
रावणप्रतिमो वीर्ये कबन्धश्च निपातितः ॥ ७
विराधश्च हतः संख्ये राक्षसो भीमविक्रमः ।
वने रामेण विक्रम्य महेन्द्रेणेव शम्बरः ॥ ८
चतुर्दश सहस्राणि रक्षसां भीमकर्मणाम् ।
निहतानि जनस्थाने शरैरग्निशिखोपमैः ॥ ९

துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜனலக்ஷணாம் ।
ராகவோர்஽ஹதி வைதேஹீம் தம் சேயமஸிதேக்ஷணா ॥ 5
தாம் த்ருஷ்ட்வா நவஹேமாபாம் லோககாந்தாமிவ ஶ்ரியம் ।
ஜகாம மனஸா ராமம் வசனம் சேதமப்ரவீத் ॥ 6
அஸ்யா ஹேதோர்விஶாலாக்ஷ்யா ஹதோ வாலீ மஹாபல: ।
ராவணப்ரதிமோ வீர்யே கபந்தஶ்ச நிபாதித: ॥ 7
விராதஶ்ச ஹத: ஸம்க்யே ராக்ஷஸோ பீமவிக்ரம: ।
வனே ராமேண விக்ரம்ய மஹேந்த்ரேணேவ ஶம்பர: ॥ 8
சதுர்தஶ ஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணாம் ।
நிஹதானி ஜனஸ்தானே ஶரைரக்னிஶிகோபமை: ॥ 9

---

*ராமனுக்கு ஸரிஸமமான ஒழுக்கம், வயது, நடப்பு இவைகளை உடையவளும், ஸமமான குலம், ஸாமுத்ரிகா லக்ஷணம் இவைகளை உடையவளுமான ஸீதைக்கு இந்த ஸ்ரீராமரும் அவருக்கு கருங் கண்களைப்படைத்த இந்த ஸீதையுமே ஏற்றவள்.* (5)

*புதிய தங்கத்தின் காந்திபோன்றவளும் உலகத்துக்கு ப்ரிய மானவளுமான மஹாலக்ஷ்மியைப் போலிருக்கிற அந்த ஸீதை யைப் பார்த்து மனதால் ஸ்ரீராமனை நினைத்தார். பின்வரும் வார்த் தையையும் சொன்னார்.* (6)

*அகண்ட கண்களை உடைய இந்த ஸீதையின் காரணமாக மஹாபலிஷ்டனை வாலி கொல்லப்பட்டான். வீர்யத்தில் ராவண னுக்கு ஸமமான கபந்தனும் வீழ்த்தப்பட்டான்.* (7)

*பயங்கரமான பராக்ரமத்தை உடைய ராக்ஷஸனை விராத னும் மஹேந்த்ரனல் சம்பராஸுரன் போல் காட்டில் ஸ்ரீராமனல் சண்டையில் ஜெயித்துக் கொல்லப்பட்டான்.* (8)

*ஜனஸ்தானம் என்ற இடத்தில் அக்னிஜ்வாலைக்குச் சமமான அம்புகளால் பயங்கரமான செயல்களை உடைய பதினன்கு ஆயி ரம் ராக்ஷஸர்கள் கொல்லப்பட்டார்கள்.* (9)

खरश्च निहतः संख्ये त्रिशिराश्च निपातितः।
दूषणश्च महातेजा रामेण विदितात्मना ॥ १०
ऐश्वर्यं वानराणां च दुर्लभं वालिपालितम्।
अस्या निमित्ते सुग्रीवः प्राप्तवाँल्लोकसत्कृतम् ॥ ११
सागरश्च मया क्रान्तः श्रीमान्नदनदीपतिः।
अस्या हेतोर्विशालाक्ष्याः पुरी चेयं निरीक्षिता ॥ १२
यदि रामः समुद्रान्तां मेदिनीं परिवर्तयेत्।
अस्याः कृते जगच्चापि युक्तमित्येव मे मतिः ॥ १३
राज्यं वा त्रिषु लोकेषु सीता वा जनकात्मजा।
त्रैलोक्यराज्यं सकलं सीताया नाप्नुयात्कलाम् ॥ १४

கரஶ்ச நிஹத: ஸம்க்யே த்ரிஶிராஶ்ச நிபாதித: ।
தூஷணஶ்ச மஹாதேஜா: ராமேண விதிதாத்மனு ॥ 10
ஐஶ்வர்யம் வானராணும் ச துர்லபம் வாலிபாலிதம் ।
அஸ்யா நிமித்தே ஸுக்ரீவ: ப்ராப்தவான்லோகஸத்க்ருதம் ॥ 11
ஸாகரஶ்ச மயா க்ராந்த: ஸ்ரீமான்நதநதீபதி: ।
அஸ்யா ஹேதோர்விஶாலாக்ஷ்யா: புரீ சேயம் நிரீக்ஷிதா ॥ 12
யதி ராம: ஸமுத்ராந்தாம் மேதினீம் பரிவர்த்தயேத் ।
அஸ்யா: க்ருதே ஜகச்சாபி யுக்தமித்யேவ மே மதி: ॥ 13
ராஜ்யம் வா த்ரிஷு லோகேஷு ஸீதா வா ஜனகாத்மஜா ।
த்ரைலோக்யராஜ்யம் ஸகலம் ஸீதாயா நாப்னுயாத்கலாம் ॥ 14

---

கரனும் த்ரிசிரஸும் மஹாதேஜஸ்வியான தூஷணனும் ஆத்மக்ஞானம் பெற்ற ராமனல் கொல்லப்பட்டார்கள். (10)

வாலியினல் ரக்ஷிக்கப்பட்டதும் பிறருக்கு அடையமுடியாததும் உலகத்தால் நன்கு பூஜிக்கப்பட்டதுமான வானரர்களின் ஐஶ்வர்யத்தையும் இத்தேவியின் காரணமாகவே ஸுக்ரீவன் அடைந்தான். (11)

அகண்ட கண்களை உடைய இத்தேவியின் காரணமாகவே கிழக்காகவும் மேற்காகவும் ஓடும் எல்லா ஆறுகளுக்கும் பதியும் ஸ்ரீமானுமான ஸமுத்ரமும் என்னல் தாண்டப்பட்டது. இந்த லங்காபுரியும் பார்க்கப்பட்டது. (12)

இத்தேவியின் பொருட்டு ராமன் ஸமுத்ரம் சூழ்ந்த இப்பூமியையும் எல்லா உலகங்களையும் கவிழ்த்தாலும் பொருத்தமென்பதே என் எண்ணம். (13)

த்ரைலோக்ய ராஜ்யம் உயர்ந்ததா? அல்லது ஜனகபுத்ரி உயர்ந்தவளா? என ஆலோசித்தால் மூவுலகத்து ராஜ்யம் ஸீதையின் லேசத்துக்கு ஒப்பாகாது. (14)

इयं सा धर्मशीलस्य मैथिलस्य महात्मनः ।
सुता जनकराजस्य सीता भर्तृदृढव्रता ॥ १५

उत्थिता मेदिनीं भित्त्वा क्षेत्रे हलमुखक्षते ।
पद्मरेणुनिभैः कीर्णा शुभैः केदारपांसुभिः ॥ १६

विक्रान्तस्यार्यशीलस्य संयुगेष्वनिवर्तिनः ।
स्नुषा दशरथस्यैषा ज्येष्ठा राज्ञो यशस्विनी ॥ १७

धर्मज्ञस्य कृतज्ञस्य रामस्य विदितात्मनः ।
इयं सा दयिता भार्या राक्षसीवशमागता ॥ १८

இயம் ஸா தர்மஶீலஸ்ய மைதிலஸ்ய மஹாத்மன: ।
ஸுதா ஜனகராஜஸ்ய ஸீதா பர்த்ருத்ருடவ்ரதா ॥ 15

உத்திதா மேதினீம் பித்வா க்ஷேத்ரே ஹலமுகக்ஷதே ।
பத்மரேணுநிபை: கீர்ணா ஶுபை: கேதாரபாம்ஸுபி: ॥ 16

விக்ராந்தஸ்யார்யஶீலஸ்ய ஸம்யுகேஷ்வனிவர்த்தின: ।
ஸ்னுஷா தஶரதஸ்யைஷா ஜ்யேஷ்டா ராக்ஞோ யஶஸ்வினீ ॥

தர்மக்ஞஸ்ய க்ருதக்ஞஸ்ய ராமஸ்ய விதிதாத்மன: ।
இயம் ஸா தயிதா பார்யா ராக்ஷஸீவஶமாகதா ॥ 18

---

இந்த அவள் தர்மசீலனும் மஹாத்மாவும் மிதிலையின் அரசனுமான ஜனகமஹாராஜனுடைய பெண். பர்த்தாவினிடத்தில் அழிவற்ற வ்ரதத்தை உடையவள். கலப்பையால் உழப்பட்ட யக்ஞ பூமியில் பூமியைப் பிளந்துகொண்டு தாமரையின் பொடிகள் போன்ற அழகிய யக்ஞ பூமியிலுள்ள மண்ணால் தூவப்பட்டவளாகக் கிளம்பினாள். (15, 16)

பராக்ரமசாலியும் சிறந்த ஸ்வபாவமுள்ளவனும் யுத்தங்களில் பின்வாங்காதவனுமான ராஜாவான தஶரதனுக்கு கீர்த்தி வாய்ந்த இந்த ஸீதை முதன்மையான நாட்டுப்பெண்.

(இங்கு இரு ஸ்லோகங்களால் ஸீதையின் பிறப்பின் உயர்வும் பெரும் குலத்தில் புகுந்த பெருமையும் சொல்லப்பட்டதாகும்.) (17)

தர்மமறிந்தவனும் செய்நன்றி உள்ளவனும் ஆத்மசக்தி வாய்ந்தவனுமான ஸ்ரீராமனுடைய ப்ரியமான பார்யையான இந்த ஸீதை ராக்ஷஸிகளுக்கு வசப்பட்டிருக்கிறாள். இது காலத்தின் செயலேயாகும். கர்மபலத்தைக் கொடுக்கும் காலமும் ஈஸ்வரனுடைய ஸ்வரூபமேயாகும். (18)

सर्वान्भोगान्परित्यज्य भर्तृस्नेहबलात्कृता ।
अचिन्तयित्वा दुःखानि प्रविष्टा निर्जनं वनम् ॥ १९

संतुष्टा फलमूलेन भर्तृशुश्रूषणे रता ।
या परां भजते प्रीतिं वनेऽपि भवने यथा ॥ २०

सेयं कनकवर्णाङ्गी नित्यं सुस्मितभाषिणी ।
सहते यातनामेतामनर्थानामभागिनी ॥ २१

ஸர்வான்போகான்பரித்யஜ்ய பர்த்ருஸ்னேஹபலாத்க்ருதா ।
அசிந்தயித்வா து:கானி ப்ரவிஷ்டா நிர்ஜனம் வனம் ॥ **19**

ஸந்துஷ்டா பலமூலேன பர்த்ருஶுஶ்ரூஷணே ரதா ।
யா பராம் பஜதே ப்ரீதிம் வனேபி பவனே யதா ॥ **20**

ஸேயம் கனகவர்ணாங்கீ நித்யம் ஸுஸ்மிதபாஷிணீ ।
ஸஹதே யாதனாமேதாமனர்த்தானாமபாகினீ ॥ **21**

---

எல்லா போகங்களையும் விட்டுவிட்டு தன் நாயகனிடத்திலி ருக்கும் ஸ்நேஹத்தால் பலாத்கரிக்கப்பட்டவளாய் துக்கங்களை உணராது நிர்ஜனமான காட்டுக்கு வந்தாள் என்பதால் தனிமையில் ஸ்ரீராமனுடன் ஸகலபோகங்களையும் அனுபவிக்கலாம் என்று கருத்து கொண்டாள் என்பது தெரிகிறது.

(இங்கு எல்லா போகங்களையும் விட்டுவிட்டு என்றதற்கு போக ஸாதனமான பதார்த்தங்களையும் தாய் தந்தையர்களையும் விட்டுவிட்டு என்று அர்த்தம். இதனால் பர்த்தாவினிடத்தில்தான் பற்றுதல் மற்றவைகளில் பதிவ்ரதைகளுக்கு பற்றுதலில்லை என்பதும் தெரியவருகிறது. மேலும் இங்கு துக்கங்களை உணராது என்றதால் பதிவ்ரதைகளுக்கு தன் பர்த்தாவுடன் சேர்ந்திருக்கும்போது ஏற்படும் துக்கங்கள் துக்கங்களாகத் தெரியாது என்று கருத்து.) (19)

தன் நாயகனுக்கு பணிவிடை செய்வதில் ஆவலுள்ள யாதொரு ஸீதை அரண்மனையில் உத்தமமான பக்ஷ்ய போஜ்யங்களைப் புசித்து எந்த உத்தம ப்ரியத்தை அடைவாளோ அந்த ப்ரியத்தை வனத்தில் காய் கனிகளைப் புசித்து அடைந்தாள். (20)

தங்கநிறம் கொண்டவளும், எப்பொழுதும் அழகிய புன்சிரிப்புடன் கூடிய பேச்சை உடையவளும், கஷ்டங்களை அனுபவிப்பதற்குத் தகாதவளுமான அந்த ஸீதையும் இந்த கஷ்டத்தை ஸஹிக்கிறாள். (21)

इमां तु शीलसंपन्नां द्रष्टुमर्हति राघवः ।
रावणेन प्रमथितां प्रपामिव पिपासितः ॥ २२

अस्या नूनं पुनर्लाभाद्राघवः प्रीतिमेष्यति ।
राजा राज्यपरिभ्रष्टः पुनः प्राप्येव मेदिनीम् ॥ २३

कामभोगैः परित्यक्ता हीना बन्धुजनेन च ।
धारयत्यात्मनो देहं तत्समागमकाङ्क्षिणी ॥ २४

नैषा पश्यति राक्षस्यो नेमान्पुष्पफलद्रुमान् ।
एकस्थहृदया नूनं राममेवानुपश्यति ॥ २५

भर्ता नाम परं नार्या भूषणं भूषणादपि ।
एषा तु रहिता तेन भूषणार्हा न शोभते ॥ २६

இமாம் து ஶீலஸம்பன்னும் த்ரஷ்டுமர்ஹதி ராகவ: ।
ராவணேன ப்ரமதிதாம் ப்ரபாமிவ பிபாஸித: ॥ 22

அஸ்யா நூனம் புனர்லாபாத்ராகவ: ப்ரீதிமேஷ்யதி ।
ராஜா ராஜ்யபரிப்ரஷ்ட: புன: ப்ராப்யேவ மேதினீம் ॥ 23

காமபோகை: பரித்யக்தா ஹீனு பந்துஜனேன ச ।
தாரயத்யாத்மனே தேஹம் தத்ஸமாகமகாங்க்ஷிணீ ॥ 24

நைஷா பஶ்யதி ராக்ஷஸ்யோ நேமான்புஷ்பபலத்ருமான் ।
ஏகஸ்தஹ்ருதயா நூனம் ராமமேவானுபஶ்யதி ॥ 25

பர்த்தா நாம பரம் நார்யா பூஷணம் பூஷணுதபி ।
ஏஷா து ரஹிதா தேன பூஷணுர்ஹா ந ஶோபதே ॥ 26

---

*தாகங்கொண்டவன் தண்ணீர்ப்பந்தலைப் பிடுங்குவது போல் ராவணனால் அபஹரிக்கப்பட்டு கொண்டுவந்த நன்னடத்தை உள்ள இந்த ஸீதையை ஸ்ரீராகவன் பார்ப்பது உசிதமாகும்.* (22)

*ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்ட அரசன் மறுபடியும் பூமியை அடைந்தது போல் ஸ்ரீராகவன் இவளை திரும்பப்பெற்று ஸந்தோஷத்தை அடையப்போகிறார்.* (23)

*சந்தனம் புஷ்பம் முதலிய உத்தம வஸ்துக்கள் அற்றவளும் பந்துஜனங்களை விட்டுப் பிரிந்தவளுமான இவள் ராமனுடைய சேர்க்கையில் ஆவல்கொண்டு தன் சரீரத்தைத் தரிக்கிறாள்.* (24)

*இவள் ராக்ஷஸிகளையும் புஷ்பம் பழம் இவைகளுடன் கூடிய இம்மரங்களையும் பார்க்கவில்லை. ஒரே மனதுடன் கூட நிஶ்சயம் ராமனையே பார்க்கிறாள்.* (25)

*ஸ்த்ரீகளுக்கு பர்த்தாவே ஆபரணத்தை காட்டிலும் உயர்ந்த ஆபரணம். ஆபரணங்களுக்கு ஏற்றவளான இந்த ஸீதை அத்தகைய ஆபரணங்களை அணியாதவளாய்ப் பிரகாசிக்கவில்லை.* (26)

दुष्करं कुरुते रामो हीनो यदनया प्रभुः।
धारयत्यात्मनो देहं न दुःखेनावसीदति॥ २७
इमामसितकेशान्तां शतपत्रनिभेक्षणाम्।
सुखार्हां दुःखितां दृष्ट्वा ममापि व्यथितं मनः॥ २८
क्षितिक्षमा पुष्करसंनिभाक्षी या रक्षिता राघवलक्ष्मणाभ्याम्।
सा राक्षसीभिर्विकृतेक्षणाभिः संरक्ष्यते संप्रति वृक्षमूले॥ २९
हिमहतनलिनीव नष्टशोभा व्यसनपरम्परयाऽतिपीड्यमाना।
सहचररहितेव चक्रवाकी जनकसुता कृपणां दशां प्रपन्ना॥ ३०

துஷ்கரம் குருதே ராமோ ஹீநோ யதனயா ப்ரபு: ।
தாரயத்யாத்மனோ தேஹம் ந து:கேனாவஸீததி ॥ **27**
இமாமஸிதகேஶாந்தாம் ஶதபத்ரநிபேக்ஷணாம் ।
ஸுகார்ஹாம் து:கிதாம் த்ருஷ்ட்வா மமாபி வ்யதிதம் மன: ॥
க்ஷிதிக்ஷமா புஷ்கரஸன்னிபாக்ஷீ
யா ரக்ஷிதா ராகவலக்ஷ்மணாப்யாம் ।
ஸா ராக்ஷஸீபிர்விக்ருதேக்ஷணாபி:
ஸம்ரக்ஷ்யதே ஸம்ப்ரதி வ்ருக்ஷமூலே ॥ **29**
ஹிமஹதநலினீவ நஷ்டஶோபா
வ்யஸனபரம்பரயாऽதிபீட்யமானா ।
ஸஹசரரஹிதேவ சக்ரவாகீ
ஜனகஸுதா க்ருபணாம் தஶாம் ப்ரபன்னா ॥ **30**

---

இந்த ஸீதையை விட்டுப்பிரிந்த ப்ரபுவான ராமர் செய்ய முடியாத காரியத்தைச் செய்கிறார். அதாவது தனது சரீரத்தை வைத்துக்கொண்டிருக்கிறார். துக்கத்தால் அழிவை அடையவில்லை. (27)

கறுத்த கேசங்களை உடையவளும், தாமரைக்கு ஒப்பான கண்களை உடையவளும், ஸுகத்துக்கு ஏற்றவளும், துக்கத்தை அடைந்தவளுமான இந்த ஸீதையைப் பார்த்து கேவலம் குரங்கு ஜாதியில் பிறந்து விஷயங்களை நன்கு அறியாதவனான என்னுடைய மனமும் துக்கப்பட்டது. (இங்கு இப்படிச் சொன்னதால் பரம தயாமூர்த்தியான ஸ்ரீராகவனுடைய மனம் கஷ்டப்பட்டதென்பதை எடுத்துச் சொல்லவேண்டிய அவஶ்யமும் இல்லை என்பது கருத்தாகும்.) (28)

பூமியைப் போன்ற பொறுமை உடையவளும், தாமரைக்கு ஒப்பான கண்களை உடையவளும், ஸ்ரீராமலக்ஷ்மணர்களால் காப்பாற்றப்பட்டவளுமான யாதொரு ஸீதை உண்டோ, அவள் இன்று ஶிம்ஶுபா வ்ருக்ஷத்தின் அடியில் விகாரமான கண்களை உடையவர்களான ராக்ஷஸிகளால் காக்கப்பட்டு வருகிறாள். (29)

பனியால் தாக்குண்ட தாமரை ஓடைபோல் சோபை அற்ற

अस्या हि पुष्पावनताग्रशाखाः शोकं दृढं वै जनयन्त्यशोकाः ।
हिमव्यपायेन च मन्दरश्मिरभ्युत्थितो नैकसहस्ररश्मिः ॥ ३१

इत्येवमर्थं कपिरन्ववेक्ष्य सीतेयमित्येव निविष्टबुद्धिः ।
संश्रित्य तस्मिन्निषसाद वृक्षे बली हरीणामृषभस्तरस्वी ॥ ३२

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
षोडशः सर्गः ॥ १६ ॥

அஸ்யா ஹி புஷ்பாவனதாக்ரஶாகா:
ஶோகம் த்ருடம் வை ஜனயந்த்யஶோகா: ।
ஹிமவ்யபாயேன ச மந்தரஶ்மிரப்யுத்திதோ
நைகஸஹஸ்ரரஶ்மி: ॥ 31

இத்யேவமர்த்தம் கபிரன்வவேக்ஷ்ய
ஸீதேயமித்யேவ நிவிஷ்டபுத்தி: ।
ஸம்ஶ்ரித்ய தஸ்மின்நிஷஸாத
வ்ருக்ஷே பலீ ஹரீணம்ருஷபஸ்தரஸ்வீ ॥ 32

இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே ஷோடஶ: ஸர்க: ॥

---

வளும் மேல் மேலும் துக்கபரம்பரையினுல் மிகவும் பீடிக்கப்படுகிறவளுமான இந்த ஸீதை கணவனை விட்டுப்பிரிந்த பெண் சக்ரவாகம்போல் மிக வருந்தத்தக்க நிலையை அடைந்தாள். (30)

வஸந்தத்தின் வருகையால் புஷ்பபாரத்தால் நன்கு வளைந்த நுனிக்கிளைகளை உடைய அசோக விருக்ஷங்களும் பல ஆயிர கிரணங்களோடு உதித்தவனுமான சந்திரனும் இத்தேவிக்கு அதிகமான துக்கத்தையே உண்டு பண்ணுகின்றன. (31)

பலமுள்ளவரும் வேகம் படைத்தவரும் வானரங்களுள் சிறந்தவருமான இந்த ஹனுமார் விஷயத்தை இவ்விதமாக ஆலோசித்து இவள் ஸீதைதான் என்று த்ருடபுத்திகொண்டவராய் அம்மரத்திலேயே தங்கிவிட்டார். (32)

பதினாறுவது ஸர்கம் முற்றிற்று.

ஸ்ரீ:

सप्तदशः सर्गः — பதினேழாவது ஸர்கம் ॥ १७ ॥

# "राक्षसीदर्शनम्" — ராக்ஷஸிகளைப் பார்த்தல்.

ततः कुमुदषण्डाभो निर्मलो निर्मलं स्वयम् ।
प्रजगाम नभश्चन्द्रो हंसो नीलमिवोदकम् ॥ १

साचिव्यमिव कुर्वन्स प्रभया निर्मलप्रभः ।
चन्द्रमा रश्मिभिः शीतैः सिषेवे पवनात्मजम् ॥ २

स ददर्श ततः सीतां पूर्णचन्द्रनिभाननाम् ।
शोकभारैरिव न्यस्तां भारैर्नावमिवाम्भसि ॥ ३

दिदृक्षमाणो वैदेहीं हनुमान्मारुतात्मजः ।
स ददर्शाविदूरस्था राक्षसीर्घोरदर्शनाः ॥ ४

ததஃ குமுதஷண்டாபோ நிர்மலோ நிர்மலம் ஸ்வயம் ।
ப்ரஜகாம நபஸ்சந்த்ரோ ஹம்ஸோ நீலமிவோதகம் ॥ 1

ஸாசிவ்யமிவ குர்வன்ஸ ப்ரபயா நிர்மலப்ரப: ।
சந்த்ரமா ரஸ்மிபி: ஸீதை: ஸிஷேவே பவனாத்மஜம் ॥ 2

ஸ ததர்ஸ தத: ஸீதாம் பூர்ணசந்த்ரநிபானனாம் ।
ஸோகபாரைரிவ ந்யஸ்தாம் பாரைர்நாவமிவாம்பஸி ॥ 3

தித்ருக்ஷமாணோ வைதேஹீம் ஹனுமான்மாருதாத்மஜ: ।
ஸ ததர்ஸாவிதூரஸ்தா ராக்ஷஸீர்கோரதர்ஸனா: ॥ 4

---

பிறகு ஆம்பல் ஸமூகத்தின் காந்தியை உடையவனும், ஸ்வபாவமாகவே ஸ்வச்சமானவனுமான சந்த்ரன் அப்பழுக்கில்லாத ஆகாசத்தில் அன்னம் நீலமான ஜலத்தைப் பிரவேசிப்பதுபோல் பிரவேசித்தான். (1)

ஸ்வச்சமான காந்தியை உடைய அந்த சந்த்ரன் தனது காந்தியால் உதவி செய்பவன்போல் குளிர்ந்த கிரணங்களால் அந்த வாயுபுத்ரனை ஸேவித்தான். (2)

பிறகு அந்த ஹனுமார் பூரண சந்த்ரனுக்கு ஒப்பான முகத்தை உடையவளான அந்த ஸீதையை ஸாமான்களின் சுமையால் ஜலத்தில் அமுக்கப்படும் ஓடத்தைப்போல் துக்கபாரத்தால் இறுத்தப்பட்டவளாகக் கண்டார். (3)

வாயுபுத்ரரான ஹனுமார் ஸீதையைக் காண விருப்பங்

एकाक्षीमेककर्णां च कर्णप्रावरणां तथा।
अकर्णां शङ्कुकर्णां च मस्तकोच्छ्वासनासिकाम्॥ ५

अतिकायोत्तमाङ्गीं च तनुदीर्घशिरोधराम्।
ध्वस्तकेशीं तथाऽकेशीं केशकम्बलधारिणीम्॥ ६

लम्बकर्णललाटां च लम्बोदरपयोधराम्।
लम्बोष्ठीं चुबुकोष्ठीं च लम्बास्यां लम्बजानुकाम्॥ ७

ह्रस्वां दीर्घां तथा कुब्जां विकटां वामनां तथा।
करालां भुग्नवक्त्रां च पिङ्गाक्षीं विकृताननाम्॥ ८

ஏகாக்ஷீமேககர்ணாம் ச கர்ணப்ராவரணாம் ததா ।
அகர்ணாம் ஶங்குகர்ணாம் ச மஸ்தகோச்ச்வாஸநாஸிகாம் ॥ 5

அதிகாயோத்தமாங்கீம் ச தனுதீர்கஶிரோதராம் ।
த்வஸ்தகேஶீம் ததாऽகேஶீம் கேஶகம்பலதாரிணீம் ॥ 6

லம்பகர்ணலலாடாம் ச லம்போதரபயோதராம் ।
லம்போஷ்டீம் சுபுகோஷ்டீம் ச லம்பாஸ்யாம் லம்பஜாநுகாம் ॥

ஹ்ரஸ்வாம் தீர்காம் ததா குப்ஜாம் விகடாம் வாமனாம் ததா ।
கராலாம் புக்னவக்த்ராம் ச பிங்காக்ஷீம் விக்ருதானனாம் ॥ 8

---

கொண்டவராகி ஒற்றைக் கண்படைத்தவளும், ஒரே காது உள்ள வளும், காதுக்கு மூடி உள்ளவளும், அவ்விதமே காதற்றவளும், முளைபோன்ற காதை உடையவளும், தலையில் மூச்சுவிடும் மூக்கைப் படைத்திருப்பவளும், மிகப்பருத்த உடல் தலை இவைகளை உடைய வளும், சிறியதும், நீண்டதுமான கழுத்தை உடையவளும், சிதறிய கேசங்களை உடையவளும், கேசமே இல்லாதவளும், தன் உடலி லுள்ள கேசங்களால் கம்பளம் உடுத்தியவள் போன்றவளும், தொங்குகின்ற காது நெற்றி இவைகளை உடையவளும், தொங்குகிற வயறு ஸ்தனம் இவற்றை உடையவளும், தொங்குகின்ற உதட் டை உடையவளும், முகவாய்க் கட்டையில் கிடக்கும் உதட்டை உடையவளும், தொங்கும் முகத்தை உடையவளும், தொங்கும் முழங்கால்களை உடையவளும், குள்ளமானவளும், நீளமான வளும், அப்படியே கூனியும், வக்ரமான சரீரத்தை உடையவளும், குள்ளமானவளும், பயங்கரமான கறுப்பு வர்ணமுடையவளும், வளைந்த முகத்தை உடையவளும், மஞ்சளான கண்களை உடைய வளும், விகாரமான முகத்தை உடையவளும், மற்றும் கோரமான பார்வையை உடையவர்களும், பக்கத்திலிருப்பவர்களுமான ராக்ஷஸிகளைப் பார்த்தார். (4 — 8)

विकृताः पिङ्गलाः कालीः क्रोधनाः कलहप्रियाः।
कालायसमहाशूलकूटमुद्गरधारिणीः॥ ९

वराहमृगशार्दूलमहिषाजशिवामुखीः।
गजोष्ट्रहयपादीश्च निखातशिरसोऽपराः॥ १०

एकहस्तैकपादाश्च खरकर्ण्यश्वकर्णिकाः।
गोकर्णीर्हस्तिकर्णीश्च हरिकर्णीस्तथाऽपराः॥ ११

अनासा अतिनासाश्च तिर्यङ्नासा विनासिकाः।
गजसन्निभनासाश्च ललाटोच्छ्वासनासिकाः॥ १२

हस्तिपादा महापादा गोपादाः पादचूलिकाः।
अतिमात्रशिरोग्रीवा अतिमात्रकुचोदरीः॥ १३

விக்ருதா: பிங்கலா: காலீ: க்ரோதனா: கலஹப்ரியா: |
காலாயஸமஹாஶூலகூடமுத்கரதாரிணீ: || 9

வராஹம்ருகஶார்தூலமஹிஷாஜஶிவாமுகீ: |
கஜோஷ்ட்ரஹயபாதீஶ்ச நிகாதஶிரஸோऽபரா: || 10

ஏகஹஸ்தைகபாதாஶ்ச கரகர்ண்யஶ்வகர்ணிகா: |
கோகர்ணீர்ஹஸ்திகர்ணீஶ்ச ஹரிகர்ணீஸ்ததாऽபரா: || 11

அனஸா அதிநாஸாஶ்ச திர்யங்நாஸா விநஸிகா: |
கஜஸன்னிபநாஸாஶ்ச லலாடோச்ச்வாஸநாஸிகா: || 12

ஹஸ்திபாதா மஹாபாதா கோபாதா: பாதசூலிகா: |
அதிமாத்ரஶிரோக்ரீவா அதிமாத்ரகுசோதரீ: || 13

---

விகாரமுடையவர்களையும், மஞ்சள் நிறமுள்ளவர்களையும், கருப்பு நிறமுள்ளவர்களையும், கோபங்கொண்டவர்களை கலகம் செய்வதில் ப்ரியமானவர்களையும், இரும்பினால் செய்யப்பட்ட பெரிய சூலம், சம்மட்டி, இரும்புத்தடி இவைகளைத் தரித்தவர்களையும், பன்றி, மான், புலி, எருமை, ஆடு, நரி இவைகளின் முகத்தை உடையவர்களையும், யானை, ஒட்டை, குதிரை இவைகளைப்போன்ற கால்களை உடையவர்களையும், மற்றுமுள்ள உடலுக்குள் அமைந்திருக்கும் தலையை உடையவர்களையும், ஒரே கை, ஒரே கால் இவைகளை உடையவர்களையும், கழுதை, குதிரை இவற்றின் காதைப் போன்ற காதை உடையவர்களையும், பசு, யானை இவைகளின் காதைப் போன்ற காதை உடையவர்களையும், குரங்கின் காதை உடையவர்களையும், அப்படியே மற்றும் சில மூக்கில்லாதவர்களையும், பருத்த மூக்குள்ளவர்களையும், குறுக்காக மூக்கை உள்ளவர்களையும், விகாரமான மூக்கை உள்ளவர்களையும், யானையின் துதிக்கைபோல் தொங்குகின்ற மூக்கால் காற்றை விடுகின்றவர்களையும், நெற்றியில் மூக்குள்ளவர்களையும், யானைக்கால் உள்ளவர்களையும்,

अतिमात्रास्यनेत्राश्च दीर्घजिह्वानखास्तथा ।
अजामुखीर्हस्तिमुखीर्गोमुखीः सूकरीमुखीः ॥ १४

हयोष्ट्रखरवक्त्राश्च राक्षसीर्घोरदर्शनाः ।
शूलमुद्गरहस्ताश्च क्रोधनाः कलहप्रियाः ॥ १५

कराला धूम्रकेशीश्च राक्षसीर्विकृताननाः ।
पिबन्तीः सततं पानं सदा मांससुराप्रियाः ॥ १६

मांसशोणितदिग्धाङ्गीर्मांसशोणितभोजनाः ।
ता ददर्श कपिश्रेष्ठो रोमहर्षणदर्शनाः ॥
स्कन्धवन्तमुपासीनाः परिवार्य वनस्पतिम् ॥ १७

அதிமாத்ராஸ்யநேத்ராம்ஶ்ச தீர்க்கஜிஹ்வாநகாஸ்ததா ।
அஜாமுகீர்ஹஸ்திமுகீர்கோமுகீ: ஸூகரீமுகீ: ॥ 14

ஹயோஷ்ட்ரகரவக்த்ராம்ஶ்ச ராக்ஷஸீர்கோரதர்ஶநா: ।
ஶூலமுத்கரஹஸ்தாம்ஶ்ச க்ரோதநா: கலஹப்ரியா: ॥ 15

கராலா தூம்ரகேஶீம்ஶ்ச ராக்ஷஸீர்விக்ருதாநநா: ।
பிபந்தீ: ஸததம் பாநம் ஸதாமாம்ஸஸுராப்ரியா: ॥ 16

மாம்ஸஶோணிததிக்தாங்கீர்மாம்ஸஶோணிதபோஜநா: ।
தா ததர்ஶ கபிஶ்ரேஷ்டோ ரோமஹர்ஷணதர்ஶநா: ॥
ஸ்கந்தவந்தமுபாஸீநா: பரிவார்ய வனஸ்பதிம் ॥ 17

---

*நீண்ட கால்களை உடையவர்களையும், பசுவின் கால்போன்ற காலை உடையவர்களையும், காலில் சிகை உள்ளவர்களையும், அளவுக்கு மேல் பருத்த தலை, கழுத்து, ஸ்தனம், வயறு, வாய், கண் இவைகளை உடையவர்களையும்; அப்படியே நீண்ட நாக்கு, நகம் இவைகளை உடையவர்களையும்; ஆடு, யானை, பசு, பன்றி இவற்றின் முகத்தை உடையவர்களையும்; குதிரை, ஒட்டகை, கழுதை இவைகளுடையது போன்ற முகத்தை உடையவர்களையும்; பயங்கரப்பார்வையை உடைய ராக்ஷஸிகளையும்; சூலம், இரும்புத்தடி இவற்றை கையில் உடையவர்களையும்; கோபமுள்ளவர்களையும், கலகத்தில் ப்ரிய முள்ளவர்களையும், பயங்கரமானவர்களையும், செம்மட்டை நிறமான கேசத்தை உடையவர்களையும், விகாரமான முகத்தை உடையவர் களையும், எப்பொழுதும் கள்ளை குடிப்பவர்களையும்; எப்பொழுதும் மாம்ஸம், கள்ளு இவற்றில் ப்ரியமுள்ளவர்களையும்; மாம்ஸம், ரத் தம் இவற்ருல் பூசப்பட்ட அங்கங்களை உடையவர்களையும்; மாம் ஸம், ரத்தம் இவைகளையே புஜிப்பவர்களையும்; மயிர்க்கூச்சலை உண்டு பண்ணும் பார்வையை உடையவர்களையும், கிளைகளோடு கூடிய*

तस्याधस्ताच्च तां देवीं राजपुत्रीमनिन्दिताम्।
लक्षयामास लक्ष्मीवान्हनुमाञ्जनकात्मजाम्॥
निष्प्रभां शोकसंतप्तां मलसंकुलमूर्धजाम्॥ १८

क्षीणपुण्यां च्युतां भूमौ तारां निपतितामिव।
चारित्रव्यपदेशाढ्यां भर्तृदर्शनदुर्गताम्॥ १९

भूषणैरुत्तमैर्हीनां भर्तृवात्सल्यभूषणाम्।
राक्षसाधिपसंरुद्धां बन्धुभिश्च विनाकृताम्॥ २०

वियूथां सिंहसंरुद्धां बद्धां गजवधूमिव।
चन्द्ररेखां पयोदान्ते शारदाभ्रैरिवावृताम्॥ २१

தஸ்யாதஸ்தாச்ச தாம் தேவீம் ராஜபுத்ரீமநிந்திதாம்।
லக்ஷயாமாஸ லக்ஷ்மீவான்ஹனுமான்ஜனகாத்மஜாம்॥
நிஷ்ப்ரபாம் ஶோகஸம்தப்தாம் மலஸங்குலமூர்தஜாம்॥ 18

க்ஷீணபுண்யாம் ச்யுதாம் பூமௌ தாராம் நிபதிதாமிவ।
சாரித்ரவ்யபதேஶாட்யாம் பர்த்ருதர்ஶனதுர்கதாம்॥ 19

பூஷணைருத்தமைர்ஹீனாம் பர்த்ருவாத்ஸல்யபூஷணாம்।
ராக்ஷஸாதிபஸம்ருத்தாம் பந்துபிஶ்ச விநாக்ருதாம்॥ 20

வியூதாம் ஸிம்ஹஸம்ருத்தாம் பத்தாம் கஜவதூமிவ।
சந்த்ரரேகாம் பயோதாந்தே ஶாரதாப்ரைரிவாவ்ருதாம்॥ 21

---

பெரிய மரத்தைச் சுற்றி உட்கார்ந்திருக்கும் அந்த ராக்ஷஸிகளையும் கபிஶ்ரேஷ்டரான ஹனுமார் கண்டார்.

(இங்கு ராக்ஷஸிகளின் க்ரூரமான ரூபங்களை வர்ணித்ததின் காரணம் பாப கர்மத்தின் பயனாக இம்மாதிரி ரூபம் வந்ததென்று உலகத்துக்கு காட்டுவதற்கேயாகும்.) (9 — 17)

அந்த மரத்துக்கு அடியில் ராஜகுமாரியும் குற்றமற்றவளும் ஜனகபுத்ரியும் மங்கிய காந்தியை உடையவளும், துக்கத்தால் கஷ்டப்படுபவளும், அழுக்கடைந்த பின்னலை உடையவளுமான அந்த தேவியை லக்ஷ்மீவானான ஹனுமார் கண்டார். (18)

குறைந்த புண்யத்தால் பூமியில் நழுவிய நக்ஷத்ரம் போன்றவளும், பதிவ்ரதாதர்மத்தை அனுஷ்டிப்பதால் கீர்த்திவாய்ந்தவளும், நாயகனைப் பாராதவளும், உத்தம ஆபரணங்களைத் தரிக்காதவளும், தன் நாயகனது ப்ரியத்தையே ஆபரணமாகக்கொண்டவளும், தன் கூட்டத்தை விட்டுப்பிரிந்ததும், ஸிம்மத்தால் தகையப்பட்டதும், கட்டப்பட்டதுமான பெண்யானை போல் ராக்ஷஸாதிபனால் தகையப்பட்டவளும், பந்துக்களை விட்டுப் பிரிந்தவளும், வர்ஷருதுவின் முடிவில் சரத்காலத்து மேகங்களால் சூழப்

क्लिष्टरूपामसंस्पर्शादयुक्तामिव वल्लकीम् ।
सीतां भर्तृवशे युक्तामयुक्तां राक्षसीवशे ॥ २२

अशोकवनिकामध्ये शोकसागरमाप्लुताम् ।
ताभिः परिवृतां तत्र सग्रहामिव रोहिणीम् ॥ २३

ददर्श हनुमान्देवीं लतामकुसुमामिव ।
सा मलेन च दिग्धाङ्गी वपुषा चाप्यलङ्कृता ॥
मृणाली पङ्कदिग्धेव विभाति न विभाति च ॥ २४

मलिनेन तु वस्त्रेण परिक्लिष्टेन भामिनीम् ।
संवृतां मृगशावाक्षीं ददर्श हनुमान्कपिः ॥ २५

க்லிஷ்டரூபாமஸம்ஸ்பர்ஶாதயுக்தாமிவ வல்லகீம் ।
ஸீதாம் பர்த்ருவஶே யுக்தாமயுக்தாம் ராக்ஷஸீவஶே ॥ 22

அஶோகவனிகாமத்யே ஶோகஸாகரமாப்லுதாம் ।
தாபி: பரிவ்ருதாம் தத்ர ஸக்ரஹாமிவ ரோஹிணீம் ॥ 23

ததர்ஶ ஹனுமான்தேவீம் லதாமகுஸுமாமிவ ।
ஸா மலேன ச திக்தாங்கீ வபுஷா சாப்யலங்க்ருதா ॥
ம்ருணாலீ பங்கதிக்தேவ விபாதி ந விபாதி ச ॥ 24

மலினேன து வஸ்த்ரேண பரிக்லிஷ்டேன பாமினீம் ।
ஸம்வ்ருதாம் ம்ருகஶாபாக்ஷீம் ததர்ஶ ஹனுமான்கபி: ॥ 25

---

பட்ட சந்த்ரபிம்பம் போல் மங்கிய ரூபமுள்ளவளும், அப்யங்கனம் முதலிய ஸ்நானங்கள் இல்லாததால் மீட்டப்படாத தந்திகளை உடைய வீணைபோன்றவளும், அயோனிஜையும், தன் புருஷனுக்கு உட்பட்டவளும், ராக்ஷஸிகளுக்கு வசப்படாதவளும், அசோகவனத்தின் மத்தியில் துக்க ஸாகரத்தில் மூழ்கியவளும், க்ரூரக்ரஹத்தால் சூழப்பட்ட ரோஹிணிபோல் அந்த ராக்ஷஸிகளால் அங்கு சூழப்பட்டவளும், பூக்காத கொடிபோன்றவளுமான தேவியை ஹனுமார் கண்டார்.

அழுக்கினுல் பூசப்பட்ட அங்கங்களை உடையவளும், உடலின் இயற்கையான அழகால் அலங்கரிக்கப்பட்டவளுமான அந்த ஸீதை சேற்றுடன் கலந்த தாமரைக்கொடிபோல் ப்ரகாசித்தும் ப்ரகாசிக்காமலும் இருக்கிருள். (அதாவது இயற்கையான அழகினுல் ப்ரகாசிப்பவளாகவும் ஸ்நானம் ஆபரணம் முதலியவை இல்லாததால் ப்ரகாஶமற்றவளாகவும் இருக்கிருள் என்பது கருத்து.) (19 — 24)

அழுக்கடைந்து கசங்கியதான வஸ்த்ரத்தைத் தரித்தவளும், அழகு வாய்ந்தவளும், மான் குட்டியின் கண்போன்ற கண்களை உடையவளும், தேவஸ்த்ரீ போன்றவளும், கவலைக்குறியுடன்

तां देवीं दीनवदनामदीनां भर्तृतेजसा ।
रक्षितां स्वेन शीलेन सीतामसितलोचनाम् ॥ २६

तां दृष्ट्वा हनुमान्सीतां मृगशावनिभेक्षणाम् ।
मृगकन्यामिव त्रस्तां वीक्षमाणां समन्ततः ॥ २७

दहन्तीमिव निःश्वासैर्वृक्षान्पल्लवधारिणः ।
संघातमिव शोकानां दुःखस्योर्मिमिवोत्थिताम् ॥ २८

तां क्षमां सुविभक्ताङ्गीं विनाभरणशोभिनीम् ।
प्रहर्षमतुलं लेभे मारुतिः प्रेक्ष्य मैथिलीम् ॥ २९

हर्षजानि च सोऽश्रूणि तां दृष्ट्वा मदिरेक्षणाम् ।
मुमोच हनुमांस्तत्र नमश्चक्रे च राघवम् ॥ ३०

தாம் தேவீம் தீனவதனமதீனம் பர்த்ருதேஜஸா ।
ரக்ஷிதாம் ஸ்வேன ஶீலேன ஸீதாமஸிதலோசனம் ॥ 26

தாம் த்ருஷ்ட்வா ஹனுமான்ஸீதாம் ம்ருகஶாபநிபேக்ஷணம் ।
ம்ருககன்யாமிவ த்ரஸ்தாம் வீக்ஷமாணம் ஸமந்தத: ॥ 27

தஹந்தீமிவ நிஸ்வாஸைர்வ்ருக்ஷான் பல்லவதாரிண: ।
ஸம்காதமிவ ஶோகானம் து:கஸ்யோர்மிமிவோத்திதாம் ॥ 28

தாம் க்ஷமாம் ஸுவிபக்தாங்கீம் விநபரணஶோபினீம் ।
ப்ரஹர்ஷமதுலம் லேபே மாருதி: ப்ரேக்ஷ்ய மைதிலீம் ॥ 29

ஹர்ஷஜானி ச ஸோऽஶ்ருணி தாம் த்ருஷ்ட்வா
மதிரேக்ஷணம் ।
முமோச ஹனுமாம்ஸ்தத்ர நமஶ்சக்ரே ச ராகவம் ॥ 30

---

கூடிய முகமுள்ளவளும், தன் நாயகனின் சக்தியை உணர்ந்து கவலையற்றவளும், தனது ஒழுக்கத்தால் காக்கப்பட்டவளும், கரு விழிகளை உடையவளுமான அந்த ஸீதையை ஹனுமார் கண்டார். (25, 26)

குட்டிமானுக்கு ஒப்பான கண்களை உடையவளும், பயந்த பெண்மான் போல் நாலுபக்கத்திலும் பார்க்கிறவளும், துளிருடன் கூடிய மரங்களை மூச்சுக்காற்றால் எரிக்கிறவளும், சோகங்களின் கூட்டம் போன்றவளும், துக்க ஸமுத்ரத்தில் மேலே கிளம்பிய அலைபோன்றவளும், உருவமெடுத்த பொறுமை போன்றவளும், நன்கு அமைக்கப்பட்ட அங்கங்களை உடையவளும், ஆபரணமில்லாமலே ப்ரகாஶிப்பவளுமான இந்த ஸீதையை அடிக்கடி பார்த்து வாயுபுத்ரரான ஹனுமார் அளவற்ற ஸந்தோஷத்தை அடைந்தார். (27 — 29)

ஹனுமார் அந்த இடத்தில் மதத்தை உண்டுபண்ணக்கூடிய கண்களை உடைய அந்த ஸீதையைப் பார்த்து ஆனந்தக் கண்ணீர்

नमस्कृत्वा स रामाय लक्ष्मणाय च वीर्यवान् ।
सीतादर्शनसंहृष्टो हनुमान्संवृतोऽभवत् ॥ ३१

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
सप्तदशः सर्गः ॥ १७ ॥

நமஸ்க்ருத்வா ஸ ராமாய லக்ஷ்மணாய ச வீர்யவான் ।
ஸீதாதர்ஶனஸம்ஹ்ருஷ்டோ ஹனுமான்ஸம்வ்ருதோऽபவத் ॥

*இத்யார்ஷே ஶ்ரீமத்ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே*
*ஸுந்தரகாண்டே ஸப்ததஶ: ஸர்க: ॥*

---

சொரிந்தார். அங்கிருந்தபடியே ஸ்ரீராகவனையும் நமஸ்கரித்தார். (30)

ஸீதையைக் கண்டதால் ஸந்தோஷமடைந்த அந்த வீர்யவானை ஹனுமார் ராமலக்ஷ்மணர்களை நமஸ்கரித்துவிட்டு ராக்ஷஸிகள் தன்னைப்பாராமல் இருப்பதற்காக ஶிம்ஶுபா வ்ருக்ஷத்தின் இலைகளில் மறைந்து இருந்தார்.

(இங்குதான் ஹனுமார் லக்ஷ்மணனுக்கு தனியாக நமஸ்காரம் செய்கிறார். ஸீதையை விட்டுப்பிரிந்த பிறகு லக்ஷ்மணர் கூட இருந்து ரக்ஷிக்காமலிருந்தால் ஸ்ரீராமன் கோதாவரி நதியில் தன் உடலை த்யாகம் செய்திருக்கக்கூடும். அப்படி த்யாகம் செய்யாமல் இருந்ததாலேயே தனக்கு ஸ்ரீராம தர்ஶனம் ஸீதா தர்ஶனம் முதலியன லாபம் கிடைத்ததென்ற ஸந்தோஷத்தால் லக்ஷ்மணனை தனித்து நமஸ்கரிக்கிறார் என்பது கருத்து.) (31)

பதினேழாவது ஸர்கம் முற்றிற்று.

---

ஸ்ரீ:

अष्टादशः सर्गः — பதினெட்டாவது ஸர்கம் ॥ १८ ॥

# "रावणागमनम्" — ராவணன் வருதல்.

तथा विप्रेक्षमाणस्य वनं पुष्पितपादपम् ।
विचिन्वतश्च वैदेहीं किंचिच्छेषा निशाऽभवत् ॥ १

षडङ्गवेदविदुषां क्रतुप्रवरयाजिनाम् ।
शुश्राव ब्रह्मघोषांश्च विरात्रे ब्रह्मरक्षसाम् ॥ २

अथ मङ्गलवादित्रैः शब्दैः श्रोत्रमनोहरैः ।
प्राबुध्यत महाबाहुर्दशग्रीवो महाबलः ॥ ३

विबुध्य तु यथाकालं राक्षसेन्द्रः प्रतापवान् ।
स्रस्तमाल्याम्बरधरो वैदेहीमन्वचिन्तयत् ॥ ४

ததா விப்ரேக்ஷமாணஸ்ய வனம் புஷ்பிதபாதபம் ।
விசின்வதஸ்ச வைதேஹீம் கிம்சிச்சேஷா நிஶாऽபவத் ॥ 1

ஷடங்கவேதவிதுஷாம் க்ரதுப்ரவரயாஜினாம் ।
ஶுஶ்ராவ ப்ரம்ஹகோஷாம்ஸ்ச விராத்ரே ப்ரம்ஹரக்ஷஸாம் ॥

அத மங்கலவாதித்ரை: ஶப்தை: ஶ்ரோத்ரமனோஹரை: ।
ப்ராபுத்யத மஹாபாஹுர்தஶக்ரீவோ மஹாபல: ॥ 3

விபுத்ய து யதாகாலம் ராக்ஷஸேந்த்ர: ப்ரதாபவான் ।
ஸ்ரஸ்தமால்யாம்பரதரோ வைதேஹீமன்வசிந்தயத் ॥ 4

---

ஹனுமார் புஷ்பித்த மரங்களை உடைய காட்டைப்பார்த்துக் கொண்டும் ஸ்ரீஸீதையைத் தேடிக்கொண்டுமிருக்கும்போது இரவு அநேகமாக முடிந்துவிட்டது. (1)

ஆறு அங்கங்களுடன் வேதங்களைக் கற்றவர்களும் உத்தம யாகங்களை செய்தவர்களுமான ப்ரம்ஹரக்ஷஸ்களின் வேத கோஷங்களை ராத்ரியின் பிற்பகுதியில் கேட்டார். (2)

பிறகு மங்கள வாத்யங்களாலும், காதிற்கும் மனதிற்கு மினிய ஶப்தங்களாலும், அதிக பலமும் பெருத்தகைகளும் உடையவனுமான ராவணன் விழித்துக்கொண்டான். (3)

நல்ல பராக்ரமமுள்ளவனும் நழுவிய புஷ்பமாலை வஸ்த்ரம் இவைகளை உடையவனுமான ராக்ஷஸஶ்ரேஷ்டன் தக்க ஸமயத்தில் விழித்துக்கொண்டு ஸீதையைக் குறித்துச் சிந்தித்தான். (4)

भृशं नियुक्तस्तस्यां च मदनेन मदोत्कटः ।
न स तं राक्षसः कामं शशाकात्मनि गूहितुम् ॥ ५

स सर्वाभरणैर्युक्तो बिभ्रच्छ्रियमनुत्तमाम् ।
तां नगैर्बहुभिर्जुष्टां सर्वपुष्पफलोपगैः ॥ ६

वृतां पुष्करिणीभिश्च नानापुष्पोपशोभिताम् ।
सदामदैश्च विहगैर्विचित्रां परमाद्भुताम् ॥ ७

ईहामृगैश्च विविधैर्जुष्टां दृष्टिमनोहरैः ।
वीथीः संप्रेक्षमाणश्च मणिकाञ्चनतोरणाः ॥ ८

नानामृगगणाकीर्णां फलैः प्रपतितैर्वृताम् ।
अशोकवनिकामेव प्राविशत्संततद्रुमाम् ॥ ९

ப்ருஶம் நியுக்தஸ்தஸ்யாம் ச மதனேன மதோத்கட: ।
ந ஸ தம் ராக்ஷஸ: காமம் ஶஶாகாத்மனி கூஹிதும் ॥ 5

ஸ ஸர்வாபரணைர்யுக்தோ பிப்ரச்ச்ரியமனுத்தமாம் ।
தாம் நகைர்பஹுபிர்ஜுஷ்டாம் ஸர்வபுஷ்பபலோபகை: ॥ 6

வ்ருதாம் புஷ்கரிணீபிஶ்ச நாநாபுஷ்போபஶோபிதாம் ।
ஸதாமதைஶ்ச விஹகைர்விசித்ராம் பரமாத்புதாம் ॥ 7

ஈஹாம்ருகைஶ்ச விவிதைர்ஜுஷ்டாம் த்ருஷ்டிமனோஹரை:
வீதீ: ஸம்ப்ரேக்ஷமாணஶ்ச மணிகாஞ்சனதோரணா: ॥ 8

நாநாம்ருககணாகீர்ணாம் பலை: ப்ரபதிதைர்வ்ருதாம் ।
அஶோகவனிகாமேவ ப்ராவிஶத்ஸந்ததத்ருமாம் ॥ 9

---

*மன்மதனால் அந்த ஸீதையினிடத்தில் நன்கு ஏவப்பட்டவனும் மதம் நிரம்பியவனுமான அந்த ராக்ஷஸனும் காமத்தை உள்ளே அடக்கமுடியாமலிருந்தான்.* (5)

*எல்லா ஆபரணங்களையும் தரித்தவனும் மிகச்சிறந்த காந்தி உள்ளவனுமான அந்த ராவணன் எல்லாவித புஷ்பங்களும் பழங்களும் நிறைந்த பலமரங்களோடு கூடியதும், தாமரை ஓடைகளோடு கூடியதும், பலவித புஷ்பங்களால் ப்ரகாசிக்கிறதும், எப்பொழுதும் மதத்துடன் கூடிய பக்ஷிகளால் அலங்கரிக்கப்பட்டதும், மிக ஆஶ்சர்யத்தை உண்டு பண்ணக்கூடியதும், கண்ணையும் மனதையும் கவரும் பல மான் பொம்மைகளோடு கூடியதும், பல வகைப்பட்ட ம்ருகங்களால் சூழப்பட்டதும், கீழே விழுந்த பழங்களால் நிரம்பப்பட்டதும், நெருக்கமான வ்ருக்ஷங்களை உடையதுமான அசோகவனத்தைக்குறித்து ரத்னங்களாலும் தங்கத்தாலும் செய்யப்பட்ட வாசலுடன் கூடிய தெருக்களைப்பார்த்துக் கொண்டு ப்ரவேஶித்தான்.* (6 — 9)

अङ्गनाशतमात्रं तु तं व्रजन्तमनुव्रजत् ।
महेन्द्रमिव पौलस्त्यं देवगन्धर्वयोषितः ॥ १०

दीपिकाः काञ्चनीः काश्चिज्जगृहुस्तत्र योषितः ।
वालव्यजनहस्ताश्च तालवृन्तानि चापराः ॥ ११

काञ्चनैरपि भृङ्गारैर्जह्रुः सलिलमग्रतः ।
मण्डलाग्रान्बृसीं चैव गृह्यान्याः पृष्ठतो ययुः ॥ १२

काचिद्रत्नमयीं स्थालीं पूर्णां पानस्य भामिनी ।
दक्षिणा दक्षिणेनैव तदा जग्राह पाणिना ॥ १३

राजहंसप्रतीकाशं छत्रं पूर्णशशिप्रभम् ।
सौवर्णदण्डमपरा गृहीत्वा पृष्ठतो ययौ ॥ १४

அங்கனாஶதமாத்ரம் து தம் வ்ரஜந்தமனுவ்ரஜத் ।
மஹேந்த்ரமிவ பௌலஸ்த்யம் தேவகந்தர்வயோஷித: ॥ 10

தீபிகா: காஞ்சனீ: காஶ்சிஜ்ஜக்ருஹுஸ்தத்ர யோஷித: ।
வாலவ்யஜனஹஸ்தாஶ்ச தாலவ்ருந்தானி சாபரா: ॥ 11

காஞ்சனைரபி ப்ருங்காரைர்ஜஹ்ரு: ஸலிலமக்ரத: ।
மண்டலாக்ரான்ப்ருஸீம் சைவ க்ருஹ்யான்யா:
ப்ருஷ்டதோ யயு: ॥ 12

காசித்ரத்னமயீம் ஸ்தாலீம் பூர்ணாம் பானஸ்ய பாமினீ ।
தக்ஷிணா தக்ஷிணேனைவ ததா ஜக்ராஹ பாணினா ॥ 13

ராஜஹம்ஸப்ரதீகாஶம் சத்ரம் பூர்ணஶஶிப்ரபம் ।
ஸௌவர்ணதண்டமபரா க்ருஹீத்வா ப்ருஷ்டதோ யயௌ ॥

---

*செல்லுகின்ற அவனை நூறுபெண்கள் மட்டிலும் தேவகந்தர்வ ஸ்த்ரீகள் மஹேந்த்ரனைப் போல் பின் தொடர்ந்து சென்றனர்கள்.* (10)

*அங்கு சில ஸ்த்ரீகள் தங்கத்தீவட்டிகளையும், மற்றும் சிலர் சாமரங்களையும், விசிறிகளையும் கையில் பிடித்திருந்தனர்.* (11)

*மற்றும் சிலர் தங்கக்குடங்களில் ஜலத்தை எடுத்துக்கொண்டு முன்னடி சென்றனர். மற்றும் சிலர் வட்டமான ப்ருசி என்ற ஆஸனத்தை எடுத்துக்கொண்டு பின்னடி சென்றனர்.* (12)

*நன்கு வேலை செய்யக்கூடிய மற்றொரு ஸ்த்ரீ வலது கையினால் மத்யம் நிறைந்த பாத்ரத்தை எடுத்துக்கொண்டாள்.* (13)

*மற்றொரு ஸ்த்ரீ ராஜஹம்ஸம் போல் வெண்நிறமுள்ளதும் பூர்ண சந்த்ரனின் காந்திபோன்றதும் தங்கப்பிடியை உடையதுமான குடையை எடுத்துக்கொண்டு பின்புறமாகச்சென்றாள்.* (14)

निद्रामदपरीताक्ष्यो रावणस्योत्तमाः स्त्रियः ।
अनुजग्मुः पतिं वीरं घनं विद्युल्लता इव ॥ १५
व्याविद्धहारकेयूराः समामृदितवर्णकाः ।
समागलितकेशान्ताः सस्वेदवदनास्तथा ॥ १६
घूर्णन्त्यो मदशेषेण निद्रया च शुभाननाः ।
स्वेदक्लिष्टाङ्गकुसुमाः सुमाल्याकुलमूर्धजाः ॥ १७
प्रयान्तं नैर्ऋतपतिं नार्यो मदिरलोचनाः ।
बहुमानाच्च कामाच्च प्रिया भार्यास्तमन्वयुः ॥ १८
स च कामपराधीनः पतिस्तासां महाबलः ।
सीतासक्तमना मन्दो मदाञ्चितगतिर्बभौ ॥ १९

நித்ராமதபரீதாக்ஷ்யோ ராவணஸ்யோத்தமா: ஸ்த்ரிய: ।
அநுஜக்மு: பதிம் வீரம் கனம் வித்யுல்லதா இவ ॥ 15
வ்யாவித்தஹாரகேயூரா: ஸமாம்ருதிதவர்ணகா: ।
ஸமாகலிதகேஶாந்தா: ஸஸ்வேதவதனாஸ்ததா ॥ 16
கூர்ணந்த்யோ மதஶேஷேண நித்ரயா ச ஶுபானனா: ।
ஸ்வேதக்லிஷ்டாங்ககுஸுமா: ஸுமால்யாகுல மூர்தஜா: ॥ 17
ப்ரயாந்தம் நைர்ருதபதிம் நார்யோ மதிரலோசனா: ।
பஹுமானாச்ச காமாச்ச ப்ரியா பார்யாஸ்தமன்வயு: ॥ 18
ஸ ச காமபராதீன: பதிஸ்தாஸாம் மஹாபல: ।
ஸீதாஸக்தமனா மந்தோ மதாஞ்சிதகதிர்பபௌ ॥ 19

---

தூக்கம் மதம் இவைகளால் சூழப்பட்ட கண்களை உடைய ராவணனுடைய சிறந்த ஸ்த்ரீகள் வீரனை தன் நாயகனை மேகத்தை மின்னல் கொடிகள் போல் துடர்ந்து சென்றனர். (15)

நழுவிய முக்தாஹாரம் தோள்வளை இவைகளை உடையவர்களும், அழிந்து போன மேற்பூச்சை உடையவர்களும், நுனி அவிழ்ந்து தொங்குகின்ற பின்னல்களுடன் கூடியவர்களும், அப்பொழுது வியர்த்ததான முகங்களுள்ளவர்களும், தூக்கத்தாலும் மீதமுள்ள மதத்தாலும் சுழலுகின்றவர்களும், அழகிய முகமுள்ளவர்களும், வியர்வையால் நனைந்த உடலிலுள்ள பூமாலைகளை உடையவர்களும், மாலைகளோடு கலந்த கூந்தலுள்ளவர்களும், மயக்கும் கண்களுள்ளவர்களுமான ப்ரியபத்னிகளான அந்த ஸ்த்ரீகள் செல்லுகின்ற ராக்ஷஸராஜனை அந்த ராவணனை கௌரவபுத்தியினாலும் காமத்தாலும் துடர்ந்து சென்றனர். (16 — 18)

காமத்துக்கு உட்பட்டவனும் அந்த ஸ்த்ரீகளுக்கு நாயகனும் துர்புத்தியுள்ளவனும் மஹாபலமுள்ளவனுமான அந்த ராவணன் ஸீதையினிடத்தில் ஆவல்கொண்டு மதத்தோடு கூடிய நடைஉள்ளவனுய்ப் பிரகாசித்தான். (19)

ततः काञ्चीनिनादं च नूपुराणां च निःस्वनम्।
शुश्राव परमस्त्रीणां स कपिर्मारुतात्मजः॥ २०

तं चाप्रतिमकर्माणमचिन्त्यबलपौरुषम्।
द्वारदेशमनुप्राप्तं ददर्श हनुमान्कपिः॥ २१

दीपिकाभिरनेकाभिः समन्तादवभासितम्।
गन्धतैलावसिक्ताभिर्ध्रियमाणाभिरग्रतः॥ २२

कामदर्पमदैर्युक्तं जिह्मताम्रायतेक्षणम्।
समक्षमिव कन्दर्पमपविद्धशरासनम्॥ २३

मथितामृतफेनाभमरजो वस्त्रमुत्तमम्।
सलीलमनुकर्षन्तं विमुक्तं सक्तमङ्गदे॥ २४

ததः காஞ்சீநிநாதம் ச நூபுராணாம் ச நிஸ்வனம் ।
ஶுஶ்ராவ பரமஸ்த்ரீணாம் ஸ கபிர்மாருதாத்மஜ: ॥ 20

தம் சாப்ரதிமகர்மாணமசிந்த்யபலபௌருஷம் ।
த்வாரதேஶமனுப்ராப்தம் ததர்ஶ ஹனுமான்கபி: ॥ 21

தீபிகாபிரனேகாபி: ஸமந்தாதவபாஸிதம் ।
கந்ததைலாவஸிக்தாபிர்த்ரியமாணாபிரக்ரத: ॥ 22

காமதர்பமதைர்யுக்தம் ஜிஹ்மதாம்ராயதேக்ஷணம் ।
ஸமக்ஷமிவ கந்தர்பமபவித்தஶராஸனம் ॥ 23

மதிதாம்ருதபேனாபமரஜோ வஸ்த்ரமுத்தமம் ।
ஸலீலமனுகர்ஷந்தம் விமுக்தம் ஸக்தமங்கதே ॥ 24

---

வாயுபுத்ரரான அந்த ஹனுமார் பிறகு உத்தம ஸ்த்ரீகளுடைய ஒட்டியாணத்திலுள்ள சிறுமணிகளின் நாதத்தையும் தண்டைகளின் ஶப்தத்தையும் கேட்டார். (20)

ஒப்பற்ற செய்கை உள்ளவனும், சிந்திக்கமுடியாத பலம் புருஷத்தன்மை இவைகளுடன் கூடியவனும், அசோகவனத்தின் வாசற்படியை அடைந்தவனும், வாஸனை தைலத்தால் எரிகிறதுகளும் முன்னடி பிடிக்கப்படுகிறதுகளுமான பல கை தீவட்டிகளால் நான்கு பக்கத்திலும் ப்ரகாசப்படுத்தப் படுகிறவனும், காமம் அகங்காரம் மதம் இவைகளுடன் கூடியவனும், வக்ரமும் சிவந்ததுமான கண்களை உடையவனும், வில்லில்லாத உருவத்தோடு கூடிய மன்மதன் போன்றவனும், கடைந்தெடுத்த அம்ருதத்தின் நுரைபோல் வெண்மையானதும் சுத்தமானதும் சிறந்ததும் தோள்வளையில் நழுவியதுமான வஸ்த்ரத்தை வேடிக்கையாக அது இருக்கவேண்டிய இடத்தில் வைப்பவனுமான அந்த ராவணனை ஹனுமார் கண்டார். (21 — 24)

तं पत्रविटपे लीनः पत्रपुष्पघनावृतः ।
समीपमुपसंक्रान्तं निध्यातुमुपचक्रमे ॥ २५

अवेक्षमाणस्तु ततो ददर्श कपिकुञ्जरः ।
रूपयौवनसंपन्ना रावणस्य वरस्त्रियः ॥ २६

ताभिः परिवृतो राजा सुरूपाभिर्महायशाः ।
तन्मृगद्विजसंघुष्टं प्रविष्टः प्रमदावनम् ॥ २७

क्षीबो विचित्राभरणः शङ्कुकर्णो महाबलः ।
तेन विश्रवसः पुत्रः स दृष्टो राक्षसाधिपः ॥ २८

वृतः परमनारीभिस्ताराभिरिव चन्द्रमाः ।
तं ददर्श महातेजास्तेजोवन्तं महाकपिः ॥ २९

தம் பத்ரவிடபே லீந: பத்ரபுஷ்பகனாவ்ருத: ।
ஸமீபமுபஸங்க்ராந்தம் நித்யாதுமுபசக்ரமே ॥ 25

அவேக்ஷமாணஸ்து ததோ ததர்ஶ கபிகுஞ்ஜர: ।
ரூபயௌவனஸம்பன்னா ராவணஸ்ய வரஸ்த்ரிய: ॥ 26

தாபி: பரிவ்ருதோ ராஜா ஸுரூபாபிர்மஹாயஶா: ।
தன்ம்ருகத்விஜஸங்குஷ்டம் ப்ரவிஷ்ட: ப்ரமதாவனம் ॥ 27

க்ஷீபோ விசித்ராபரண: ஶங்குகர்ணோ மஹாபல: ।
தேன விஶ்ரவஸ: புத்ர: ஸ த்ருஷ்டோ ராக்ஷஸாதிப: ॥ 28

வ்ருத: பரமநாரீபிஸ்தாராபிரிவ சந்த்ரமா: ।
தம் ததர்ஶ மஹாதேஜாஸ்தேஜோவந்தம் மஹாகபி: ॥ 29

---

*இலையிலும் கிளையிலும் மறைந்தவரும் இலைகளாலும் புஷ்பக் கூட்டங்களாலும் மறைக்கப்பட்டவராயும் கொண்டு ஹனுமார் ஸமீபத்திற்கு வந்த அந்த ராவணனை யாரென்று தீர்மானிக்க ஆரம்பித்தார்.* (25)

*பிறகு அங்கு பார்த்துக்கொண்டிருந்த கபிஶ்ரேஷ்டர் ரூபம் யௌவனம் இவைகள் நிறைந்த ராவணனுடைய உத்தம ஸ்த்ரீகளைக் கண்டார்.* (26)

*அழகுவாய்ந்த அந்த ஸ்த்ரீகளால் சூழப்பட்டவனும் அதிகமான கீர்த்திவாய்ந்தவனுமான அந்த ராஜா மிருகங்கள் பக்ஷிகள் இவற்றால் ஶப்திக்கப்பட்டதும் ஸ்த்ரீகளுடன் விளையாடுவதற்காக அமைக்கப்பட்டதுமான அந்தத் தோட்டத்தில் ப்ரவேஶித்தான்.* (27)

*மதம் பிடித்தவனும் பலநிறமுள்ள ஆபரணம் தரித்தவனும், கர்வத்தால் நிமிர்ந்த காதுகளுடன் கூடியவனும், அதிக பலம் வாய்ந்தவனும், விஶ்ரவஸுவின் புத்ரனும், ராக்ஷஸர்களுக்குத் தலைவனுமான அந்த ராவணனை அந்த ஹனுமார் கண்டார்.* (28)

*நக்ஷத்ரங்களால் சந்த்ரன்போல் உத்தம ஸ்த்ரீகளால் ராவ*

[सोऽयमेव पुरा शेते पुरमध्ये गृहोत्तमे।]
रावणोऽयं महाबाहुरिति संचिन्त्य वानरः॥
अवप्लुतो महातेजा हनुमान्मारुतात्मजः॥ ३०
स तथाप्युग्रतेजाः सन्निर्धूतस्तस्य तेजसा।
पत्रगुह्यान्तरे सक्तो हनुमान्संवृतोऽभवत्॥ ३१
स तामसितकेशान्तां सुश्रोणीं संहतस्तनीम्।
दिदृक्षुरसितापाङ्गामुपावर्तत रावणः॥ ३२

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
अष्टादशः सर्गः॥ १८॥

[ஸோऽயமேவ புரா ஶேதே புரமத்யே க்ருஹோத்தமே।]
ராவணோऽயம் மஹாபாஹுரிதி ஸம்சிந்த்ய வானர:॥
அவப்லுதோ மஹாதேஜா: ஹனுமான்மாருதாத்மஜ:॥ 30
ஸ ததாப்யுக்ரதேஜா: ஸந்நிர்தூதஸ்தஸ்ய தேஜஸா।
பத்ரகுஹ்யாந்தரே ஸக்தோ ஹனுமான்ஸம்வ்ருதோऽபவத்॥
ஸ தாமஸிதகேஶாந்தாம் ஸுஶ்ரோணீம் ஸம்ஹதஸ்தனீம்।
தித்ருக்ஷுரஸிதாபாங்காமுபாவர்த்தத ராவண:॥ 32

*இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீயே ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே அஷ்டாதஶ: ஸர்க:॥*

---

ணன் சூழப்பட்டிருந்தான். மஹாதேஜஸ்வியான ஹனுமார் தேஜஸோடுகூடிய அந்த ராவணனைக் கண்டார். (29)

மஹாதேஜஸ்வியும் வாயுபுத்ரனுமான ஹனுமார் பெரும் கைகளை உடைய இவன் ராவணன் என்று ஆலோசித்து இவனது செயல்களைக் கவனிப்பதற்காக மேல் கிளையில் ஏறினார். (30)

ஸமுத்ரத்தைத்தாண்டிய அந்த ஹனுமார் உக்ரமான தேஜஸுடன் கூடியிருந்தபோதிலும் ராவணனுடைய தேஜஸினால் மேலே இருக்க முடியாமல் இலைகள் நிறைந்திருப்பதால் புலப்படாத கிளையில் புகுந்து மறைந்திருந்தார். (31)

அந்த ராவணன் கறுத்த கேசபாசங்களை உடையவளும் அழகிய பின்பாக முள்ளவளும் நெருங்கிய ஸ்தனமுள்ளவளும் கறுத்த கடைக்கண்களை உடையவளுமான அந்த ஸீதையைப் பார்க்க விரும்பி ஸமீபத்தில் சென்றான். (32)

பதினெட்டாவது ஸர்கம் முற்றிற்று.

ஸ்ரீ:

एकोनविंशः सर्गः — பத்தொன்பதாவது ஸர்கம் ॥ १९ ॥

## "सीतावर्णनम्" — ஸீதையை வர்ணித்தல்.

तस्मिन्नेव ततः काले राजपुत्री त्वनिन्दिता ।
रूपयौवनसंपन्नं भूषणोत्तमभूषितम् ॥ १

ततो दृष्ट्वैव वैदेही रावणं राक्षसाधिपम् ।
प्रावेपत वरारोहा प्रवाते कदली यथा ॥ २

आच्छाद्योदरमूरुभ्यां बाहुभ्यां च पयोधरौ ।
उपविष्टा विशालाक्षी रुदन्ती वरवर्णिनी ॥ ३

दशग्रीवस्तु वैदेहीं रक्षितां राक्षसीगणैः ।
ददर्श सीतां दुःखार्तां नावं सन्नामिवार्णवे ॥ ४

தஸ்மின்னேவ தத: காலே ராஜபுத்ரீ த்வநிந்திதா ।
ரூபயௌவநஸம்பன்னம் பூஷணோத்தமபூஷிதம் ॥ 1

ததோ த்ருஷ்ட்வைவ வைதேஹீ ராவணம் ராக்ஷஸாதிபம் ।
ப்ராவேபத வராரோஹா ப்ரவாதே கதலீ யதா ॥ 2

ஆச்சாத்யோதரமூருப்யாம் பாஹுப்யாம் ச பயோதரௌ ।
உபவிஷ்டா விஶாலாக்ஷீ ருதந்தீ வரவர்ணினீ ॥ 3

தஶக்ரீவஸ்து வைதேஹீம் ரக்ஷிதாம் ராக்ஷஸீகணை: ।
ததர்ஶ ஸீதாம் து:கார்த்தாம் நாவம் ஸன்னாமிவார்ணவே ॥ 4

---

பிறகு அதே ஸமயத்தில் விதேஹ குலத்தில் பிறந்தவளும் குற்றமற்றவளும் சிறந்தவளும் ராஜபுத்ரியுமான ஸீதை அழகும் யௌவனமும் வாய்ந்தவனும் சிறந்த ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவனும் ராக்ஷஸர்களைக் காப்பவனுமான ராவணனைப் பார்த்தவுடன் பெருங்காற்றில் வாழைபோல நன்கு அசங்கினாள். (1, 2)

விசாலமான கண்களை உடையவளும் சிறந்த நிறமுள்ளவளுமான அந்த ஸீதை துடைகளால் வயிற்றையும் கைகளால் ஸ்தனங்களையும் மறைத்துக்கொண்டு அழுதுகொண்டு உட்கார்ந்தாள். (3)

விதேஹ குலத்தில் பிறந்தவளும், ராக்ஷஸக் கூட்டத்தால் காக்கப்பட்டவளும், துக்கத்தால் பீடிக்கப்பட்டவளும், ஸமுத்ரத்தில் மூழ்கிய கப்பல் போன்றவளும், விரிப்பில்லாத பூமியில் உட்கார்ந்தவளும், கடுமையான வ்ரதமுடையவளும், வெட்டப்பட்டதும் பூமியில் விழுந்ததுமான மரத்தின் கிளைபோன்றவளும், அழுக்கிலல்

असंवृतायामासीनां धरण्यां संशितव्रताम्।
छिन्नां प्रपतितां भूमौ शाखामिव वनस्पतेः॥ ५

मलमण्डनचित्राङ्गीं मण्डनार्हाममण्डिताम्।
मृणाली पङ्कदिग्धेव विभाति न विभाति च॥ ६

समीपं राजसिंहस्य रामस्य विदितात्मनः।
संकल्पहयसंयुक्तैर्यान्तीमिव मनोरथैः॥ ७

शुष्यन्तीं रुदतीमेकां ध्यानशोकपरायणाम्।
दुःखस्यान्तमपश्यन्तीं रामां राममनुव्रताम्॥ ८

वेष्टमानां तथाऽऽविष्टां पन्नगेन्द्रवधूमिव।
धूप्यमानां ग्रहेणेव रोहिणीं धूमकेतुना॥ ९

அஸம்வ்ருதாயாமாஸீனும் தரண்யாம் ஸம்ஶிதவ்ரதாம் ।
சின்னும் ப்ரபதிதாம் பூமௌ ஶாகாமிவ வனஸ்பதே: ॥ 5

மலமண்டனசித்ராங்கீம் மண்டனர்ஹாமமண்டிதாம் ।
ம்ருணலீ பங்கதிக்தேவ விபாதி ந விபாதி ச ॥ 6

ஸமீபம் ராஜஸிம்ஹஸ்ய ராமஸ்ய விதிதாத்மன: ।
ஸங்கல்பஹயஸம்யுக்தைர்யாந்தீமிவ மனோரதை: ॥ 7

ஶுஷ்யந்தீம் ருததீமேகாம் த்யானஶோகபராயணும் ।
து:கஸ்யாந்தமபஶ்யந்தீம் ராமாம் ராமமனுவ்ரதாம் ॥ 8

வேஷ்டமானும் ததாऽऽவிஷ்டாம் பன்னகேந்த்ரவதூமிவ ।
தூப்யமானும் க்ரஹேணேவ ரோஹிணீம் தூமகேதுனு ॥ 9

---

அலங்கரிக்கப்பட்ட அழகிய அங்கங்களை உடையவளும் அலங்கரிக்கத்தக்கவளும் அலங்கரிக்கப்படாதவளுமான அந்த ஸீதையை ராவணன் கண்டான். (4 — 6)

ராஜஸிம்ஹனும் ஆத்ம சக்திவாய்ந்தவனுமான ராமனுடைய ஸமீபத்திற்கு எண்ணமாகிய குதிரைகளுடன் கூடிய மனோபீஷ்டங்களால் செல்லுகிறவள் போன்றவளும், தாபத்தால் வாடியவளும், அழுகின்றவளும், தனித்திருப்பவளும், த்யானம் சோகம் இவைகளோடு கூடியவளும், துக்கத்தின் முடிவைக் காணுதவளும், சிறந்தவளும், ஸ்ரீராமனையே அண்டியவளும், மந்திரத்தால் கட்டுப்பட்டு பிரளுகின்ற நாகராஜனின் பத்னி போன்றவளும், புகையின் நிறமுள்ள கேதுக்ரஹத்தால் தபிக்கும்படிச் செய்யப்பட்ட ரோஹிணி போன்றவளும், ஸதாசாரமுள்ளதும், தர்மத்துடன் கூடியதும், நல்ல நடத்தை நல்ல ஸ்வபாவம் இவைகளுடன் கூடியதுமான குலத்தில் பிறந்து நல்ல ஸம்ஸ்காரத்தை அடைந்தும் கெட்ட குலத்தில் பிறந்தவள் போன்றவளும், பொய்யான அபவாதத்தால் நழுவிய கீர்த்தி போன்றவளும், வேதாத்யயனம் செய்யாத

वृत्तशीलकुले जातामाचारवति धार्मिके।
पुनः संस्कारमापन्नां जातामिव च दुष्कुले॥ १०

अभूतेनापवादेन कीर्तिं निपतितामिव।
आम्नायानामयोगेन विद्यां प्रशिथिलामिव॥ ११

सन्नामिव महाकीर्तिं श्रद्धामिव विमानिताम्।
पूजामिव परिक्षीणामाशां प्रतिहतामिव॥ १२

आयतीमिव विध्वस्तामाज्ञां प्रतिहतामिव।
दीप्तामिव दिशं काले पूजामपहृतामिव॥ १३

पद्मिनीमिव विध्वस्तां हतशूरां चमूमिव।
प्रभामिव तमोध्वस्तामुपक्षीणामिवापगाम्॥ १४

வ்ருத்தஶீலகுலே ஜாதாமாசாரவதி தார்மிகே।
புன: ஸம்ஸ்காரமாபன்னாம் ஜாதாமிவ ச துஷ்குலே॥ 10

அபூதேனாபவாதேன கீர்த்திம் நிபதிதாமிவ।
ஆம்னாயானாமயோகேன வித்யாம் ப்ரஶிதிலாமிவ॥ 11

ஸன்னாமிவ மஹாகீர்த்திம் ஶ்ரத்தாமிவ விமானிதாம்।
பூஜாமிவ பரிக்ஷீணாமாஶாம் ப்ரதிஹதாமிவ॥ 12

ஆயதீமிவ வித்வஸ்தாமாஜ்ஞாம் ப்ரதிஹதாமிவ।
தீப்தாமிவ திஶம் காலே பூஜாமபஹ்ருதாமிவ॥ 13

பத்மினீமிவ வித்வஸ்தாம் ஹதஶூராம் சமூமிவ।
ப்ரபாமிவ தமோத்வஸ்தாமுபக்ஷீணாமிவாபகாம்॥ 14

---

*தால் சிதறிய வித்யையைப் போன்றவளும், குறைந்த பெருங்கீர்த்தி போன்றவளும், அவமதிக்கப்பட்ட ஶ்ரத்தை போன்றவளும், மிகக்குறைந்த தேவபூஜைபோன்றவளும், தடைபட்ட ஆசை போன்றவளும், அழிக்கப்பட்ட தனலாபத்தைப் போன்றவளும், தடுக்கப்பட்ட ஆக்ஞை போன்றவளும், கெட்டகாலத்தில் எரிகின்ற திக்குபோன்றவளும், அபஹரிக்கப்பட்ட தேவபூஜை போன்றவளும், அழிக்கப்பட்ட தாமரை ஓடைபோன்றவளும், கொல்லப்பட்ட சூரர்களை உடைய ஸேனை போன்றவளும், இருட்டால் மறைக்கப்பட்ட ஸூர்யனின் காந்தி போன்றவளும், வற்றிய நதி போன்றவளும், நாஸ்திகர்களால் ஆக்ரமிக்கப்பட்ட யக்ஞ மேடை போன்றவளும், மங்கிய அக்னி ஜ்வாலை போன்றவளும், ராஹுவால் மறைக்கப்பட்ட சந்த்ரமண்டலத்துடன் கூடிய பௌர்ணமாஸ்யாதினத்து ராத்ரி போன்றவளும், பறிக்கப்பட்ட தாமரைப்பூ இலை இவைகளை உடையதும் விரட்டப்பட்ட பக்ஷிகளை உடையதும் யானைகளின் துதிக்கைகளால் அழிக்கப்பட்டதுமான கலங்கிய தாமரை ஓடைபோன்றவளும், பர்த்தாவைக்காணாத*

वेदीमिव परामृष्टां शान्तामग्निशिखामिव ।
पौर्णमासीमिव निशां राहुग्रस्तेन्दुमण्डलाम् ॥ १५

उत्कृष्टपर्णकमलां वित्रासितविहंगमाम् ।
हस्तिहस्तपरामृष्टामाकुलां पद्मिनीमिव ॥ १६

पतिशोकातुरां शुष्कां नदीं विस्राविताभिव ।
परया मृजया हीनां कृष्णपक्षनिशामिव ॥ १७

सुकुमारीं सुजाताङ्गीं रत्नगर्भगृहोचिताम् ।
तप्यमानामिवोष्णेन मृणालीमचिरोद्धृताम् ॥ १८

गृहीतामालितां स्तम्भे यूथपेन विनाकृताम् ।
निःश्वसन्तीं सुदुःखार्तां गजराजवधूमिव ॥ १९

வேதீமிவ பராம்ருஷ்டாம் ஶாந்தாமக்னிஶிகாமிவ ।
பௌர்ணமாஸீமிவ நிஶாம் ராஹுக்ரஸ்தேந்துமண்டலாம் ॥

உத்க்ருஷ்டபர்ணகமலாம் வித்ராஸிதவிஹங்கமாம் ।
ஹஸ்திஹஸ்தபராம்ருஷ்டாமாகுலாம் பத்மினீமிவ ॥ 16

பதிஶோகாதுராம் சுஷ்காம் நதீம் விஸ்ராவிதாமிவ ।
பரயா ம்ருஜயா ஹீனம் க்ருஷ்ணபக்ஷநிஶாமிவ ॥ 17

ஸுகுமாரீம் ஸுஜாதாங்கீம் ரத்னகர்ப்பக்ருஹோசிதாம் ।
தப்யமானமிவோஷ்ணேன ம்ருணலீமசிரோத்த்ருதாம் ॥ 18

க்ருஹீதாமாலிதாம் ஸ்தம்பே யூதபேன விநாக்ருதாம் ।
நிஶ்வஸந்தீம் ஸுது:கார்தாம் கஜராஜவதூமிவ ॥ 19

---

சோகத்தால் பீடிக்கப்பட்டவளும், சோகத்தை அடைந்தவளும், வேறுவாய்க்கால்களில் திறந்துவிடப்பட்ட ஜலத்தை உடைய நதி போன்றவளும், அப்யங்கனம் இல்லாததால் க்ருஷ்ணபக்ஷ இரவு போன்றவளும், புஷ்பம் போன்ற அழகுள்ளவளும், அழகிய அங்கங்கள் உள்ளவளும், ரத்னங்கள் வைத்து இழைத்த வீட்டின் நடுவில் வஸிக்கத்தகுந்தவளும், வெய்யிலால் வாடுகின்றதும் அப்பொழுதே பிடுங்கப்பட்டதுமான தாமரைக் கொடிபோன்றவளும் பிடிக்கப்பட்டதும், தூணில் கட்டப்பட்டதும், ஆண் யானையின்றி பிரிக்கப்பட்டதும், பெருமூச்சு விடுகிறதும், மிக்க துக்கத்தால் பீடிக்கப்படுகிறதுமான கஜராஜனின் பத்னிபோன்றவளும், நீண்ட ஒரே பின்னலால் வர்ஷாகாலத்தின் முடிவில் பெருத்த மரக்கூட்டங்களால் பூமிபோல் முயற்சி இல்லாமலே ப்ரகாசிக்கிறவளும், உபவாஸத்தாலும் சோகத்தாலும் த்யானத்தாலும் பயத்தாலும் நொந்துபோனவளும், இளைத்தவளும், மனம் குன்றியவளும், அல்பமான ஜலத்தை மட்டும் உட்கொள்பவளும், தவத்தையே பொருளாக உள்ளவளும், துக்கத்தால் பீடிக்கப்பட்டவளும், அஞ்ஜலீ

एकया दीर्घया वेण्या शोभमानामयत्नतः ।
नीलया नीरदापाये वनराज्या महीमिव ॥ २०

उपवासेन शोकेन ध्यानेन च भयेन च ।
परिक्षीणां कृशां दीनामल्पाहारां तपोधनाम् ॥ २१

आयाचमानां दुःखार्तां प्राञ्जलिं देवतामिव ।
भावेन रघुमुख्यस्य दशग्रीवपराभवम् ॥ २२

समीक्षमाणां रुदतीमनिन्दितां सुपक्ष्मताम्रायतशुक्ललोचनाम् ।
अनुव्रतां राममतीव मैथिलीं प्रलोभयामास वधाय रावणः ॥ २३

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
एकोनविंशः सर्गः ॥ १९ ॥

ஏகயா தீர்க்கயா வேண்யா ஶோபமாநாமயத்னத: ।
நீலயா நீரதாபாயே வனராஜ்யா மஹீமிவ ॥ 20

உபவாஸேன ஶோகேன த்யானேன ச பயேன ச ।
பரிக்ஷீணாம் க்ருஶாம் தீநாமல்பாஹாராம் தபோதனாம் ॥ 21

ஆயாசமானாம் து:கார்த்தாம் ப்ராஞ்ஜலிம் தேவதாமிவ ।
பாவேன ரகுமுக்யஸ்ய தஶக்ரீவபராபவம் ॥ 22

ஸமீக்ஷமாணாம் ருததீமநிந்திதாம்
ஸுபக்ஷ்மதாம்ராயதஶுக்லலோசனாம் ।
அனுவ்ரதாம் ராமமதீவ மைதிலீம்
ப்ரலோபயாமாஸ வதாய ராவண: ॥ 23

*இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே*
*ஸுந்தரகாண்டே ஏகோநவிம்ஶ: ஸர்க: ॥*

---

*யுடன் தன் குலதெய்வமான ஸ்ரீரங்கநாதனைக்குறித்து ஸ்ரீராமன் ராவணனை வதம் செய்ய வேண்டுமென்று யாசிப்பவள் போன்றவளும், நான்கு பக்கத்திலும் ரக்ஷகனைத் தேடுகின்றவளும், அழுகின்றவளும், குற்றமற்றவளும், அழகிய புருவத்துடன் கூடியதும் ஓரங்களில் சிவந்தும் நடுவில் வெளுத்துமிருக்கிற அகண்ட கண்களை உடையவளும், ஸ்ரீராமனையே மிகவும் அனுவர்தித்தவளுமான ஸீதையை ராவணன் வதம்செய்ய விரும்பினன். இதனல் இவனுக்கு அழிவைத்தவிர வேறு பயன் ஒன்றுமில்லை என்பது தெரிகிறது.* (7 — 23)

*பத்தொன்பதாவது ஸர்கம் முற்றிற்று.*

---

ஸ்ரீ:

विंशः सर्गः — இருபதாவது ஸர்கம் ॥ २० ॥

# "रावणप्रार्थना" - ராவணன் வேண்டுதல்.

स तां पतिव्रतां दीनां निरानन्दां तपस्विनीम्।
साकारैर्मधुरैर्वाक्यैर्न्यदर्शयत रावणः॥ १

मां दृष्ट्वा नागनासोरु गूहमाना स्तनोदरम्।
अदर्शनमिवात्मानं भयान्नेतुं त्वमिच्छसि॥ २

कामये त्वां विशालाक्षि बहु मन्यस्व मां प्रिये।
सर्वाङ्गगुणसंपन्ने सर्वलोकमनोहरे॥ ३

नेह केचिन्मनुष्या वा राक्षसाः कामरूपिणः।
व्यपसर्पतु ते सीते भयं मत्तः समुत्थितम्॥ ४

ஸ தாம் பதிவ்ரதாம் தீநாம் நிரானந்தாம் தபஸ்விநீம் ।
ஸாகாரைர்மதுரைர்வாக்யைர்ந்யதர்ஶயத ராவண: ॥ 1

மாம் த்ருஷ்ட்வா நாகநாஸோரு கூஹமானா ஸ்தனோதரம் ।
அதர்ஶனமிவாத்மானம் பயான்னேதும் த்வமிச்சஸி ॥ 2

காமயே த்வாம் விஶாலாக்ஷி பஹு மன்யஸ்வ மாம் ப்ரியே ।
ஸர்வாங்ககுணஸம்பன்னே ஸர்வலோகமனோஹரே ॥ 3

நேஹ கேசின்மனுஷ்யா வா ராக்ஷஸா: காமரூபிண: ।
வ்யபஸர்ப்பது தே ஸீதே பயம் மத்த: ஸமுத்திதம் ॥ 4

---

அந்த ராவணன் பதிவ்ரதையும் எளியவளும் ஆனந்தமற்றவளும் நாயகனையே த்யானிப்பவளுமான ஸீதையைக் குறித்து அங்கசேஷ்டைகளோடுகூடிய, இனிமையான வார்த்தைகளால் தனது அபிப்ராயத்தைத் தெரிவித்தான். (1)

யானையின் துதிக்கை போன்ற துடையை உடையவளே! நீ என்னைக்கண்டு ஸ்தனங்களையும், வயிற்றையும் மறைத்துக் கொண்டு பயத்தால் தன்னையே மறைத்துக்கொள்ள விரும்புகிறாய் போலும். (2)

அகண்ட கண்களை உடையவளே! ப்ரியமானவளே! எல்லா அங்கங்களிலும் அழகு நிறைந்தவளே! எல்லோருக்கும் ஆனந்தத்தைக் கொடுப்பவளே! உன்னை நான் விரும்புகிறேன். என்னை கௌரவப்படுத்து. (3)

இங்கு காமரூபிகளான ராக்ஷஸர்களோ மனிதர்களோ

स्वधर्मो रक्षसां भीरु सर्वथैव न संशयः ।
गमनं वा परस्त्रीणां हरणं संप्रमथ्य वा ॥ ५

एवं चैतदकामां तु न त्वां स्प्रक्ष्यामि मैथिलि ।
कामं कामः शरीरे मे यथाकामं प्रवर्तताम् ॥ ६

देवि नेह भयं कार्यं मयि विश्वसिहि प्रिये ।
प्रणयस्व च तत्त्वेन मैवं भूः शोकलालसा ॥ ७

ஸ்வதர்மோ ரக்ஷஸாம் பீரு ஸர்வதைவ ந ஸம்ஶய: ।
கமனம் வா பரஸ்த்ரீணும் ஹரணம் ஸம்ப்ரமத்ய வா ॥ 5

ஏவம் சைததகாமாம் து ந த்வாம் ஸ்ப்ரக்ஷ்யாமி மைதிலி ।
காமம் காம: ஶரீரே மே யதாகாமம் ப்ரவர்த்ததாம் ॥ 6

தேவி நேஹ பயம் கார்யம் மயி விஶ்வஸிஹி ப்ரியே ।
ப்ரணயஸ்வ ச தத்வேன மைவம் பூ: ஶோகலாலஸா ॥ 7

---

இல்லை. ஆகையால் உனக்கு என்னிடமிருந்து உண்டான பயம் விலகட்டும்.

(அதாவது என்னைக்கண்டு வேறுயாரோ வந்ததாக பயப்பட வேண்டாம். நான் ராவணனே. என்னைக்கண்டு பயப்படவேண் டிய அவஶ்யமே இல்லை என்பது கருத்து.) (4)

பயந்தவளே! பிற ஸ்த்ரீகளை பலாத்காரம் செய்து அபஹரிப் பதோ, சேருவதோ ராக்ஷஸர்களுக்கு எவ்வகையிலும் ஸ்வதர் மமே யாகும். இதில் ஸந்தேஹமே இல்லை.

(அதாவது ஸ்வதர்மமானதால் எனக்கும், ஸ்த்ரீகள் ஸ்வதந்த் ரர்களல்லாததால் அவர்களுக்கும் இது தோஷமாகாது. தர்மமே யாகும். ஆகையால் நீ அவஶ்யம் தர்மத்துக்கு விரோதமாயிற்றே என்று யோசனை செய்யாமல் என்னை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.) (5)

ஏ மைதிலி, நான் சொல்லியப்படி இது எங்களுக்கு ஸ்வதர்ம மாயினும், மன்மதன் தன் விருப்பப்படி வேண்டிய அளவு உன் விஷயமான விருப்பத்தை என் சரீரத்தில் உண்டாக்கிய போதி லும், என்னிடம் காமத்தைச் செய்யாத உன்னைத் தொடமாட் டேன்.

(பலாத்காரமுறை ஸ்வதர்மமாயினும் பரஸ்பரப்ரீதியில்லா விடில் அது ரஸமுள்ளதாகாது. ஆகையால் நீயாக விரும்பின லன்றி உன்னைத் தொடமாட்டேன் என்பது கருத்து.) (6)

एकवेणी धराशय्या ध्यानं मलिनमम्बरम् ।
अस्थानेऽप्युपवासश्च नैतान्यौपयिकानि ते ॥ ८
विचित्राणि च माल्यानि चन्दनान्यगुरूणि च ।
विविधानि च वासांसि दिव्यान्याभरणानि च ॥ ९
महार्हाणि च पानानि शयनान्यासनानि च ।
गीतं नृत्तं च वाद्यं च लभ मां प्राप्य मैथिलि ॥ १०
स्त्रीरत्नमसि मैवं भूः कुरु गात्रेषु भूषणम् ।
मां प्राप्य हि कथं नु स्यास्त्वमनर्हा सुविग्रहे ॥ ११
इदं ते चारु संजातं यौवनं व्यतिवर्तते ।
यदतीतं पुनर्नैति स्रोतः शीघ्रमपामिव ॥ १२

ஏகவேணீ தராமய்யா த்யானம் மலினமம்பரம் ।
அஸ்தானேऽப்யுபவாஸஸ்ச நைதான்யௌபயிகானி தே ॥ 8
விசித்ராணி ச மால்யானி சந்தனான்யகுரூணி ச ।
விவிதானி ச வாஸாம்ஸி திவ்யான்யாபரணானி ச ॥ 9
மஹார்ஹாணி ச பானானி மயனான்யாஸனானி ச ।
கீதம் ந்ருத்தம் ச வாத்யம் ச லப மாம் ப்ராப்ய மைதிலி ॥ 10
ஸ்த்ரீரத்னமஸி மைவம் பூ: குரு காத்ரேஷு பூஷணம் ।
மாம் ப்ராப்ய ஹி கதம் நு ஸ்யாஸ்த்வமனர்ஹா ஸுவிக்ரஹே ॥ 11
இதம் தே சாரு ஸம்ஜாதம் யௌவனம் வ்யதிவர்த்ததே ।
யததீதம் புனர்நைதி ஸ்ரோத: மீக்ரமபாமிவ ॥ 12

---

ஓ தேவி, இங்கு பயப்படவேண்டாம். ஓ ப்ரியே, என்னிடம் விஸ்வாஸத்தைச் செய். வாஸ்தவமாய் என்னிடத்தில் ஸ்னேஹத்தைச் செய். இம்மாதிரி சோகத்தால் கலங்காதே. (7)

மகிடு பிளந்து கொள்ளாமல் ஒரே பின்னலாக பின்னிக் கொண்டிருப்பது, பூமியில் படுப்பது, அழுக்கு வஸ்த்ரம் தரிப்பது, அகாரணமாய் பட்டினியிருப்பது இவைகள் உனக்கு ஏற்றவை அல்ல. (8)

ஓ மைதிலி, என்னை அடைந்து விசித்ரமான புஷ்பமாலைகளையும், அகரு சந்தனங்களையும், பலவிதமான வ்ஸ்த்ரங்களையும், திவ்யமான ஆபரணங்களையும், விலையுயர்ந்த பானங்கள், படுக்கைகள், ஆஸனங்கள் இவைகளையும், கானத்தையும், நர்த்தனத்தையும், வாத்யத்தையும் நீ அடைய வேண்டும். (9, 10)

அழகிய சரீரமுள்ளவளே! நீ உத்தம ஸ்த்ரீயல்லவா? இவ்விதம் இருக்கக்கூடாது. உடலில் ஆபரணங்களைத் தரித்துக்கொள். நீ என்னை அடைந்து எவ்விதம் ஆபரணங்களைத் தரிப்பதற்கு அனர்ஹையாக ஆவாய். (11)

மிக அழகாக அமைந்திருக்கும் உன் யௌவனம் வீணைகப்

त्वां कृत्वोपरतो मन्ये रूपकर्ता स विश्वसृक्।
नहि रूपोपमा त्वन्या तवास्ति शुभदर्शने ॥ १३

त्वां समासाद्य वैदेहि रूपयौवनशालिनीम्।
कः पुमानतिवर्तेत साक्षादपि पितामहः ॥ १४

यद्यत्पश्यामि ते गात्रं शीतांशुसदृशानने।
तस्मिंस्तस्मिन्पृथुश्रोणि चक्षुर्मम निबध्यते ॥ १५

த்வாம் க்ருத்வோபரதோ மன்யே ரூபகர்த்தா ஸ விஸ்வஸ்ருக் ।
நஹி ரூபோபமா த்வன்யா தவாஸ்தி ஸுபதர்ஸனே ॥ 13

த்வாம் ஸமாஸாத்ய வைதேஹி ரூபயௌவனஸாலினீம் ।
க: புமானதிவர்த்தேத ஸாக்ஷாதபி பிதாமஹ: ॥ 14

யத்யத்பஸ்யாமி தே காத்ரம் ஸீதாம்ஸுஸத்ருஸானனே ।
தஸ்மிம்ஸ்தஸ்மின்ப்ருதுஸ்ரோணி சக்ஷுர்மம நிபத்யதே ॥ 15

---

போய்க்கொண்டிருக்கிறது. சென்றுபோன ஜலப்ரவாஹம் எப்படி திரும்பாதோ அப்படி இந்த யௌவனமும் போனால் திரும்பாது. (12)

திவ்யரூபங்களை ஸ்ருஷ்டிக்கும் ப்ரம்ஹா உன்னை ஸ்ருஷ்டித்து இனி திவ்ய ரூபங்களை ஸ்ருஷ்டிப்பதில்லை என்று ஓய்வு அடைந்திருப்பதாக எண்ணுகிறேன் அழகிய பார்வை உள்ளவளே! உனக்கு ஒப்பாக மற்றொரு ஸ்த்ரீ இல்லை. (13)

ஓ வைதேஹி! அழகு, யௌவனம் இவைகள் வாய்ந்த உன்னை அடைந்து ஸாக்ஷாத் ப்ரம்ஹதேவனானாலும் எவன்தான் காமம் கொள்ளாதிருப்பான்.

(இங்கு ராவணன் தான் செய்யும் தப்பை மஹானை ப்ரம்ஹாவினிடத்திலும் ஆரோபணம் செய்வது பெருத்த அபசாரமாகும். இத்தகைய அபசாரத்தாலே சீக்ரம் அழியப் போகிறான்.) (14)

சந்த்ரனுக்கு ஒப்பான முகமுள்ள தேவியே, உன்னுடைய எந்தெந்த அங்கங்களைப் பார்க்கிறேனோ, பெருத்த பின் பாகத்தை உடையவளே! அந்தந்த அங்கங்களில் என் பார்வை ஈடுபடுகிறது.

இக்கருத்தை மனதிற்கொண்டே கம்ப நாட்டாழ்வாரும் விவாஹகாலத்தில் "தோள் கண்டார் தோளே கண்டார்" எனப் பாடியுள்ளார். (15)

भव मैथिलि भार्या मे मोहमेनं विसर्जय।
वह्वीनामुत्तमस्त्रीणामाहृतानामितस्ततः॥
सर्वासामेव भद्रं ते ममाग्रमहिषी भव॥ १६

लोकेभ्यो यानि रत्नानि संप्रमथ्याहृतानि वै।
तानि मे भीरु सर्वाणि राज्यं चैतदहं च ते॥ १७

विजित्य पृथिवीं सर्वां नानानगरमालिनीम्।
जनकाय प्रदास्यामि तव हेतोर्विलासिनि॥ १८

नेह पश्यामि लोकेऽन्यं यो मे प्रतिबलो भवेत्।
पश्य मे सुमहद्वीर्यमप्रतिद्वन्द्वमाहवे॥ १९

பவ மைதிலி பார்யா மே மோஹமேனம் விஸர்ஜய ।
வஹ்வீனுமுத்தமஸ்த்ரீணுமாஹ்ருதானுமிதஸ்தத: ॥
ஸர்வாஸாமேவ பத்ரம் தே மமாக்ரமஹிஷீ பவ ॥ 16

லோகேப்யோ யானி ரத்னனி ஸம்ப்ரமத்யாஹ்ருதானி வை ।
தானி மே பீரு ஸர்வாணி ராஜ்யம் சைததஹம் ச தே ॥ 17

விஜித்ய ப்ருதிவீம் ஸர்வாம் நானுநகரமாலினீம் ।
ஜனகாய ப்ரதாஸ்யாமி தவ ஹேதோர்விலாஸினி ॥ 18

நேஹ பஶ்யாமி லோகேன்யம் யோ மே ப்ரதிபலோ பவேத் ।
பஶ்ய மே ஸுமஹத்வீர்யமப்ரதித்வன்த்வமாஹவே ॥ 19

---

ஓ மைதிலி! எனக்குப் பத்னியாக ஆகு. என்னை அடைவதில்லை என்று நினைத்த மோஹத்தை விட்டுவிடு. பல இடங்களிலிருந்து கொண்டுவரப்பட்ட பல ஸ்த்ரீகளுக்குள் நீ எனக்கு பட்டமஹிஷியாக ஆகக்கடவாய். உனக்கு மங்களம் உண்டாக வேண்டும். (16)

ஓ பயந்த ஸ்வபாவமுள்ளவளே! எல்லா உலகங்களிலிருந்தும் பலாத்காரமாய் கொண்டுவரப்பட்ட எல்லா ரத்னங்களும், இந்த என்னுடைய ராஜ்யமும் நானும் உன்னுடையவைதான்.

(இங்கு ராவணன் இஷ்ட தெய்வமான ஸ்ரீ ஸீதைக்கு தன்னையும் தன் பொருள்களையும் ஆத்ம ஸமர்ப்பணம் செய்கிறுன்.) (17)

பிறரை ஈடுபடச்செய்யும் பெண்ணே, வெகு பட்டணங்களுடன் கூடிய எல்லா பூமியையும் ஜயித்து உன்னை வேண்டி ஜனகனுக்குக் கொடுக்கிறேன். (18)

எனக்கு எதிராக பலமுள்ள மற்ருெருவனை நான் இவ்வுலகில் காணவில்லை. மிகப்பெரியதும் யுத்தத்தில் நிகரற்றதுமான என்னுடைய உத்தம வீர்யத்தைப்பார். (19)

असकृत्संयुगे भग्ना मया विमृदितध्वजाः ।
अशक्ताः प्रत्यनीकेषु स्थातुं मम सुरासुराः ॥ २०

इच्छया क्रियतामद्य प्रतिकर्म तवोत्तमम् ।
सप्रभाण्यवसज्यन्तां तवाङ्गे भूषणानि च ॥ २१

साधु पश्यामि ते रूपं संयुक्तं प्रतिकर्मणा ।
प्रतिकर्माभिसंयुक्ता दाक्षिण्येन वरानने ॥ २२

भुङ्क्ष्व भोगान्यथाकामं पिब भीरु रमस्व च ।
यथेष्टं च प्रयच्छ त्वं पृथिवीं वा धनानि च ॥ २३

ललस्व मयि विस्रब्धा धृष्टमाज्ञापयस्व च ।
मत्प्रसादाल्ललन्त्याश्च ललन्तां बान्धवास्तव ॥ २४

அஸக்ருத்ஸம்யுகே பக்ஞ மயா விம்ருதிதத்வஜா: ।
அமக்தா: ப்ரத்யனீகேஷு ஸ்தாதும் மம ஸுராஸுரா: ॥ 20
இச்சயா க்ரியதாமத்ய ப்ரதிகர்ம தவோத்தமம் ।
ஸப்ரபாண்யவஸஜ்யந்தாம் தவாங்கே பூஷணனி ச ॥ 21
ஸாது பஸ்யாமி தே ரூபம் ஸம்யுக்தம் ப்ரதிகர்மண ।
ப்ரதிகர்மாபிஸம்யுக்தா தாக்ஷிண்யேன வரானனே ॥ 22
புங்க்ஷ்வ போகான்யதாகாமம் பிப பீரு ரமஸ்வ ச ।
யதேஷ்டம் ச ப்ரயச்ச த்வம் ப்ருதிவீம் வா தனனி ச ॥ 23
லலஸ்வ மயி விஸ்ரப்தா த்ருஷ்டமாக்ஞாபயஸ்வ ச ।
மத்ப்ரஸாதால்லலந்த்யாஸ்ச லலந்தாம் பாந்தவாஸ்தவ ॥ 24

---

தேவர்களும் அஸுரர்களும் சண்டையில் என்னுல் பல தடவை கொடிகளை முறித்து தோற்கடிக்கப்பட்டனர். ஆகையால் ஸைன்யங்கள் எனக்கு எதிரில் இருப்பதற்கு சக்தியற்றவர்களாகி விட்டனர். (20)

இப்பொழுது இஷ்டப்ரகாரம் உத்தம அலங்காரங்களை செய்து கொள். உன்னுடைய அங்கத்தில் ப்ரகாசமான ஆபரணங்களைப் போட்டுக்கொள். (21)

அலங்கரிக்கப்பட்ட உன் அழகிய ரூபத்தை நான் பார்க்கிறேன். ஓ சிறந்த முகமுள்ளவளே! என்னிடமுள்ள கருணையால் நன்கு அலங்கரித்துக்கொள். (22)

ஓ பயந்தவளே! நல்ல மத்யத்தைக்குடி. இஷ்டப்படி என்னுடன் போகங்களை அனுபவி. விருப்பப்படி பூமியையோ பொருள்களையோ யாருக்கு வேண்டுமானுலும் கொடு. (23)

என்னிடத்தில் நம்பிக்கையுடன் ப்ரீதியைச் செய். தைர்யத்துடன் எனக்குக் கட்டளை இடு. என்னுடைய அனுக்ரஹத்தால் உனது பந்துக்களும் ப்ரியத்தைய னுபவிக்கட்டும். (24)

ऋद्धिं ममानुपश्य त्वं श्रियं भद्रे यशश्च मे।
किं करिष्यसि रामेण सुभगे चीरवाससा॥ २५

निक्षिप्तविजयो रामो गतश्रीर्वनगोचरः।
व्रती स्थण्डिलशायी च शङ्के जीवति वा न वा॥ २६

न हि वैदेहि रामस्त्वां द्रष्टुं वाप्युपलप्स्यते।
पुरोबलाकैरसितैर्मेघैर्ज्योत्स्नामिवावृताम्॥ २७

न चापि मम हस्तात्त्वां प्राप्तुमर्हति राघवः।
हिरण्यकशिपुः कीर्तिमिन्द्रहस्तगतामिव॥ २८

ருத்திம் மமாநுபஶ்ய த்வம் ஶ்ரியம் பத்ரே யஶஶ்ச மே।
கிம் கரிஷ்யஸி ராமேண ஸுபகே சீரவாஸஸா॥ 25

நிக்ஷிப்தவிஜயோ ராமோ கதஶ்ரீர்வனகோசர:।
வ்ரதீ ஸ்தண்டிலஶாயீ ச ஶங்கே ஜீவதி வா ந வா॥ 26

ந ஹி வைதேஹி ராமஸ்த்வாம் த்ரஷ்டும் வாப்யுபலப்ஸ்யதே।
புரோபலாகைரஸிதைர்மேகைர்ஜ்யோத்ஸ்னமிவாவ்ருதாம்॥

ந சாபி மம ஹஸ்தாத்வாம் ப்ராப்துமர்ஹதி ராகவ:।
ஹிரண்யகஶிபு: கீர்த்திமிந்த்ரஹஸ்தகதாமிவ॥ 28

---

ஓ மங்கள ரூபிணியே! என்னுடைய ஸம்ருத்தியையும் ஸம்பத்தையும் புகழையும் நீ பார்.

(இதுவரையில் தன்னை ச்லாகித்ததுடன் இனி ஸ்ரீ ராமனை நிந்திக்க ஆரம்பிக்கிறான்.)

நல்ல பாக்யமுள்ளவளே! மரவுரி கட்டிய ஸ்ரீ ராமனோடு நீ என்ன செய்யப்போகிறாய்? (25)

ஜயமற்றவனும், சொத்து இல்லாதவனும், காடு சென்றவனும், புண்ய கர்மாக்களைச் செய்கின்றவனும், பூமியில் படுக்கின்றவனுமான, ஸ்ரீராமன் உயிருடன் இருக்கிறானோ, இல்லையோ எனச் சந்தேஹிக்கிறேன். (26)

ஓ வைதேஹி! கறுத்தவைகளும் எதிரில் கொக்குகளை உடையவைகளுமான, மேகங்களால் சூழப்பட்ட சந்த்ரிகை போல் ராமன் எங்கே உன்னைப் பார்க்கப்போகிறான்.

(இதனால் உன்னை எங்கே அடையப்போகிறான் என்பது கருத்து.) (27)

ஸ்ரீராகவன் என்கையிலிருக்கும் உன்னை, இந்த்ரன் அபஹரித்த ஹிரண்யகசிபுவின் கீர்த்தி என்ற மனைவியைப்போல் அடைய முடியாது.

(அதாவது இந்த்ரனிடமிருந்து தன் மனைவியை ஹிரண்யகசிபு அடைந்துவிட்டான். அவ்விதம் ஸ்ரீ ராமன் அடையமுடியாதென்பது கருத்து. ஸ்ரீ பாகவதத்தில் ஹிரண்யகசிபு தவத்திற்குச்

चारुस्मिते चारुदति चारुनेत्रे विलासिनि।
मनो हरसि मे भीरु सुपर्णः पन्नगं यथा॥ २९

क्लिष्टकौशेयवसनां तन्वीमप्यनलङ्कृताम्।
त्वां दृष्ट्वा स्वेषु दारेषु रतिं नोपलभाम्यहम्॥ ३०

अन्तःपुरनिवासिन्यः स्त्रियः सर्वगुणान्विताः।
यावन्त्यो मम सर्वासामैश्वर्यं कुरु जानकि॥ ३१

சாருஸ்மிதே சாருததி சாருநேத்ரே விலாஸினி।
மனோ ஹரஸி மே பீரு ஸுபர்ண: பன்னகம் யதா॥ 29

க்லிஷ்டகௌஸேயவஸனாம் தன்வீமப்யனலங்க்ருதாம்।
த்வாம் த்ருஷ்ட்வா ஸ்வேஷு தாரேஷு
ரதிம் நோபலபாம்யஹம்॥ 30

அந்த:புரநிவாஸின்ய: ஸ்த்ரிய: ஸர்வகுணான்விதா:।
யாவந்த்யோ மம ஸர்வாஸாமைஸ்வர்யம் குரு ஜானகி॥ 31

---

*சென்றிருக்கையில் ப்ரஹ்லாதனை கர்ப்பத்தில் கொண்ட அவன் மனைவியை இந்த்ரன் இழுத்துச் சென்றான். ஸ்ரீ நாரதர் தேவேந்த்ரனைத் தடுத்து அவளை ரக்ஷித்து மறுபடியும் ஹிரண்யகசிபு அவளை அடையும்படிச் செய்தார் என்ற கதை இங்கு அறியத்தக்கது.)*(28)

*அழகிய புன்சிரிப்புள்ளவளே! அழகிய பற்களுள்ளவளே! அழகிய கண்களுள்ளவளே! மயக்குகிறவளே! பயந்த ஸ்வபாவமுள்ளவளே! என் மனதை கருடன் பாம்பைப்போல அபஹரிக்கிறாய்.* (29)

*அழுக்கடைந்த பீதாம்பரம் தரித்தவளும், இளைத்தவளும், அலங்காரமற்றவளுமாக இருந்தபோதிலும், உன்னைப்பார்த்து என் சொந்த பத்னியான மந்தோதரியினிடம் கூட நான் ஆசை கொள்ளவில்லை.*

*(இதனால் ராவணன் பொய்யான ஸன்யாஸ வேஷம் தரித்து ஸீதையைப் பார்த்தது முதற் கொண்டே ஸ்த்ரீ ஸம்பர்க்கமில்லாமல் ராமபாணத்தால் திவ்யகதி அடைந்தான். வேஷத்திற்காகச் செய்யும் நல்லகார்யம் கூட புண்யபலனையே கொடுக்கிறதென்பது இதனால் தெரிகிறது.)* (30)

*ஓ ஜானகி! எனது அந்த:புரத்தில் வஸிக்கின்றவர்களும், எல்லா நற்குணங்களும் பெற்றவர்களுமான, எவ்வளவு ஸ்த்ரீகள் இருக்கின்றனரோ, அந்த எல்லோருக்கும் நீ யஜமானியாக இரு.* (31)

मम ह्यसितकेशान्ते त्रैलोक्यप्रवराः स्त्रियः।
तास्त्वां परिचरिष्यन्ति श्रियमप्सरसो यथा॥ ३२

यानि वैश्रवणे सुभ्रू रत्नानि च धनानि च।
तानि लोकांश्च सुश्रोणि मां च भुङ्क्ष्व यथासुखम्॥ ३३

न रामस्तपसा देवि न बलेन न विक्रमैः।
न धनेन मया तुल्यस्तेजसा यशसाऽपि वा॥ ३४

पिब विहर रमस्व भुङ्क्ष्व भोगान्
धननिचयं प्रदिशामि मेदिनीं च।
मयि लल ललने यथासुखं त्वं
त्वयि च समेत्य ललन्तु बान्धवास्ते॥ ३५

மம ஹ்யஸிதகேஶாந்தே த்ரைலோக்யப்ரவரா: ஸ்த்ரிய: ।
தாஸ்த்வாம் பரிசரிஷ்யந்தி ஶ்ரியமப்ஸரஸோ யதா ॥ 32

யானி வைஶ்ரவணே ஸுப்ரூ ரத்நானி ச தநானி ச ।
தானி லோகாம்ஶ்ச ஸுஶ்ரோணி
மாம் ச புங்க்ஷ்வ யதாஸுகம் ॥ 33

ந ராமஸ்தபஸா தேவி ந பலேன ந விக்ரமை: ।
ந தனேன மயா துல்யஸ்தேஜஸா யஶஸாऽபி வா ॥ 34

பிப விஹர ரமஸ்வ புங்க்ஷ்வ போகான்
தனநிசயம் ப்ரதிஶாமி மேதினீம் ச ।
மயி லல லலனே யதாஸுகம் த்வம்
த்வயி ச ஸமேத்ய லலந்து பாந்தவாஸ்தே ॥ 35

---

கறுத்த கூந்தல் உள்ளவளே! என்னுடைய ஸ்த்ரீகள் மூவுலகத்துக்குள் சிறந்தவர்கள். அந்த ஸ்த்ரீகள் மஹாலக்ஷ்மிக்கு அப்ஸரஸுகள்போல் உனக்குப்பணி விடை செய்வார்கள். (32)

அழகிய புருவமுள்ளவளே! அழகிய பின் பாகமுள்ளவளே! குபேரனிடத்தில் எந்த ரத்னங்கள் பொருள்கள் உண்டோ, அவைகளையும், உலகங்களையும், என்னையும், நீ ஸுகமாய் அனுபவி. (33)

ஓ தேவி! ராமன் தவத்தாலோ, பலத்தாலோ, பராக்ரமங்களாலோ, பொருளாலோ, தேஜஸினாலோ, கீர்த்தியினாலோ எனக்கு ஸமமானவனல்ல. (34)

ஓ பெண்ணே! குடி. விளையாடு. போகங்களை அனுபவி. பொருள் குவியலையும், பூமியையும் உனக்குத் தருகிறேன். நீ என்னிடத்தில் இஷ்டம் போல் ப்ரியத்தைச் செய். உன் பந்துக்களும் உன்னை அடைந்து ப்ரியத்தை அனுபவிக்கட்டும். (35)

कुसुमिततरुजालसंततानि
भ्रमरयुतानि समुद्रतीरजानि ।
कनकविमलहारभूषिताङ्गी
विहर मया सह भीरु काननानि ॥ ३६

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
विंशः सर्गः ॥ २० ॥

குஸுமிததருஜாலஸந்ததானி
ப்ரமரயுதானி ஸமுத்ரதீரஜானி ।
கனகவிமலஹாரபூஷிதாங்கீ
விஹர மயா ஸஹ பீரு கானனானி ॥ **36**

*இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே*
*ஸுந்தரகாண்டே விம்ஶ: ஸர்க: ॥*

---

*ஓ பயந்தவளே! புஷ்பித்த வ்ருக்ஷக் கூட்டங்களால் நெருக்கமானதுகளும், வண்டுக்கூட்டங்கள் நிறைந்ததுகளும், ஸமுத்ரக் கரைகளில் வளர்ந்ததுகளுமான காடுகளில் தங்கமயமான சுத்தமான ஹாரங்களைத் தரித்துக்கொண்டு என்னுடன் விளையாடு.*

*இந்த ஸர்கத்தில் ராவணன் தனது ஐஸ்வர்யங்கள் யாவற்றையும் இஷ்டப்படி அனுபவிக்கும்படி ஸீதையிடம் ப்ரார்த்தித்ததால் இவன் திவ்ய கதியை அடைந்ததோடு ஸ்ரீலக்ஷ்மிபதியான ரங்கனுதனை தன் குடும்பத்திற்கு ரக்ஷகனுகவும் சந்த்ர ஸூர்யர் இருக்கும்வரை தன் ஐஸ்வர்யம் தன் வம்சத்திலேயே தங்கும்படியும் செய்து கொண்டு விட்டான் என்பது கருத்து.* (36)

*இருபதாவது ஸர்கம் முற்றிற்று.*

---

ஸ்ரீ:

एकविंशः सर्गः — இருபத்தோராவது ஸர்கம் ॥ २१ ॥

# "रावणनिराकरणम्" — ராவணனை நிராகரித்தல்.

तस्य तद्वचनं श्रुत्वा सीता रौद्रस्य रक्षसः ।
आर्ता दीनस्वरा दीनं प्रत्युवाच शनैर्वचः ॥ १

दुःखार्ता रुदती सीता वेपमाना तपस्विनी ।
चिन्तयन्ती वरारोहा पतिमेव पतिव्रता ॥
तृणमन्तरतः कृत्वा प्रत्युवाच शुचिस्मिता ॥ २

निवर्तय मनो मत्तः स्वजने क्रियतां मनः ।
न मां प्रार्थयितुं युक्तं सुसिद्धिमिव पापकृत् ॥ ३

தஸ்ய தத்வசனம் ஶ்ருத்வா ஸீதா ரௌத்ரஸ்ய ரக்ஷஸ: ।
ஆர்த்தா தீனஸ்வரா தீனம் ப்ரத்யுவாச ஶனைர்வச: ॥ 1

து:கார்த்தா ருததீ ஸீதா வேபமானா தபஸ்விநீ ।
சிந்தயந்தீ வராரோஹா பதிமேவ பதிவ்ரதா ॥
த்ருணமந்தரத: க்ருத்வா ப்ரத்யுவாச ஶுசிஸ்மிதா ॥ 2

நிவர்த்தய மனோ மத்த: ஸ்வஜனே க்ரியதாம் மன: ।
ந மாம் ப்ரார்த்தயிதும் யுக்தம் ஸுஸித்திமிவ பாபக்ருத் ॥ 3

---

ஸீதையானவள் பயங்கரனை அந்த ராக்ஷஸனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு பீடிக்கப்பட்டவளாயும், மெலிந்த குரலோடு கூடியவளாயுமிருந்துகொண்டு மெள்ள கவலையுடன் பதில் சொன்னாள். (1)

துக்கத்தால் பீடிக்கப்பட்டவளாயும், அழுகிறவளும், நடுங்குகிறவளும், ஸ்ரீராமனையே த்யானிக்கின்றவளும், சிறந்தவளும், பதிவ்ரதையும், பர்த்தாவையே சிந்திப்பவளும், பரிசுத்தமான புன்சிரிப்புடன் கூடியவளுமான ஸீதையானவள் புல்லை நடுவில் போட்டுவிட்டு பதில் சொன்னாள்.

(இங்கு பர புருஷனுடன் தான் நேரில் பேசக்கூடாதென்பதற்காகவும், நீ துரும்புக்கு ஸமமானவன் என்பதைக் காட்டுவதற்காகவும், தனது உயிரை துரும்புக்கு ஸமமாக பாவிப்பதை எடுத்துக் காட்டுவதற்காகவும், துரும்பை நடுவில் போட்டு பதில் சொன்னாள் என்பது கருத்து.) (2)

என்னிடத்திலிருந்து மனதைத் திருப்பி உன் சொந்த மனைவியினிடம் அந்த மனதை ஈடுபடுத்து. பாபகர்மாவைச் செய்கிற

अकार्यं न मया कार्यमेकपत्न्या विगर्हितम्।
कुलं संप्राप्तया पुण्यं कुले महति जातया ॥ ४

एवमुक्त्वा तु वैदेही रावणं तं यशस्विनी।
राक्षसं पृष्ठतः कृत्वा भूयो वचनमब्रवीत् ॥ ५

नाहमौपयिकी भार्या परभार्या सती तव।
साधुधर्ममवेक्षस्व साधु साधुव्रतं चर ॥ ६

அகார்யம் ந மயா கார்யமேகபத்ன்யா விகர்ஹிதம் ।
குலம் ஸம்ப்ராப்தயா புண்யம் குலே மஹதி ஜாதயா ॥ 4

ஏவமுக்த்வா து வைதேஹீ ராவணம் தம் யஶஸ்வினீ ।
ராக்ஷஸம் ப்ருஷ்டத: க்ருத்வா பூயோ வசனமப்ரவீத் ॥ 5

நாஹமௌபயிகீ பார்யா பரபார்யா ஸதீ தவ ।
ஸாதுதர்மமவேக்ஷஸ்வ ஸாது ஸாதுவ்ரதம் சர ॥ 6

---

வன், ப்ரம்ஹலோகத்தை ப்ரார்த்திப்பது போல் நீ என்னை ப்ரார்த்திப்பது நல்லதல்ல.

இந்த ஶ்லோகத்தில் இரண்டு தடவை மன: என்று கவி சொல்லியதால் முதல் சொன்ன மன: என்றதற்கு வேறுபொருள் கொள்ளவேண்டும். அதாவது என்னிடத்தில் மனதைத் திருப்பு என்பதற்கு மன: என்ற பதத்தை திருப்பிப்படி என்று பொருள். அப்படி படித்தால் "நம:" என்று ஆகும். நான் உனக்கு நமஸ்கரிக்க வேண்டிய 'தாய்' என்பதை கருணையினால் மறைபொருளாக உபதேசிக்கிறாள். அப்படி நீ செய்யாவிடில் உன் சொந்த ஜனத்தினிடத்தில் மனதைச் செலுத்து என்றாள்.

(அதாவது சொந்த ஜனமான கர தூஷணாதிகளைப்பார். அவர்களது கதியே உனக்கும் கிட்டும் என்பதை ஸூசிபித்தாள் என்பது கருத்து.) (3)

ஒருவனையே பதியாக அடைந்தவளும் பெரிய குலத்தில் பிறந்து புண்யமான குலத்தில் விவாஹ முறைப்படி புகுந்தவளுமான என்னால் நிந்திக்கத்தக்க கார்யம் செய்யத்தகுந்ததல்ல. (4)

கீர்த்தி வாய்ந்த வைதேஹியானவள் இம்மாதிரி அந்த ராவணனைப்பார்த்துச் சொல்லிவிட்டு ராக்ஷஸனைப் பாராமல் திரும்பிக் கொண்டு மறுபடியும் பதில் சொன்னாள். (5)

பிறருடைய மனைவியும் பதிவ்ரதையுமான நான் உனக்குப் பத்னியாக ஆக ஏற்றவளல்ல. ஸாதுக்களின் தர்மத்தை உணரு. ஸாதுக்களின் வ்ரதத்தை நீ நன்கு செய். (6)

यथा तव तथाऽन्येषां दारा रक्ष्या निचाचर ।
आत्मानमुपमां कृत्वा स्वेषु दारेषु रम्यताम् ॥ ७

अतुष्टं स्वेषु दारेषु चपलं चलितेन्द्रियम् ।
नयन्ति निकृतिप्रज्ञं परदाराः पराभवम् ॥ ८

इह सन्तो न वा सन्ति सतो वा नानुवर्तसे ।
तथाहि विपरीता ते बुद्धिराचारवर्जिता ॥ ९

யதா தவ ததாऽன்யேஷாம் தாரா ரக்ஷ்யா நிசாசர ।
ஆத்மானமுபமாம் க்ருத்வா ஸ்வேஷு தாரேஷு ரம்யதாம் ॥ 7

அதுஷ்டம் ஸ்வேஷு தாரேஷு சபலம் சலிதேந்த்ரியம் ।
நயந்தி நிக்ருதிப்ரக்ஞம் பரதாரா: பராபவம் ॥ 8

இஹ ஸந்தோ ந வா ஸந்தி ஸதோ வா நானுவர்த்தஸே ।
ததாஹி விபரீதா தே புத்திராசாரவர்ஜிதா ॥ 9

---

ஓ நிசாசரனே! எப்படி உனக்கு உன் மனைவிகள் ரக்ஷிக்கத் தக்கவர்களோ, அப்படி அந்தந்த ஸ்த்ரீகளும், அவரவர் பதிகளால் ரக்ஷிக்கத்தக்கவர்களாவர். உன்னை உபமானமாகப் பார்த்துக் கொண்டு சொந்த மனைவிகளிடம் ஸுகத்தை அனுபவி.

(அதாவது உனது மனைவியை பிறர் எடுத்தால் எப்படி தாபப் படுவாயோ அந்த தாபம் பிறருக்குமுண்டு என்பதை உணரு.) (7)

தன் பத்னிகளிடத்தில் த்ருப்தியடையாதவனும், பிறர் மனைவி களிடத்தில் ஆசை கொண்டவனும், கலங்கிய இந்த்ரியங்களை உடையவனும், வஞ்சனையில் எண்ணங்கொண்டவனுமாகிய புரு ஷனை பிறர் மனைவிகள் அவமானத்தை அடையும்படி செய்கின்ற னர்.

(இங்கு அவமானத்தை அடைவாய் என்பதற்கு ஆயுள் ஐஸ் வர்யம் கீர்த்தி முதலியவைகளின் அழிவை அடைவாய் என்பது கருத்து.) (8)

ராவணன் ஸமீபத்தில் நெருங்கி வருவதைப் பார்த்து ஸீதை இந்த விசாலமான லங்கா பட்டணத்தில் ஸாதுக்கள் இல்லையா என்று கத்தினள். பிறகு எங்கும் ஸாதுக்கள் இருப்பார்கள் என்று எண்ணி இங்கு ஸாதுக்கள் இருக்கத்தான் இருக்கிறார்கள். அவர் களை நீ அனுஸரிக்கவில்லை. அது எப்படி எனில் உனது புத்தியா னது மாறுபட்டு கெட்ட நடையுடன் கூட இருக்கிறதல்லவா?

(இங்கு ஸாதுக்கள் இருக்கிறார்கள் என்றது விபீஷணன் முத லியோரைக் குறித்தேயாகும்.) (9)

ஸ்ரீ:

त्रयस्त्रिंशः सर्गः — முப்பத்திமூன்றுவது ஸர்கம் ॥ ३३ ॥

# "हनूमज्जानकीसंवादोपक्रमः"

# ஹநுமார் ஸீதையோடு பேச ஆரம்பித்தல்.

सोऽवतीर्य द्रुमात्तस्माद्विद्रुमप्रतिमाननः ।
विनीतवेषः कृपणः प्रणिपत्योपसृत्य च ॥ १

तामब्रवीन्महातेजा हनूमान्मारुतात्मजः ।
शिरस्यञ्जलिमाधाय सीतां मधुरया गिरा ॥ २

का नु पद्मपलाशाक्षि क्लिष्टकौशेयवासिनि ।
द्रुमस्य शाखामालम्ब्य तिष्ठसि त्वमनिन्दिते ॥ ३

ஸோऽவதீர்ய த்ருமாத்தஸ்மாத்வித்ருமப்ரதிமானன: ।
விநீதவேஷ: க்ருபண: ப்ரணிபத்யோபஸ்ருத்ய ச ॥ 1

தாமப்ரவீன்மஹாதேஜா ஹனூமான்மாருதாத்மஜ: ।
ஶிரஸ்யஞ்ஜலிமாதாய ஸீதாம் மதுரயா கிரா ॥ 2

கா நு பத்மபலாஶாக்ஷி க்லிஷ்டகௌஶேயவாஸினி ।
த்ருமஸ்ய ஶாகாமாலம்ப்ய திஷ்டஸி த்வமநிந்திதே ॥ 3

---

ராக்ஷஸிகள் தூங்கும் காலத்தில் பவழம்போன்ற முகமுள்ள அந்த ஹநுமார் அவர் இருக்கும் மரத்திலிருந்து நேராக கீழே இறங்கி விநயத்துடன் கூடிய வேஷத்துடனும் ஸீதையின் கஷ்ட தசையைப் பார்த்து ரொம்பவும் நொந்த மனதுடையவராயும் இருந்துகொண்டு ஸீதையின் ஸமீபம் சென்றார். (அவர் இருந்த மரத்திலிருந்து நேராக இறங்கினர் என்றதால் குரங்குகள் மரத்தி லிருந்து கீழே இறங்குவதாயிருந்தால் பல மரங்களின் கிளைகளில் பாய்ந்து கீழே இறங்குவது வழக்கம். இங்கு ஹநுமார் ஸ்ரீஸீதை யின் ஸந்நிதியில் தன் ஜாதி குணத்தை விட்டுவிட்டு விநயத்துடன் இறங்கினரென்று புலப்படுகிறது.) (1)

மஹாதேஜஸ்வியும் வாயுபுத்ரனுமான ஹநுமான் சிரஸ்ஸில் அஞ்சலி செய்து கொண்டு இனிமையான வார்த்தையினல் அந்த ஸீதையைப்பார்த்து சொன்னர். (2)

ஓ செந்தாமரை போன்ற கண்ணையுடையவளே! அழுக் கடைந்த பட்டுபுடவை கட்டியவளே! மரத்தின் கிளையைப்பிடித் துக்கொண்டு இருக்கிருயே ஓ குற்றமற்றவளே! நீ யார்? (3)

किमर्थं तव नेत्राभ्यां वारि स्रवति शोकजम्।
पुण्डरीकपलाशाभ्यां विप्रकीर्णमिवोदकम्॥ ४

सुराणामसुराणां वा नागगन्धर्वरक्षसाम्।
यक्षाणां किन्नराणां वा का त्वं भवसि शोभने॥ ५

का त्वं भवसि रुद्राणां मरुतां वा वरानने।
वसूनां वा वरारोहे देवता प्रतिभासि मे॥ ६

கிமர்த்தம் தவ நேத்ராப்யாம் வாரி ஸ்ரவதி ஶோகஜம் ।
புண்டரீகபலாஶாப்யாம் விப்ரகீர்ணமிவோதகம் ॥ 4

ஸுராணாமஸுராணாம் வா நாககந்தர்வரக்ஷஸாம் ।
யக்ஷாணாம் கின்னராணாம் வா கா த்வம் பவஸி ஶோபனே ॥

கா த்வம் பவஸி ருத்ராணாம் மருதாம் வா வரானனே ।
வஸூனாம் வா வராரோஹே தேவதா ப்ரதிபாஸி மே ॥ 6

---

*தாமரை புஷ்பத்தின் இதழ்களிலிருந்து சிதறிய ஜலம்போல், எவள் குலம் அழிவதற்காக உங்கள் கண்களிலிருந்து சோகத்தால் ஜலமானது பெருகுகிறது, அல்லது எந்த உத்தமனை மனதில் நினைத்துக்கொண்டு கண்ஜலம் பெருகுகிறது? இந்த அழகை ப்ரியனை ஸ்ரீராமன் அல்லவா பார்க்கவேண்டும். அவர் பார்க்கவில்லையே என்றும் ஹநுமார் வருத்தப்பட்டாரென்பதும் புலப்படுகிறது. (இங்கு ஸீதையை பலகாரணங்களால் ஸ்ரீராமனின் பத்னியென்று ஹநுமார் தீர்மானித்திருந்தும் "தாங்கள் யார்" என்று கேட்டதானது ஸீதையின் பாதிவ்ரத்யத்தின் ப்ரபாவத்தையும், அவள் அடைந்திருக்கும் கஷ்டத்தையும் பார்த்த ஹநுமார் மனங்கலங்கி எல்லாவற்றையும் மறந்து கேட்டதாக கருத்து. அல்லது தான் ஸீதையென்று ஊஹித்து இருந்தாலும் அவள் வாக்காலே வரவேண்டுமென்றும் கேட்டிருக்கலாம்.)* (4)

*ஓ மங்களத்தையுண்டு பண்ணுகிறவளே! தேவர்கள் அஸுரர்கள், நாக, கந்தர்வ, ராக்ஷஸர்கள், யக்ஷர்கள், கிந்நரர்கள் ஆகிய இவர்களுக்குள் நீர் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்.* (5)

*பதினொரு ருத்ரர்கள், ஏழு மருத்துக்கள், அஷ்டவஸுக்கள் இவர்களுக்குள் நீங்கள் யார்? உத்தம சரீரம் வாய்ந்தவளே! சிறந்த முகமுடையவளே! நீங்கள் தேவதையென்று எனக்கு தோன்றுகிறது.* (6)

किंनु चन्द्रमसा हीना पतिता विबुधालयात् ।
रोहिणी ज्योतिषां श्रेष्ठा श्रेष्ठा सर्वगुणान्विता ॥
का त्वं भवसि कल्याणि त्वमनिन्दितलोचने ॥ ७

कोपाद्वा यदि वा मोहाद्भर्तारमसितेक्षणे ।
वसिष्ठं कोपयित्वा त्वं नासि कल्याण्यरुन्धती ॥ ८

को नु पुत्रः पिता भ्राता भर्ता वा ते सुमध्यमे ।
अस्माल्लोकादमुं लोकं गतं त्वमनुशोचसि ॥ ९

रोदनादतिनिःश्वासाद्भूमिसंस्पर्शनादपि ।
न त्वां देवीमहं मन्ये राज्ञः संज्ञावधारणात् ॥ १०

கிம்னு சந்த்ரமஸா ஹீனா பதிதா விபுதாலயாத் ।
ரோஹிணீ ஜ்யோதிஷாம் ஶ்ரேஷ்டா ஶ்ரேஷ்டா
ஸர்வகுணான்விதா ॥
கா த்வம் பவஸி கல்யாணி த்வமநிந்திதலோசனே ॥ 7

கோபாத்வா யதி வா மோஹாத்பர்த்தாரமஸிதேக்ஷணே ।
வஸிஷ்டம் கோபயித்வா த்வம் நாஸி கல்யாண்யருந்ததீ ॥ 8

கோ நு புத்ர: பிதா ப்ராதா பர்த்தா வா தே ஸுமத்யமே ।
அஸ்மால்லோகாதமும் லோகம் கதம் த்வமனுஶோசஸி ॥ 9

ரோதனாததிநி:ஶ்வாஸாத்பூமிஸம்ஸ்பர்ஶனாதபி ।
ந த்வாம் தேவீமஹம் மன்யே ராஜ்ஞ: ஸம்க்ஞாவதாரணாத் ॥ 10

---

அல்லது நக்ஷத்திரங்களுக்குள் சிறந்ததும், மிக பிரஸித்தி பெற்றதும், எல்லா குணங்களுடன் கூடியதும், சந்திரனை விட்டு பிரிந்து தேவலோகமிருந்து கீழே விழுந்ததுமான ரோஹிணியா? ஓ கல்யாணி நீங்கள் யார்? அழகிய கண்களையுடையவளே! நீங்கள் யார்? (7)

கறுத்த கருவிழியுள்ள கண்களையுடையவளே! ஒருக்கால் நீ கோபத்தாலோ, அறியாமையாலோ, கோபமற்ற பர்த்தாவான வஸிஷ்டருக்கு கோபத்தை யுண்டுபண்ணி பிரிந்து வந்த கல்யாணியான அருந்ததி அல்லவே! (இங்கு ஸீதையின் பாதிவ்ரத்யத்தைப் பார்த்து அருந்ததியோவென்று ஹனுமார் ஸந்தேஹித்தார்). (8)

அழகிய இடையுள்ளவளே! உன் பிள்ளை யார்? பிதா யார்? ஸகோதரர் யார்? உன் பர்த்தா யார்? இந்த லோகமிருந்து பரலோகம் சென்ற யாரைக்குறித்து துக்கப்படுகிறாய்? (9)

அழுகையினாலும், பெருமூச்சுவிடுவதாலும், பூமியைத்தொடுவதாலும், ஸர்வஜகத்துக்கும் ராஜாவான ஸ்ரீராமனுடைய நாமாவை ஜெபிப்பதாலும் தங்களை தேவஸ்த்ரீ என்று நான் நினைக்கவில்லை. (10)

व्यञ्जनानि च ते यानि लक्षणानि च लक्षये।
महिषी भूमिपालस्य राजकन्याऽसि मे मता॥ ११

रावणेन जनस्थानाद्बलादपहृता यदि।
सीता त्वमसि भद्रं ते तन्ममाचक्ष्व पृच्छतः॥ १२

यथा हि तव वै दैन्यं रूपं चाप्यतिमानुषम्।
तपसा चान्वितो वेषस्त्वं राममहिषी ध्रुवम्॥ १३

सा तस्य वचनं श्रुत्वा रामकीर्तनहर्षिता।
उवाच वाक्यं वैदेही हनुमन्तं द्रुमाश्रितम्॥ १४

வ்யஞ்ஜனானி ச தே யானி லக்ஷணானி ச லக்ஷயே |
மஹிஷீ பூமிபாலஸ்ய ராஜகன்யாऽஸி மே மதா || 11

ராவணேன ஜனஸ்தானாத்பலாதபஹ்ருதா யதி |
ஸீதா த்வமஸி பத்ரம் தே தன்மமாசக்ஷ்வ ப்ருச்சத: || 12

யதா ஹி தவ வை தைன்யம் ரூபம் சாப்யதிமானுஷம் |
தபஸா சான்விதோ வேஷஸ்த்வம் ராமமஹிஷீ த்ருவம் || 13

ஸா தஸ்ய வசனம் ஶ்ருத்வா ராமகீர்த்தனஹர்ஷிதா |
உவாச வாக்யம் வைதேஹீ ஹனுமந்தம் த்ருமாஶ்ரிதம் || 14

---

உங்களுடைய ஸ்தனம், இடுப்பு, கண் முதலியவைகளாலும், அழகிய ராஜலக்ஷணத்தைக் காட்டும் ரேகை முதலியவற்றாலும், நீங்கள் அரச குமாரியாக இருப்பதுடன் பூமியை முழுதும் ஆளும் சக்ரவர்த்தியின் மஹிஷியாகவுமிருக்கவேண்டும் என்பது என் எண்ணம். (11)

ராவணனால் ஜனஸ்தானத்திலிருந்து பலாத்காரமாக எடுத்து வரப்பட்ட ஸீதையாக தாங்கள் இருக்கும் பக்ஷத்தில் என்னிடம் சொல்லுங்கள். தங்களுக்கு மங்களம் வந்து விட்டது. (12)

தங்களுக்கு இம்மாதிரியான மனச்சோர்வும், மனுஷ்யர்களுக்கில்லாத அழகும், பாதிவ்ரத்ய ரூபமாகிய தபஸுடன் கூடிய வேஷமும், இருப்பதால் நீங்கள் நிஸ்சயம் ராமருடைய மஹிஷியே யாவீர். (13)

விதேஹ குலத்தில் பிறந்த அந்த ஸீதை அந்த ஹனுமாருடைய வார்த்தையைக் கேட்டு, ராமனைப்பற்றி சொல்லியதால் ஸந்தோஷமடைந்து, மரத்திலிருக்கும் ஹனுமாரைப் பார்த்துச் சொன்னாள். (14)

पृथिव्यां राजसिंहानां मुख्यस्य विदितात्मनः ।
स्नुषा दशरथस्याहं शत्रुसैन्यप्रतापिनः ॥ १५

दुहिता जनकस्याहं वैदेहस्य महात्मनः ।
सीता च नाम नाम्नाऽहं भार्या रामस्य धीमतः ॥ १६

समा द्वादश तत्राहं राघवस्य निवेशने ।
भुञ्जाना मानुषान्भोगान्सर्वकामसमृद्धिनी ॥ १७

तत्र त्रयोदशे वर्षे राज्येनेक्ष्वाकुनन्दनम् ।
अभिषेचयितुं राजा सोपाध्यायः प्रचक्रमे ॥ १८

तस्मिन्संभ्रियमाणे तु राघवस्याभिषेचने ।
कैकेयी नाम भर्तारं देवी वचनमब्रवीत् ॥ १९

ப்ருதிவ்யாம் ராஜஸிம்ஹாநாம் முக்யஸ்ய விதிதாத்மந: ।
ஸ்னுஷா தஶரதஸ்யாஹம் ஶத்ருஸைன்யப்ரதாபிந: ॥ 15

துஹிதா ஜனகஸ்யாஹம் வைதேஹஸ்ய மஹாத்மந: ।
ஸீதா ச நாம நாம்நாऽஹம் பார்யா ராமஸ்ய தீமத: ॥ 16

ஸமா த்வாதஶ தத்ராஹம் ராகவஸ்ய நிவேஶனே ।
புஞ்ஜாநா மாநுஷான்போகான்ஸர்வகாமஸம்ருத்திநீ ॥ 17

தத்ர த்ரயோதஶே வர்ஷே ராஜ்யேநேக்ஷ்வாகுநந்தனம் ।
அபிஷேசயிதும் ராஜா ஸோபாத்யாய: ப்ரசக்ரமே ॥ 18

தஸ்மின்ஸம்ப்ரியமாணே து ராகவஸ்யாபிஷேசனே ।
கைகேயீ நாம பர்த்தாரம் தேவீ வசனமப்ரவீத் ॥ 19

---

*உலகில் சிறந்த அரசர்களுக்குத் தலைவரும், ஆத்ம ஸ்வரூபத்தைப் பார்த்தவரும், சத்ரு ஸைன்யத்தை தபிக்கச் செய்கிறவருமான தஶரதருக்கு, நான் நாட்டுபெண்.* (15)

*மஹாத்மாவும், விதேஹ தேசத்தைச் சேர்ந்தவருமான ஜனக மஹாராஜாவுக்கு நான் பெண். ஸீதையென்ற பெயரால் ப்ரஸித்தியடைந்தவள். புத்திமானை ராமனுக்கு நான் பத்னீ.* (16)

*அங்கு ராகவனுடைய வீட்டில் பன்னிரண்டு வருஷங்கள் சந்தனம், புஷ்பம், பீதாம்பரம், உத்தம ஆபரணங்கள் முதலிய ஸம்ருத்தியுள்ளவளாய் அமானுஷமான போகங்களை நான் அனுபவித்தேன்.* (17)

*அங்கு பதின்மூன்றுவது வருஷத்தில் இக்ஷ்வாகு வம்ஶத்திற்கு ஆநந்தத்தைக் கொடுக்கும் என் ராமனை ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்வதற்கு, அரசரான தஶரதர் வசிஷ்டர் முதலிய ஆசார்யர்களுடன் கூடி யத்தனித்தார்.* (18)

*ராகவனுடைய பட்டாபிஷேகத்திற்காக எல்லாவற்றையும்*

न पिबेयं न खादेयं प्रत्यहं मम भोजनम्।
एष मे जीवितस्यान्तो रामो यद्यभिषिच्यते॥ २०

यत्तदुक्तं त्वया वाक्यं प्रीत्या नृपतिसत्तम।
तच्चेन्न वितथं कार्यं वनं गच्छतु राघवः॥ २१

स राजा सत्यवाग्देव्या वरदानमनुस्मरन्।
मुमोह वचनं श्रुत्वा कैकेय्याः क्रूरमप्रियम्॥ २२

ततस्तु स्थविरो राजा सत्ये धर्मे व्यवस्थितः।
ज्येष्ठं यशस्विनं पुत्रं रुदन्राज्यमयाचत॥ २३

ந பிபேயம் ந காதேயம் ப்ரத்யஹம் மம போஜனம் ।
ஏஷ மே ஜீவிதஸ்யாந்தோ ராமோ யத்யபிஷிச்யதே ॥ 20

யத்ததுக்தம் த்வயா வாக்யம் ப்ரீத்யா ந்ருபதிஸத்தம ।
தச்சேன்ந விததம் கார்யம் வனம் கச்சது ராகவ: ॥ 21

ஸ ராஜா ஸத்யவாக்தேவ்யா வரதானமனுஸ்மரன் ।
முமோஹ வசனம் ஶ்ருத்வா கைகேய்யா: க்ரூரமப்ரியம் ॥ 22

ததஸ்து ஸ்தவிரோ ராஜா ஸத்யே தர்மே வ்யவஸ்தித: ।
ஜ்யேஷ்டம் யஶஸ்வினம் புத்ரம் ருதன்ராஜ்யமயாசத ॥ 23

---

ஏற்பாடு செய்தபொழுது கைகேயி என்ற தேவியானவள் தன் புருஷனை தஶரதனைப் பார்த்துச் சொன்னாள். (19)

ராமனுக்கு நீர் பட்டாபிஷேகம் செய்யும் பக்ஷத்தில், ப்ரதி தினமும் நான் ஜலம் குடிக்கமாட்டேன்; பழம் முதலியவற்றை தின்னமாட்டேன்; சாப்பிடவும் மாட்டேன். இந்த பட்டாபிஷேகமே என் உயிர்க்கு முடிவாகும். (20)

ஓ! அரசர்களுள் சிறந்த தலைவரே, தேவாஸுர யுத்தத்தில் ப்ரியத்தால் யாதொரு வரன் தருவதாகச் சொன்னீரோ, அதை பொய்க்காமல் இருப்பதாயிருந்தால், ராகவன் காடு செல்ல வேண்டும். (21)

ஸத்யவாக்கான அந்த அரசன் தேவியின் வரதானத்தை நினைத்தும், கைகேயியின் அப்ரியமும், கடூரமுமான சொல்லைக் கேட்டும் ப்ரக்ஞாபங்கத்தை யடைந்தார். (22)

பிறகு வயதானவரும், ஸத்யத்திலும், தர்மத்திலும் அமர்ந்தவருமான அரசர், கீர்த்திவாய்ந்த தமது மூத்த புத்ரனிடம் அழுது கொண்டு ராஜ்யத்தை யாசித்தார். (இங்கு யாசித்தார் என்று சொன்னதால், முதல் தினமே பூர்வாங்கமான ரக்ஷாபந்தனம் முதலியவைகள் ஸ்ரீராமனுக்கு செய்துவிட்டபடியால் ராஜ்யம்

स पितुर्वचनं श्रीमानभिषेकात्परं प्रियम् ।
मनसा पूर्वमासाद्य वाचा प्रतिगृहीतवान् ॥ २४

दद्यान्न प्रतिगृह्णीयान्न ब्रूयात्किंचिदप्रियम् ।
अपि जीवितहेतोर्वा रामः सत्यपराक्रमः ॥ २५

स विहायोत्तरीयाणि महार्हाणि महायशाः ।
विसृज्य मनसा राज्यं जनन्यै मां समादिशत् ॥ २६

साऽहं तस्याग्रतस्तूर्णं प्रस्थिता वनचारिणी ।
न हि मे तेन हीनाया वासः स्वर्गेऽपि रोचते ॥ २७

ஸ பிதுர்வசனம் ஸ்ரீமானபிஷேகாத்பரம் ப்ரியம் ।
மனஸா பூர்வமாஸாத்ய வாசா ப்ரதிக்ருஹீதவான் ॥ 24

தத்யான்ந ப்ரதிக்ருஹ்ணீயாத் நப்ரூயாத்கிம்சிதப்ரியம் ।
அபி ஜீவிதஹேதோர்வா ராம: ஸத்யபராக்ரம: ॥ 25

ஸ விஹாயோத்தரீயாணி மஹார்ஹாணி மஹாயஶா: ।
விஸ்ருஜ்ய மனஸா ராஜ்யம் ஜனன்யை மாம் ஸமாதிஶத் ॥ 26

ஸாऽஹம் தஸ்யாக்ரதஸ்தூர்ணம் ப்ரஸ்திதா வனசாரிணீ ।
ந ஹி மே தேன ஹீனாயா வாஸ: ஸ்வர்கேऽபி ரோசதே ॥ 27

---

*ராமனுடையதாக ஆகிவிட்டது. அதனால் அந்த ராமனிடமிருந்து அதை மறுபடி யாசித்தார் என்று கருத்து.)* (23)

*ஶோபை நிறைந்த அந்த என் ராமன் பட்டாபிஷேகத்தைக் காட்டிலும் பிதாவின் வார்த்தையை மிகப் பிரியத்துடன் மனதினால் முதலில் பெற்றுக்கொண்டு, பிறகு வாக்கினாலும் செய்வதாக ஒப்புக்கொண்டார். (சிலர் மனதில் இஷ்டமில்லாமல் போனாலும், தாக்ஷிண்யத்திற்காக வாக்கினால் ஒப்புக்கொள்வதுண்டு. அப்படியில்லாமல் ஸ்ரீராமன் மனப்பூர்வமாய் அங்கீகரித்தான் என்று கருத்து.)* (24)

*அழிவற்ற பராக்ரமமுள்ள ஸ்ரீராமன் உயிர்போவதாயிருந்தாலும் எல்லோருக்கும் வேண்டியதைக் கொடுப்பார். தான் ஒருவரிடமிருந்தும் எதையும் வாங்கமாட்டார். அப்ரியமான சொல்லை கொஞ்சம்கூட சொல்லமாட்டார்.* (25)

*மிகுந்த கீர்த்தி வாய்ந்த ராமன் விலையுயர்ந்த பட்டு வஸ்திரங்களை விட்டுவிட்டு, ராஜ்யத்தையும் மனதினால்விட்டு, என்னை தாயான கௌஸல்யையினிடம் இருக்கவேண்டுமென்று கட்டளையிட்டார்.* (26)

*அந்த நான் அவருக்கு முன்பு காட்டில் ஸஞ்சரிப்பதற்காக*

प्रागेव तु महाभागः सौमित्रिर्मित्रनन्दनः ।
पूर्वजस्यानुयात्रार्थे द्रुमचीरैरलङ्कृतः ॥ २८

ते वयं भर्तुरादेशं बहुमान्य दृढव्रताः ।
प्रविष्टाः स्म पुराऽदृष्टं वनं गम्भीरदर्शनम् ॥ २९

वसतो दण्डकारण्ये तस्याहममितौजसः ।
रक्षसाऽपहृता भार्या रावणेन दुरात्मना ॥ ३०

ப்ராகேவ து மஹாபாக: ஸௌமித்ரிர்மித்ரநந்தன: ।
பூர்வஜஸ்யானுயாத்ரார்த்தே த்ருமசீரைரலங்க்ருத: ॥ 28

தே வயம் பர்த்துராதேஶம் பஹுமான்ய த்ருடவ்ரதா: ।
ப்ரவிஷ்டா: ஸ்ம புராऽத்ருஷ்டம் வனம் கம்பீரதர்ஶனம் ॥ 29

வஸதோ தண்டகாரண்யே தஸ்யாஹமமிதௌஜஸ: ।
ரக்ஷஸாऽபஹ்ருதா பார்யா ராவணேன துராத்மனா ॥ 30

---

வேகமாக கிளம்பினேன். ஸ்ரீராமனை விட்டுப் பிரிந்து ஸ்வர்கத்தில் வஸிப்பதிலும் எனக்கு ஆசையில்லை. (27)

ஸ்ரீராம கைங்கரியம் செய்யும் பாக்யம் பெற்றவனும், ஸ்ரீராமனுக்கு காட்டில் பணிவிடை செய்வதற்காகவே ஸ்ரீரங்கனுதனை பூஜித்து, அதன் பயனாக ஸுமித்ரையால் பெறப்பட்டவனும், நண்பர்களுக்கு உதவியளிப்பதிலேயே ஆவல்கொண்டவனுமான லக்ஷ்மணன் அண்ணாவுடன் கூடச்செல்வதற்காக முதலிலேயே ஆபரணங்களால் அலங்காரம் செய்துகொள்வதுபோல் மரவுரியைக் கட்டி அலங்கரித்துக் கொண்டான். ஸ்ரீலக்ஷ்மணன் மரஉரியைக் கட்டியதும் அலங்காரம் செய்ததுபோல் அழகுடன் விளங்கியது புலப்படுகிறது. (28)

அந்த நாங்கள் தஶரதனுடைய உத்திரவை கௌரவித்து, த்ருடமான நியமத்துடன் முன் பாராததும், பயத்தையுண்டுபண்ணக் கூடியதுமான காட்டில் பிரவேசித்தோம். (29)

தண்டகாரண்யத்தில் வஸிக்கின்றவனும், அளவற்ற தேஜஸ் உள்ளவனுமான ஸ்ரீராமனுடைய பத்னியான என்னை, துஷ்டனும் ராக்ஷஸனுமான ராவணன் எடுத்துவந்துவிட்டான். அந்த ராவணன் எனக்கு இன்னும் இரண்டு மாத காலம் பிழைத்திருப்

द्वौ मासौ तेन मे कालो जीवितानुग्रहः कृतः ।
ऊर्ध्वं द्वाभ्यां तु मासाभ्यां ततस्त्यक्ष्यामि जीवितम् ॥ ३१

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
त्रयस्त्रिंशः सर्गः ॥ ३३ ॥

த்வௌ மாஸௌ தேன மே காலோ ஜீவிதானுக்ரஹ: க்ருத: ।
ஊர்த்வம் த்வாப்யாம் து மாஸாப்யாம் ததஸ்த்யக்ஷ்யாமி
ஜீவிதம் ॥ 31

இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே த்ரயஸ்த்ரிம்ஶ: ஸர்க: ॥

---

பதற்கு அனுக்ரஹம் செய்திருக்கிறான். பிறகு இரண்டு மாதமானதும் நானே ஜீவனை விட்டுவிடுவேன். (30—31)

முப்பத்திமூன்றும் ஸர்கம் முற்றிற்று.

ஸ்ரீ:

चतुस्त्रिंशः सर्गः — முப்பத்திநான்காவது ஸர்கம் ॥ ३४ ॥

# "क्षेमवृत्तान्त कथनम्"

# ஸ்ரீராமாதிகளின் க்ஷேமஸமாசாரங்களைச் சொல்வது.

तस्यास्तद्वचनं श्रुत्वा हनुमान्हरियूथपः ।
दुःखाद्दुःखाभिभूतायाः सान्त्वमुत्तरमब्रवीत् ॥ १

अहं रामस्य संदेशाद्देवि दूतस्तवागतः ।
वैदेहि कुशली रामस्त्वां च कौशलमब्रवीत् ॥ २

यो ब्राह्ममस्त्रं वेदांश्च वेद वेदविदां वरः ।
स त्वां दाशरथी रामो देवि कौशलमब्रवीत् ॥ ३

लक्ष्मणश्च महातेजा भर्तुस्तेऽनुचरः प्रियः ।
कृतवाञ्छोकसंतप्तः शिरसा तेऽभिवादनम् ॥ ४

தஸ்யாஸ்தத்வசனம் ஶ்ருத்வா ஹனுமான்ஹரியூதப: ।
து:காத்து:காபிபூதாயா: ஸாந்த்வமுத்தரமப்ரவீத் ॥ 1

அஹம் ராமஸ்ய ஸந்தேஶாத்தேவி தூதஸ்தவாகத: ।
வைதேஹி குஶலீ ராமஸ்த்வாம் ச கௌஶலமப்ரவீத் ॥ 2

யோ ப்ராம்ஹமஸ்த்ரம் வேதாம்ஶ்ச வேத வேதவிதாம் வர: ।
ஸ த்வாம் தாஶரதீ ராமோ தேவி கௌஶலமப்ரவீத் ॥ 3

லக்ஷ்மணஶ்ச மஹாதேஜா பர்த்துஸ்தேऽநுசர: ப்ரிய: ।
க்ருதவாஞ்சோகஸந்தப்த: ஶிரஸா தேऽபிவாதனம் ॥ 4

---

வானர ஸைன்யத்தை காக்கும் ஹனுமார், தொடர்ந்து துக்கத்தையனுபவிக்கும் அந்த ஸீதையின் வார்த்தையைக் கேட்டு ஆறுதலான பதிலை சொன்னார். (1)

ஓ தேவி, நான் ராமனுடைய உத்தரவின்பேரில் தங்களுக்கு தூதனாக வந்தேன். ஓ வைதேஹி, ராமன் க்ஷேமமாயிருக்கிறார்; உன்னையும் க்ஷேமம் விசாரிக்கச் சொன்னார். (2)

ஓ தேவி, எவன் ப்ரஹ்மாஸ்த்ரத்தையும், வேதங்களையும் அறிவானோ, எவன் வேதம் அறிந்த ஞானிகளுக்குள் சிறந்தவனோ, அந்த தஶரத புத்ரனான ராமன் தங்களை க்ஷேமமா என்று என்னை கேட்கச் சொன்னார். (3)

மஹாதேஜஸ்வியும் தங்கள் நாயகனுடன்கூட செல்கிறவனும்,

सा तयोः कुशलं देवी निशम्य नरसिंहयोः ।
प्रीतिसंहृष्टसर्वाङ्गी हनुमन्तमथाऽब्रवीत् ॥ ५

कल्याणी बत गाथेयं लौकिकी प्रतिभाति मा ।
एति जीवन्तमानन्दो नरं वर्षशतादपि ॥ ६

तया समागते तस्मिन्प्रीतिरुत्पादिताऽद्भुता ।
परस्परेण चालापं विश्वस्तौ तौ प्रचक्रतुः ॥ ७

तस्यास्तद्वचनं श्रुत्वा हनुमान्हरियूथपः ।
सीतायाः शोकदीनायाः समीपमुपचक्रमे ॥ ८

ஸா தயோ: குஶலம் தேவீ நிஶம்ய நரஸிம்ஹயோ: ।
ப்ரீதிஸம்ஹ்ருஷ்டஸர்வாங்கீ ஹனுமந்தமதாऽப்ரவீத் ॥ 5

கல்யாணீ பத காதேயம் லௌகிகீ ப்ரதிபாதி மா ।
ஏதி ஜீவந்தமானந்தோ நரம் வர்ஷஶதாதபி ॥ 6

தயா ஸமாகதே தஸ்மின்ப்ரீதிருத்பாதிதாऽத்புதா ।
பரஸ்பரேண சாலாபம் விஶ்வஸ்தௌ தௌ ப்ரசக்ரது: ॥ 7

தஸ்யாஸ்தத்வசனம் ஶ்ருத்வா ஹனுமான்ஹரியூதப: ।
ஸீதாயா: ஶோகதீநாயா: ஸமீபமுபசக்ரமே ॥ 8

---

அவாவுள்ளவனுமான லக்ஷ்மணனும் சோகத்தால் வாடி ஶிரஸி னுல் தங்களுக்கு நமஸ்காரத்தை செய்தான். (4)

அந்த தேவியானவள் நரஸிம்ஹர்களான ராம லக்ஷ்மணர் களுடைய க்ஷேமத்தைக் கேட்டு ஸந்தோஷத்தினுல் ஸர்வ அங்கங் களிலும் மயிர்கூச்சலுடன்கூட பிறகு ஹனுமாரைப் பார்த்துச் சொன்னுள். (5)

கஷ்டம் வந்த போதிலும் அதை பொறுத்துக்கொண்டு, நூறு வருஷமானுலும் ஜீவித்திருந்தால் கஷ்டம் நீங்கி ஆனந்தம் உண்டாகுமென்று உலகத்தில் சொல்லும் பழமொழியானது ஸத் தியமான பொருள் உள்ளதே என்று எனக்கு தோன்றுகிறது. (இது ஆஶ்சர்யம். அதாவது ஸ்ரீராமனை பிரிந்த துக்கத்தால் தலை பின்னலை கழுத்தில் சுற்றிக்கொண்டு ஜீவனை விட்டிருந்தால், பரம பக்தனை ஸ்ரீ ஹனுமார் முகமாய் ஸ்ரீராமசரித்திரம் கேட்டிருக்க முடியுமா? ஸ்ரீராமன் சொல்லியனுப்பித்த ஸமாசாரங்களையும் அறிந்திருக்க முடியுமா? உயிரை வைத்துக்கொண்டிருந்ததால் தானே இந்த மங்களம் வந்தது என்று கருத்து.) (6)

அங்கு வந்த ஹனுமானிடத்தில் அந்த ஸீதைக்கு ஆஶ்சர்ய மான ப்ரியமானது உண்டாயிற்று. அவ்விருவர்களும் ஒருவர்க் கொருவர் நம்பிக்கை கொண்டு பேசத்தொடங்கினுர்கள். (7)

வானர கூட்டத்தைக் காக்கும் அந்த ஹனுமார் அவளு

यथा यथा समीपं स हनुमानुपसर्पति ।
तथा तथा रावणं सा तं सीता परिशङ्कते ॥ ९

अहो धिग्दुष्कृतमिदं कथितं हि यदस्य मे ।
रूपान्तरमुपागम्य स एवायं हि रावणः ॥ १०

तामशोकस्य शाखां सा विमुक्त्वा शोककर्शिता ।
तस्यामेवानवद्याङ्गी धरण्यां समुपाविशत् ॥ ११

हनुमानपि दुःखार्तां तां दृष्ट्वा भयमोहिताम् ।
अवन्दत महाबाहुस्ततस्तां जनकात्मजाम् ॥
सा चैनं भयवित्रस्ता भूयो नैवाभ्युदैक्षत ॥ १२

யதா யதா ஸமீபம் ஸ ஹனுமானுபஸர்ப்பதி ।
ததா ததா ராவணம் ஸா தம் ஸீதா பரிஸங்கதே ॥ 9

அஹோ திக்துஷ்க்ருதமிதம் கதிதம் ஹி யதஸ்ய மே ।
ரூபாந்தரமுபாகம்ய ஸ ஏவாயம் ஹி ராவண: ॥ 10

தாமஸோகஸ்ய ஸாகாம் ஸா விமுக்த்வா ஸோககர்ஸிதா ।
தஸ்யாமேவானவத்யாங்கீ தரண்யாம் ஸமுபாவிஸத் ॥ 11

ஹனுமானபி து:கார்த்தாம் தாம் த்ருஷ்ட்வா பயமோஹிதாம் ।
அவந்தத மஹாபாஹுஸ்ததஸ்தாம் ஜனகாத்மஜாம் ॥
ஸா சைனம் பயவித்ரஸ்தா பூயோ நைவாப்யுதைக்ஷத ॥ 12

---

டைய வார்த்தையைக் கேட்டு ஸோகத்தால் மனங்கலங்கிய ஸீதையின் ஸமீபத்தில் சென்றார். (8)

அந்த ஹனுமான் எவ்வளவுக்கெவ்வளவு ஸமீபம் செல்கிறாரோ அவ்வளவுக்கவ்வளவு அந்த ஹனுமாரை ராவணன் என்று சங்கித்தாள். (9)

நான் இவனிடத்தில் பேசியது ஸரியல்ல. இப்படி யோசிக்காமல் பேசியது நிந்திக்கத்தக்கது; இது கஷ்டம். அந்த ராவணன் வேறு ரூபத்தையெடுத்துக்கொண்டு இப்படி வந்துவிட்டான். (10)

குற்றமற்ற அங்கங்களுடன் கூடிய் அந்த ஸீதை அந்த அஸோக மரத்தின் கிளையை விட்டுவிட்டு, ஸோகத்தால் பீடிக்கப்பட்டவளாய்க்கொண்டு அந்த இடத்திலேயே பூமியில் உட்கார்ந்து கொண்டாள். (11)

பிறகு மஹானுபாவரான ஹனுமானும், துக்கத்தால் பீடிக்கப்பட்டவளும், பயத்தால் நினைவு இழந்தவளுமான ஜனகனுடைய பெண்ணான அந்த ஸீதையை நமஸ்கரித்தார். பயத்தால் கலங்கிய அந்த ஸீதையும் மறுபடியும் அந்த ஹனுமாரை பார்க்கவேயில்லை. (12)

तं दृष्ट्वा वन्दमानं तु सीता शशिनिभानना ।
अब्रवीद्दीर्घमुच्छ्वस्य वानरं मधुरस्वरा ॥ १३

मायां प्रविष्टो मायावी यदि त्वं रावणः स्वयम् ।
उत्पादयसि मे भूयः संतापं तन्न शोभनम् ॥ १४

स्वं परित्यज्य रूपं यः परिव्राजकरूपधृत् ।
जनस्थाने मया दृष्टस्त्वं स एवासि रावणः ॥ १५

उपवासकृशां दीनां कामरूप निशाचर ।
संतापयसि मां भूयः संतप्तां तन्न शोभनम् ॥ १६

தம் த்ருஷ்ட்வா வந்தமானம் து ஸீதா ஶஶிநிபானனா ।
அப்ரவீத்தீர்கமுச்ச்வஸ்ய வானரம் மதுரஸ்வரா ॥ **13**

மாயாம் ப்ரவிஷ்டோ மாயாவீ யதி த்வம் ராவண: ஸ்வயம் ।
உத்பாதயஸி மே பூய: ஸந்தாபம் தன்ன ஶோபனம் ॥ **14**

ஸ்வம் பரித்யஜ்ய ரூபம் ய: பரிவ்ராஜகரூபத்ருத் ।
ஜனஸ்தானே மயா த்ருஷ்டஸ்த்வம் ஸ ஏவாஸி ராவண: ॥ **15**

உபவாஸக்ருஶாம் தீனாம் காமரூப நிஶாசர ।
ஸந்தாபயஸி மாம் பூய: ஸந்தப்தாம் தன்ன ஶோபனம் ॥ **16**

---

*சந்திரனுக்கொப்பான முகமுள்ள ஸீதையானவள் நமஸ்கரித்த அந்த ஹனுமாரை பார்த்து நீண்ட பெருமூச்சை விட்டு, இனிமையான குரலுடன் சொன்னாள்.* (13)

*நீ ஸ்வயம் மாயாவியான ராவணனாயிருந்து மாயையினால் குரங்கு வேஷம் தரித்து மறுபடியும் எனக்கு கஷ்டத்தை உண்டு பண்ணுகிறாய். அப்படிச்செய்வது உனக்கு நல்லதல்ல. அதாவது என் மாதிரி நீயும் வேண்டியவர்களின் பிரிவையடைந்து கஷ்டப்படுவாய் என்று பொருள்.* (14)

*அவனுக்கு இம்மாதிரி உருவம் எடுத்துக்கொள்வது ஸுலபமென்பதை இந்த ஶ்லோகத்தால் கூறுகிறாள்.*

*யாதொரு நீ உனது ரூபத்தை விட்டுவிட்டு ஸந்யாஸியின் ரூபத்தை தரித்துக்கொண்டு ஜனஸ்தானத்தில் என்னால் காணப்பட்டாயோ அதே ராவணன் தான் இங்கு வந்திருக்கிறாய்.* (15)

*ஓ, காமரூப! ஓ, ராக்ஷஸ! ஆஹாரமின்மையால் இளைத்தவளும் சோர்ந்த பலமுள்ளவளும், மிக தாபத்தையடைந்தவளுமான என்னை மறுபடியும் மிக தாபத்தையடையும்படி செய்கிறாய். அது உனக்கு நல்லதல்ல.* (16)

अथवा नैतदेवं हि यन्मया परिशङ्कितम् ।
मनसो हि मम प्रीतिरुत्पन्ना तव दर्शनात् ॥ १७

यदि रामस्य दूतस्त्वमागतो भद्रमस्तु ते ।
पृच्छामि त्वां हरिश्रेष्ठ प्रिया रामकथा हि मे ॥ १८

गुणान्रामस्य कथय प्रियस्य मम वानर ।
चित्तं हरसि मे सौम्य नदीकूलं यथा रयः ॥ १९

अहो स्वप्नस्य सुखता याहमेवं चिराहृता ।
प्रेषितं नाम पश्यामि राघवेण वनौकसम् ॥ २०

அதவா நைததேவம் ஹி யன்மயா பரிஶங்கிதம் ।
மனஸோ ஹி மம ப்ரீதிருத்பன்னா தவ தர்ஶனாத் ॥ 17

யதி ராமஸ்ய தூதஸ்த்வமாகதோ பத்ரமஸ்து தே ।
ப்ருச்சாமி த்வாம் ஹரிஶ்ரேஷ்ட ப்ரியா ராமகதா ஹி மே ॥ 18

குணான்ராமஸ்ய கதய ப்ரியஸ்ய மம வானர ।
சித்தம் ஹரஸி மே ஸௌம்ய நதீகூலம் யதா ரய: ॥ 19

அஹோ ஸ்வப்னஸ்ய ஸுகதா யாஹமேவம் சிராஹ்ருதா ।
ப்ரேஷிதம் நாம பஶ்யாமி ராகவேண வனௌகஸம் ॥ 20

---

மனதிற்கு திருப்தி ஏற்பட்டதால் ராவணன் என்று நினைத்தது தவறு என்று ஊஹிக்கிருள். அல்லது நான் எப்படி ஶங்கையை அடைந்தேனே அது அப்படியல்ல. ஏனெனில், உன்னை கண்டதால் என் மனதிற்கு ஸந்தோஷம் உண்டாயிற்று. (17)

நீ ராமனுடைய தூதனுக இங்கு வந்திருக்கும் பக்ஷத்தில் உனக்கு மங்களமுண்டாகட்டும். ஓ ஹரிஶ்ரேஷ்டனே உன்னை கேட்கிறேன், எனக்கு ராமசரித்திரமானது மிகவும் ப்ரியமானதல்லவா? (18)

ஓ வானர, என் ப்ரியமான ராமனுடைய கல்யாண குணங்களை சொல்லும் ஓ அழகு வாய்ந்தவனே, நதியின் கரையை வெள்ளம்போல் என் மனதை அபகரிக்கிருய் என்று சொன்னுள். (19)

இங்கு ராமனுடைய தூதன் வந்தது பொருந்ாது என்று நினைத்து மறுபடியும் பலவிதமாய் ஸந்தேஹப்படுகிருள். யாதொரு நான் வெகு காலத்திற்கு முன்பே இங்கு அபஹரிக்கப்பட்டு வந்துவிட்டேனே, அந்த நான் ஸ்வப்னத்தில் ஸ்ரீராகவனுல் அனுப்பப்பட்ட குரங்கை பார்க்கிறேன். ஸ்வப்னத்திற்கு இவ்வளவு ஸுகத்தைக் கொடுக்கும் தன்மையா? இது ஆஶ்சர்யம். (20)

स्वप्नेऽपि यद्यहं वीरं राघवं सहलक्ष्मणम् ।
पश्येयं नावसीदेयं स्वप्नोऽपि मम मत्सरी ॥ २१

नाहं स्वप्नमिमं मन्ये स्वप्ने दृष्ट्वा हि वानरम् ।
न शक्योऽभ्युदयः प्राप्तुं प्राप्तश्चाभ्युदयो मम ॥ २२

किंनु स्याच्चित्तमोहोऽयं भवेद्वातगतिस्त्वियम् ।
उन्मादजो विकारो वा स्यादियं मृगतृष्णिका ॥ २३

अथवा नायमुन्मादो मोहोऽप्युन्मादलक्षणः ।
संबुध्ये चाहमात्मानमिमं चापि वनौकसम् ॥ २४

ஸ்வப்னேऽபி யத்யஹம் வீரம் ராகவம் ஸஹலக்ஷ்மணம் ।
பஶ்யேயம் நாவஸீதேயம் ஸ்வப்னோऽபி மம மத்ஸரீ ॥ 21

நாஹம் ஸ்வப்னமிமம் மன்யே ஸ்வப்னே த்ருஷ்ட்வா ஹி வானரம் ।
ந ஶக்யோऽப்யுதய: ப்ராப்தும் ப்ராப்தஶ்சாப்யுதயோ மம ॥ 22

கிம்நு ஸ்யாச்சித்தமோஹோऽயம் பவேத்வாதகதிஸ்த்வியம் ।
உன்மாதஜோ விகாரோ வா ஸ்யாதியம் ம்ருகத்ருஷ்ணிகா ॥ 23

அதவா நாயமுன்மாதோ மோஹோऽப்யுன்மாதலக்ஷண: ।
ஸம்புத்யே சாஹமாத்மானமிமம் சாபி வனௌகஸம் ॥ 24

---

*ஸ்வப்னத்திலாவது நான் லக்ஷ்மணனோடு கூடிய வீரனை ஸ்ரீராகவனை கண்டேனானால் மடியமாட்டேன். ஸ்வப்னத்திற்கும் என்னிடத்தில் த்வேஷமே.* (21)

*நான் இதை ஸ்வப்னமாக நினைக்கவில்லை. ஸ்வப்னத்தில் குரங்கை பார்த்தால் க்ஷேமத்தை யடையமுடியாதே. எனக்கு க்ஷேமம் உண்டாகிவிட்டதே? அதாவது ஸ்ரீராம சரித்ரம் கேட்டதாலே தனக்கு எல்லா க்ஷேமங்களும் உண்டாகிவிட்டதாக எண்ணி இம்மாதிரி சொல்லுகிறாள் என்பது பொருள்.* (22)

*ஸ்வப்னம் இல்லையென்று தீர்மானம் செய்துவிட்டு, இடைவிடாது ராமனை தியானித்ததால் ஸ்ரீராமனால் அனுப்பித்த தூதன் வந்து பேசுவதுபோல் ஏற்படும் புத்தியின் மயக்கமாக இது இருக்குமோ, அல்லது பிசாசின் கோளாறினால் ஏற்பட்ட வாத தோஷமாக இது இருக்குமோ, அல்லது ராமனை விட்டு பிரிந்து அவரிடத்தில் வைத்த அதிக ஆசையினால் ஏற்பட்ட விகாரமாக இது இருக்குமோ, அல்லது கானல் பிரதேசத்தில் தோன்றும் ஜலம்போல் தோன்றுகிறதோ என இவ்விதம் நான்கு விதமான மோஹங்களோ என்று ஊஹிக்கிறாள்.* (23)

*அல்லது இந்த குரங்குவந்து பேசினதுபோல் தோன்றும் தோற்றமானது ராமனை விட்டு பிரிந்ததால் ஏற்பட்ட அதிக ஆசை*

इत्येवं बहुधा सीता संप्रधार्य बलाबलम् ।
रक्षसां कामरूपत्वान्मेने तं राक्षसाधिपम् ॥ २५

एतां बुद्धिं तदा कृत्वा सीता सा तनुमध्यमा ।
न प्रतिव्याजहाराथ वानरं जनकात्मजा ॥ २६

सीतायाश्चिन्तितं बुद्ध्वा हनुमान्मारुतात्मजः ।
श्रोत्रानुकूलैर्वचनैस्तदा तां संप्रहर्षयत् ॥ २७

இத்யேவம் பஹுதா ஸீதா ஸம்ப்ரதார்ய பலாபலம் ।
ரக்ஷஸாம் காமரூபத்வான்மேனே தம் ராக்ஷஸாதிபம் ॥ 25

ஏதாம் புத்திம் ததா க்ருத்வா ஸீதா ஸா தனுமத்யமா ।
ந ப்ரதிவ்யாஜஹாராத வானரம் ஜனகாத்மஜா ॥ 26

ஸீதாயாஸ்சிந்திதம் புத்வா ஹனுமான்மாருதாத்மஜ: ।
ஸ்ரோத்ரானுகூலைர்வசனைஸ்ததா தாம் ஸம்ப்ரஹர்ஷயத் ॥ 27

---

யாதுண்டான விகாரமும் அல்ல. ராமனை இடைவிடாது தியானித்ததால், தூதன் வந்து பேசுவதுபோல் தோன்றிய தோற்றமுமல்ல; ஏனென்றால் அந்த தோற்றமும் கீழ் சொல்லிய பிரிவினால் ஏற்பட்ட விசாரத்தின் குறியுள்ளதுதான். நான் என்னையும் இங்கிருக்கும் குரங்கையும் நன்கு அறிகிறேன். இங்கு மோஹத்தையும் உன்மாதவிகாரத்தையும் இல்லையென்று சொன்னதாலேயே பிசாசினால் ஏற்பட்ட கோளாறு என்றதும் கானல் ஜலம்போல் என்றதும் இல்லையென்று கிடைக்கிறது. (24)

இம்மாதிரி பலவிதமாய் ஸீதையானவள் ராக்ஷஸர்களின் காமரூப பலத்தையும் ராமதூதனை குரங்குக்கு இங்கு வருவதற்கான பலமின்மையையும் யோசித்து ராக்ஷஸர்கள் நினைத்த ரூபத்தை எடுத்துக்கொள்ளும் சக்தியுள்ளவராகையால் அந்த ஹனுமாரை ராக்ஷஸர்களுக்கு அதிபனான ராவணன் என்று நினைத்தாள். (25)

ஜனகனுடைய பெண்ணும் சிறுத்த இடையுள்ளவளுமான அந்த ஸீதை அப்பொழுது இம்மாதிரி எண்ணி பிறகு ஹனுமாருடன் பேசவில்லை. (26)

வாயுபுத்ரனான ஹனுமார் ஸீதையின் எண்ணத்தை யுணர்ந்து அவள் காதுக்கு அனுகூலமான வார்த்தைகளால் அப்பொழுது அவளை ஸந்தோஷப்படும்படி செய்தார். (27)

இங்கு ஸ்ரீஸீதாதேவியானவள் ஹனுமாரை ராவணன் என்று ஸந்தேஹித்து அவரை பாராமல் திரும்பிவிட்டாள். அப்பொழுது ஹனுமாருக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. தன்னை ராம

आदित्य इव तेजस्वी लोककान्तः शशी यथा ।
राजा सर्वस्य लोकस्य देवो वैश्रवणो यथा ॥
विक्रमेणोपपन्नश्च यथा विष्णुर्महायशाः ॥ २८

सत्यवादी मधुरवाग्देवो वाचस्पतिर्यथा ।
रूपवान्सुभगः श्रीमान्कन्दर्प इव मूर्तिमान् ॥ २९

स्थानक्रोधः प्रहर्ता च श्रेष्ठो लोके महारथः ।
बाहुच्छायामवष्टब्धो यस्य लोको महात्मनः ॥ ३०

ஆதித்ய இவ தேஜஸ்வீ லோககாந்த: ஶஶீ யதா ।
ராஜா ஸர்வஸ்ய லோகஸ்ய தேவோ வைஶ்ரவணோ யதா ॥
விக்ரமேணோபபன்னஸ்ச யதா விஷ்ணுர்மஹாயஶா: ॥ 28

ஸத்யவாதீ மதுரவாக்தேவோ வாசஸ்பதிர்யதா ।
ரூபவான்ஸுபக: ஸ்ரீமான்கந்தர்ப இவ மூர்த்திமான் ॥ 29

ஸ்தானக்ரோத: ப்ரஹர்த்தா ச ஶ்ரேஷ்டோ லோகே மஹாரத: ।
பாஹுச்சாயாமவஷ்டப்தோ யஸ்ய லோகோ மஹாத்மன: ॥

---

தூதன் என்று ஹனுமார் திருப்பிச் சொன்னால் அவள் இல்லை யென்று சொல்லுவாள். இவருக்கு லங்கையில் ஸாக்ஷி ஏது? ஆகையால் இம்மாதிரியான நிலையில் மஹாபுத்திமானை ஹனுமார் ஸ்ரீராமனுடைய சரித்திரமேதான் கதியென்று தீர்மானம் செய்து திரும்பவும் ஸ்ரீராமசரித்திரத்தையே சொல்லுகிறார். ஸ்ரீராமன் ஸூர்யனை போல் தேஜஸ் வாய்ந்தவன். சந்திரனைப்போல் உலகத்தை குளிரச்செய்கிறவன். தேவனான குபேரனைபோல் எல்லா உலகத்திற்கும் அரசன். பராக்ரமத்தில் மஹாகீர்த்திமானான மஹா விஷ்ணு போன்றவன். (28)

ஸத்யம் பேசுகிறவன். இனிமையான வாக்குடையவன். பேச்சில் தேவனான பிரஹஸ்பதி போன்றவன். உருவத்துடன் கூடிய மன்மதன்போல் அழகு வாய்ந்தவன். மஹாபாக்யமுள்ளவன்; சோபையுடன் கூடியவன். இங்கு மன்மதனை போன்றவன் என்று ஹனுமார் சொல்லியது தேவிக்கு அப்பொழுதே ஸ்ரீராமனிடம் சென்று உயர்ந்த புஷ்பமாலையை ஸ்ரீராமன் கழுத்தில் போடவேண்டுமென்ற தோற்றம் ஏற்படும்படிச் செய்தது போலாம். புத்தி குறைவுள்ள தூதனாகயிருந்தால் உம்மை விட்டு பிரிந்த நாயகன் கிழத்தன்மையடைந்து இளைத்து மனம் குன்றி மிக கஷ்டதசையிலிருக்கிறார் என்று கூறி நாயகிக்கு செல்லவேண்டாமென்றும், இங்கேயே ஜீவனை விட்டுவிடுவோமென்றும் தோன்றும்படி செய்துவிடுவான். (29)

உசிதமான ஸமயத்தில் கோபங்கொள்வான். அப்படியே சத்ருக்களையும் அழிப்பான். உலகில் சிறந்த மஹாரதன். மஹாத்

अपकृष्याश्रमपदान्मृगरूपेण राघवम् ।
शून्ये येनापनीतासि तस्य द्रक्ष्यसि यत्फलम् ॥ ३१

न चिराद्रावणं संख्ये यो वधिष्यति वीर्यवान् ।
रोषप्रमुक्तैरिषुभिर्ज्वलद्भिरिव पावकैः ॥ ३२

तेनाहं प्रेषितो दूतस्त्वत्सकाशमिहागतः ।
त्वद्वियोगेन दुःखार्तः स त्वां कौशलमब्रवीत् ॥ ३३

लक्ष्मणश्च महातेजाः सुमित्रानन्दवर्धनः ।
अभिवाद्य महाबाहुः स त्वां कौशलमब्रवीत् ॥ ३४

रामस्य च सखा देवि सुग्रीवो नाम वानरः ।
राजा वानरमुख्यानां स त्वां कौशलमब्रवीत् ॥ ३५

அபக்ருஷ்யாஶ்ரமபதான்ம்ருகரூபேண ராகவம் ।
ஶூன்யே யேனாபநீதாஸி தஸ்ய த்ரக்ஷ்யஸி யத்பலம் ॥ 31

ந சிராத்ராவணம் ஸம்க்யே யோ வதிஷ்யதி வீர்யவான் ।
ரோஷப்ரமுக்தைரிஷுபிர்ஜ்வலத்பிரிவ பாவகை: ॥ 32

தேனாஹம் ப்ரேஷிதோ தூதஸ்த்வத்ஸகாஶமிஹாகத: ।
த்வத்வியோகேன து:கார்த்த: ஸ த்வாம் கௌஶலமப்ரவீத் ॥ 33

லக்ஷ்மணஶ்ச மஹாதேஜா: ஸுமித்ராநந்தவர்தன: ।
அபிவாத்ய மஹாபாஹு: ஸ த்வாம் கௌஶலமப்ரவீத் ॥ 34

ராமஸ்ய ச ஸகா தேவி ஸுக்ரீவோ நாம வானர:
ராஜா வானரமுக்யானாம் ஸ த்வாம் கௌஶலமப்ரவீத் ॥ 35

---

மாவான எவனுடைய கைகளின் நிழலை அண்டி உலகம் ஸுக மாகயிருக்கிறதோ அப்படிப்பட்டவன் ராமன். (30)

சிறந்த மானைக்கொண்டு ஸ்ரீராகவனை ஆஸ்ரமத்திலிருந்து வெளியேறும்படி செய்வித்து ஒருவருமில்லாத ஸமயத்தில் ராவணனால் நீ அபஹரிக்கப்பட்டாயே அந்த ராவணன் அனுபவிக்கும் பலனை நீ பார்க்கப்போகிறாய். (31)

வீர்யவானான எந்த ராமன் கோபத்தால் விடப்பட்டதுகளும், அக்னிபோல் ஜ்வலிக்கின்றதுகளுமான பாணங்களால், சீக்கிரம் ராவணனை வதம் செய்யப் போகின்றானோ அந்த ராமனால் அனுப்பப்பட்ட தூதன் நான்; உங்களுடைய ஸமீபத்திற்கு இங்கு வந்திருக்கிறேன். உங்கள் பிரிவின் துக்கத்தினால் பீடிக்கப்பட்ட அந்த ராமன் உங்களை க்ஷேமம் விசாரிக்கச்சொன்னார். (32, 33)

மஹாதேஜஸ்வியும் ஸுமித்ரையின் ஆனந்தத்தை வளர்ப்பவனும் பெருத்த கைகளுள்ளவனுமான அந்த லக்ஷ்மணனும் நமஸ்கரித்து தங்களிடம் க்ஷேமத்தை கேட்கச் சொன்னார். (34)

ஓ தேவியே, ராமனுக்கு ஸ்நேஹிதனும், சிறந்த வானரர்

नित्यं स्मरति रामस्त्वां ससुग्रीवः सलक्ष्मणः ।
दिष्ट्या जीवसि वैदेहि राक्षसीवशमागता ॥ ३६

न चिराद्द्रक्ष्यसे रामं लक्ष्मणं च महाबलम् ।
मध्ये वानरकोटीनां सुग्रीवं चामितौजसम् ॥ ३७

अहं सुग्रीवसचिवो हनुमान्नाम वानरः ।
प्रविष्टो नगरीं लङ्कां लङ्घयित्वा महोदधिम् ॥ ३८

कृत्वा मूर्ध्नि पदन्यासं रावणस्य दुरात्मनः ।
त्वां द्रष्टुमुपयातोऽहं समाश्रित्य पराक्रमम् ॥ ३९

நித்யம் ஸ்மரதி ராமஸ்த்வாம் ஸஸுக்ரீவ: ஸலக்ஷ்மண: ।
திஷ்ட்யா ஜீவஸி வைதேஹி ராக்ஷஸீவஶமாகதா ॥ 36

ந சிராத்த்ரக்ஷ்யஸே ராமம் லக்ஷ்மணம் ச மஹாபலம் ।
மத்யே வானரகோடீனாம் ஸுக்ரீவம் சாமிதௌஜஸம் ॥ 37

அஹம் ஸுக்ரீவஸசிவோ ஹனுமான்நாம வானர: ।
ப்ரவிஷ்டோ நகரீம் லங்காம் லங்கயித்வா மஹோததிம் ॥ 38

க்ருத்வா மூர்த்னி பதந்யாஸம் ராவணஸ்ய துராத்மன: ।
த்வாம் த்ரஷ்டுமுபயாதோऽஹம் ஸமாஶ்ரித்ய பராக்ரமம் ॥ 39

---

களுக்கு ராஜாவும், ஸுக்ரீவன் என்று ப்ரஸித்திபெற்றவனுமான அந்த வானரனும் உங்களை க்ஷேமம் விசாரிக்கச் சொன்னார். (35)

ஸுக்ரீவனுடனும், லக்ஷ்மணனுடனும் கூடிய ஸ்ரீராமன் தங்களை நித்யம் நினைக்கிறார். ஓ வைதேஹி! ராக்ஷஸிகளின் வசத்தையடைந்து தெய்வத்தின் அனுக்ரஹத்தினால் நீ உயிருடன் இருக்கிறாய். (36)

வெகு சீக்கிரத்தில் ஸ்ரீராமனையும் மஹத்தான பலம் வாய்ந்த லக்ஷ்மணனையும் கோடிக்கணக்கான குரங்குகளின் நடுவில் அளவற்ற தேஜஸ்ஸுள்ள ஸுக்ரீவனையும் பார்க்கப் போகிறாய். (37)

நான் ஸுக்ரீவனுக்கு மந்திரி. ஹனுமான் என்ற குரங்கு. ஸமுத்திரத்தைத் தாண்டி லங்கா நகரத்தில் புகுந்தேன். (38)

துஷ்டனான ராவணனுடைய தலையில் கால் வைத்து பராக்ரமத்தை யடைந்து தங்களைப் பார்ப்பதற்காக நான் இங்கு வந்தேன். (39)

नाहमस्मि तथा देवि यथा मामवगच्छसि।
विशङ्का त्यज्यतामेषा श्रद्धत्स्व वदतो मम॥ ४०

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
चतुस्त्रिंशः सर्गः॥ ३४॥

நாஹமஸ்மி ததா தேவி யதா மாமவகச்சஸி।
விஶங்கா த்யஜ்யதாமேஷா ஶ்ரத்தத்ஸ்வ வததோ மம॥ 40

இத்யார்ஷே ஶ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே சதுஸ்த்ரிம்ஶ: ஸர்க:॥

---

ஓ தேவி! ராமதூதனை என்னை ராவணனென்று தாங்கள் நினைத்தீர்களே! நான் அப்படியல்ல. இந்த ஸந்தேஹத்தை விட்டு விடுங்கள். எனது வார்த்தையை நம்புங்கள் என்று ஹனுமார் கூறினார். (40)

முப்பத்திநான்காவது ஸர்கம் முற்றிற்று.

---

ஸ்ரீ:

पञ्चत्रिंशः सर्गः — முப்பத்தைந்தாவது ஸர்கம் ॥ ३५ ॥

# "विश्वासोत्पादनम्"

# நம்பிக்கை ஏற்படுத்தல்.

तां तु रामकथां श्रुत्वा वैदेही वानरर्षभात् ।
उवाच वचनं सान्त्वमिदं मधुरया गिरा ॥ १

क्व ते रामेण संसर्गः कथं जानासि लक्ष्मणम् ।
वानराणां नराणां च कथमासीत्समागमः ॥ २

यानि रामस्य लिङ्गानि लक्ष्मणस्य च वानर ।
तानि भूयः समाचक्ष्व न मां शोकः समाविशेत् ॥ ३

कीदृशं तस्य संस्थानं रूपं रामस्य कीदृशम् ।
कथमूरू कथं बाहू लक्ष्मणस्य च शंस मे ॥ ४

தாம் து ராமகதாம் ஶ்ருத்வா வைதேஹீ வானரர்ஷபாத் ।
உவாச வசனம் ஸாந்த்வமிதம் மதுரயா கிரா । 1

க்வ தே ராமேண ஸம்ஸர்க: கதம் ஜாநாஸி லக்ஷ்மணம் ।
வானராணாம் நராணாம் ச கதமாஸீத்ஸமாகம: ॥ 2

யானி ராமஸ்ய லிங்கானி லக்ஷ்மணஸ்ய ச வானர ।
தானி பூய: ஸமாசக்ஷ்வ ந மாம் ஶோக: ஸமாவிஶேத் ॥ 3

கீத்ருஶம் தஸ்ய ஸம்ஸ்தானம் ரூபம் ராமஸ்ய கீத்ருஶம் ।
கதமூரூ கதம் பாஹூ லக்ஷ்மணஸ்ய ச ஶம்ஸ மே ॥ 4

---

வைதேஹியான ஸீதையானவள் வானரஶ்ரேஷ்டனான ஹனுமாரிடமிருந்து மிகச்சிறந்த அந்த ராமகதையைக் கேட்டு இனிமையான வார்த்தையுடன் தெளிந்து பேசினாள். (1)

உனக்கு ராமனுடன் எங்கு சேர்க்கை ஏற்பட்டது? லக்ஷ்மணனை நீ எப்படி அறிந்தாய்? குரங்குகளுக்கும் மனிதர்களுக்கும் எப்படி ஸ்நேஹம் உண்டாகும்? (2)

ஓ வானர! ராமனுடையவும், லக்ஷ்மணனுடையவும் யாதொரு அடையாளங்கள் உண்டோ அவைகளை மறுபடியும் நன்கு சொல்லு. இதுவரையில் ராமசரித்திரம் கேட்டதால் உள்ளிலிருந்த சோகம் போய்விட்டது. மறுபடி கேட்பதால் திரும்ப சோகம் என்னை வந்து யடையாமலிருக்கும். (3)

அந்த ராம லக்ஷ்மணர்களுடைய அங்கங்களின் அமைப்பு எப்படிப்பட்டது? நிறம் எம்மாதிரியானது? துடைகள் எப்படிப்

एवमुक्तस्तु वैदेह्या हनुमान्मारुतात्मजः ।
ततो रामं यथातत्वमाख्यातुमुपचक्रमे ॥ ५

जानन्ती बत दिष्ट्या मां वैदेहि परिपृच्छसि ।
भर्तुः कमलपत्राक्षि संस्थानं लक्ष्मणस्य च ॥ ६

यानि रामस्य चिह्नानि लक्ष्मणस्य च यानि वै ।
लक्षितानि विशालाक्षि वदतः शृणु तानि मे ॥ ७

रामः कमलपत्राक्षः सर्वसत्वमनोहरः ।
रूपदाक्षिण्यसंपन्नः प्रसूतो जनकात्मजे ॥ ८

ஏவமுக்தஸ்து வைதேஹ்யா ஹனுமான்மாருதாத்மஜ: ।
ததோ ராமம் யதாதத்வம் ஆக்யாதுமுபசக்ரமே ॥ 5

ஜானந்தீ பத திஷ்ட்யா மாம் வைதேஹி பரிப்ருச்சஸி ।
பர்த்து: கமலபத்ராக்ஷி ஸம்ஸ்தானம் லக்ஷ்மணஸ்ய ச ॥ 6

யானி ராமஸ்ய சின்ஹானி லக்ஷ்மணஸ்ய ச யானி வை ।
லக்ஷிதானி விஶாலாக்ஷி வதத: ஶ்ருணு தானி மே ॥ 7

ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்வமனோஹர: ।
ரூபதாக்ஷிண்யஸம்பன்ன: ப்ரஸூதோ ஜனகாத்மஜே ॥ 8

---

பட்டவைகள்? கைகள் எம்மாதிரியானவைகள்? இவற்றையும் எனக்கு சொல்லவேண்டும். (4)

ஸீதையால் இம்மாதிரி கேட்கப்பட்ட வாயுபுத்ரரான ஹனுமார் பிறகு ராமனைப்பற்றி உள்ளதை உள்ளவாறு சொல்ல ஆரம்பித்தார். (5)

ஓ வைதேஹி! ஓ செந்தாமரை இதழ் போன்ற கண்ணுள்ளவளே! தங்கள் நாயகருடைய ரூபத்தையும் லக்ஷ்மணனுடைய ரூபத்தையும் நன்கறிந்த தாங்கள் நான் செய்த பாக்யத்தால் என்னை சொல்லும்படி செய்கிறீர்கள். (6)

ராமனுடைய அடையாளங்களையும் லக்ஷ்மணனுடைய அடையாளங்களையும், ஓ விசாலாக்ஷி, நான் பார்த்தபடி சொல்லுகிறேன். கேளுங்கள். (7)

ஸ்ரீராமன் செந்தாமரை இதழ்போன்ற கண்களுள்ளவன். எல்லா பிராணிகளுடைய மனதையும் அபஹரிக்கிறவன். அதாவது கிளைக்குக்கிளை தாவும் குரங்கான என் மனதைகூட அபஹரிக்கிறவன். சரீரத்தின் அழகு ஆத்ம குணம் இவைகள் நிறைந்தவன். ஓ ஜனகனுடைய பெண்ணே! இவைகளெல்லாம் ஸ்ரீராமன் பிறக்கும்பொழுதே அவனுடன் கூடவந்தவைகளாகும். (இங்கு ஜனகனுடைய பெண்ணே யென்று அழைத்ததால் இந்த மாதிரி அழகு,

तेजसाऽऽदित्यसंकाशः क्षमया पृथिवीसमः ।
बृहस्पतिसमो बुद्ध्या यशसा वासवोपमः ॥ ९

रक्षिता जीवलोकस्य स्वजनस्याभिरक्षिता ।
रक्षिता स्वस्य वृत्तस्य धर्मस्य च परंतपः ॥ १०

रामो भामिनि लोकस्य चातुर्वर्ण्यस्य रक्षिता ।
मर्यादानां च लोकस्य कर्ता कारयिता च सः ॥ ११

अर्चिष्मानर्चितोऽत्यर्थं ब्रह्मचर्यव्रते स्थितः ।
साधूनामुपकारज्ञः प्रचारज्ञश्च कर्मणाम् ॥ १२

தேஜஸாऽऽதித்யஸம்காஶ: க்ஷமயா ப்ருதிவீஸம: ।
ப்ருஹஸ்பதிஸமோ புத்யா யஶஸா வாஸவோபம: ॥ 9

ரக்ஷிதா ஜீவலோகஸ்ய ஸ்வஜனஸ்யாபிரக்ஷிதா ।
ரக்ஷிதா ஸ்வஸ்ய வ்ருத்தஸ்ய தர்மஸ்ய ச பரம்தப: ॥ 10

ராமோ பாமினி லோகஸ்ய சாதுர்வர்ண்யஸ்ய ரக்ஷிதா ।
மர்யாதானும் ச லோகஸ்ய கர்த்தா காரயிதா ச ஸ: ॥ 11

அர்சிஷ்மானர்சிதோऽத்யர்த்தம் ப்ரம்ஹசர்யவ்ரதே ஸ்தித: ।
ஸாதூனுமுபகாரக்ஞ: ப்ரசாரக்ஞஶ்ச கர்மணும் ॥ 12

---

குணங்கள் வெறொருவருக்கும் கிடையாது. தங்களுக்கு மட்டும் தான் உண்டு என்பது பொருள்.) (8)

ஓ தாயே! ஸ்ரீராமன் தேஜஸில் ஸூர்யன் போன்றவன். பொறுமையில் பூமி போன்றவன். புத்தியில் பிரஹஸ்பதி போன்றவன். கீர்த்தியில் இந்த்ரன் போன்றவன். (9)

உலகத்தை கார்க்கிறவன். தனது பந்துக்களை நன்கு ரக்ஷிப்பவன். தங்கள் ஆசாரத்தையும், தர்மத்தையும் கார்க்கிறவன். சத்ருக்களையும் அழிப்பவன். (10)

ஓ அழகு வாய்ந்தவளே! அந்த ராமன் உலகத்தையும் நான்கு வர்ணங்களிலுள்ள ஜனங்களையும் ரக்ஷிப்பவன். உலகத்தின் ஸ்திதியை செய்கிறவன். உலகத்தின் நியாயமான மார்க்கத்தை செய்கிறவன். உலகத்தை நியாயமான வழியில் செல்லும்படி உபதேசிக்கிறவன். (11)

நல்ல காந்தியுள்ளவன். உலகத்தால் நன்கு பூஜிக்கப்பட்டவன். பிரம்மசர்யவிரதத்திலிருப்பவன். நல்ல ஆசாரமுள்ளவர்களுக்கு உபகரிக்கும் வழியை யறிந்தவன். புண்யகர்மாக்களை உலகத்தில் பரப்பத்தெரிந்தவன். (12)

राजविद्याविनीतश्च ब्राह्मणानामुपासिता।
श्रुतवाञ्शीलसंपन्नो विनीतश्च परंतपः॥ १३

यजुर्वेदविनीतश्च वेदविद्भिः सुपूजितः।
धनुर्वेदे च वेदेषु वेदाङ्गेषु च निष्ठितः॥ १४

विपुलांसो महाबाहुः कम्बुग्रीवः शुभाननः।
गूढजत्रुः सुताम्राक्षो रामो देवि जनैः श्रुतः॥ १५

दुन्दुभिस्वननिर्घोषः स्निग्धवर्णः प्रतापवान्।
समः समविभक्ताङ्गो वर्णं श्यामं समाश्रितः॥ १६

ராஜவித்யாவிநீதஶ்ச ப்ராம்ஹணாநாமுபாஸிதா ।
ஶ்ருதவாஞ்ஶீலஸம்பந்நோ விநீதஶ்ச பரந்தப: ॥ 13

யஜுர்வேதவிநீதஶ்ச வேதவித்பி: ஸுபூஜித: ।
தநுர்வேதே ச வேதேஷு வேதாங்கேஷு ச நிஷ்டித: ॥ 14

விபுலாம்ஸோ மஹாபாஹு: கம்புக்ரீவ: ஶுபாநந: ।
கூடஜத்ரு: ஸுதாம்ராக்ஷோ ராமோ தேவி ஜநை: ஶ்ருத: ॥ 15

துந்துபிஸ்வநநிர்கோஷ: ஸ்நிக்தவர்ண: ப்ரதாபவாந் ।
ஸம: ஸமவிபக்தாங்கோ வர்ணம் ஶ்யாமம் ஸமாஶ்ரித: ॥ 16

---

அரசர்களுடைய வித்தையாகிற அர்த்த சாஸ்திரத்தில் நன்கு பயிற்சி பெற்றவன். வஸிஷ்டர் முதலிய ப்ராமணர்களை பூஜிப்பவன். பெரியோர்களிடத்தில் ஸர்வ தர்மங்களையும் கேட்டவன். நல்ல நடையுள்ளவன். விநயமுள்ளவன். சத்ருக்களை யழிப்பவன். (13)

யஜுர்வேதத்தில் மிகப்பற்றுள்ளவன். இதனால் ஸ்ரீராமன் யஜுர்வேதி யென்று ஸூசிப்பிக்கப்படுகிறது. வேதமறிந்தவர்களால் நன்கு பூஜிக்கப்பட்டவன். தனுர்வேதத்திலும் மற்றுமுள்ள வேதங்களிலும் வேதத்தின் அங்கங்களான சிக்ஷை முதலியவற்றிலும் நன்கு ஈடுபட்டவன். (14)

இதுவரையில் ஆத்ம குணங்களைச் சொல்லி, இனி அவன் சரீரத்தின் குணங்களைச் சொல்லத் தொடங்குகிறார்.

ஓ தேவி! உயர்ந்த தோள் உள்ளவரும், பெருத்த கைகள் உள்ளவரும், சங்குபோன்ற கழுத்துள்ளவரும், அழகிய முகமுள்ளவரும், மறைந்த தோள் எலும்புள்ளவரும், சிவந்த கண்கள் உள்ளவருமான ஸ்ரீராமன் உலகமறிந்தவர். (15)

துந்துபி வாத்யத்தின் நாதம் போன்ற குரல் உள்ளவர், அழகான நிறமுள்ளவர், ப்ரதாபம் வாய்ந்தவர், ஏற்றத்தாழ்வற்ற அங்கங்களின் அளவு உள்ளவர், நீலநிறமுள்ளவர். (16)

त्रिस्थिरस्त्रिप्रलम्बश्च त्रिसमस्त्रिषु चोन्नतः।
त्रिताम्रस्त्रिषु च स्निग्धो गम्भीरस्त्रिषु नित्यशः॥ १७

त्रिवलीवांस्त्र्यवनतश्चतुर्व्यङ्गस्त्रिशीर्षवान्।
चतुष्कलश्चतुर्लेखश्चतुष्किष्कुश्चतुःसमः॥ १८

चतुर्दशसमद्वन्द्वश्चतुर्दंष्ट्रश्चतुर्गतिः।
महोष्ठहनुनासश्च पञ्चस्निग्धोऽष्टवंशवान्॥ १९

த்ரிஸ்திரஸ்த்ரிப்ரலம்பஶ்ச த்ரிஸமஸ்த்ரிஷு சோன்னத: ।
த்ரிதாம்ரஸ்த்ரிஷு ச ஸ்நிக்தோ கம்பீரஸ்த்ரிஷு நித்யஶ: ॥ 17

த்ரிவலீவாம்ஸ்த்ர்யவநதஶ்சதுர்வ்யங்கஸ்த்ரிஶீர்ஷவான் ।
சதுஷ்கலஶ்சதுர்லேகஶ்சதுஷ்கிஷ்குஶ்சது:ஸம: ॥ 18

சதுர்தஶஸமத்வந்த்வஶ்சதுர்தம்ஷ்ட்ரஶ்சதுர்கதி: ।
மஹோஷ்டஹனுநாஸஶ்ச பஞ்சஸ்நிக்தோऽஷ்ட வம்ஶவான் ॥

---

உறுதியான மூன்று இடங்களையுள்ளவர், அதாவது மார்பு, மணிக்கட்டு, கைமுஷ்டி இம்மூன்றும் உறுதியாயுள்ளவர். மூன்றில் நீளமுள்ளவர். அதாவது நீண்ட புருவம், நீண்ட கைகள், நீண்ட அண்டம். மூன்று இடங்களில் சமமானவர். கேசத்தின் நுனி, வ்ருஷணம், முழங்கால்கள் இவைகளில் சமமானவர். மூன்றில் உயரமானவர். வயிறு, தொப்புள், மார்பு என்ற மூன்றிடங்களும் உயர்ந்திருப்பவர். மூன்று இடங்களில் சிவந்தவர். அதாவது கடைக்கண், உள்ளங்கை, உள்ளங்கால் இது மூன்றிலும் சிவந்தவர். மூன்று இடங்களில் மழமழப்புள்ளவர். அதாவது கால்ரேகை, தலைமயிர், ஆண்குறி இதுகளில் மழமழப்புள்ளவர். மூன்றில் கம்பீரமானவர். அதாவது பேச்சு, பலம், தொப்புள் மூன்றிலும் எப்பொழுதும் ஆழமாயுள்ளவர். (17)

கழுத்திலும், வயிற்றிலும் மூன்று மடிப்பு சதை யுள்ளவர். மூன்றிடங்களில் பள்ளமுள்ளவர். அதாவது ஸ்தனம், ஸ்தனத்தின் நுனி, கால்ரேகை இம்மூன்றும் அமுங்கியவை. நான்கு இடங்களில் குறுகியவர். அதாவது கழுத்து, ஆண்குறி, முதுகு, முழங்கால் இவைகள் குறுகியவை. மூன்று சுழிகளுடன் கூடிய சிரஸை யுடையவர். கட்டைவிரல் அடியில் நான்கு வேதங்களை கற்கும் யோகத்தை காட்டும் நான்கு ரேகைகளையுடையவர்; நெற்றியில் நான்கு ரேகைகள் உள்ளவர், நான்கு முழம் உயரமுள்ளவர், அதாவது தொண்ணூற்றாறங்குல முடையவர், நான்கில் சமமானவர், அதாவது கைகள், முழங்கால்கள், துடைகள், கன்னங்கள் இவைகள் சமமானவை. (18)

பதினான்கு இடங்களில் சமமாயிருப்பவர். அதாவது இரண்டு புருவங்கள், இரண்டு மூக்கு துவாரங்கள், இரண்டு

दशपद्मो दशबृहस्त्रिभिर्व्याप्तो द्विशुक्लवान् ।
षडुन्नतो नवतनुस्त्रिभिर्व्याप्नोति राघवः ॥ २०

सत्यधर्मपरः श्रीमान्संग्रहानुग्रहे रतः ।
देशकालविभागज्ञः सर्वलोकप्रियंवदः ॥ २१

தஶபத்மோ தஶப்ருஹஸ்த்ரிபிர்வ்யாப்தோ த்விஶுக்லவான் ।
ஷடுன்னதோ நவதனுஸ்த்ரிபிர்வ்யாப்னோதி ராகவ: ॥ 20

ஸத்யதர்மபர: ஶ்ரீமான்ஸம்க்ரஹானுக்ரஹே ரத: ।
தேஶகாலவிபாகக்ஞ: ஸர்வலோகப்ரியம்வத: ॥ 21

---

கண்கள், இரண்டு காதுகள், இரண்டு உதடுகள், இரண்டு ஸ்தனங்களின் நுனிகள், இரண்டு முழங்கைகள், இரண்டு மணிக்கட்டுகள், இரண்டு முழங்கால்கள், இரண்டு வ்ருஷணங்கள், இரண்டு பக்கத்து இடுப்புகள், இரண்டு கைகள், இரண்டு கால்கள், இரண்டு பின்புறத்தின் மேல்பாகங்கள் என்ற பதினான்கு இரட்டைகளும் சமமாக உள்ளவர். பற்களுடைய இரண்டு வரிசையின் கோடிகளிலும் நான்கு நான்கு தித்திப்பல்கள் உள்ளவர். நான்குகளின் நடையுடையவர். ஸிம்ஹம், புலி, யானை, காளைமாடு இவைகளின் நடையுடையவர். பெருத்த உதடு, கன்னம், மூக்கு இவைகளையுடையவர். ஐந்துகளில் பளபளப்புள்ளவர். அதாவது கேசம், கண், பல், தோல், உள்ளங்கால் என்கிற ஐந்திலும் பளபளப்புள்ளவர். எட்டுகளில் நீளமுள்ளவர். அதாவது முதுகெலும்பு, உடல், கைகள், கால்கள், விரல்கள், மூக்கு, கண்கள், ஆண்குறி என்ற எட்டுகளும் நீண்டவர். (19)

ஸ்ரீராகவன் பத்தில் தாமரை புஷ்பம் போன்றவர். அதாவது முகம், வாய், கண்கள், நாக்கு, உதடு, தாடை, ஸ்தனம், நகம், கைகால் இவைகள் தாமரை புஷ்பம் போன்றவைகள். பத்தில் பெருத்தவர். அதாவது மார்பு, தலை, நெற்றி, கழுத்து, தோள், புஜம், தொப்புள், பார்ஶ்வம், பின்தட்டு, குறல் என்ற பத்தும் பெருத்துள்ளது. மூன்றினால் உலகில் பரவியவர். அதாவது தேஜஸ், யஶஸ், ஐஶ்வர்யம் இம்மூன்றினாலும் உலகில் பிரஸித்தி பெற்றவர். இரண்டில் வெண்மையுள்ளவர். அதாவது பற்களிலும், கண்களிலும் வெண்மையுள்ளவர். ஆறில் உயர்ந்தவர். அதாவது கழுக்கட்டை, வயிறு, மார்பு, மூக்கு, தோள், நெற்றி இவைகள் உன்னதமானவை. ஒன்பதில் நுட்பமானவர். அதாவது கேசம், மீசை, நகம், சரீரத்திலிலுள்ள ரோமம், சர்மம், விரல்கணு, குறி, புத்தி, பார்வை இவைகளில் நுட்பமானவர். மூன்றால் வ்யாபித்தவர். அதாவது காலையிலும், நடுப்பகலிலும், சாயங்காலத்திலும் தர்மம், அர்த்தம், காமம் இவைகளை செய்கிறவர். (20)

ஸத்யம், தர்மம் இதில் ஈடுபட்டவர், சோபையோடு கூடியவர். பொருள் ஸைன்யம் முதலியவற்றை சேர்க்கிறவர். உலகிற்கு

भ्राता च तस्य द्वैमात्रः सौमित्रिरपराजितः।
अनुरागेण रूपेण गुणैश्चैव तथाविधः॥
[स सुवर्णच्छविः श्रीमान्रामः श्यामो महायशाः॥] २२

तावुभौ नरशार्दूलौ त्वद्दर्शनसमुत्सुकौ।
विचिन्वन्तौ महीं कृत्स्नामस्माभिरभिसंगतौ॥ २३

त्वामेव मार्गमाणौ तौ विचरन्तौ वसुन्धराम्।
ददर्शतुर्मृगपतिं पूर्वजेनावरोपितम्॥ २४

ऋश्यमूकस्य पृष्ठे तु बहुपादपसंकुले।
भ्रातुर्भयार्तमासीनं सुग्रीवं प्रियदर्शनम्॥ २५

ப்ராதா ச தஸ்ய த்வைமாத்ர: ஸௌமித்ரிரபராஜித:।
அநுராகேண ரூபேண குணைஶ்சைவ ததாவித:॥
[ஸ ஸுவர்ணச்சவி: ஶ்ரீமான்ராம: ஶ்யாமோ மஹாயஶா:॥]

தாவுபௌ நரஶார்தூலௌ த்வத்தர்ஶனஸமுத்ஸுகௌ।
விசின்வந்தௌ மஹீம் க்ருத்ஸ்னமஸ்மாபிரபிஸம்கதௌ॥ 23

த்வாமேவ மார்க்கமாணௌ தௌ விசரந்தௌ வஸுந்தராம்।
ததர்ஶதுர்ம்ருகபதிம் பூர்வஜேனவரோபிதம்॥ 24

ருஶ்யமூகஸ்ய ப்ருஷ்டே து பஹுபாதபஸம்குலே।
ப்ராதுர்பயார்த்தமாஸீனம் ஸுக்ரீவம் ப்ரியதர்ஶனம்॥ 25

---

*அனுக்ரஹத்தை செய்கிறதில் ஆசை கொண்டவர், தேசம், காலம் இவற்றை பிரித்து அறிந்தவர். எல்லா உலகிற்கும் நன்மையைச் சொல்லுகிறவர்.* (21)

*இளைய தாயார் பிள்ளையும், ஸுமித்ரையின் புத்ரனும், ஒருவராலும் தோல்வியை யடையாதவனும் ப்ராதாவுமான லக்ஷ்மணன் அன்பினாலும், அழகினாலும் உத்தம குணங்களாலும் அவருக்கு ஸமானமானவன்.* (22)

*மனுஷ்ய ஶ்ரேஷ்டர்களான அவ்விருவர்களும் உங்களைப் பார்ப்பதில் ஆவல்கொண்டவர்களாய் பூமி முழுமையும் தங்களைத் தேடினார்கள். அப்பொழுது காட்டில் எங்களுடன் சேர்ந்தார்கள்.* (23)

*தங்களையே பூமியில் தேடுகின்ற அவ்விருவர்களும் தமையனால் ராஜ்யத்தை விட்டு துரத்தப்பட்டவனும், பல மரங்களாலடர்ந்த ருஶ்யமூகபர்வதத்தின் அடிவாரத்தில் ப்ராதாவின் பயத்தால் வஸிக்கின்றவனும், அழகிய பார்வையுள்ளவனுமான ஸுக்ரீவனைக் கண்டார்கள்.* (24, 25)

वयं तु हरिराजं तं सुग्रीवं सत्यसङ्गरम् ।
परिचर्यास्महे राज्यात्पूर्वजेनावरोपितम् ॥ २६

ततस्तौ चीरवसनौ धनुःप्रवरपाणिनौ ।
ऋश्यमूकस्य शैलस्य रम्यं देशमुपागतौ ॥ २७

स तौ दृष्ट्वा नरव्याघ्रौ धन्विनौ वानरर्षभः ।
अवप्लुतो गिरेस्तस्य शिखरं भयमोहितः ॥ २८

ततः स शिखरे तस्मिन्वानरेन्द्रो व्यवस्थितः ।
तयोः समीपं मामेव प्रेषयामास सत्वरम् ॥ २९

तावहं पुरुषव्याघ्रौ सुग्रीववचनात्प्रभू ।
रूपलक्षणसंपन्नौ कृताञ्जलिरुपस्थितः ॥ ३०

வயம் து ஹரிராஜம் தம் ஸுக்ரீவம் ஸத்யஸங்கரம் ।
பரிசர்யாஸ்மஹே ராஜ்யாத்பூர்வஜேனவரோபிதம் ॥ 26

ததஸ்தௌ சீரவஸனௌ தனு:ப்ரவரபாணினௌ ।
ருஶ்யமூகஸ்ய ஶைலஸ்ய ரம்யம் தேஶமுபாகதௌ ॥ 27

ஸ தௌ த்ருஷ்ட்வா நரவ்யாக்ரௌ தன்விநௌ வானரர்ஷப: ।
அவப்லுதோ கிரேஸ்தஸ்ய ஶிகரம் பயமோஹித: ॥ 28

தத: ஸ ஶிகரே தஸ்மின் வானரேந்த்ரோ வ்யவஸ்தித: ।
தயோ: ஸமீபம் மாமேவ ப்ரேஷயாமாஸ ஸத்வரம் ॥ 29

தாவஹம் புருஷவ்யாக்ரௌ ஸுக்ரீவவசனாத்ப்ரபூ ।
ரூபலக்ஷணஸம்பன்னௌ க்ருதாஞ்ஜலிருபஸ்தித: ॥ 30

---

நாங்கள் ஸத்யமான ப்ரதிக்ஞையுள்ளவனும், அண்ணனால் ராஜ்யத்தை விட்டு துரத்தப்பட்டவனும் வானரராஜனுமான ஸுக்ரீவனுக்கு பணிவிடை செய்து வருகிறோம். (26)

பிறகு மரவுறி கட்டியவர்களும், சிறந்த வில்லை தரித்தவர்களுமான அந்த ராமலக்ஷ்மணர்கள் ருஶ்யமூக பர்வதத்தின் அழகிய இடத்தை யடைந்தார்கள். (27)

அந்த ஸுக்ரீவன் வில்தரித்தவர்களான அந்த நரஶ்ரேஷ்டர்களைப் பார்த்து பயத்தால் கலங்கி ருஶ்யமூக பர்வதத்தின் நுனியில் ஏறிவிட்டான். (28)

பிறகு வானரேந்திரனான அந்த ஸுக்ரீவன் அந்த மலையின் உச்சியிலிருந்துகொண்டு ராம லக்ஷ்மணர்களுடைய ஸமீபத்திற்கு சீக்கிரமாக என்னையே ஏவினான். (29)

புருஷஶ்ரேஷ்டர்களும், பிரபுக்களும் அழகு, லக்ஷணம் இவைகள் நிறைந்தவர்களுமான அந்த ராமலக்ஷ்மணர்களைக்குறித்து நான் கைகூப்பிக் கொண்டு அருகில் சென்றேன். (30)

तौ परिज्ञाततत्वार्थौ मया प्रीतिसमन्वितौ ।
पृष्ठमारोप्य तं देशं प्रापितौ पुरुषर्षभौ ॥ ३१

निवेदितौ च तत्वेन सुग्रीवाय महात्मने ।
तयोरन्योन्यसंलापाद्भृशं प्रीतिरजायत ॥ ३२

ततस्तौ प्रीतिसंपन्नौ हरीश्वरनरेश्वरौ ।
परस्परकृताश्वासौ कथया पूर्ववृत्तया ॥ ३३

ततः स सान्त्वयामास सुग्रीवं लक्ष्मणाग्रजः ।
स्त्रीहेतोर्वालिना भ्रात्रा निरस्तमुरुतेजसा ॥ ३४

ततस्त्वन्नाशजं शोकं रामस्याक्लिष्टकर्मणः ।
लक्ष्मणो वानरेन्द्राय सुग्रीवाय न्यवेदयत् ॥ ३५

தௌ பரிஜ்ஞாததத்வார்த்தௌ மயா ப்ரீதிஸமன்விதௌ ।
ப்ருஷ்டமாரோப்ய தம் தேஶம் ப்ராபிதௌ புருஷர்ஷபௌ ॥

நிவேதிதௌ ச தத்வேன ஸுக்ரீவாய மஹாத்மனே ।
தயோரன்யோன்யஸம்லாபாத் ப்ருஶம் ப்ரீதிரஜாயத ॥ 32

ததஸ்தௌ ப்ரீதிஸம்பன்னௌ ஹரீஶ்வரநரேஶ்வரௌ ।
பரஸ்பரக்ருதாஶ்வாஸௌ கதயா பூர்வவ்ருத்தயா ॥ 33

தத: ஸ ஸாந்த்வயாமாஸ ஸுக்ரீவம் லக்ஷ்மணாக்ரஜ: ।
ஸ்த்ரீஹேதோர்வாலிநா ப்ராத்ரா நிரஸ்தமுருதேஜஸா ॥ 34

ததஸ்த்வந்நாஶஜம் ஶோகம் ராமஸ்யாக்லிஷ்டகர்மண: ।
லக்ஷ்மணோ வானரேந்த்ராய ஸுக்ரீவாய ந்யவேதயத் ॥ 35

---

வாஸ்தவமான எல்லா விஷயத்தையுமுணர்ந்த அவ்விருவர்களும் என்னிடத்தில் மிகப் பிரியம் கொண்டார்கள். நான் புருஷர்களுக்குள் சிறந்தவர்களான அவ்விருவர்களையும் தோளில் தூக்கி ஸுக்ரீவனிருக்குமிடத்திற்கு எடுத்துச்சென்றேன். (31)

மஹாத்மாவான ஸுக்ரீவன் பொருட்டு, இவர்கள் வாஸ்தவமாய் இங்கு வந்த காரியத்தை தெரியப்படுத்தினேன். ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டதால் ஸுக்ரீவனுக்கும் ஸ்ரீராகவனுக்கும் மிக அன்பு உண்டாய் விட்டது. (32)

பிறகு ஹரீஶ்வரனும் நரேஶ்வரனுமான ஸுக்ரீவனும் ஸ்ரீராமனும் பிரியத்தை யடைந்து முன்பு நடந்த கதையைச்சொல்லிகொண்டதால் ஒருவருக்கொருவர் ஆறுதலை யடைந்தார்கள். (33)

பிறகு ஸ்திரீ நிமித்தமாய் மிக தேஜஸ்வியும் ப்ராதாவுமான வாலியினால் துரத்தப்பட்ட ஸுக்ரீவனை லக்ஷ்மணனுக்கு தமையனை அந்த ஸ்ரீராமன் ஸமாதானம் செய்தார். (34)

பிறகு குற்றமற்றவனான ஸ்ரீராமனுக்கு, தங்களைக் காணாததால்

स श्रुत्वा वानरेन्द्रस्तु लक्ष्मणेनेरितं वचः ।
तदाऽऽसीन्निष्प्रभोऽत्यर्थं ग्रहग्रस्त इवांशुमान् ॥ ३६

ततस्त्वद्गात्रशोभीनि रक्षसा ह्रियमाणया ।
यान्याभरणजालानि पातितानि महीतले ॥ ३७

तानि सर्वाणि रामाय आनीय हरियूथपाः ।
संहृष्टा दर्शयामासुर्गतिं तु न विदुस्तव ॥ ३८

तानि रामाय दत्तानि मयैवोपहृतानि च ।
स्वनवन्त्यवकीर्णानि तस्मिन्विगतचेतसि ॥ ३९

ஸ ஶ்ருத்வா வானரேந்த்ரஸ்து லக்ஷ்மணேனேரிதம் வச: ।
ததாऽऽஸீன்நிஷ்ப்ரபோऽத்யர்த்தம் க்ரஹக்ரஸ்த
இவாம்ஶுமான் ॥ 36

ததஸ்த்வத்காத்ரஶோபீனி ரக்ஷஸா ஹ்ரியமாணயா ।
யான்யாபரணஜாலானி பாதிதானி மஹீதலே ॥ 37

தானி ஸர்வாணி ராமாய ஆநீய ஹரியூதபா: ।
ஸம்ஹ்ருஷ்டா தர்ஶயாமாஸுர்கதிம் து ந விதுஸ்தவ ॥ 38

தானி ராமாய தத்தானி மயைவோபஹ்ருதானி ச ।
ஸ்வனவந்த்யவகீர்ணானி தஸ்மின்விகதசேதஸி ॥ 39

---

ஏற்பட்ட சோகத்தை லக்ஷ்மணன் வானரஶ்ரேஷ்டனை ஸுக்ரீவனுக்கு சொன்னான். (35)

லக்ஷ்மணன் சொல்லிய வார்த்தையை வானரேந்திரனை அந்த ஸுக்ரீவன் கேட்டு அப்பொழுது கிரஹத்தால் பீடிக்கப் பட்ட ஸூர்யன் போல் மிகவும் காந்தியற்றவனாய் ஆனான். (36)

பிறகு ராக்ஷஸனால் எடுத்துச்செல்லப்படுகின்றபோது தங்கள் சரீரத்தில் பிரகாசிக்கின்ற எந்த ஆபரண ஜாலங்களை தாங்கள் பூமியில் போட்டீர்களோ அவைகளை வானர ஸைன்யத்தைக் காக்கும் குரங்குகள் மிகுந்த ஸந்தோஷத்துடன் எடுத்து ஸ்ரீராமனிடம் காண்பித்தன. ஆனால் தங்கள் இருப்பிடத்தை மட்டும் அறியவில்லை. (37, 38)

என்னால் முதலில் ஸுக்ரீவனிடத்தில் எடுத்துக்கொடுக்கப் பட்டதுகளும், தன்னிடத்திலுள்ள சின்ன மணிகளின் ஶப்தத்துடன் கூடியதுகளும், சிதறியதுகளுமான அந்த ஆபரணங்கள் ராமனிடத்தில் கொடுக்கப்பட்டன. அதை பெற்றுக்கொண்டு அந்த ராமன் மூர்ச்சையடைந்துவிட்டார். (39)

तान्यङ्के दर्शनीयानि कृत्वा बहुविधं तव।
तेन देवप्रकाशेन देवेन परिदेवितम्॥ ४०

पश्यतस्तानि रुदतस्ताम्यतश्च पुनः पुनः।
प्रादीपयन्दाशरथेस्तानि शोकहुताशनम्॥ ४१

शयितं च चिरं तेन दुःखार्तेन महात्मना।
मयाऽपि विविधैर्वाक्यैः कृच्छ्रादुत्थापितः पुनः॥ ४२

तानि दृष्ट्वा महार्हाणि दर्शयित्वा मुहुर्मुहुः।
राघवः सहसौमित्रिः सुग्रीवे संन्यवेदयत्॥ ४३

தான்யங்கே தர்ஶநீயானி க்ருத்வா பஹுவிதம் தவ।
தேன தேவப்ரகாஶேன தேவேன பரிதேவிதம்॥ **40**

பஶ்யதஸ்தானி ருததஸ்தாம்யதஶ்ச புன: புன:।
ப்ராதீபயன்தாஶரதேஸ்தானி ஶோகஹுதாஶனம்॥ **41**

ஶயிதம் ச சிரம் தேன து:கார்த்தேன மஹாத்மனா।
மயாऽபி விவிதைர்வாக்யை: க்ருச்ச்ராதுத்தாபித: புன:॥ **42**

தானி த்ருஷ்ட்வா மஹார்ஹாணி தர்ஶயித்வா முஹுர் முஹு:।
ராகவ: ஸஹஸௌமித்ரி: ஸுக்ரீவே ஸம்ந்யவேதயத்॥ **43**

---

*அழகிய அந்த தங்களுடைய ஆபரணங்களை மடியில் வைத்துக்கொண்டு தேவர்களுக்கொப்பானவனும் தேவனுமான அந்த ராமனால் பலவிதமாக வருத்தப்படப்பட்டது.* (40)

*அவைகளைப் பார்த்து அழுகின்றவரும், திரும்பத்திரும்ப தாபத்தையடைகின்றவருமான தசரத புத்ரனை ஸ்ரீராமனுக்கு அந்த ஆபரணங்கள் ஶோகாக்னியை நன்கு ஜ்வலிக்கும்படிச் செய்தன.* (41)

*துக்கத்தால் பீடிக்கப்பட்டவரும் மஹாத்மாவுமான ஸ்ரீராமன் நீண்டகாலம் பூமியில் படுத்துவிட்டார். நான் பலவித வார்த்தைகளைச் சொல்லி மிகவும் ஶ்ரமப்பட்டு மறுபடியும் உட்கார்த்திவைத்தேன்.* (42)

*மஹானுபாவனை ஸ்ரீராகவன் லக்ஷ்மணனுடன்கூட அந்த ஆபரணங்களை திரும்பத்திரும்பப் பார்த்து ஸுக்ரீவனிடத்திலும் காண்பித்து அவனிடத்திலேயே கொடுத்து வைத்தார்.* (43)

स तवादर्शनादार्ये राघवः परितप्यते।
महता ज्वलता नित्यमग्निनेवाग्निपर्वतः॥ ४४
त्वत्कृते तमनिद्रा च शोकश्चिन्ता च राघवम्।
तापयन्ति महात्मानमग्न्यगारमिवाग्नयः॥ ४५
तवादर्शनशोकेन राघवः प्रविचाल्यते।
महता भूमिकम्पेन महानिव शिलोच्चयः॥ ४६
काननानि सुरम्याणि नदीः प्रस्रवणानि च।
चरन्न रतिमाप्नोति त्वामपश्यन्नृपात्मजे॥ ४७
स त्वां मनुजशार्दूलः क्षिप्रं प्राप्स्यति राघवः।
समित्रबान्धवं हत्वा रावणं जनकात्मजे॥ ४८

ஸ தவாதர்ஶனாதார்யே ராகவ: பரிதப்யதே ।
மஹதா ஜ்வலதா நித்யமக்னினேவாக்னிபர்வத: ॥ 44
த்வத்க்ருதே தமநித்ரா ச ஶோகஶ்சிந்தா ச ராகவம் ।
தாபயந்தி மஹாத்மான மக்ந்யகாரமிவாக்னய: ॥ 45
தவாதர்ஶனஶோகேன ராகவ: ப்ரவிசால்யதே ।
மஹதா பூமிகம்பேன மஹானிவ ஶிலோச்சய: ॥ 46
கானனானி ஸுரம்யாணி நதீ: ப்ரஸ்ரவணானி ச ।
சரன்ந ரதிமாப்னோதி த்வாமபஶ்யன்ந்ருபாத்மஜே ॥ 47
ஸ த்வாம் மனுஜஶார்தூல: க்ஷிப்ரம் ப்ராப்ஸ்யதி ராகவ: ।
ஸமித்ரபாந்தவம் ஹத்வா ராவணம் ஜனகாத்மஜே ॥ 48

---

ஓ தாயே! தங்களை காணாததால் அந்த ஸ்ரீராகவன், பெரியதும் நித்யம் ஜ்வலிக்கின்றதுமான நெருப்பினால், மேருமலையின் நுனியில் இருந்துகொண்டிருக்கும் காலாக்னியுடன் கூடிய அக்னி பர்வதம் போல் மிகவும் தபிக்கிறார். இந்த அக்னி பர்வதத்தைப்பற்றி மஹாபாரதத்தில் பீஷ்ம பர்வாவில் கூறப்பட்டிருக்கிறது. (44)

மஹாத்மாவான அந்த ராகவனை தங்கள் நிமித்தமாய் தூக்கமின்மையும் மனோதுக்கமும் கவலையும் அக்னியிருக்கும் வீட்டை ஜ்வலிக்கின்ற அக்னிஹோத்ர அக்னிபோல் தாபத்தையடையும்படிச் செய்கின்றன. (45)

தங்களைக்காணாததால் ஏற்பட்ட சோகத்தால், ஸ்ரீராகவன் அதிகமான பூகம்பத்தால் பெரிதான பர்வதம் போல் அசைக்கப்படுகிறார். (46)

ஓ ராஜகுமாரியே! தங்களைப் பாராது அழகிய காடுகளையும், நதிகளையும், மலையருவிகளையும் பார்த்து ஸஞ்சரித்தும் மனதிற்கு ஸந்தோஷத்தை யடையவில்லை. (47)

ஓ ஜனகனுடைய பெண்ணே! மனுஷ்யஶ்ரேஷ்டனான அந்த

सहितौ रामसुग्रीवावुभावकुरुतां तदा ।
समयं वालिनं हन्तुं तव चान्वेषणं तथा ॥ ४९

ततस्ताभ्यां कुमाराभ्यां वीराभ्यां स हरीश्वरः ।
किष्किन्धां समुपागम्य वाली युद्धे निपातितः ॥ ५०

ततो निहत्य तरसा रामो वालिनमाहवे ।
सर्वर्क्षहरिसङ्घानां सुग्रीवमकरोत्पतिम् ॥ ५१

रामसुग्रीवयोरैक्यं देव्येवं समजायत ।
हनुमन्तं च मां विद्धि तयोर्दूतमिहागतम् ॥ ५२

ஸஹிதௌ ராமஸுக்ரீவாவுபாவகுருதாம் ததா ।
ஸமயம் வாலினம் ஹந்தும் தவ சான்வேஷணம் ததா ॥ 49

ததஸ்தாப்யாம் குமாராப்யாம் வீராப்யாம் ஸ ஹரீஶ்வர: ।
கிஷ்கிந்தாம் ஸமுபாகம்ய வாலீ யுத்தே நிபாதித: ॥ 50

ததோ நிஹத்ய தரஸா ராமோ வாலினமாஹவே ।
ஸர்வர்க்ஷஹரிஸங்கானாம் ஸுக்ரீவமகரோத்பதிம் ॥ 51

ராமஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம் ஸமஜாயத ।
ஹனுமந்தம் ச மாம் வித்தி தயோர்த்தூதமிஹாகதம் ॥ 52

---

*ஸ்ரீராகவன் ஸ்நேஹிதர் பந்துக்கள் இவர்களுடன் கூடிய ராவணனை வதம் செய்து தங்களை சீக்கிரமாக அடையப்போகிறார்.* (48)

*ஸ்ரீராமனும் ஸுக்ரீவனும் இருவர்களும்கூடி அப்பொழுது வாலியை கொல்வதையும், தங்களை தேடிக்கொடுப்பதையும் ஒப்பந்தமாகச் செய்து கொண்டார்கள்.* (49)

*பிறகு வீரர்களும் குமாரர்களுமான அந்த ராமலக்ஷ்மணர்கள் கிஷ்கிந்தைக்குச் சென்று யுத்தத்தில் வானர ராஜனான அந்த வாலியை வதம் செய்தனர்.* (50)

*பிறகு ஸ்ரீராமன் வேகமாக யுத்தத்தில் வாலியை வதம் செய்து எல்லா கரடி குரங்கு இவைகளின் கூட்டங்களுக்கு ஸுக்ரீவனை பதியாகச் செய்தார்.* (51)

*ஓ தேவி! ஸ்ரீராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் இம்மாதிரி சேர்க்கை ஏற்பட்டது. அதாவது தன் தம்பியான லக்ஷ்மணன் இருக்கும்பொழுது அந்த:புர கார்யத்திற்கு ஸுக்ரீவன் தூதனும் குரங்குமான என்னை மனுஷ்ய ஸ்த்ரீயான உங்களிடத்தில் அனுப்பித்ததால் தங்களுக்கும் எனக்கும் சேர்க்கை ஏற்பட்ட மாதிரி ஸ்ரீராம ஸுக்ரீவர்களுக்கு சேர்க்கை ஏற்பட்டது என்று கருத்து. அவ்விருவர்களுடைய தூதனாக இங்கு வந்த என்னை ஹனுமார் என்று நீங்கள் அறியவேண்டும்.* (52)

निहताः किंकराः सर्वे जम्बुमाली च राक्षसः।
अमात्यपुत्रा वीराश्च पञ्च सेनाग्रयायिनः॥ ७

बलानि सुसमृद्धानि साश्वनागरथानि च।
सहोदरस्ते दयितः कुमारोऽक्षश्च सूदितः॥
न हि तेष्वेव मे सारो यस्त्वय्यरिनिषूदन॥ ८

इदं हि दृष्ट्वा मतिमन्महद्बलं कपेः प्रभावं च पराक्रमं च।
त्वमात्मनश्चापि समीक्ष्य सारं कुरुष्व वेगं स्वबलानुरूपम्॥ ९

நிஹதா: கிம்கரா: ஸர்வே ஜம்புமாலீ ச ராக்ஷஸ: ।
அமாத்யபுத்ரா வீராஶ்ச பஞ்ச ஸேனாக்ரயாயின: ॥ 7

பலானி ஸுஸம்ருத்தானி ஸாஶ்வநாகரதானி ச ।
ஸஹோதரஸ்தே தயித: குமாரோऽக்ஷஶ்ச ஸூதித: ॥
ந ஹி தேஷ்வேவ மே ஸாரோ யஸ்த்வய்யரிநிஷூதன ॥ 8

இதம் ஹி த்ருஷ்ட்வா மதிமன்மஹத்பலம்
கபே: ப்ரபாவம் ச பராக்ரமம் ச ।
த்வமாத்மனஶ்சாபி ஸமீக்ஷ்ய ஸாரம்
குருஷ்வ வேகம் ஸ்வபலானுரூபம் ॥ 9

---

தானது ஜயிப்பதில் நிஶ்சயங்கொண்டு ஶ்ரமத்தை யடைய வில்லை. (6)

எல்லா கிங்கரர்களும் கொல்லப்பட்டனர். ஜம்புமாலி என்ற ராக்ஷஸனும் கொல்லப்பட்டான். வீரர்களான மந்திரிபுத்ரர்களும், வீரர்களான ஐந்து ஸேனாதிபதிகளும் கொல்லப்பட்டார்கள். (7)

மிகவும் நிரம்பிய ஸைன்யங்களும், குதிரைகள், யானைகள், தேர்கள் இவைகளுடன் கூட அழிக்கப்பட்டன. பரமப்ரியனான ஸகோதரனான அக்ஷகுமாரனும் கொல்லப்பட்டான். எனக்கு உன்னிடத்தில் இருக்கும் மதிப்பு அவர்களிடத்தில் கிடையாது. (8)

இந்த குரங்கின் அறிவுடன் கூடிய, கிங்கரர்கள், அக்ஷகுமாரன் முதலியவர்களை கொன்ற மஹத்தான பலத்தையும் மஹிமையையும் பௌருஷத்தையும் பார்த்து நீ உனது பலத்தையும் நன்கு யோசித்து உன் பலத்திற்குத் தக்கப்படி வேகத்தைச் செய்வாயாக. (9)

बलावमर्दस्त्वयि संनिकृष्टे यथा गते शाम्यति शान्तशत्रौ ।
तथा समीक्ष्यात्मबलं परं च समारभस्वास्त्रविदां वरिष्ठ ॥ १०

न वीर सेना गणशोच्यवन्ति न वज्रमादाय विशालसारम् ।
न मारुतस्यास्य गतिप्रमाणं न चाग्निकल्पः करणेन हन्तुम् ॥ ११

तमेवमर्थं प्रसमीक्ष्य सम्यक्स्वकर्मसाम्याद्धि समाहितात्मा ।
सरंश्च दिव्यं धनुषोऽस्त्रवीर्यं व्रजाक्षतं कर्म समारभस्व ॥ १२

பலாவமர்தஸ்த்வயி ஸன்னிக்ருஷ்டே
யதா கதே மாம்யதி மாந்தமத்ரௌ ।
ததா ஸமீக்ஷ்யாத்மபலம் பரம் ச
ஸமாரபஸ்வாஸ்த்ரவிதாம் வரிஷ்ட ॥ 10

ந வீர ஸேனா கணமோச்யவந்தி
ந வஜ்ரமாதாய விமாலஸாரம் ।
ந மாருதஸ்யாஸ்ய கதிப்ரமாணம்
ந சாக்னிகல்ப: கரணேன ஹந்தும் ॥ 11

தமேவமர்த்தம் ப்ரஸமீக்ஷ்ய ஸம்யக்
ஸ்வகர்மஸாம்யாத்தி ஸமாஹிதாத்மா ।
ஸ்மரம்ஸ்ச திவ்யம் தனுஷோ஽ஸ்த்ரவீர்யம்
வ்ரஜாக்ஷதம் கர்ம ஸமாரபஸ்வ ॥ 12

---

ஓ அஸ்த்ரவித்தை யறிந்தவர்களுள் சிறந்தவனே, நீ யுத்தத்திற்காக ஹநுமாரின் ஸமீபம் சென்றதும் ஸைன்யங்களுக்கு நாசமேற்படாமலிருக்கும்படி உன் பலத்தையும் சத்ருவின் பலத்தையும் நன்கு அறிந்துகொண்டு கார்யத்தை செய்யவேண்டும். (10)

ஹே வீர, கூட்டமான ஸைன்யங்களை அழிக்கும் இந்த ஹநுமார் விஷயத்தில் ஸேனைகள் உன்னை காக்காது. ஹநுமாரிடத்தில் பிரயோஜனப்படாத வஜ்ராயுதத்தை எடுத்துக்கொண்டும் நீ செல்லாதே. இந்த ஹநுமாருக்கு ஸமமான வேகம் வாயுவுக்குமில்லை. அக்கினிக்கொப்பான இந்த ஹநுமாரை கைகுத்து முதலியவைகளாலும் கொல்லமுடியாது. (11)

நான் சொன்ன அந்த அர்த்தத்தை நன்கு யோசித்துப் பார்த்து ஸ்வகார்யம் ஸித்திப்பதற்காக ஏகாக்ர சித்தனாய் இருந்துகொண்டு திவ்யமான வில்லைச் சேர்ந்த அஸ்திர பலத்தை ஸ்மரித்துக்கொண்டு கிளம்பு. உனக்கு கெடுதல் வராமலிருக்கும்படி கார்யத்தை செய்துகொள். (12)

न खल्वियं मतिः श्रेष्ठा यत्त्वां संप्रेषयाम्यहम्।
इयं च राजधर्माणां क्षत्रस्य च मतिर्मता॥ १३

नानाशस्त्रैश्च संग्रामे वैशारद्यमरिन्दम।
अवश्यमेव बोद्धव्यं काम्यश्च विजयो रणे॥ १४

ततः पितुस्तद्वचनं निशम्य प्रदक्षिणं दक्षसुतप्रभावः।
चकार भर्तारमदीनसत्त्वो रणाय वीरः प्रतिपन्नबुद्धिः॥ १५

ततस्तैः स्वगणैरिष्टैरिन्द्रजित्प्रतिपूजितः।
युद्धोद्धतः कृतोत्साहः संग्रामं प्रत्यपद्यत॥ १६

ந கல்வியம் மதி: ஶ்ரேஷ்டா யத்த்வாம் ஸம்ப்ரேஷயாம்யஹம்
இயம் ச ராஜதர்மாணாம் க்ஷத்ரஸ்ய ச மதிர்மதா॥ 13

நாநாஶஸ்த்ரைஶ்ச ஸம்க்ராமே வைஶாரத்யமரிந்தம।
அவஶ்யமேவ போத்தவ்யம் காம்யஶ்ச விஜயோ ரணே॥ 14

தத: பிதுஸ்தத்வசனம் நிஶம்ய ப்ரதக்ஷிணம் தக்ஷஸுதப்ரபாவ:
சகார பர்தாரமதீனஸத்வோ ரணாய வீர: ப்ரதிபன்னபுத்தி:॥ 15

ததஸ்தை: ஸ்வகணைரிஷ்டைரிந்த்ரஜித்ப்ரதிபூஜித:।
யுத்தோத்தத: க்ருதோத்ஸாஹ: ஸம்க்ராமம் ப்ரத்யபத்யத॥ 16

---

ஒ புத்தியில் சிறந்தவனே, உன்னை நான் இம்மாதிரியனுப்புவது உசிதமல்ல. ஆகிலும் இதானது ராஜதர்மத்திற்கும் அதை அவலம்பித்த க்ஷத்ரியனுக்கும் உசிதமே யாகும். அதாவது குழந்தையான உன்னை நான் அனுப்புவது ஸரியல்ல. அப்படியிருந்தபோதிலும் தன்னைச் சேர்ந்தவர்கள் இருக்கும்பொழுது தலைவனே முந்திச் செல்வது நீதிசாஸ்த்ரத்திற்கு விரோதம் என்று உன்னையனுப்புகிறேன் என்பது கருத்து. (13)

பலவிதமான பாணங்களால் யுத்தத்தில் அடிக்கும் ஸாமர்த்யத்தை அவஶ்யம் அறிய வேண்டும். யுத்தத்தில் ஜயத்தையும் கோரவேண்டும். (14)

பிறகு தேவர்களுக்கொப்பான மஹிமையுள்ளவனும், மிகச் சிறந்த பலமுள்ளவனும், வீரனுமான அந்த இந்திரஜித் பிதாவின் அந்த வார்த்தையைக் கேட்டு ராஜாவை ப்ரதக்ஷிணம் செய்தான். யுத்தம் செய்வதென்று தீர்மானித்தான். (15)

பிறகு ப்ரியர்களான தன்னைச் சேர்ந்தவர்களால் நன்கு பூஜிக்கப்பட்டவனும், யுத்தம் செய்வதில் மனங்கொண்டவனும், உத்ஸாஹத்தை யடைந்தவனுமான இந்திரஜித்தானவன் யுத்தத்திற்குப் புறப்பட்டான். (16)

श्रीमान्पद्मपलाशाक्षो राक्षसाधिपतेः सुतः ।
निर्जगाम महातेजाः समुद्र इव पर्वसु ॥ १७

स पक्षिराजोपमतुल्यवेगैर्व्यालैश्चतुर्भिः सिततीक्ष्णदंष्ट्रैः ।
रथं समायुक्तमसङ्गवेगं समारुरोहेन्द्रजिदिन्द्रकल्पः ॥ १८

स रथी धन्विनां श्रेष्ठः शस्त्रज्ञोऽस्त्रविदां वरः ।
रथेनाभिययौ क्षिप्रं हनूमान्यत्र सोऽभवत् ॥ १९

स तस्य रथनिर्घोषं ज्यास्वनं कार्मुकस्य च ।
निशम्य हरिवीरोऽसौ संप्रहृष्टतरोऽभवत् ॥ २०

ஸ்ரீமான்பத்மபலாஶாக்ஷோ ராக்ஷஸாதிபதே: ஸுத: ।
நிர்ஜகாம மஹாதேஜா: ஸமுத்ர இவ பர்வஸு ॥ **17**

ஸ பக்ஷிராஜோபமதுல்யவேகை
வ்யாலைஶ்சதுர்பி: ஸிததீக்ஷ்ணதம்ஷ்ட்ரை: ।
ரதம் ஸமாயுக்தமஸங்கவேகம்
ஸமாருரோஹேந்த்ரஜிதிந்த்ரகல்ப: ॥ **18**

ஸ ரதீ தன்விநாம் ஶ்ரேஷ்ட: ஶஸ்த்ரக்ஞோऽஸ்த்ரவிதாம் வர:
ரதேனாபியயௌ க்ஷிப்ரம் ஹனுமான்யத்ர ஸோऽபவத் ॥ **19**

ஸ தஸ்ய ரதநிர்கோஷம் ஜ்யாஸ்வனம் கார்முகஸ்ய ச ।
நிஶம்ய ஹரிவீரோऽஸௌ ஸம்ப்ரஹ்ருஷ்டதரோऽபவத் ॥ **20**

---

*ஸ்ரீமானும், செந்தாமரை இதழ்போல் விசாலமான கண்கள் உள்ளவனும், மஹாதேஜஸ்வியுமான ராக்ஷஸாதிபதியின் புத்ரன் பர்வகாலங்களில் வ்ருத்தியடையும் ஸமுத்ரம்போல் வெளிக் கிளம்பினன்.* (17)

*இந்திரனுக்கொப்பான அந்த இந்திரஜித்தானவன் கருடனுக் கொப்பானதுகளும், ஒன்றுக்கொன்று துல்யமான வேகமுள்ளது களும், வெளுத்ததுகளும், கூர்மையானதுகளுமான தித்திப்பற்களு டன் கூடியதுகளுமான நான்கு சிங்கங்கள் பூட்டப்பட்ட தடங் கலில்லாமல் எங்கும் செல்லக்கூடிய தேரில் ஏறினன்.* (18)

*சிறந்த தேரில் ஏறியவனும், வில்லாளிகளுள் சிறந்தவனும், பாணம் போடுவதை யறிந்தவனும், அஸ்த்ரவித்தையை உணர்ந்த வர்களுள் சிறந்தவனுமான அந்த இந்திரஜித்தானவன் எந்த இடத் தில் ஹனுமார் இருக்கின்றரோ அந்த இடத்திற்கு தேருடன் வேகமாகச் சென்றான்.* (19)

*இந்திரஜித்தின் தேரின் ஶப்தத்தையும், நாணின் ஶப்தத்தை யும், வில்லின் தொனியையும் கேட்டு வானர வீரனைஇந்த ஹனு மார் மிகவும் ஸந்தோஷம் கொண்டார்.* (20)

सुमहच्चापमादाय शितशल्यांश्च सायकान्।
हनुमन्तमभिप्रेत्य जगाम रणपण्डितः॥ २१

तस्मिंस्ततः संयति जातहर्षे रणाय निर्गच्छति बाणपाणौ।
दिशश्च सर्वाः कलुषा बभूवुर्मृगाश्च रौद्रा बहुधा विनेदुः॥ २२

समागतास्तत्र तु नागयक्षा महर्षयश्चक्रचराश्च सिद्धाः।
नभः समावृत्य च पक्षिसङ्घा विनेदुरुच्चैः परमप्रहृष्टाः॥ २३

आयान्तं सरथं दृष्ट्वा तूर्णमिन्द्रजितं कपिः।
विननाद महानादं व्यवर्धत च वेगवान्॥ २४

ஸுமஹச்சாபமாதாய ஶிதஶல்யாம்ஶ்ச ஸாயகான் ।
ஹனுமந்தமபிப்ரேத்ய ஜகாம ரணபண்டித: ॥ 21

தஸ்மின்தத: ஸம்யதி ஜாதஹர்ஷே
ரணாய நிர்கச்சதி பாணபாணௌ ।
திஶஶ்ச ஸர்வா: கலுஷா பபூவுர்
ம்ருகாஶ்ச ரௌத்ரா பஹுதா விநேது: ॥ 22

ஸமாகதாஸ்தத்ர து நாகயக்ஷா
மஹர்ஷயஶ்சக்ரசராஶ்ச ஸித்தா: ।
நப: ஸமாவ்ருத்ய ச பக்ஷிஸங்கா
விநேதுருச்சை: பரமப்ரஹ்ருஷ்டா: ॥ 23

ஆயாந்தம் ஸரதம் த்ருஷ்ட்வா தூர்ணமிந்த்ரஜிதம் கபி: ।
விநநாத மஹாநாதம் வ்யவர்தத ச வேகவான் ॥ 24

---

*யுத்த சாஸ்த்ரத்தை நன்கு அறிந்தவனான அவன் பெருத்த வில்லேயும், கூர்மையான நுனிகளுடன் கூடிய பாணங்களேயும் எடுத்துக்கொண்டு ஹனுமாரை நோக்கிச் சென்றான்.* (21)

*பிறகு யுத்தத்தில் ஸந்தோஷங்கொண்டு பாணத்தை கையிலேந்தி அந்த இந்திரஜித்தானவன் போர்புரிவதற்கு புறப்படும் பொழுது எல்லா திக்குகளும் கலங்கின. க்ரூரமான ம்ருகங்களும் பலவகையாக கூச்சலிட்டன.* (22)

*அங்கு வந்தவர்களான நாகர்கள், யக்ஷர்கள், மஹரிஷிகள், ஜோதிஶ்சக்ரத்திலிருக்கும் கிரஹம் முதலியவைகள், ஸித்தர்கள், பக்ஷிகளின் கூட்டங்கள் எல்லோரும் ஆகாஶத்தில் சுற்றிக்கொண்டு மிகுந்த ஸந்தோஷத்தை யடைந்து உரத்த ஸ்வரத்தில் ஶப்தித்தனர்.* (23)

*வேகமாக வருகிறவனும், ரதத்துடன் கூடினவனுமான இந்திரஜித்தைப்பார்த்து ஹனுமாரானவர் பெருத்த ஸிம்ஹநாதத்*

इन्द्रजित्तु रथं दिव्यमास्थितश्चित्रकार्मुकः ।
धनुर्विस्फारयामास तडिदूर्जितनिःस्वनम् ॥ २५

ततः समेतावतितीक्ष्णवेगौ महाबलौ तौ रणनिर्विशङ्कौ ।
कपिश्च रक्षोधिपतेश्च पुत्रः सुरासुरेन्द्राविव बद्धवैरौ ॥ २६

स तस्य वीरस्य महारथस्य धनुष्मतः संयति संमतस्य ।
शरप्रवेगं व्यहनत्प्रवृद्धश्चकार मार्गे पितुरप्रमेयः ॥ २७

இந்த்ரஜித்து ரதம் திவ்யமாஸ்திதஶ்சித்ரகார்முக: ।
தனுர்விஸ்பாரயாமாஸ தடிதூர்ஜிதநி:ஸ்வனம் ॥ **25**

தத: ஸமேதாவதிதீக்ஷ்ணவேகௌ
மஹாபலௌ தௌ ரணநிர்விஶங்கௌ ।
கபிஶ்ச ரக்ஷோதிபதேஶ்ச புத்ர:
ஸுராஸுரேந்த்ராவிவ பத்தவைரௌ ॥ **26**

ஸ தஸ்ய வீரஸ்ய மஹாரதஸ்ய
தனுஷ்மத: ஸம்யதி ஸம்மதஸ்ய ।
ஶரப்ரவேகம் வ்யஹனத்ப்ரவ்ருத்த
ஶ்சகார மார்கே பிதுரப்ரமேய: ॥ **27**

---

*ளைச் செய்தார். யுத்தம் செய்ய வேகம்கொண்டு மிகவும் வளர்ந்தார்.* (24)

*இந்திரஜித்தானவன் திவ்யமான தேரில் ஏறி சித்ரமான வில்லை தரித்துக்கொண்டு இடிக்கொப்பான ஶப்தமுள்ள வில்லை நாண் இழுத்தான்.* (25)

*பிறகு ஒன்று சேர்ந்தவர்களும், மிகக் கடூரமான வேகம் கொண்டவர்களும், மஹத்தான பலமுள்ளவர்களும், யுத்தத்தில் பயமற்றவர்களுமான அந்த ஹனுமாரும், ராக்ஷஸ ராஜனின் புத்ரனை இந்திரஜித்தும், அஸுரர்களின் அரசனும் தேவர்களின் அரசனும் போல் த்வேஷம் கொண்டனர்.* (26)

*ஹனுமார், வீரனும், மஹாரதனும், வில்லாளியும், யுத்தத்தில் தேர்ச்சியடைந்தவனுமான அந்த இந்திரஜித்தினுடைய பாணத்தின் வேகத்தை வஞ்சித்துக்கொண்டு மிகவும் வளர்ந்தவராயும் அளவிட முடியாதவராயுமிருந்துகொண்டு பிதாவின் மார்கமாகிய ஆகாஶத்தில் ஸஞ்சரித்தார்.* (27)

ततः शरानायततीक्ष्णशल्यान्सुपत्रिणः काञ्चनचित्रपुङ्खान्।
मुमोच वीरः परवीरहन्ता सुसन्नतान्वज्रनिपातवेगान्॥ २८

ततस्तु तत्स्यन्दननिःस्वनं च मृदङ्गभेरीपटहस्वनं च।
विकृष्यमाणस्य च कार्मुकस्य निशम्य घोषं पुनरुत्पपात॥ २९

शराणामन्तरेष्वाशु व्यवर्तत महाकपिः।
हरिस्तस्याभिलक्ष्यस्य मोघयँल्लक्ष्यसंग्रहम्॥ ३०

शराणामग्रतस्तस्य पुनः समभिवर्तत।
प्रसार्य हस्तौ हनुमानुत्पपातानिलात्मजः॥ ३१

தத: ஶராநாயததீக்ஷ்ணஶல்யான்
ஸுபத்ரிண: காஞ்சனசித்ரபுங்கான் ।
முமோச வீர: பரவீரஹந்தா
ஸுஸன்னதான்வஜ்ரநிபாதவேகான் ॥ 28

ததஸ்து தத்ஸ்யந்தனநிஸ்வனம் ச
ம்ருதங்கபேரீபடஹஸ்வனம் ச ।
விக்ருஷ்யமாணஸ்ய ச கார்முகஸ்ய
நிஶம்ய கோஷம் புனருத்பபாத ॥ 29

ஶராணமந்தரேஷ்வாஶு வ்யவர்த்தத மஹாகபி: ।
ஹரிஸ்தஸ்யாபிலக்ஷ்யஸ்ய மோகயன்லக்ஷ்யஸம்க்ரஹம் ॥ 30

ஶராணமக்ரதஸ்தஸ்ய புன: ஸமபிவர்த்தத ।
ப்ரஸார்ய ஹஸ்தௌ ஹனுமானுத்பபாதாநிலாத்மஜ: ॥ 31

---

பிறகு, சத்ரு வீரர்களை அழிக்கும் வீரனை இந்திரஜித்தான வன் நீண்டதுகளும், கூர்மையானதுகளும், நுனியில் கொக்கி உள்ளதுகளும், அழகிய கழுகு முதலிய பக்ஷிகளின் ரக்கைகள் உள்ளதுகளும், தங்கத்தால் சித்தரிக்கப்பட்ட பிடிகளுள்ளதுகளும், தொடர்ச்சியாக வருகின்றதுகளும், வஜ்ராயுதத்தின் வீழ்ச்சி போன்ற வேகமுள்ளதுகளுமான பாணங்களைக்கொட்டினன். (28)

பிறகு அந்த இந்திரஜித்தின் தேரின் ஶப்தத்தையும், மத்தளம், பேரி, படஹம் என்ற வாத்யங்களின் ஶப்தத்தையும் நன்கு இழுக்கப்பட்ட வில்லின் கோஷத்தையும் கேட்டு ஹனுமார் மறுபடியும் மேலே கிளம்பினர். (29)

பெரும் குரங்காகிய அந்த ஹனுமார் குறி தப்பாமலடிக்கும் அந்த இந்திரஜித்தினுடைய குறிவைத்தடித்த எல்லாவற்றையும் வீணக்கிக்கொண்டு பாணங்களின் நடுவில் சுற்றினர். (30)

வாயுபுத்ரனை ஹனுமார் அவன் போடும் பாணங்களுக்கு முன்பு நின்றுகொண்டுமிருந்தார். பாணங்கள் தன்மேல் விழும்

तावुभौ वेगसंपन्नौ रणकर्मविशारदौ।
सर्वभूतमनोग्राहि चक्रतुर्युद्धमुत्तमम्॥ ३२

हनूमतो वेद न राक्षसोऽन्तरं न मारुतिस्तस्य महात्मनोऽन्तरम्।
परस्परं निर्विषहौ बभूवतुः समेत्य तौ देवसमानविक्रमौ॥ ३३

ततस्तु लक्ष्ये स विहन्यमाने शरेष्वमोघेषु च संपतत्सु।
जगाम चिन्तां महतीं महात्मा समाधिसंयोगसमाहितात्मा॥ ३४

தாவுபௌ வேகஸம்பன்னௌ ரணகர்மவிஶாரதௌ।
ஸர்வபூதமனோக்ராஹி சக்ரதுர்யுத்தமுத்தமம்॥ **32**

ஹனூமதோ வேத ந ராக்ஷஸோऽந்தரம்
ந மாருதிஸ்தஸ்ய மஹாத்மனோऽந்தரம்।
பரஸ்பரம் நிர்விஷஹௌ பபூவது:
ஸமேத்ய தௌ தேவஸமானவிக்ரமௌ॥ **33**

ததஸ்து லக்ஷ்யே ஸ விஹன்யமானே
ஶரேஷ்வமோகேஷு ச ஸம்பதத்ஸு।
ஜகாம சிந்தாம் மஹதீம் மஹாத்மா
ஸமாதிஸம்யோகஸமாஹிதாத்மா॥ **34**

---

*ஸமயத்தில் கைகளை விரித்துக்கொண்டு மேலேயும் கிளம்பிவிட்டார்.* (31)

*சிறந்த வேகமுள்ளவர்களும், யுத்தம் செய்வதில் மிகச் சிறந்தவர்களுமான அவ்விருவர்களும் ஸர்வ ப்ராணிகளின் மனதையும் ஆகர்ஷிக்கக்கூடிய சிறந்த யுத்தத்தைச் செய்தனர்.* (32)

*ராக்ஷஸனான இந்திரஜித் ஹனுமாரை ஜெயிப்பதற்கு இடைவெளியை அறியவில்லை. மஹாத்மாவான ஹனுமாரும் இந்திரஜித்தை ஜெயிப்பதற்கு இடைவெளியை அறியவில்லை. தேவர்களுக்கொப்பான பராக்ரமமுள்ள அவ்விருவர்களும் சேர்ந்து ஒருவர்க்கொருவர் தாக்க முடியாதவர்களாயிருந்தனர்.* (33)

*பிறகு அமோகமான பாணங்கள் நன்கு போடப்பட்டும் குறிதவறிவிடுவதால், குறிதப்பாமல் பாணம் போடுவதில் ஊக்கமுள்ள மஹாத்மாவான இந்திரஜித்தானவன் பெருங்கவலையடைந்தான்.* (34)

*பிறகு ராக்ஷஸ ராஜனின் குமாரன் அந்த குரங்கிற்கு மரணம் இல்லாமலிருத்தலை தெரிந்துகொண்டு கட்டிப்பிடிப்பதற்கு*

ततो मतिं राक्षसराजसूनुश्चकार तस्मिन्हरिवीरमुख्ये ।
अवध्यतां तस्य कपेः समीक्ष्य कथं निगच्छेदिति निग्रहार्थम् ॥ ३५

ततः पैतामहं वीरः सोऽस्त्रमस्त्रविदां वरः ।
संदधे सुमहातेजास्तं हरिप्रवरं प्रति ॥ ३६

अवध्योऽयमिति ज्ञात्वा तमस्त्रेणास्त्रतत्त्ववित् ।
निजग्राह महाबाहुर्मारुतात्मजमिन्द्रजित् ॥ ३७

तेन बद्धस्ततोऽस्त्रेण राक्षसेन स वानरः ।
अभवन्निर्विचेष्टश्च पपात च महीतले ॥ ३८

ததோ மதிம் ராக்ஷஸராஜஸூனு
ஸ்சகார தஸ்மின்ஹரிவீரமுக்யே ।
அவத்யதாம் தஸ்ய கபே: ஸமீக்ஷ்ய
கதம் நிகச்சேதிதி நிக்ரஹார்த்தம் ॥ 35

தத: பைதாமஹம் வீர: ஸோऽஸ்த்ரமஸ்த்ரவிதாம் வர: ।
ஸம்ததே ஸுமஹாதேஜாஸ்தம் ஹரிப்ரவரம் ப்ரதி ॥ 36

அவத்யோऽயமிதி க்ஞாத்வா தமஸ்த்ரேணாஸ்த்ரதத்வவித் ।
நிஜக்ராஹ மஹாபாஹுர்மாருதாத்மஜமிந்த்ரஜித் ॥ 37

தேன பத்தஸ்ததோऽஸ்த்ரேண ராக்ஷஸேன ஸ வானர: ।
அபவன்நிர்விசேஷ்டஸ்ச பபாத ச மஹீதலே ॥ 38

---

இது எப்படி அஸங்காமலிருக்குமென்று வானர்களுள் சிறந்த அந்த ஹனுமார் விஷயத்தில் ஓர் தீர்மானத்தைச் செய்தான். (35)

பிறகு வீரனும், அஸ்த்ரம் அறிந்தவர்களுள் சிறந்தவனும், மிகுந்த தேஜஸுள்ளவனுமான அந்த இந்திரஜித்தானவன் வானர ஸ்ரேஷ்டரைக் குறித்து பிரம்மாஸ்த்ரத்தை பிரயோகித்தான். (36)

அஸ்த்ரத்தின் தத்வமறிந்தவனும், பெருத்த கைகளுள்ளவனுமான இந்திரஜித்தானவன் இந்த குரங்கை பிரம்மாஸ்த்ரத்தினுலும் கொல்லமுடியாதென்பதை உணர்ந்து அந்த வாயுபுத்ரனை பிரம்மாஸ்த்ரத்தால் கட்டினன். (37)

பிறகு அந்த ராக்ஷஸனல் பிரம்மாஸ்த்ரத்தால் கட்டப்பட்ட அந்த வானரன் அசங்காமல் ஆகிவிட்டான். பூமியிலும் விழுந்தான். (38)

பிறகு பிரம்மாஸ்த்ரம் கட்டியதை உணர்ந்து பிரம்மதேவனின் வரதான ப்ரபாவத்தால் ஸ்வல்பம் கூட பீடையை தானடை

ततोऽथ बुद्ध्वा स तदस्त्रबन्धं प्रभोः प्रभावाद्विगतात्मवेगः ।
पितामहानुग्रहमात्मनश्च विचिन्तयामास हरिप्रवीरः ॥ ३९

ततः स्वायम्भुवैर्मन्त्रैर्ब्रह्मास्त्रमभिमन्त्रितम् ।
हनूमांश्चिन्तयामास वरदानं पितामहात् ॥ ४०

न मेऽस्य बन्धस्य च शक्तिरस्ति विमोक्षणे लोकगुरोः प्रभावात् ।
इत्येव मत्वा विहितोऽस्त्रबन्धो मयात्मयोनेरनुवर्तितव्यः ॥ ४१

स वीर्यमस्त्रस्य कपिर्विचार्य पितामहानुग्रहमात्मनश्च ।
विमोक्षशक्तिं परिचिन्तयित्वा पितामहाज्ञामनुवर्तते स्म ॥ ४२

ததோऽத புத்வா ஸ ததஸ்த்ரபந்தம்
ப்ரபோ: ப்ரபாவாத்விகதாத்மவேக: ।
பிதாமஹானுக்ரஹமாத்மனஸ்ச
விசிந்தயாமாஸ ஹரிப்ரவீர: ॥ 39

தத: ஸ்வாயம்புவைர்மந்த்ரைர்ப்ரம்மாஸ்த்ரமபிமந்த்ரிதம் ।
ஹனூமாம்ஸ்சிந்தயாமாஸ வரதானம் பிதாமஹாத் ॥ 40

ந மேऽஸ்ய பந்தஸ்ய ச ஶக்திரஸ்தி
விமோக்ஷணே லோககுரோ: ப்ரபாவாத் ।
இத்யேவ மத்வா விஹிதோऽஸ்த்ரபந்தோ
மயாத்மயோனேரனுவர்த்திதவ்ய: ॥ 41

ஸ வீர்யமஸ்த்ரஸ்ய கபிர்விசார்ய
பிதாமஹானுக்ரஹமாத்மனஸ்ச ।
விமோக்ஷஶக்திம் பரிசிந்தயித்வா
பிதாமாஹக்ஞாமனுவர்த்ததே ஸ்ம ॥ 42

---

யாமல் வானரர்களுள் மிக சிறந்தவனை அந்த ஹனுமார் தனக்கு பிரம்மதேவன் செய்த அனுக்ரஹத்தை மனதினால் நினைத்தார். (39)

பிறகு ப்ராஹ்மமான மந்த்ரங்களால் ஜபித்து போடப்பட்ட பிரம்மாஸ்த்ரத்தை பற்றியும், பிரம்மதேவன் தனக்கு செய்த வரதானத்தையும் யோசித்தார். (40)

லோக குருவின் மஹிமையால் இந்த பிரம்மாஸ்த்ர கட்டை விடுவிக்கச் செய்வதில் நமக்கு சக்தி இல்லையென்பதை தெரிந்து கொண்டு நமக்கு இந்திரஜித்தால் செய்யப்பட்ட பிரம்மாஸ்த்ர பந்தமானது ஒரு முகூர்த்தம் பொறுக்கவேண்டியதென்றே தீர்மானித்தார். (41)

அந்த கபியானவர் அஸ்த்ரத்தின் வீர்யத்தை நன்கு யோசித்தும், தனக்கு இந்த அஸ்த்ரத்திலிருந்து விடுபடுவதற்கு சக்தியும் பிதாமஹானுக்ரஹத்தால் உண்டு என்பதையும் நன்கு தீர்மானித்தும், பிரம்ம தேவனின் ஆக்ஞையை அனுஸரித்தார். (42)

अस्त्रेणापि हि बद्धस्य भयं मम न जायते ।
पितामहमहेन्द्राभ्यां रक्षितस्यानिलेन च ॥ ४३

ग्रहणे चापि रक्षोभिर्महान्मे गुणदर्शनः ।
राक्षसेन्द्रेण संवादस्तस्माद्गृह्णन्तु मां परे ॥ ४४

स निश्चितार्थः परवीरहन्ता समीक्ष्यकारी विनिवृत्तचेष्टः ।
परैः प्रसह्याभिगतैर्निगृह्य ननाद तैस्तैः परिभर्त्स्यमानः ॥ ४५

ततस्तं राक्षसा दृष्ट्वा निर्विचेष्टमरिंदमम् ।
बबन्धुः शणवल्कैश्च द्रुमचीरैश्च संहतैः ॥ ४६

அஸ்த்ரேணாபி ஹி பத்தஸ்ய பயம் மம ந ஜாயதே ।
பிதாமஹமஹேந்த்ராப்யாம் ரக்ஷிதஸ்யாநிலேன ச ॥ **43**

க்ரஹணே சாபி ரக்ஷோபிர்மஹான்மே குணதர்ஶன: ।
ராக்ஷஸேந்த்ரேண ஸம்வாதஸ்தஸ்மாத்க்ருஹ்ணந்து மாம் பரே ॥

ஸ நிஶ்சிதார்த்த: பரவீரஹந்தா
ஸமீக்ஷ்யகாரீ விநிவ்ருத்தசேஷ்ட: ।
பரை: ப்ரஸஹ்யாபிகதைர்நிக்ருஹ்ய
நநாத தைஸ்தை: பரிபர்த்ஸ்யமான: ॥ **45**

ததஸ்தம் ராக்ஷஸா த்ருஷ்ட்வா நிர்விசேஷ்டமரிந்தமம் ।
பபந்து: ஶணவல்கைஶ்ச த்ருமசீரைஶ்ச ஸம்ஹதை: ॥ **46**

---

*பிரம்மதேவன், மஹேந்த்ரன் இவர்களாலும், வாயுவினாலும் ரக்ஷிக்கப்பட்ட எனக்கு அஸ்த்ரத்தினால் கட்டு ஏற்பட்டிருந்த போதிலும் பயமுண்டாகவில்லை.* (43)

*ராக்ஷஸர்களால் பிடிபடுவதிலும் ராக்ஷஸேந்திரனை ராவணனுடன் ஸம்வாதமாகிற ஒரு பெரிய நன்மையும் ஏற்படும். அதனால் சத்ருக்கள் என்னை பிடிக்கட்டும்.* (44)

*இம்மாதிரி தீர்மானம் செய்துகொண்டவரும், சத்ரு வீரர்களை யழிப்பவரும், நன்கு யோசித்து கார்யம் செய்கிறவரும் ஒருவிதமான சேஷ்டையில்லாதவராயுமிருந்துகொண்டு அந்த ஹனுமார் பலாத்காரமாக வந்தவர்களான சத்ருக்களால் பிடிக்கப்பட்டு அந்தந்த ராக்ஷஸர்களால் அதட்டப்பட்டவராயுமிருந்து கொண்டு கோஷமிட்டார்.* (45)

*பிறகு ராக்ஷஸர்கள் சத்ருக்களை யடக்கும் அந்த ஹனுமார் அசங்காமலிருப்பதைப் பார்த்து உறுதியான சணல் நார்களாலும் மரப்பட்டைகளாலும் கட்டினார்கள்.* (46)

**स रोचयामास परैश्च बन्धनं प्रसह्य वीरैरभिनिग्रहं च।**
**कौतूहलान्मां यदि राक्षसेन्द्रो द्रष्टुं व्यवस्येदिति निश्चितार्थः॥ ४७**

**स बद्धस्तेन वल्केन विमुक्तोऽस्त्रेण वीर्यवान्।**
**अस्त्रबन्धः स चान्यं हि न बन्धमनुवर्तते॥ ४८**

**अथेन्द्रजित्तु द्रुमचीरबद्धं विचार्य वीरः कपिसत्तमं तम्।**
**विमुक्तमस्त्रेण जगाम चिन्तां नान्येन बद्धो ह्यनुवर्ततेऽस्त्रम्॥ ४९**

**अहो महत्कर्म कृतं निरर्थकं न राक्षसैर्मन्त्रगतिर्विमृष्टा।**
**पुनश्च नास्त्रे विहतेऽस्त्रमन्यत्प्रवर्तते संशयिताः स्म सर्वे॥ ५०**

ஸ ரோசயாமாஸ பரைஶ்ச பந்தனம்
ப்ரஸஹ்ய வீரைரபிநிக்ரஹம் ச ।
கௌதூஹலான்மாம் யதி ராக்ஷஸேந்த்ரோ
த்ரஷ்டும் வ்யவஸ்யேதிதி நிஶ்சிதார்த்த: ॥ **47**

ஸ பத்தஸ்தேன வல்கேன விமுக்தோऽஸ்த்ரேண வீர்யவான் ।
அஸ்த்ரபந்த: ஸ சான்யம் ஹி ந பந்தமனுவர்த்ததே ॥ **48**

அதேந்த்ரஜித்து த்ருமசீரபத்தம்
விசார்ய வீர: கபிஸத்தமம் தம் ।
விமுக்தமஸ்த்ரேண ஜகாம சிந்தாம்
நான்யேன பத்தோ ஹ்யனுவர்த்ததேऽஸ்த்ரம் ॥

அஹோ மஹத்கர்ம க்ருதம் நிரர்த்தகம்
ந ராக்ஷஸைர்மந்த்ரகதிர்விம்ருஷ்டா ।
புனஶ்ச நாஸ்த்ரே விஹதேऽஸ்த்ரமன்யத்
ப்ரவர்த்ததே ஸம்ஶயிதா: ஸ்ம ஸர்வே ॥ **50**

---

ராக்ஷஸேந்திரனை ராவணன் குதூஹலத்துடன் என்னைப் பார்க்க வருவான் என்று தீர்மானம் செய்துகொண்ட அந்த ஹனுமார் வீரர்களான சத்ருக்களால் ஏற்பட்ட கட்டுகளையும் அதட்டலையும் அங்கீகரித்தார். (47)

அந்த மரப்பட்டையால் கட்டப்பட்ட அந்த வீர்யவானை ஹனுமார் பிரம்மாஸ்திரத்தால் விடுபட்டவராக ஆகிவிட்டார். அந்த அஸ்த்ர பந்தமும் இன்னொரு கட்டுதல் ஏற்பட்டால் நீங்கி விடும். (48)

பிறகு வீரனை இந்திரஜித்தானவன் மரப்பட்டைகளால் கட்டப்பட்ட கபிஶ்ரேஷ்டன் பிரம்மாஸ்திரத்தினின்றும் விடுபட்டான் என்பதை புணர்ந்து மற்றொன்றால் கட்டப்பட்டவன் பிரம் மாஸ்த்ரக் கட்டுதலை அடையமாட்டான் அல்லவா என்று கவலை கொண்டான். (49)

செய்த பெருங் கார்யம் வீணாகிவிட்டதே. இது கஷ்டம். ராக்ஷஸர்களால் பிரம்மாஸ்த்ரத்தின் செயல் யோசிக்கப்படவில்லை.

अस्त्रेण हनुमान्मुक्तो नात्मानमवबुध्यत।
कृष्यमाणस्तु रक्षोभिस्तैश्च बन्धैर्निपीडितः॥ ५१

हन्यमानस्ततः क्रूरै राक्षसैः काष्ठमुष्टिभिः।
समीपं राक्षसेन्द्रस्य प्राकृष्यत स वानरः॥ ५२

अथेन्द्रजित्तं प्रसमीक्ष्य मुक्तमस्त्रेण बद्धं द्रुमचीरसूत्रैः।
व्यदर्शयत्तत्र महाबलं तं हरिप्रवीरं सगणाय राज्ञे॥ ५३

तं मत्तमिव मातङ्गं बद्धं कपिवरोत्तमम्।
राक्षसा राक्षसेन्द्राय रावणाय न्यवेदयन्॥ ५४

அஸ்த்ரேண ஹனுமான்முக்தோ நாத்மானமவபுத்யத |
க்ருஷ்யமாணஸ்து ரக்ஷோபிஸ்தைஶ்ச பந்தைர்நிபீடித: || **51**

ஹன்யமானஸ்தத: க்ரூரை ராக்ஷஸை: காஷ்டமுஷ்டிபி: |
ஸமீபம் ராக்ஷஸேந்த்ரஸ்ய ப்ராக்ருஷ்யத ஸ வானர: || **52**

அதேந்த்ரஜித்தம் ப்ரஸமீக்ஷ்ய முக்தம்
அஸ்த்ரேண பத்தம் த்ருமசீரஸூத்ரை: |
வ்யதர்ஶயத்தத்ர மஹாபலம் தம்
ஹரிப்ரவீரம் ஸகணாய ராஜ்ஞே || **53**

தம் மத்தமிவ மாதங்கம் பத்தம் கபிவரோத்தமம் |
ராக்ஷஸா ராக்ஷஸேந்த்ராய ராவணாய ந்யவேதயன் || **54**

---

*பிரம்மாஸ்த்ரம் வீணாகி ஆகிவிட்டால் மறுபடியும் வேறு அஸ்த்ரம் பயன்படாது. இந்த குரங்கு கட்டிலிருந்து விடுபட்டுவிட்டால் நாங்கள் எல்லோரும் பிழைத்திருப்பது ஸந்தேஹம்தான் என்று கவலைகொண்டான்.* (50)

*பிரம்மாஸ்த்ரத்தினால் விடுபட்ட ஹனுமார் தன்னை விடுபட்டதாய் பிறர் அறியும்படி பிரகாசப்படுத்தவில்லை. அந்த கட்டுகளால் மிகவும் பீடிக்கப்பட்டு ராக்ஷஸர்களால் இழுக்கப்பட்டார்.* (51)

*பிறகு அந்த வானரனானவர் கடூரர்களான ராக்ஷஸர்களால் தடிகளாலும் கைபிடிகளாலும் அடிக்கப்படுகிறவராயிருந்து கொண்டு ராவணனுடைய ஸமீபத்திற்கு இழுத்துச்செல்லப்பட்டார்.* (52)

*பிறகு இந்திரஜித்தானவன் மரப்பட்டைகளாலும், கயிறுகளாலும் கட்டப்பட்டு பிரம்மாஸ்த்ரத்தால் விடுபட்டவராக அந்த ஹனுமாரை . தெரிந்துகொண்டு அங்கு ராஜஸபையில் பரிவாரங்களுடன் கூடிய அரசனான ராவணனிடத்தில் மஹாபலங்கொண்டவனும் வானரர்களுள் மிக சிறந்தவருமான அந்த ஹனுமாரைக் காண்பித்தான்.* (53)

*மதம்பிடித்த யானை போன்றவரும், கட்டப்பட்டவருமான*

कोऽयं कस्य कुतो वाऽत्र किं कार्यं को व्यपाश्रयः ।
इति राक्षसवीराणां तत्र संजज्ञिरे कथाः ॥ ५५

हन्यतां दह्यतां वाऽपि भक्ष्यतामिति चापरे ।
राक्षसास्तत्र संक्रुद्धाः परस्परमथाब्रुवन् ॥ ५६

अतीत्य मार्गं सहसा महात्मा स तत्र रक्षोधिपपादमूले ।
ददर्श राज्ञः परिचारवृद्धान्गृहं महारत्नविभूषितं च ॥ ५७

स ददर्श महातेजा रावणः कपिसत्तमम् ।
राक्षोभिर्विकृताकारैः कृष्यमाणमितस्ततः ॥ ५८

கோऽயம் கஸ்ய குதோ வாऽத்ர கிம் கார்யம் கோ வ்யபாஶ்ரய:
இதி ராக்ஷஸவீராணும் தத்ர ஸம்ஜக்ஞிரே கதா: ॥ 55

ஹன்யதாம் தஹ்யதாம் வாऽபி பக்ஷ்யதாமிதி சாபரே ।
ராக்ஷஸாஸ்தத்ர ஸம்க்ருத்தா: பரஸ்பரமதாப்ருவன் ॥ 56

அதீத்ய மார்கம் ஸஹஸா மஹாத்மா
ஸ தத்ர ரக்ஷோதிபபாதமூலே ।
ததர்ஶ ராக்ஞ: பரிசாரவ்ருத்தான்
க்ருஹம் மஹாரத்னவிபூஷிதம் ச ॥ 57

ஸ ததர்ஶ மஹாதேஜா: ராவண: கபிஸத்தமம் ।
ரக்ஷோபிர்விக்ருதாகாரை: க்ருஷ்யமாணமிதஸ்தத: ॥ 58

---

அந்த கபிஶ்ரேஷ்டனை ராக்ஷஸர்கள் ராக்ஷஸேந்திரனை ராவணனிடத்தில் தெரியப்படுத்தினர்கள். (54)

இவன் யார்? எவனைச் சேர்ந்தவன்? எங்கிருந்து வந்தவன்? இங்கு என்ன கார்யம்? இங்கு இவனுக்கு யாருடைய ஆதரவு? என்று அங்கு ராஜஸபையில் ராக்ஷஸ வீரர்களுக்குள் பேச்சானது உண்டாயிற்று. (55)

அந்த இடத்தில் மிக கோபங்கொண்ட ராக்ஷஸர்கள் அந்த குரங்கை கொன்றுவிடுவோம் அல்லது எரித்துவிடுவோம் என்றும் மற்றும் சில ராக்ஷஸர்கள் தின்றுவிடுவோம் என்றும் ஒருவர்க்கொருவர் சொன்னர்கள். (56)

ஹனுமார் வேகமாக அந்த வழியைத்தாண்டி அங்கு ராக்ஷஸ ராஜனின் காலின்கீழ் இருக்கின்ற அரசனின் கிழவர்களான பணியாளர்களேயும், சிறந்த ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட மாளிகையையும் பார்த்தார். (57)

மஹா தேஜஸ்வியான அந்த ராவணன் விகாரமான உருவங்கொண்ட அந்த ராக்ஷஸர்களால் அங்குமிங்கும் இழுக்கப்படுகிற கபிஶ்ரேஷ்டனைக் கண்டான். (58)

राक्षसाधिपतिं चापि ददर्श कपिसत्तमः ।
तेजोबलसमायुक्तं तपन्तमिव भास्करम् ॥ ५९

स रोषसंवर्तिततात्रदृष्टिर्दशाननस्तं कपिमन्ववेक्ष्य ।
अथोपविष्टान्कुलशीलवृद्धान्समादिशत्तं प्रति मन्त्रिमुख्यान् ॥ ६०

यथाक्रमं तैः स कपिर्विपृष्टः कार्यार्थमर्थस्य च मूलमादौ ।
निवेदयामास हरीश्वरस्य दूतः सकाशादहमागतोऽस्मि ॥ ६१

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
अष्टचत्वारिंशः सर्गः ॥ ४८ ॥

ராக்ஷஸாதிபதிம் சாபி தத₃ர்ம₂ கபிஸத்தம: ।
தேஜோபலஸமாயுக்தம் தபந்தமிவ பாஸ்கரம் ॥ 59

ஸ ரோஷஸம்வர்த்திததாம்ரத்₃ருஷ்டிர்
த₃மாநநஸ்தம் கபிமன்வவேக்ஷ்ய ।
அதோபவிஷ்டான்குலமீலவ்ருத்தான்
ஸமாதிமத்தம் ப்ரதி மந்த்ரிமுக்யான் ॥ 60

யதாக்ரமம் தை: ஸ கபிர்விப்ருஷ்ட:
கார்யார்த்தமர்த்தஸ்ய ச மூலமாதௌ ।
நிவேதயாமாஸ ஹரீம்ஶ்வரஸ்ய
தூத: ஸகாமாதஹமாகதோऽஸ்மி ॥ 61

**இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே**
**ஸுந்தரகாண்டே அஷ்டசத்வாரிம்ம: ஸர்க: ॥**

---

கபிம்ரேஷ்டரானவர் தேஜஸ், பலம் இவைகள் மிகவும் நிறைந்த ராக்ஷஸாதிபதியை தேஜோமயமான ஸூர்யனைப்போல் கண்டார். (59)

அந்த குரங்கை ராவணன் நன்கு பார்த்து கோபத்தால் சுழண்டதுகளும், சிவந்ததுகளுமான கண்களுள்ளவனுயிருந்து கொண்டு பிறகு அங்கு உட்கார்ந்திருப்பவர்களும், குலம், நல்ல நடை இவைகளில் சிறந்தவர்களுமான மந்திரி ம்ரேஷ்டர்களை அந்த ஹனுமாரைக் குறித்து ஏவினன். (60)

வந்த கார்யத்தை குறித்தும், கார்யத்திற்கு காரணமாயிருந்த ஏவினவனைக் குறித்தும் முதலில் அந்த மந்திரிகளால் வரிசையாகக் கேட்கப்பட்ட அந்த ஹனுமார் வானர ராஜனை ஸுக்ரீவனுடைய தூதன் என்றும், அந்த அரசனின் ஸமீபமிருந்து வந்தவன் என்றும் தெரிவித்தார். (61)

நாற்பத்தெட்டாவது ஸர்கம் முற்றிற்று.

ஸ்ரீ:

एकोनपञ्चाशः सर्गः — நாற்பத்தோன்பதாவது ஸர்கம் ॥ ४९ ॥

# "रावणप्रभावदर्शनम्"

# ராவணனின் மஹிமையைக் காணல்.

ततः स कर्मणा तस्य विस्मितो भीमविक्रमः ।
हनुमान्रोषताम्राक्षो रक्षोधिपमवैक्षत ॥ १

भ्राजमानं महार्हेण काञ्चनेन विराजता ।
मुक्ताजालावृतेनाथ मुकुटेन महाद्युतिम् ॥ २

वज्रसंयोगसंयुक्तैर्महार्हमणिविग्रहैः ।
हैमैराभरणैश्चित्रैर्मनसेव प्रकल्पितैः ॥ ३

महार्हक्षौमसंवीतं रक्तचन्दनरूषितम् ।
स्वनुलिप्तं विचित्राभिर्विविधाभिश्च भक्तिभिः ॥ ४

தத: ஸ கர்மணா தஸ்ய விஸ்மிதோ பீமவிக்ரம: ।
ஹனுமான்ரோஷதாம்ராக்ஷோ ரக்ஷோதிபமவைக்ஷத ॥ 1

ப்ராஜமானம் மஹார்ஹேண காஞ்சனேன விராஜதா ।
முக்தாஜாலாவ்ருதேனாத முகுடேன மஹாத்யுதிம் ॥ 2

வஜ்ரஸம்யோகஸம்யுக்தைர்மஹார்ஹமணிவிக்ரஹை: ।
ஹைமைராபரணைஸ்சித்ரைர்மனஸேவ ப்ரகல்பிதை: ॥ 3

மஹார்ஹக்ஷௌமஸம்வீதம் ரக்தசந்தனரூஷிதம் ।
ஸ்வனுலிப்தம் விசித்ராபிர்விவிதாபிஸ்ச பக்திபி: ॥ 4

---

பிறகு ராவணன் யுத்தத்திற்கு வராமலே இந்திரஜித்தைக் கொண்டு தன்னை கட்டி இழுத்துவந்த ராவணனுடைய செய்கையினால் ஆஸ்சர்யபட்டவரும், பயங்கரமான பராக்ரமமுள்ளவருமான ஹனுமார் கோபத்தால் சிவந்த கண்கள் உள்ளவராயிருந்து கொண்டு ராக்ஷஸ ராஜனை நன்கு பார்த்தார். (1)

விலையுயர்ந்ததும், தங்கத்தால் செய்யப்பட்டதும், பிரகாசிக்கின்றதும், முத்து சலங்கைகளால் அலங்கரிக்கப்பட்டதுமான கிரீடத்தால் பிரகாசிக்கின்றவனும், மிகுந்த காந்தியுள்ளவனும், வைரக்கற்கள் வைத்து புதைக்கப்பட்டதுகளும், விலையுயர்ந்த மணிகளால் உருவாக்கப்பட்டதுகளும், தங்கத்தினால் செய்யப்பட்டதுகளும், நானாவர்ணங்கள் உள்ளதுகளும், மனதினால் நன்கு

विवृतैर्दर्शनीयैश्च रक्ताक्षैर्भीमदर्शनैः ।
दीप्ततीक्ष्णमहादंष्ट्रैः प्रलम्बदशनच्छदैः ॥ ५

शिरोभिर्दशभिर्वीरं भ्राजमानं महौजसम् ।
नानाव्यालसमाकीर्णैः शिखरैरिव मन्दरम् ॥ ६

नीलाञ्जनचयप्रख्यं हारेणोरसि राजता ।
पूर्णचन्द्राभवक्त्रेण सबलाकमिवाम्बुदम् ॥ ७

बाहुभिर्बद्धकेयूरैश्चन्दनोत्तमरूषितैः ।
भ्राजमानाङ्गदैः पीनैः पञ्चशीर्षैरिवोरगैः ॥ ८

விவ்ருதைர்தர்ஶநீயைஶ்ச ரக்தாக்ஷைர்பீமதர்ஶனை: ।
தீப்ததீக்ஷ்ணமஹாதம்ஷ்ட்ரை: ப்ரலம்பதஶனச்சதை: ॥ 5

ஶிரோபிர்தஶபிர்வீரம் ப்ராஜமானம் மஹௌஜஸம் ।
நாநாவ்யாலஸமாகீர்ணை: ஶிகரைரிவ மந்தரம் ॥ 6

நீலாஞ்ஜனசயப்ரக்யம் ஹாரேணோரஸி ராஜதா ।
பூர்ணசந்த்ராபவக்த்ரேண ஸபலாகமிவாம்புதம் ॥ 7

பாஹுபிர்பத்தகேயூரைஶ்சந்தனோத்தமரூஷிதை: ।
ப்ராஜமானாங்கதை: பீனை: பஞ்சஶீர்ஷைரிவோரகை: ॥ 8

---

செய்யப்பட்டது போன்றதுகளுமான ஆபரணங்களால் பிரகாசிக்கின்றவனும், விலையுயர்ந்த பட்டு வஸ்த்ரத்தை தரித்தவனும், சிகப்பு சந்தனத்தால் பூசப்பட்டவனும், வரிசையாய் விசித்ரமாக கோடு கோடாக சந்தனத்தால் நன்கு பூசப்பட்டவனும், வட்டமாக உள்ளதுகளும், பார்க்கத் தகுந்ததுகளும், பயங்கரமான ரூபமுள்ளதுகளுமான சிவந்த கண்களினாலும், ப்ரகாஶிக்கின்றதுகளும், கூர்மையானதுகளுமான தித்திபற்களினாலும், தொங்குகின்ற உதடுகளினாலும் ப்ரகாஶிக்கின்றவனும், பத்து தலைகளால் பல மலைப்பாம்புகளால் சூழப்பட்ட கொடிமுடிகளால் ப்ரகாஶிக்கின்ற மந்திர பர்வதம் போலிருப்பவனும், வீரனும், மிகுந்த தேஜஸ் வாய்ந்தவனும், கறுத்த மை மலைபோன்றவனும், மார்பில் ப்ரகாஶிக்கின்ற மாலையினாலும், பூர்ண சந்திரனுக்கொப்பான முகத்தாலும், கொக்குகளுடன் கூடிய மேகம் போன்றவனும், தரிக்கப்பட்ட தோள்வளைகளுள்ளதுகளும், சிறந்த சந்தனத்தால் பூசப்பட்டதுகளும், ப்ரகாஶிக்கின்ற வேறு விதமாக செய்யப்பட்ட மற்றும் சில தோள்வளைகள் உள்ளதுகளும், பெருத்ததுகளும், ஐந்து தலையுடன் கூடிய ஸர்ப்பங்கள் போன்றதுகளுமான கைகளுடன் கூடியவனும், பெருத்ததும், ஸ்படிகக் கல்லிழைத்ததும், பல வர்ணமுள்ளதும், மற்றும் சில ரத்னங்கள் வைத்திழைக்கப்பட்டதும்,

महति स्फाटिके चित्रे रत्नसंयोगसंस्कृते ।
उत्तमास्तरणास्तीर्णे सूपविष्टं वरासने ॥ ९

अलङ्कृताभिरत्यर्थं प्रमदाभिः समन्ततः ।
वालव्यजनहस्ताभिरारात्समुपसेवितम् ॥ १०

दुर्धरेण प्रहस्तेन महापार्श्वेन रक्षसा ।
मन्त्रिभिर्मन्त्रतत्त्वज्ञैर्निकुम्भेन च मन्त्रिणा ॥ ११

उपोपविष्टं रक्षोभिश्चतुर्भिर्बलदर्पितैः ।
कृत्स्नः परिवृतो लोकश्चतुर्भिरिव सागरैः ॥ १२

मन्त्रिभिर्मन्त्रतत्त्वज्ञैरन्यैश्च शुभबुद्धिभिः ।
अन्वास्यमानं रक्षोभिः सुरैरिव सुरेश्वरम् ॥ १३

மஹதி ஸ்பாடிகே சித்ரே ரத்னஸம்யோகஸம்ஸ்க்ருதே ।
உத்தமாஸ்தரணாஸ்தீர்ணே ஸூபவிஷ்டம் வராஸனே ॥ 9

அலங்க்ருதாபிரத்யர்த்தம் ப்ரமதாபி: ஸமந்தத: ।
வாலவ்யஜனஹஸ்தாபிராராத்ஸமுபஸேவிதம் ॥ 10

துர்தரேண ப்ரஹஸ்தேன மஹாபார்ஸ்வேன ரக்ஷஸா ।
மந்த்ரிபிர்மந்த்ரதத்வக்ஞைர்நிகும்பேன ச மந்த்ரிணா ॥ 11

உபோபவிஷ்டம் ரக்ஷோபிஸ்சதுர்பிர்பலதர்பிதை: ।
க்ருத்ஸ்ன: பரிவ்ருதோ லோகஸ்சதுர்பிரிவ ஸாகரை: ॥ 12

மந்த்ரிபிர்மந்த்ரதத்வக்ஞைரன்யைஸ்ச ஶுபபுத்திபி: ।
அன்வாஸ்யமானம் ரக்ஷோபி: ஸுரைரிவ ஸுரேஸ்வரம் ॥

---

உயர்ந்த விரிப்புகள் விரிக்கப்பட்டதுமான சிறந்த ஸிம்ஹாஸனத்தில் நன்கு உட்கார்ந்துகொண்டவனும், மிகுந்த அலங்காரஞ் செய்து கொண்டவர்களும், சாமரங்களை கையில் தரித்தவர்களும், நான்கு பக்கத்திலிருக்கின்றவர்களுமான சிறந்த ஸ்த்ரீகளால் ஸமீபத்தில் நன்கு ஸேவிக்கப்பட்டவனும், ஆலோசித்து தத்துவத்தை நன்கு அறியக்கூடியவர்களும், மந்திராலோசனைக்கு உதவியாயிருக்கிறவர்களும், பலத்தால் கொழுப்பை யடைந்தவர்களுமான துர்தரன், ப்ரஹஸ்தன், மஹாபார்ஸ்வன், நிகும்பன் என்ற நான்கு ராக்ஷஸர்களும் சேர்ந்து பக்கத்தில் உட்கார்ந்திருப்பதால், நான்கு ஸமுத்திரங்களால் சூழப்பட்ட எல்லா உலகம் போன்றவனும், அழகிய புத்தியுள்ளவர்களும், மந்திராலோசனையின் ஸ்வரூபத்தை யறிந்தவர்களுமான காரியம் செய்ய அனுகூலமாகயிருக்கும் மற்றும் ஸசிவர்களான ராக்ஷஸர்களாலும், தேவர்களால் தேவேந்திரன் போல் உபாஸிக்கப்படுகின்றவனும், மிகுந்த தேஜஸுள்ள

अपश्यद्राक्षसपतिं हनुमानतितेजसम्।
विष्ठितं मेरुशिखरे सतोयमिव तोयदम्॥ १४

स तैः संपीड्यमानोऽपि रक्षोभिर्भीमविक्रमैः।
विस्मयं परमं गत्वा रक्षोधिपमवैक्षत॥ १५

भ्राजमानं ततो दृष्ट्वा हनुमान्राक्षसेश्वरम्।
मनसा चिन्तयामास तेजसा तस्य मोहितः॥ १६

अहो रूपमहो धैर्यमहो सत्वमहो द्युतिः।
अहो राक्षसराजस्य सर्वलक्षणयुक्तता। १७

यद्यधर्मो न बलवान्स्यादयं राक्षसेश्वरः।
स्यादयं सुरलोकस्य सशक्रस्यापि रक्षिता॥ १८

அபஶ்யத்ராக்ஷஸபதிம் ஹனுமானதிதேஜஸம் |
விஷ்டிதம் மேருஶிகரே ஸதோயமிவ தோயதம் || 14

ஸ தை: ஸம்பீட்யமானோऽபி ரக்ஷோபிர்பீமவிக்ரமை: |
விஸ்மயம் பரமம் கத்வா ரக்ஷோதிபமவைக்ஷத || 15

ப்ராஜமானம் ததோ த்ருஷ்ட்வா ஹனுமான்ராக்ஷஸேஶ்வரம் |
மனஸா சிந்தயாமாஸ தேஜஸா தஸ்ய மோஹித: || 16

அஹோ ரூபமஹோ தைர்யமஹோ ஸத்வமஹோ த்யுதி: |
அஹோ ராக்ஷஸராஜஸ்ய ஸர்வலக்ஷணயுக்ததா || 17

யத்யதர்மோ ந பலவான்ஸ்யாதயம் ராக்ஷஸேஶ்வர: |
ஸ்யாதயம் ஸுரலோகஸ்ய ஸஶக்ரஸ்யாபி ரக்ஷிதா || 18

---

வனும், மேரு பர்வதத்தின் நுனியில் இருக்கின்ற ஜலத்துடன் கூடிய மேகம்போன்றவனுமான ராக்ஷஸாதிபதியான ராவணனை ஹனுமார் கண்டார். (2 — 14)

அந்த ராக்ஷஸர்களால் நன்கு பீடிக்கப்பட்ட போதிலும் அந்த ஹனுமார் மிகுந்த ஆஶ்சரியத்தை யடைந்து ராக்ஷஸாதிபதியான ராவணனை மறுபடியும் நன்கு பார்த்தார். (15)

பிறகு ப்ரகாஶிக்கின்ற ராக்ஷஸேஶ்வரனைப் பார்த்து அவன் தேஜஸினால் மோஹத்தை யடைந்த ஹனுமார் மனதினால் சிந்தித்தார். (16)

ஹா என்ன ரூபம்! ஹா என்ன தைர்யம்! ஹா என்ன பலம்! ஹா என்ன காந்தி! ஹா ராக்ஷஸ ராஜனின் எல்லா லக்ஷணங்களும் பொருந்தியிருத்தல் என்ன ஆஶ்சர்யம். (17)

அதர்மமானது பலமற்றதாயிருக்குமேயாகில் இவன் ராக்ஷஸர்களுக்கு ஈஶ்வரனாகவே பலகாலிருப்பான். இந்திரனுடன் கூடிய ஸுரலோகத்தை காப்பவனாகவும் இவன் ஆவான். (18)

अस्य क्रूरैर्नृशंसैश्च कर्मभिर्लोककुत्सितैः।
तेन बिभ्यति खल्वस्माल्लोकाः सामरदानवाः॥ १९
अयं ह्युत्सहते क्रुद्धः कर्तुमेकार्णवं जगत्।
इति चिन्तां बहुविधामकरोन्मतिमान्हरिः॥
दृष्ट्वा राक्षसराजस्य प्रभावममितौजसः॥ २०

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
एकोनपञ्चाशः सर्गः॥ ४९॥

அஸ்ய க்ரூரைர்ந்ருஶம்ஸைஶ்ச கர்மபிர்லோககுத்ஸிதை: ।
தேன பிப்யதி கல்வஸ்மால்லோகா: ஸாமரதானவா: ॥ 19

அயம் ஹ்யுத்ஸஹதே க்ருத்த: கர்த்துமேகார்ணவம் ஜகத் ।
இதி சிந்தாம் பஹுவிதாம் அகரோன்மதிமான்ஹரி: ॥
த்ருஷ்ட்வா ராக்ஷஸராஜஸ்ய ப்ரபாவமமிதௌஜஸ: ॥ 20

இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே ஏகோநபஞ்சாஶ: ஸர்க: ॥

---

இவனுடைய கடூரங்களும், தயையற்றதுகளும், உலகம் நிந்திக்கக்கூடியதுகளுமான செய்கைகளால் உண்டுபண்ணப்பட்ட அதர்மத்தினுல் இவனிடத்திலிருந்து தேவாஸுரர்களுடன் கூடின உலகங்கள் பயப்படுகின்றன. (19)

அளவற்ற தேஜஸுள்ள ராக்ஷஸ ராஜனின் பிரபாவத்தைப் பார்த்து புத்திமானுன ஹனுமார் இந்த ராவணன் கோபங்கொண்டால் இந்த உலக முழுமையும் ஒரே ஸமுத்ரமாக செய்வதற்கு சக்திவாய்ந்தவனென்று பலவகைப்பட்ட இம்மாதிரியான எண்ணத்தைச் செய்தார். (20)

நாற்பத்தொன்பதாவது ஸர்கம் முற்றிற்று.

---

ஸ்ரீ:

पञ्चाशः सर्गः — ஐம்பதாவது ஸர்கம் ॥ ५० ॥

# "प्रहस्तप्रश्नः" — ப்ரஹஸ்தன் கேள்வி கேட்டல்.

तमुद्वीक्ष्य महाबाहुः पिङ्गाक्षं पुरतः स्थितम् ।
कोपेन महताविष्टो रावणो लोकरावणः ॥ १

शङ्काहतात्मा दध्यौ स कपीन्द्रं तेजसावृतम् ।
किमेष भगवान्नन्दी भवेत्साक्षादिहागतः ॥ २

येन शप्तोऽस्मि कैलासे मया संचालिते पुरा ।
सोऽयं वानरमूर्तिः स्यात्किंस्विद्बाणोऽपि वाऽसुरः ॥ ३

தமுத்வீக்ஷ்ய மஹாபாஹு: பிங்காக்ஷம் புரத: ஸ்திதம் ।
கோபேன மஹதாவிஷ்டோ ராவணோ லோகராவண: ॥ 1

ஶங்காஹதாத்மா தத்யௌ ஸ கபீந்த்ரம் தேஜஸாவ்ருதம் ।
கிமேஷ பகவான்நந்தீ பவேத்ஸாக்ஷாதிஹாகத: ॥ 2

யேன ஶப்தோऽஸ்மி கைலாஸே மயா ஸம்சாலிதே புரா ।
ஸோऽயம் வானரமூர்த்தி: ஸ்யாத்கிம்ஸ்வித்பாணோऽபி
வாऽஸுர: ॥ 3

---

தனக்கு முன்பிருக்கின்றவரும், மஞ்சள் நிறமான கண்ணுள்ளவருமான அந்த ஹனுமாரை நிமிர்ந்து பார்த்து மிகுந்த கோபத்துடன் கூடியவனும், பெருத்த கைகளுள்ளவனும், உலகத்தை கதறடிக்கின்றவனுமான ராவணன் சங்கையினுல் கலங்கின மனமுள்ளவனுயிருந்துகொண்டு மிகுந்த தேஜஸுடன் கூடிய வானரஶ்ரேஷ்டனைக் குறித்து, நான் கைலாஸ பர்வதத்தை முன்பு அசக்கினபொழுது எவன் என்னை ஶபித்தானே அந்த பகவானுன நந்தியே ஸாக்ஷாத்தாய் இங்கு இம்மாதிரி வந்திருக்கிறுனே, அல்லது பாணன் என்ற அஸுரன் இந்த குரங்கின் உருவம் எடுத்து வந்திருக்கிறுனே என்றும் ஆலோசித்தான்.

(இங்கு ராவணன் நிமிர்ந்து ஹனுமாரை பார்த்தான் என்றதால் ஹனுமார் தன் வாலை உயரமான ஆஸனமாகச் சுருட்டி அதன் மேல் உட்கார்ந்திருந்தார் என்பது ஸூசிபிக்கப்படுகிறது. ராவணன் இவருக்கு ஆஸனம் கொடுக்காததால் இம்மாதிரி உட்கார்ந்தார் என்று புலப்படுகிறது.) (1—3)

स राजा रोषताम्राक्षः प्रहस्तं मन्त्रिसत्तमम् ।
कालयुक्तमुवाचेदं वचो विपुलमर्थवत् ॥ ४

दुरात्मा पृच्छ्यतामेष कुतः किं वाऽस्य कारणम् ।
वनभङ्गे च कोऽस्यार्थो राक्षसीनां च तर्जने ॥ ५

मत्पुरीमप्रधृष्यां वा गमने किं प्रयोजनम् ।
आयोधने वा किं कार्यं पृच्छ्यतामेष दुर्मतिः ॥ ६

रावणस्य वचः श्रुत्वा प्रहस्तो वाक्यमब्रवीत् ।
समाश्वसिहि भद्रं ते न भीः कार्या त्वया कपे ॥ ७

ஸ ராஜா ரோஷதாம்ராக்ஷ: ப்ரஹஸ்தம் மந்த்ரிஸத்தமம் ।
காலயுக்தமுவாசேதம் வசோ விபுலமர்த்தவத் ॥ 4

துராத்மா ப்ருச்யதாமேஷ குத: கிம் வாऽஸ்ய காரணம் ।
வனபங்கே ச கோऽஸ்யார்த்தோ ராக்ஷஸீனாம் ச தர்ஜனே ॥ 5

மத்புரீமப்ரத்ருஷ்யாம் வா கமனே கிம் ப்ரயோஜனம் ।
ஆயோதனே வா கிம் கார்யம் ப்ருச்யதாமேஷ துர்மதி: ॥ 6

ராவணஸ்ய வச: ஶ்ருத்வா ப்ரஹஸ்தோ வாக்யமப்ரவீத் ।
ஸமாஶ்வஸிஹி பத்ரம் தே ந பீ: கார்யா த்வயா கபே ॥ 7

---

*அந்த ராஜாவானவன் கோபத்தால் சிவந்த கண்களுடனிருந்துகொண்டு மந்திரிகளுள் சிறந்தவனான பிரஹஸ்தனைப் பார்த்து காலத்திற்கேற்றதும், கம்பீரமானதும், உட்கருத்துடன் கூடியதுமான இந்த வார்த்தையைச் சொன்னான்.* (4)

*இவன் எங்கிருந்து வந்தவன்? இவனை இங்கு வரும்படி ஏவினவன் யார்? தோட்டத்தை முறிப்பதிலோ, ராக்ஷஸிகளை அதட்டுவதிலோ இவனுக்கு ஆகவேண்டியது என்ன? என்று இந்த துஷ்டனைக்கேள்.* (5)

*தகையமுடியாத என் பட்டணத்திற்கு வந்ததின் பயனென்ன? கிங்கரர்கள் முதலியவர்களுடன் எதற்காக யுத்தம் செய்தான்? என்றும் துர்புத்தியான இவனைக் கேள்.* (6)

*ராவணனுடைய வார்த்தையைக்கேட்டு பிரஹஸ்தன் ஓ குரங்கே நீ பயப்படாதே, உனக்கு க்ஷேமம் உண்டாகும், தைர்யத்தையடை என்று சொன்னான்.*

*(ஸாமான்யமான குரங்கு என்று பிரஹஸ்தன் இம்மாதிரி சொன்னதாக கருதவேண்டும்.)* (7)

यदि तावत्त्वमिन्द्रेण प्रेषितो रावणालयम्।
तत्त्वमाख्याहि मा भूत्ते भयं वानर मोक्ष्यसे॥ ८

यदि वैश्रवणस्य त्वं यमस्य वरुणस्य वा।
चाररूपमिदं कृत्वा प्रविष्टो नः पुरीमिमाम्॥ ९

विष्णुना प्रेषितो वाऽपि दूतो विजयकाङ्क्षिणा।
न हि ते वानरं तेजो रूपमात्रं तु वानरम्॥ १०

तत्त्वतः कथयस्वाद्य ततो वानर मोक्ष्यसे।
अनृतं वदतश्चापि दुर्लभं तव जीवितम्॥ ११

अथवा यन्निमित्तं ते प्रवेशो रावणालये।
एवमुक्तो हरिश्रेष्ठस्तदा रक्षोगणेश्वरम्॥ १२

யதி தாவத்வமிந்த்ரேண ப்ரேஷிதோ ராவணாலயம் ।
தத்வமாக்யாஹி மா பூத்தே பயம் வானர மோக்ஷ்யஸே ॥ 8

யதி வைஶ்ரவணஸ்ய த்வம் யமஸ்ய வருணஸ்ய வா ।
சாரரூபமிதம் க்ருத்வா ப்ரவிஷ்டோ ந: புரீமிமாம் ॥ 9

விஷ்ணுநா ப்ரேஷிதோ வாऽபி தூதோ விஜயகாங்க்ஷிணா ।
ந ஹி தே வானரம் தேஜோ ரூபமாத்ரம் து வானரம் ॥ 10

தத்வத: கதயஸ்வாத்ய ததோ வானர மோக்ஷ்யஸே ।
அந்ருதம் வததஶ்சாபி துர்லபம் தவ ஜீவிதம் ॥ 11

அதவா யந்நிமித்தம் தே ப்ரவேஶோ ராவணாலயே ।
ஏவமுக்தோ ஹரிஶ்ரேஷ்டஸ்ததா ரக்ஷோகணேஶ்வரம் ॥ 12

---

ஓ வானர! நீ இந்திரனால் ராவணனுடைய வீட்டிற்கு செல் என்று ஏவப்பட்டவனா? உண்மையைச்சொல். உனக்கு பயம் வேண்டாம். அப்படி சொன்னால் விடுபட்டுவிடுவாய். (8)

நீ குபேரன், யமன், வருணன் இவர்களில் யாருக்காக சாரனுடைய உருவமாகிய குரங்கு ரூபம் எடுத்துக்கொண்டு எங்களுடைய இந்த பட்டணத்திற்குள் பிரவேசித்தாய்? (9)

அல்லது நன்கு ஜயத்தைக்கோரி விஷ்ணுவினால் தூதாக ஏவப்பட்டாயா? உனது தேஜஸ் குரங்கினுடையதாக இருக்கமுடியாது. உன் வேஷம் மட்டிலும்தான் குரங்கினுடையது. (10)

ஓ வானர? இப்பொழுது உண்மையைச் சொல். பிறகு உன்னை விட்டுவிடுகிறேன். பொய்சொன்னால் நீ பிழைத்திருப்பது அரிது. (11)

அல்லது ராவணனுடைய வீட்டிற்கு என்ன காரணமாய் நீ வந்தாய்? என்று பிரஹஸ்தனால் அப்பொழுது கேட்கப்பட்ட

अब्रवीन्नास्मि शक्रस्य यमस्य वरुणस्य वा।
धनदेन न मे सख्यं विष्णुना नास्मि चोदितः॥ १३

जातिरेव मम त्वेषा वानरोऽहमिहागतः।
दर्शने राक्षसेन्द्रस्य दुर्लभे तदिदं मया॥ १४

वनं राक्षसराजस्य दर्शनार्थे विनाशितम्।
ततस्ते राक्षसाः प्राप्ता बलिनो युद्धकाङ्क्षिणः॥ १५

रक्षणार्थं तु देहस्य प्रतियुद्धा मया रणे।
अस्त्रपाशैर्न शक्योऽहं बद्धुं देवासुरैरपि॥ १६

அப்ரவீன்னாஸ்மி ஶக்ரஸ்ய யமஸ்ய வருணஸ்ய வா।
தனதேன ந மே ஸக்யம் விஷ்ணுநா நாஸ்மி சோதித:॥ 13

ஜாதிரேவ மம த்வேஷா வானரோऽஹமிஹாகத:।
தர்ஶனே ராக்ஷஸேந்த்ரஸ்ய துர்லபே ததிதம் மயா॥ 14

வனம் ராக்ஷஸராஜஸ்ய தர்ஶனார்த்தே விநாஶிதம்।
ததஸ்தே ராக்ஷஸா: ப்ராப்தா பலினோ யுத்தகாங்க்ஷிண:॥ 15

ரக்ஷணார்த்தம் து தேஹஸ்ய ப்ரதியுத்தா மயா ரணே।
அஸ்த்ரபாஶைர்ந ஶக்யோऽஹம் பத்தும் தேவாஸுரைரபி॥

---

ஹரிஶ்ரேஷ்டன் நான் இந்திரன், யமன், வருணன் இவர்களுடைய தூதனல்ல. குபேரனுடன் எனக்கு ஸ்நேஹம் கிடையாது. விஷ்ணுவினால் நான் ஏவப்படவில்லை என்று ராக்ஷஸர்களுக்கு ஈஶ்வரனை ராவணனைப் பார்த்து நேரிலேயே சொன்னார். இதனால் தன்னைக் கேட்ட ப்ரஹஸ்தனை அலக்ஷியம் செய்து நேரிலேயே அரசனுடன் பேசினார் என்று கருத்து. (12—13)

இந்த குரங்கின் உருவமானது எனக்கு பிறப்பிலேயே ஏற்பட்டதாகும். நான் குரங்குதான். ராக்ஷஸேந்திரனை உன்னை பார்ப்பது அரிது என்று இங்கு வந்து இம்மாதிரி செய்தேன்.(14)

ராக்ஷஸராஜனைப் பார்க்கவேண்டி இந்த தோட்டத்தை அழித்தேன். பிறகு பலமுள்ளவர்களும், யுத்தத்தில் ஆவல் கொண்டவர்களுமான அந்த ராக்ஷஸர்கள் இங்கு வந்தனர். (15)

என் சரீரத்தை காத்துக்கொள்வதற்காக யுத்தத்தில் அவர்களை எதிர்த்தேன். தேவர்களாலும், அஸுரர்களாலும் கூட நான் பிரம்மாஸ்த்ரம் முதல் யமனுடைய பாசக்கயிர் வரையிலுள்ள ஒன்றினாலும் கட்டமுடியாதவன். (16)

पितामहादेव वरो ममाप्येषोऽभ्युपागतः ।
राजानं द्रष्टुकामेन मयाऽस्त्रमनुवर्तितम् ॥ १७

विमुक्तो ह्यहमस्त्रेण राक्षसैस्त्वभिपीडितः ।
केनचिद्राजकार्येण संप्राप्तोऽस्मि तवान्तिकम् ॥ १८

दूतोऽहमिति विज्ञेयो राघवस्यामितौजसः ।
श्रूयतां चापि वचनं मम पथ्यमिदं प्रभो ॥ १९

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीय आदिकाव्ये सुन्दरकाण्डे
पञ्चाशः सर्गः ॥ ५० ॥

பிதாமஹாதேவ வரோ மமாப்யேஷோऽப்யுபாகத: ।
ராஜானம் த்ரஷ்டுகாமேன மயாऽஸ்த்ரமனுவர்த்திதம் ॥ 17

விமுக்தோ ஹ்யஹமஸ்த்ரேண ராக்ஷஸைஸ்த்வபிபீடித: ।
கேனசித்ராஜகார்யேண ஸம்ப்ராப்தோऽஸ்மி தவாந்திகம் ॥ 18

தூதோऽஹமிதி விக்ஞேயோ ராகவஸ்யாமிதௌஜஸ: ।
ஶ்ரூயதாம் சாபி வசனம் மம பத்யமிதம் ப்ரபோ ॥ 19

இத்யார்ஷே ஸ்ரீமத்ராமாயணே வால்மீகீய ஆதிகாவ்யே
ஸுந்தரகாண்டே பஞ்சாஶ: ஸர்க: ॥

---

உனக்கு எப்படி ப்ரம்மதேவன் வரம் கொடுத்திருக்கிறாரோ அம்மாதிரி எனக்கும் வரன் கொடுத்திருக்கிறார். அரசனைப் பார்க்க வேண்டி பிரம்மாஸ்த்ரம் கட்டியதைப் பொறுத்திருந்தேன். (17)

ராக்ஷஸர்களால் கயிறுகொண்டு கட்டப்பட்ட நான் ப்ரம்மாஸ்த்ரத்தால் விடுபட்டுவிட்டேன். நான் ஒரு ராஜகார்யத்தை குறித்து உனது ஸமீபம் வந்திருக்கிறேன். (18)

அளவற்ற தேஜஸுள்ள ஸ்ரீராமனுடைய தூதனாக என்னை யறிந்துகொள்ளவேண்டும். ஹே ப்ரபோ நன்மையை கொடுக்கும் என் வார்த்தையைக் கேளுங்கள். (19)

ஐம்பதாவது ஸர்கம் முற்றிற்று.

---

ஸ்ரீ:

एकपञ्चाशः सर्गः — ஐம்பத்தோருவது ஸர்கம் ॥ ५१ ॥

# “हनूमदुपदेशः” — ஹனுமாரின் உபதேசம்.

तं समीक्ष्य महासत्त्वं सत्त्ववान्हरिसत्तमः।
वाक्यमर्थवदव्यग्रस्तमुवाच दशाननम् ॥ १

अहं सुग्रीवसंदेशादिह प्राप्तस्तवालयम्।
राक्षसेन्द्र हरीशस्त्वां भ्राता कुशलमब्रवीत् ॥ २

भ्रातुः शृणु समादेशं सुग्रीवस्य महात्मनः।
धर्मार्थोपहितं वाक्यमिह चामुत्र च क्षमम् ॥ ३

தம் ஸமீக்ஷ்ய மஹாஸத்வம் ஸத்வவான் ஹரிஸத்தம:।
வாக்யமர்த்தவதவ்யக்ரஸ்தமுவாச தஶானனம் ॥ 1

அஹம் ஸுக்ரீவஸம்தேஶாதிஹ ப்ராப்தஸ்தவாலயம்।
ராக்ஷஸேந்த்ர ஹரீஶஸ்த்வாம் ப்ராதா குஶலமப்ரவீத் ॥ 2

ப்ராது: ஶ்ருணு ஸமாதேஶம் ஸுக்ரீவஸ்ய மஹாத்மன:।
தர்மார்த்தோபஹிதம் வாக்யமிஹ சாமுத்ர ச க்ஷமம் ॥ 3

---

மிகுந்த பலமுள்ள அந்த ராவணனைப் பார்த்து பலவானும், மனம் சிதருதவரும், ஹரிஶ்ரேஷ்டருமான ஹனுமார் உட்கருத்துள்ள வார்த்தையை பத்து தலையுள்ள அவனை பார்த்து சொன்னார். (இங்கு வால்மீகி பத்து தலையென்று சொன்னதால் ஹனுமார் சொன்ன பரமஹிதமான உபதேசத்தை கேட்பதற்கு அவனுக்கு இருபது காதுகளிருந்தும் போதாது என்பதை காட்டியதாகும்.) (1)

ஓ ராக்ஷஸ ஶ்ரேஷ்டரே, நான் ஸுக்ரீவன் உத்தரவிட்டதால் இங்கு தங்கள் வீட்டிற்கு வந்தேன். ஹிதத்தைச் சொல்லுவதில் ப்ராதாவுக்கு ஒப்பான ஹரீஶ்வரன் தங்களைக் குறித்து க்ஷேமத்தை சொல்லச் சொன்னான். (2)

மஹாத்மாவும், தங்களுக்கு ப்ராதாபோன்றவனுமான ஸுக்ரீவனின் வார்த்தையைக் கேளுங்கள். அந்த வார்த்தையானது தர்மம், அர்த்தம் இவைகளை பயனாக கொண்டதும் இவ்வுலகிலும் பரலோகத்திலும் நன்மையைச் செய்யக்கூடியதுமாகும். (3)

தேர், யானை, குதிரை முதலியவைகளுடன் கூடிய தசரதன் என்று ப்ரஸித்திபெற்ற அரசன் இருந்தான். உலகிற்கு தகப்பன்

राजा दशरथो नाम रथकुञ्जरवाजिमान् ।
पितेव बन्धुर्लोकस्य सुरेश्वरसमद्युतिः ॥ ४

ज्येष्ठस्तस्य महाबाहुः पुत्रः प्रियकरः प्रभुः ।
पितुर्निदेशान्निष्क्रान्तः प्रविष्टो दण्डकावनम् ॥ ५

लक्ष्मणेन सह भ्रात्रा सीतया चापि भार्यया ।
रामो नाम महातेजा धर्म्यं पन्थानमाश्रितः ॥ ६

तस्य भार्या वने नष्टा सीता पतिमनुव्रता ।
वैदेहस्य सुता राज्ञो जनकस्य महात्मनः ॥ ७

स मार्गमाणस्तां देवीं राजपुत्रः सहानुजः ।
ऋश्यमूकमनुप्राप्तः सुग्रीवेण समागतः ॥ ८

ராஜா தஶரதோ நாம ரதகுஞ்ஜரவாஜிமான் ।
பிதேவ பந்துர்லோகஸ்ய ஸுரேஶ்வரஸமத்யுதி: ॥ 4

ஜ்யேஷ்டஸ்தஸ்ய மஹாபாஹு: புத்ர: ப்ரியகர: ப்ரபு: ।
பிதுர்நிதேஶான்நிஷ்க்ராந்த: ப்ரவிஷ்டோ தண்டகாவனம் ॥ 5

லக்ஷ்மணேன ஸஹ ப்ராத்ரா ஸீதயா சாபி பார்யயா ।
ராமோ நாம மஹாதேஜா தர்ம்யம் பந்தானமாஶ்ரித: ॥ 6

தஸ்ய பார்யா வனே நஷ்டா ஸீதா பதிமனுவ்ரதா ।
வைதேஹஸ்ய ஸுதா ராக்ஞோ ஜனகஸ்ய மஹாத்மன: ॥ 7

ஸ மார்கமாணஸ்தாம் தேவீம் ராஜபுத்ர: ஸஹானுஜ: ।
ருஶ்யமூகமனுப்ராப்த: ஸுக்ரீவேண ஸமாகத: ॥ 8

---

போல் நன்மையைச் செய்தான். தேவேந்திரனுக்கொப்பான காந்தியுள்ளவன். (4)

அவனுடைய மூத்தகுமாரனும், பெருத்த கைகளுள்ளவனும், ப்ரியத்தைச் செய்கின்றவனும், பிரபுவுமான ஸ்ரீராமன் தகப்பனின் கட்டளையினால் ராஜ்யத்தை விட்டுக் கிளம்பி தண்டகாரண்யத்தில் ப்ரவேஶித்தான். (5)

பிராதாவான லக்ஷ்மணனுடனும், பத்னியான ஸீதையுடனும் மஹாதேஜஸ்வியும் உலகில் பிரஸித்திபெற்றவனுமான ஸ்ரீராமன் காட்டில் தர்மத்தை அவலம்பித்து வஸித்தார். (6)

அவருடைய பத்னியும், பதிவ்ரதையும், விதேஹ தேசத்தைச் சேர்ந்த மஹாத்மாவான ஜனகனின் பெண்ணுமான ஸீதையானவள் காட்டில் காணாமல்போனாள். (7)

ராஜபுத்ரனான அந்த ராமன் தம்பியுடன் அந்த தேவியை தேடிக்கொண்டு ருஷ்யமூக பர்வதத்திற்கு வந்து சேர்ந்தார். ஸுக்ரீவனுடன் சேர்க்கையை அடைந்தார். (8)

तस्य तेन प्रतिज्ञातं सीतायाः परिमार्गणम् ।
सुग्रीवस्यापि रामेण हरिराज्यं निवेदितम् ॥ ९

ततस्तेन मृधे हत्वा राजपुत्रेण वालिनम् ।
सुग्रीवः स्थापितो राज्ये हर्यृक्षाणां गणेश्वरः ॥ १०

त्वया विज्ञातपूर्वश्च वाली वानरपुङ्गवः ।
रामेण निहतः संख्ये शरेणैकेन वानरः ॥ ११

स सीतामार्गणे व्यग्रः सुग्रीवः सत्यसङ्गरः ।
हरीन्संप्रेषयामास दिशः सर्वा हरीश्वरः ॥ १२

तां हरीणां सहस्राणि शतानि नियुतानि च ।
दिक्षु सर्वासु मार्गन्ते ह्यधश्चोपरि चाम्बरे ॥ १३

தஸ்ய தேன ப்ரதிக்ஞாதம் ஸீதாயா: பரிமார்கணம் |
ஸுக்ரீவஸ்யாபி ராமேண ஹரிராஜ்யம் நிவேதிதம் || 9

ததஸ்தேன ம்ருதே ஹத்வா ராஜபுத்ரேண வாலினம் |
ஸுக்ரீவ: ஸ்தாபிதோ ராஜ்யே ஹர்ய்ருக்ஷாணாம் கணேஸ்வர:

த்வயா விக்ஞாதபூர்வஸ்ச வாலீ வானரபுங்கவ: |
ராமேண நிஹத: ஸம்க்யே ஶரேணைகேன வானர: || 11

ஸ ஸீதாமார்கணே வ்யக்ர: ஸுக்ரீவ: ஸத்யஸங்கர: |
ஹரீன்ஸம்ப்ரேஷயாமாஸ திஶ: ஸர்வா ஹரீஸ்வர: || 12

தாம் ஹரீணாம் ஸஹஸ்ராணி ஶதானி நியுதானி ச |
திக்ஷு ஸர்வாஸு மார்கந்தே ஹ்யதஸ்சோபரி சாம்பரே || 13

---

*ஸுக்ரீவனால் அந்த ராமனுக்கு ஸீதையைத் தேடித் தருகிறேன் என்று பிரதிக்ஞை செய்யப்பட்டது. ஸுக்ரீவனுக்கும் ஸ்ரீராமனால் வானர ராஜ்யத்தை தருவதாக பிரதிக்ஞை செய்யப்பட்டது.* (9)

*பிறகு ராஜபுத்ரனை ஸ்ரீராமனால் யுத்தத்தில் வாலியைக் கொன்று குரங்குகள், கரடிகள் முதலிய கூட்டங்களுக்கு ஈஸ்வரனாக ராஜ்யத்தில் ஸுக்ரீவன் அபிஷேகம் செய்யப்பட்டான்.* (10)

*வானரர்களுள் சிறந்தவனை வாலியானவன் தங்களால் முன்னமேயே நன்கு அறிந்தவனவான். (இது அவன் மர்மத்தைச் சொல்லி ராமபலத்தை அறிவிப்பதற்காகும்) அந்த குரங்கான வாலி ஒரே பாணத்தால் ஸ்ரீராமனால் யுத்தத்தில் கொல்லப்பட்டான்.* (11)

*ஸத்யமான ப்ரதிக்ஞையுள்ள அந்த ஸுக்ரீவன் ஸீதையைத் தேடுவதில் ஒருமைப்பட்ட மனதுள்ளவனாகயிருக்கிறான். குரங்குகளை பத்து திக்குகளிலும் ஹரீஸ்வரனை அவன் ஏவினான்.* (12)

*ஆயிரம் குரங்குகளாகவும், நூறு குரங்குகளாகவும், லக்ஷம்*

वैनतेयसमाः केचित्केचित्तत्रानिलोपमाः ।
असङ्गगतयः शीघ्रा हरिवीरा महाबलाः ॥ १४

अहं तु हनुमान्नाम मारुतस्यौरसः सुतः ।
सीतायास्तु कृते तूर्णं शतयोजनमायतम् ॥ १५

समुद्रं लङ्घयित्वैव तां दिदृक्षुरिहागतः ।
भ्रमता च मया दृष्टा गृहे ते जनकात्मजा ॥ १६

तद्भवान्दृष्टधर्मार्थस्तपःकृतपरिग्रहः ।
परदारान्महाप्राज्ञ नोपरोद्धुं त्वमर्हसि ॥ १७

வைனதேயஸமா: கேசித்கேசித்தத்ராநிலோபமா: ।
அஸங்ககதய: ஶீக்ரா ஹரிவீரா மஹாபலா: ॥ 14

அஹம் து ஹனுமான்நாம மாருதஸ்யௌரஸ: ஸுத: ।
ஸீதாயாஸ்து க்ருதே தூர்ணம் ஶதயோஜனமாயதம் ॥ 15

ஸமுத்ரம் லங்கயித்வைவ தாம் தித்ருக்ஷுரிஹாகத: ।
ப்ரமதா ச மயா த்ருஷ்டா க்ருஹே தே ஜனகாத்மஜா ॥ 16

தத்பவான்த்ருஷ்டதர்மார்த்தஸ்தப:க்ருதபரிக்ரஹ: ।
பரதாரான்மஹாப்ராக்ஞ நோபரோத்தும் த்வமர்ஹஸி ॥ 17

---

குரங்குகளாகவும் எல்லா திக்குகளிலும் கீழும், மேலும், ஆகாஶத்திலும் அவளைத் தேடுகின்றன. (13)

அவற்றுள் மஹாபலமுள்ள ஹரிவீரர்கள் சிலர் கருடனைப் போன்றவர்கள், சிலர் வாயுவை போன்றவர்கள். சிலர் தடங்கலில்லாமல் சீக்ரமாக செல்லுகிறவர்கள். (14)

நானோவெனில் ஹனுமான் என்று ப்ரஸித்திபெற்றவன். வாயுவினால் உண்டுபண்ணப்பட்ட புத்ரன். ஸீதையின் நிமித்தமாகவே வேகமாய் நூறுயோஜனை தூரமுள்ள ஸமுத்ரத்தை தாண்டி அவளை பார்ப்பதற்கே இங்கு வந்தேன். அங்குமிங்கும் சுற்றி தேடிக்கொண்டிருந்த என்னால் ஜனகனுடைய புத்ரியானவள் தங்கள் வீட்டில் பார்க்கப்பட்டாள். (15—16)

ஓ மஹாபுத்திமானே, நீங்கள் தர்மத்தின் பயனை தெரிந்துகொண்டவர். தபஸினால் ஸகல பாக்யங்களையும் யடைந்தவர். ஆகையால் பிறருடைய மனைவியைப் பிடித்து சிறையில் வைத்திருப்பது நீங்கள் செய்யக்கூடிய காரியமல்ல. (17)

न हि धर्मविरुद्धेषु बह्वपायेषु कर्मसु ।
मूलघातिषु सज्जन्ते बुद्धिमन्तो भवद्विधाः ॥ १८

कश्च लक्ष्मणमुक्तानां रामकोपानुवर्तिनाम् ।
शराणामग्रतः स्थातुं शक्तो देवासुरेष्वपि ॥ १९

न चापि त्रिषु लोकेषु राजन्विद्येत कश्चन ।
राघवस्य व्यलीकं यः कृत्वा सुखमवाप्नुयात् ॥ २०

तत्त्रिकालहितं वाक्यं धर्म्यमर्थानुबन्धि च ।
मन्यस्व नरदेवाय जानकी प्रतिदीयताम् ॥ २१

ந ஹி தர்மவிருத்தேஷு பஹ்வபாயேஷு கர்மஸு ।
மூலகாதிஷு ஸஜ்ஜந்தே புத்திமந்தோ பவத்விதா: ॥ 18

கஶ்ச லக்ஷ்மணமுக்தானாம் ராமகோபானுவர்த்தினாம் ।
ஶராணாமக்ரத: ஸ்தாதும் ஶக்தோ தேவாஸுரேஷ்வபி ॥ 19

ந சாபி த்ரிஷு லோகேஷு ராஜன்வித்யேத கஶ்சன ।
ராகவஸ்ய வ்யலீகம் ய: க்ருத்வா ஸுகமவாப்னுயாத் ॥ 20

தத்த்ரிகாலஹிதம் வாக்யம் தர்ம்யமர்த்தானுபந்தி ச ।
மன்யஸ்வ நரதேவாய ஜானகீ ப்ரதிதீயதாம் ॥ 21

---

உன்போன்ற புத்திமான்களோவென்றால் தர்மத்திற்கு விரோதமானதும், பல கெடுதல்களை கொடுக்கக்கூடியதும், குடும்பத்தின் வேரை அறுக்கின்றதுமான கார்யங்களில் ஈடுபடுவதில்லையல்லவா? (18)

ஸ்ரீராமனுடைய கோபத்திற்கு தக்கபடி வேகத்தோடு வருகிறதுகளும், லக்ஷ்மணனால் விடப்பட்டதுகளுமான பாணங்களுக்கு முன்பு இருந்துகொண்டு பொறுக்கக்கூடியவன் தேவர்களிலோ அஸுரர்களிலோ ஒருவனுமில்லை. (19)

ஓ ராஜன், ஸ்ரீராகவனுக்கு அப்ரியத்தை செய்து ஸுகத்தை அடையக்கூடியவன் மூன்று உலகங்களிலும் ஒருவனுமில்லை. (20)

ஆகையால் மூன்று காலத்திலும் உனக்கு நன்மையைக் கொடுக்கக்கூடியதும், தர்மத்துடன் கூடியதும், பயனைக் கொடுக்கக் கூடியதுமான என் வார்த்தையை பெரிதாக கருதி ஜானகியை நரதேவனான ஸ்ரீராமனிடத்தில் கொடுத்துவிடுங்கள். (21)

दृष्टा हीयं मया देवी लब्धं यदिह दुर्लभम्।
उत्तरं कर्म यच्छेषं निमित्तं तत्र राघवः॥ २२

लक्षितेयं मया सीता तथा शोकपरायणा।
गृह्य यां नाभिजानासि पञ्चास्यामिव पन्नगीम्॥ २३

नेयं जरयितुं शक्या सासुरैरमरैरपि।
विषसंसृष्टमत्यर्थं भुक्तमन्नमिवौजसा॥ २४

तपःसन्तापलब्धस्ते योऽयं धर्मपरिग्रहः।
न स नाशयितुं न्याय्यमात्मप्राणपरिग्रहः॥ २५

த்ருஷ்டா ஹீயம் மயா தேவீ லப்தம் யதிஹ துர்லபம்।
உத்தரம் கர்ம யச்சேஷம் நிமித்தம் தத்ர ராகவ:॥ 22

லக்ஷிதேயம் மயா ஸீதா ததா ஶோகபராயணா।
க்ருஹ்ய யாம் நாபிஜானாஸி பஞ்சாஸ்யாமிவ பன்னகீம்॥ 23

நேயம் ஜரயிதும் ஶக்யா ஸாஸுரைரமரைரபி।
விஷஸம்ஸ்ருஷ்டமத்யர்த்தம் புக்தமன்னமிவௌஜஸா॥ 24

தப: ஸந்தாபலப்தஸ்தே யோऽயம் தர்மபரிக்ரஹ:।
ந ஸ நாஶயிதும் ந்யாய்யமாத்மப்ராணபரிக்ரஹ:॥ 25

---

எந்த ஸீதையை வந்து பார்ப்பதென்பது மிகவும் அரிதோ அது இங்கு அடையப்பட்டது. என்னால் இந்த தேவியானவள் பார்க்கப்பட்டுவிட்டாள். மேலே செய்யவேண்டிய மீதமான கார்யத்தில் ஸ்ரீராகவன்தான் காரணம். (அதாவது ஸீதையை ஸ்ரீராமன் வந்து அழைத்துச்செல்வது உசிதமேயல்லாது நான் அழைத்துச் செல்வது உசிதமில்லை.) (22)

எவளை நீ கிரஹித்து வந்து வைத்திருக்கிறாயோ அவளை ஐந்து தலை பெண் நாகம் என்று நீ அறியவில்லை. இந்த ஸீதையை வாக்கினால் கூறமுடியாத துக்கத்தை யடைந்தவளாக நான் இங்கு கண்டேன். இதனால் ஸீதை உனக்கு கிடைக்கமாட்டாள் என்பது மட்டுமல்லாமல் மரணத்தையும் கொடுப்பவளாக ஆகப்போகிறாள் என்பது கருத்து. (23)

மிகவும் சாப்பிடப்பட்ட விஷங்கலந்த அன்னத்தை பலத்தினால் போல், இந்த ஸீதையை அஸுரர்களுடன் கூடின தேவர்களாலும் கூட ஜரிக்கும்படி செய்யமுடியாது. (24)

தபஸும் ரக்ஷிக்காதென்பதை கூறுகிறார் —

தபஸ் செய்ததால் அடையப்பட்ட உனது இந்த தர்மத்தின் பயனான ராஜ்யம் புத்ர, மித்ர, பந்துக்கள் முதலியவற்றையும், உன் உயிரையும் நாசமாக்கிக்கொள்வது நியாயமல்ல. (25)

अवध्यतां तपोभिर्यां भवान्समनुपश्यति।
आत्मनः सासुरैर्देवैर्हेतुस्तत्राप्ययं महान्॥ २६

सुग्रीवो न हि देवोऽयं नासुरो न च राक्षसः।
न दानवो न गन्धर्वो न यक्षो न च पन्नगः॥ २७

[मानुषो राघवो राजन्सुग्रीवश्च हरीश्वरः।]
तस्मात्प्राणपरित्राणं कथं राजन्करिष्यसि॥ २८

न तु धर्मोपसंहारमधर्मफलसंहितम्।
तदेव फलमन्वेति धर्मश्चाधर्मनाशनः॥ २९

அவத்யதாம் தபோபிர்யாம் பவான்ஸமனுபஶ்யதி।
ஆத்மன: ஸாஸுரைர்தேவைர்ஹேதுஸ்தத்ராப்யயம் மஹான்॥

ஸுக்ரீவோ ந ஹி தேவோऽயம் நாஸுரோ ந ச ராக்ஷஸ:।
ந தானவோ ந கந்தர்வோ ந யக்ஷோ ந ச பன்னக:॥ 27

[மானுஷோ ராகவோ ராஜன்ஸுக்ரீவஶ்ச ஹரீஶ்வர:]।
தஸ்மாத்ப்ராணபரித்ராணம் கதம் ராஜன்கரிஷ்யஸி॥ 28

ந து தர்மோபஸம்ஹாரமதர்மபலஸம்ஹிதம்।
ததேவ பலமன்வேதி தர்மஶ்சாதர்மநாஶன:॥ 29

---

ஒருவராலும் கொல்லமுடியாதென்று நினைக்கவேண்டாம் என்பதை கூறுகிறார் —

தபஸினுல் தேவர்களாலும் அஸுரர்களாலும் உன்னை கொல்லமுடியாமலிருத்தலை நினைத்துக்கொண்டிருகிறாய். உன்னை கொல்லுவதில் மஹத்தான இந்த காரணம் ஒன்று இருக்கிறது.(26)

அந்த காரணத்தையே சொல்லுகிறார் —

இந்த ஸுக்ரீவன் தேவனுமல்ல, அஸுரனுமல்ல, ராக்ஷஸனுமல்ல, தானவனுமல்ல, கந்தர்வனுமல்ல, யக்ஷனுமல்ல பந்நகனுமல்ல. (27)

ஆகையால் ஹே ராஜன், எப்படி உயிரை காத்துகொள்ள போகிறாய். (28)

தர்மபலமான ஸுகமானது அதர்மத்தின் பயனை துக்கத்துடன் சேர்ந்து வருவதில்லை. தர்மத்தின் பயனே தனியாக வரும். தர்மமே அதர்மத்தை நாசம் செய்யும். "**धर्मेण पापं अपनुदति**" என்று வேதம் சொல்லியதால் தர்மம் அதர்மத்தை போக்குமேயல்லாது அதர்மம் தர்மத்தை போக்காது. (29)

प्राप्तं धर्मफलं तावद्भवता नात्र संशयः ।
फलमस्याप्यधर्मस्य क्षिप्रमेव प्रपत्स्यसे ॥ ३०

जनस्थानवधं बुद्ध्वा बुद्ध्वा वालिवधं तथा ।
रामसुग्रीवसख्यं च बुद्ध्यस्व हितमात्मनः ॥ ३१

कामं खल्वहमप्येकः सवाजिरथकुञ्जराम् ।
लङ्कां नाशयितुं शक्तस्तस्यैष तु न निश्चयः ॥ ३२

ப்ராப்தம் தர்மபலம் தாவத்பவதா நாத்ர ஸம்ஶய: ।
பலமஸ்யாப்யதர்மஸ்ய க்ஷிப்ரமேவ ப்ரபத்ஸ்யஸே ॥ 30

ஜனஸ்தானவதம் புத்வா புத்வா வாலிவதம் ததா ।
ராமஸுக்ரீவஸக்யம் ச புத்யஸ்வ ஹிதமாத்மன: ॥ 31

காமம் கல்வஹமப்யேக: ஸவாஜிரதகுஞ்ஜராம் ।
லங்காம் நாஶயிதும் ஶக்தஸ்தஸ்யைஷ து ந நிஶ்சய: ॥ 32

---

முதல் செய்த தர்மமே இப்பொழுது செய்த பாபத்தை போக்கட்டுமே என்றால் அதற்கு பதில் சொல்லுகிறார் —

தர்மத்தின் பயன் எவ்வளவு உண்டோ அவ்வளவையும் நீ அனுபவித்துவிட்டாய். அதில் ஸந்தேஹமில்லை. ஸீதையை எடுத்துவந்து துன்புறுத்தும் இந்த அதர்மத்தின் பயனை வெகு சீக்ரத்தில் அனுபவிக்கப் போகிறாய். (30)

ஜனஸ்தானத்தில் கரதூஷணன் முதலிய பதினாலாயிரம் வீரர்களைக் கொன்றதை உணர்ந்தும், அப்படியே உன்னை கையில் அடக்கிய வாலியை கொன்றதை யுணர்ந்தும், வாலியின் தம்பியாகிய ஸுக்ரீவனை ஸ்ரீராமன் ஸ்நேஹிதனாகச் செய்துகொண்ட விஷயத்தை யறிந்தும், என்ன செய்தால் உனக்கு நன்மை வரும் என்பதை உணர்ந்துகொள். (அதாவது ஸ்ரீராமன் துஷ்டனான தமையனைக் கொன்று பக்தனான ஸுக்ரீவனுக்கு ராஜ்யம் கொடுத்ததை ஹனுமார் வெளிப்படுத்தியதின் நோக்கம் இங்கு யாராவது பக்தனான தம்பியிருந்தால் ஸ்ரீராமனிடம் வரலாமென்பதை உபதேசிக்கவே யாகும்.) (31)

இம்மாதிரி கடூரமான வார்த்தையைப் பேசும் உன்னை எவர் காப்பார் என்று கோபத்துடன் பார்த்த ராவணனைப் பார்த்துச் சொல்லுகிறார் —

நான் ஒருவனாகவே என்னிஷ்டப்படி குதிரைகள், தேர்கள் இவைகளுடன் கூடிய லங்கையை நாசமாக்குவதற்கு சக்தியுள்ளவன். ஆனால் இது ஸ்ரீராமனுக்கு இஷ்டமில்லை. (அதாவது திடீரென்று உன்னை கொல்லக்கூடாது என்பதும், ஒருக்கால் சரணாகதி செய்து விட்டால் உன்னை காக்கவேண்டும் என்பதும் கருணையின் உருவம்கொண்ட ஸ்ரீராமனின் கருத்தென்று பொருள்.) (32)

